கடவுள் துணை.

சுந்தரோமனோரஞ்ஜிதம்

என்னும்

# மனோரஞ்ஜித மனோன்மணி.

முதற்பாகம்

பர்லிகா பர்வம்—உபதேச காண்டம்

(முதற் பிரிவு.)

இரண்டாம் பதிப்பு.

---

இஃது
அன்னியதேச அப்போஸ்தலிக்கு குருக்களது
சபையிலுட்பட்ட புதுவை
சுதேச குருக்களில் ஒருவராகிய காலஞ்சென்ற
சங். அ. சின்னப்பநாத சுவாமிகளால்
இயற்றப்பெற்று
சங். ஆரோக்கியநாத சுவாமிகளால்
பரிசோதிக்கப்பெற்று,
சங். சி. கு. பால சுவாமிகளால்

சென்னபட்டணம்
புரோகிரஸிவ் பிரசில்
பதிப்பிக்கப்பட்டது.

---

1911
(விலை ஒரு ரூபாய்.)

கடவுள் துணை.

சுந்தரோமனோஞ்ஜித்யம்




என்னும்

# மனோஞ்ஜித மனோன்மணி.

முதற்பாகம்

பாலிகா பர்வம்—உபதேச காண்டம்

(முதற் பிரிவு.)

இரண்டாம் பதிப்பு.



இஃது

அன்னியதேச அப்போஸ்தலிக்கு குருக்களது

சபையிலுட்பட்ட புதுவை

சுதேச குருக்களில் ஒருவராகிய காலஞ்சென்ற

சங். அ. சின்னப்பநாத சுவாமிகளால்

இயற்றப்பெற்று

சங். ஆரோக்கியநாத சுவாமிகளால்

பரிசோதிக்கப்பெற்று,

சங். சி. சூ. பால சுவாமிகளால்

சென்னபட்டணம்

புரோகிரஸிவ் பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

1911

(விலை ஒரு ரூபாய்.)




*Pondichèry*, 10/3/04.

Bièn cher Père,

Je viens de lire l'ouvrage intitulè "மனோரஞ்ஜித மனோன் மணி" et je puis affirmer qu'il ne contient rien de contraire ni á la Foi, ni aux mœurs.

**Arokianadar.**
*M. Ap.*

---

*Imprimatur liber cui titulus*

மனோரஞ்ஜித மனோன்மணி.

*Pudicherii*, 11 *Marttii* 1904.

*L. Renevier, m. ap.*

*Vic. Genl.*

(Reprinted from the original without any addition or alteration.) Ed.




(முதற்பதிப்புக்கு.)

# முகவுரை.

## நூலின் வரலாறு.

1886ஸ்த்தில் புதுவை பெரிய மடத்தில் நான் இன்னும் வாசித்துக் கொண்டிருக்கும்போதே ஒரு நாள் மாணாக்கர் எல்லோரும் பாடிக்கொண்டும் விளையாடிக்கொண்டும், இருக்கும் வேளையில் நான் பிராஞ்சு நன்னூலைக் கையில் வைத்துக்கொண்டு ஏடுகளைப் புரட்டினேன். அப்போது என் புத்தியில் ஓர் நல்லெண்ணம் உதித்தது.

நான் இவ்வாறு யோசித்துக்கொண்டிருக்கும்போது எனது மனோகற்பிதத்தில் ஓர் சிறிய விருக்ஷக்கன்று முளைக்க ஆரம்பித்தது. ஆனால் அது வெகு நாள்வரையில் விர்த்தியாகாமல் ஈனதசையிலேயே யிருந்துவிட்டது.

1892ஸ்த்தில் நான் குருப்பட்ட மடைந்து பங்குவிசாரிக்க வெளிப்படும்போது ஒருவாறு அதனை மறந்துபோயிருந்தேன். நான் வடுகர்பேட்டையில் விசாரணை செய்துக்கொண்டிருக்கும்போது திரும்ப அம்மரக் கன்று என் புத்தியில் தோன்றலாயிற்று. அது காலத்தோடு சன்னஞ் சன்னமாய்ப் பெருகிவளர்ந்து பெருமரமாய் விட்டது. அவ்விருக்ஷத்திற்கு ஐந்து கிளைகள் உண்டு.

## நூலின் உட்பிரிவுகள்.

மரம் மனோரஞ்சித மனோன்மணி என்ற பிரபந்தமே யல்லாது வேறல்ல. அம்மரத்தின் ஐந்து கிளைகளும் நூலின் ஐந்து பாகங்களே. சரிதை நாயகி மனோரஞ்சிதம் என்னும் பெண்மணியே. அவளுடைய ஜீவியம், பாலிகா பருவம், கன்னிகா பருவம், சுமங்கலிபருவம், வயோதிக பருவம், அநுபந்தம் என்று ஐந்து பாகங்களாகப் பிரிக்கப்படுகிறது.

பிரபந்தம் அதிக பெரிதாய்ப் பெருகிவிட்டமையால் அதனை யொரு காண்டத்தில் அடக்கச் சாத்தியப்படவில்லை. ஆதலால் நூலில் சொல்லப்படும் விஷயங்களுக்கேற்றவாறாய் அதனை உபதேசகாண்டம், உபந்நியாச காண்டம், தர்ம காண்டம், அநுஷ்டானகாண்டம், வைதிக காண்டம் என்று ஐந்து காண்டங்களாகத் தொகுத்து, ஒவ்வொன்றையும் வெவ்வேறாய் எழுதி முடித்து அச்சிட நேர்ந்தது.

# I

## பாலிகாபர்வம்.

### உ ப தே ச கா ண் ட ம்.

உபதேச காண்டம் மனோரஞ்சிதத்தின் பிறப்புமுதல் அவளது பன்னிரண்டாம் பிராயம் வரையில் விரியும். இந்தப் பாகத்தில் தாய்தந்தையர் தங்கள் பிள்ளைகளை வளர்க்கவேண்டிய வகையும் ரீதிகளுங் கடமைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. உபதேச காண்டத்தில் மனோரஞ்ஜிதத்தின் பிதா மாதாக்கள் அவளை வளர்த்த அருமை பெருமையும் அவள் குழந்தை பருவத்தில் செய்த விநோத வேடிக்கைகளும் பால லீலைகளும் அவளுடைய சுகிர்த பால ஜீவியமும் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. மனோரஞ்ஜிதம் தன்போலிய பெண்குழந்தைகளுக்கு ஓர் சிறந்த நன்மாதிரிகை.

முதற் பாகம் கஷ்டமான பாகமாதலால் துவக்கத்தில் இது எனது நேய பாராயணிகளுக்கு இலாபகாமாயிராது. மற்றைய மூன்று பாகங்களும் வாசிக்க, வாசிக்கப் பாராயணிகளின் மனசுக்கு மனோகரமாயும், புத்திக்கு இரஞ்ஜிப்பாயும், இரமணிகமாயும், நல்லொழுக்க, நன்னெறி, சதாச்சாரங்களுக்கும், புத்தி யபிவிர்த்திக்கும் மிகவும் பிரயோஜனகரமாயு மிருக்கும் என்பதற்கு யாதோர் ஐயமுமில்லை. ஆதலால் நேயர்களே! முதற் பாகத்தைப் பொறுமையுடன் வாசிக்குமாறு உங்களை வேண்டுகின்றேன்.

# II

## கன்னிகா பர்வம்.

### உ ப ந் நி யா ச கா ண் ட ம்.

உபந்நியாச காண்டம் எனது சரிதை நாயகியின் பன்னிரண்டாம் பிராயந்தொட்டு இருபதாம் பிராயம்வரையில் பெருகும். இதில் பிள்ளைகள் தங்கள் தாய் தந்தையர்மட்டிலும் தம்போலிகள் மட்டிலும் செலுத்தவேண்டிய கடமைகள் சவிஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. "தாயைப்போல் பிள்ளை நூலைப்போல் சரடு" என்ற பழமொழி அபத்தமல்ல. மனோரஞ்ஜிதம் தன் மாதா அபிராமியம்மாளைப்போல் நயத்தினாலும் பயத்தினாலும் தயை தாக்ஷண்யத்தினாலும் நன் மாதிரிகையினாலும் கண்டிப்பினாலும் தனது தோழிகளையும் துணைவிகளையும் படிப்பித்து, திருத்தி, சன்மார்க்கத்தில் முன்னோடியாய் நின்று, அவர்களுக்கு உபாத்தியாயினியுந் தேசிகையுமாயிருக்கின்றாள்.

# III

## சுமங்கலை பர்வம்.

### தர்ம காண்டம்.

தர்ம காண்டம் மனோரஞ்ஜிதத்தின் இருபதாம் பிராயமுதல் ஐம்பதாம் பிராயம் வரையில் வளரும். சுமங்கலை பருவத்தில் புருஷபூவையர் ஒருவர் மட்டில் ஒருவர் நடந்துகொள்ளவேண்டிய இரீதிகளுங் கடமைகளும் பிள்ளைகளை வளர்க்கவேண்டிய தன்மையும் மார்க்கமும் வழிபாடுகளும் விவரிக்கப் பட்டிருக்கின்றன. தர்ம காண்டத்தில் மனோரஞ்ஜிதம் தன் கணவன்மட்டில் காட்டிய நிகரற்ற அன்பும் மரியாதையும் சுயபரித்தியாகமும், அவனை நடத்திய அருமை பெருமையும், அவள் தன் பிள்ளைகளை வளர்த்த ஒப்புவமையற்ற வகையும், தன்னைப்போன்ற இளம் பெண்டீர்களுக்கு அவள் போதித்த மேன்பாடங்களும் ஏராளம். மனோரஞ்ஜிதம் பெண்டீர் என்கிற முறையிலும் தாய் என்கிற முறையிலுஞ் சாலோமோன் ஞானி வேதாகமத்தில் சித்திரித்த மனோதிடமுள்ள பெண்ணைப்போல் பிரகாசிக்கின்றாள்.

# IV

## வயோதிக பர்வம்.

### அநுஷ்டான காண்டம்.

அநுஷ்டான காண்டம் மனோரஞ்ஜிதத்தின் ஐம்பதாம் பிராய முதல் எழுபத்தைந்தாம் பிராயம் வரையில் பெருகும்? இதில் விருத்தாப்பியர் தங்கள் விஷயத்திலும் பிறர் விஷயத்திலும் கடவுள் விஷயத்திலும் செலுத்த வேண்டிய கடமைகள் கூறப்பட்டுள்ளன. அநுஷ்டான காண்டத்தில் மனோரஞ்ஜிதம் தன் முதிர் வயசில் நானாவித புண்யங்களை அநுசரித்துச் சகலருக்கும் விசேஷமாய் விருத்தாப்பியருக்கும் இலௌகிக சுகசெல்வங்களை வெறுத்து அழியாத பேரின் பாக்கியத்தைக் கடைப்பிடித்துக் கடைத்தேறவேண்டுமென்று பக்தி மார்க்கத்தைப் போதிக்கின்றாள். ஆத்மா பிரியுந்தனையும் உலக சிந்தனையைவிடாத விருத்தாப்பிய பெருமாட்டிகளுக்கு மனோரஞ்ஜிதம் ஓர் கண்டகோடாலி.

# V

## அநுபந்தம்

### வைதிக காண்டம்

வைதிக காண்டம் முந்தின நான்கு பாகங்களிலும் காலக்கிரமத்தில் நடந்தேறிய சம்பவங்களை யணியணியாய்ச் சொல்லிவரும் சுந்தரம்பிள்ளை பயி

ரங்கமாய்க் கிறிஸ்து வேதத்தைத் தழுவிக்கொண்டு மனோரஞ்ஜிதத்தைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகுஞ் சமயத்தில் ஆரம்பித்தது. இக் கடைசி பாகம் நமது சத்தியவேத மகிமைக்காகவும் பெருமைக்காகவும் எழுதப் படவேண்டியிருந்தது. வைதிக காண்டத்தில் சாமானிய ஜனங்களுக்கு உபயோகப்படாத அரிய விஷயங்களும், வேத சாஸ்திரம், ஞான சாஸ்திரம், தர்க்கம் முதலிய நூற்களைப்பொறுத்த பெருத்த கேள்விகளும் ஒழுங்காய்த் திரட்டப்பட்டிருக்கின்றன. மேற்படி விஷயங்களை விவரித்து, விஸ்தரித்து, ஸ்தாபித்து, நிலைநிறுத்தி அல்லது ஆக்ஷேபித்து, கண்டித்து, மறுத்து, திரஸ்கரித்து, எதிரிகளுடைய ஆக்ஷேபங்களுக்குச் சமாதானங்கூறிப் பிரபந் தத்தைப் பூர்த்திசெய்திருக்கின்றேன்.

## VI

## நூலின் நோக்கம்.

கிறிஸ்துவ குடும்பங்களுக்கேற்ற தமிழ்ப் புஸ்தகங்களில்லாக் குறையே இப்பிரபந்தத்தை யெழுத என்னை யேவிற்று. மேற்படியார்களுடைய காலப் போக்குக்கும், நன்னடக்கை யபிவிர்த்திக்கும், புத்திமனுஷிகளுடைய இரம்மிய திருப்தி தீக்ஷண்யங்களுக்குமே வேண்டி யிதனையெழுத முயன்றேன். கிறிஸ் துவ தாய் தந்தையர் தங்கள் பிள்ளைகளை யொழுங்காய் வளர்க்கவேண்டு மென்பதே யெனது முக்கிய நோக்கம். அதற்காகவேண்டி யிந்நூலில் அவர் களுக்கு நானாவித நன்னெறி சாதனங்களை அநுஷ்டானத்தின் மூலியமாய் ஏராளமாய்க் காட்டியிருக்கிறேன்.

## VII

## நூலின் ரூபம்.

இப்பிரபந்தத்தில் ஆதியோடந்தமாய் நடமாடுந் தமிழ் செந்தமிழு மல்ல; கொடுந்தமிழு மல்ல. ஆனால் எழுத வாசிக்கக்கூடிய சாமானிய ஜனங்களுக் கேற்ற இயல் தமிழே யிங்கு வழங்கும் நடை. இலக்கண விதிகள் எனக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெரிந்தும் பிறருடைய நன்மைக்காக வேண்டி அவைகளை முற்றிலும் அனுஷ்டானத்துக்குப் கொண்டுவரவில்லை. எனது பாராயணிகள் நூலில் அடங்கிய சம்பவங்களையும் பொருட்களையும் கண்டுணர்வது பெரிதே யல்லாது இலக்கணம் பெரிதல்ல.

தற்காலம் சமஸ்கிருத பாஷையின் தடுக்கமுடியாப் பெருவெள்ளம் திராவிட பாஷையின் பாய்ந்துவிட்டமையால் காலத்தையும் அவசரத்தையுஞ் ஜனங்களுடைய நாட்டத்தையும் சுவையையும் அநுசரித்து இந்நூலில் வேது வாய் வடமொழிகளை யுபயோகித்திருக்கிறேன்.

இப்பிரபந்தம் எனது சொந்த உற்பனமே யல்லாது அன்னிய பாஷைகளி னின்று மொழி பெயர்க்கப்பட்டதல்ல. ஆயினும் நான் நிரூபிக்கும் அல்லது மறுகரும் விஷயங்களுக்கு அநுகூலம் அல்லது பிரதிகூலமாக எடுத்துக்காட்டும் பற்பல சிறிய சுலோகங்களுஞ் சங்கிதைகளும் வர்த்தமானங்களுஞ் சரித்திரங்களும் இலத்தீன், பிராஞ்சு, இங்கிலீஷ்' தெலுங்கு சமஸ்கிருதம் முதலிய பாஷைகளின்று மொழிபெயர்க்கப்பட்டன வென்பதற்கு ஐயமில்லை.

## VIII

## நூலின் பொருள்.

இப்பிரபந்தத்தில் ஆதியோடந்தமாய் எவ்விடத்திலுஞ் சற்றேறக்குறைய சகல வித தர்மங்களும் கிறிஸ்துவ புண்யங்களும் இலௌகிக சதாச்சாரங்களும் நல்லொழுக்கங்களும் ஏராளமாய் உபந்நியாசிக்கபபட்டிருக்கின்றன. இதில் நான் எடுத்தோதுஞ் சத்தியங்களுக்கும் மறுக்கும் அபத்தங்களுக்கும் அநுகூல பிரதிகூலமாக தேவவாக்கியம், வேத சாஸ்திரம், ஞான சாஸ்திரம், தர்க்கம், வேத சரித்திரம், இலௌகிக சரித்திரம், பெருத்த காவியங்கள் முதலிய நூற்கள் அணியணியாய்ச் சமயோசிதமாய் வரும். இந்நூலில் எவ்விடத்தும் புண்யம் விசேஷமாய் அநுஷ்டானத்தினாலும் நன் மாதிரிகையினாலும் உபதேசிக்கப்படுமேயல்லாது, வியர்த்த யோசனையினாலும் பாவனையினாலும் சட்டத்தினாலும் மாத்திரமல்ல.

## IX

## நூலில் நடமாடும் புருஷ பூவையர்.

இப்பிரபந்தத்தில் சம்பாஷிக்கும் ஸ்திரி புருஷர் பலர்; அவர்களில் முக்கிய ரூபம் மனோரஞ்சிதமே. இவளே சரிதைநாயகி. ஒரு நந்தன வனத்தில் புஷ்பிக்கும் நானாவித புஷ்பங்களில் தோன்றும் உரோசாப்பூ அங்கு போகிறவர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்வதுபோல் மனோரஞ்சிதம் மேற்படி புருஷ பூவையர் மத்தியில் சம்பாஷிக்குங்கால் பாராயணிகளுடைய மனஸைக் கவர்ந்து கொள்வாளென்பதற்குத் தடையில்லை. அவளுக்குப் பின் வருகிறவன் நூலில் அடங்கிய சகல சம்பவங்களையும் தொகுத்துச் சொல்லுஞ் சுந்தரம் பிள்ளையே. அடுத்தபடியில் நிற்பவர்கள் மனோரஞ்சிதத்தின் பிதா மதாக்களான மதுரநாயகம் பிள்ளையும் அபிராமியம்மாளுந்தான். இவகளை யடுத்தாப்போல் மதுரநாயகம் பிள்ளையின் தம்பி திருமறைநாயகம் பிள்ளையும் அபிராமியம்மாளுடைய தங்கை குணமணியம்மாளும் வருகின்றார்கள். இவர்களுக்குப் பிற்பாடு சுந்தரத்தின் தாய் தந்தையரான சந்திரசேகரம்பிள்ளையும் சிவகாமியம்மாளும் நூலில் வெகுவாய் நடமாடுகின்றார்கள். கண்டசியாய்ச் சர்வகலாசாலை தலைமை உபாத்தியாயர் அருமைநாயகம்பிள்ளை, பாலிகா கலாசாலை தலைமை உபாத்தியாயர் ஜெயராமச் சந்திர ஐயர், சந்திரசேகரம்

பிள்ளையின் குலகுருவாகிய ஜடகோபாலாச்சாரி முதலிய முக்கியபுருஷரும் இன்னும் அநேகம் பெரியோரும் பிள்ளைகளும் இந்நூலில் சமயோசிதமாய் பற்பல விடங்களில் தோன்றுவார்கள்.

# X

## நூலில் தோன்றும் புருஷ பூவையரின் நிலைமையுங் குணங்களும்.

மனோரஞ்சிதம் ஓர் நிகரற்ற புத்திசாலிப்பெண்; தன் சுய பாஷையாகிய தமிழையன்றி தெலுங்கு கன்னடம் முதலிய பாஷைகளையும் நன்றாய் எழுத வாசிக்கப், பேசக் கற்றறிந்தவள். ஆங்கிலேய பாஷைபடித்து இருபது பிராயத்துக்குள் பி, ஏ. பரிக்ஷை கொடுத்துவிட்டு சுந்தரத்தைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறாள். கின்னரம், வீணை முதலிய வகத்தியபயிற்சியிலும் கீர்த்தனைமுதலிய சங்கீத பயிற்சியிலும் தர்க்க முதலிய சம்வாதங்களிலும் நிகரற்ற நிபுணி. முன்னொருக்கால் அலெக்சாந்திரியா நகரில் ஸ்ரீமதி கத்திரீனையைக் கண்ட பண்டிதர் தர்க்கத்தில் தயங்கி நின்றதுபோல் அநேகர் மனோசஞ்ஜிதத்துக்கு ஈடுசொல்ல மாட்டாதவர்களாய் ஏங்கி நிற்பார்கள்.

சுந்தரம் புத்தி தீக்ஷணத்தில் மனோரஞ்ஜிதத்துக்குஇளைத்தவனல்ல. இவனுங் காலக்கிரமத்தில் பற்பல பாஷைகளைக்கற்றுப் பண்டிதனாய்விட்டான். இங்கிலீஷ்வாசித்து அநேகபரீக்ஷைகளில் தேறி ஆறுபட்டையங்கள், வாங்கினான், கடைசியாய் எம். எல். என்னும் பட்டோலிகையைப் பெற்றான். சுந்தரம் பரீக்ஷைகளில் தேறியிருந்தமையால் எடுத்த கைக்கு எழுநூற்றைம்பது ரூபாய் சம்பளத்தோடு இரண்டாவதுவகுப்பு நியாயாதிபதியாகி மனோரஞ்ஜிதத்தை மண முடித்துக்கொண்டான்.

மதுரநாயகம் பிள்ளையும் பற்பல பாஷைகளைக் கற்றறிந்த மேதாவி. பி எல்., எம். ஏ. பரீக்ஷை வரையில் வாசித்துத் தேறினவர். படிப்படியாய் உத்தியோக தரப்பில் ஏறி முதல் வகுப்பு நியாயாதிபதியாக நியமிக்கப்பட்டு 1,500 ரூபாய் சம்பளம் வாங்கிவந்தார்.

அபிராமியம்மாளும் குணமணியம்மாளும் இங்கிலீஷ் பாஷையில் Matriculation அல்லது ஆறாவது வகுப்புப் பரீக்ஷையில் தேறினவர்கள். அபிராமியம்மாள் ஒப்பற்ற குணசாலி; மெய்யான கிறிஸ்துவதாய்; நிகரற்ற மனோதிடமுள்ள ஸ்திரி. குணமணியம்மாள் கல்வியிற் சிறந்த தேசிகை, மதியலங்காரி; கவிப்பெண்.

திருமறைநாயகம் பிள்ளை பி.ஏ. பி.எல்., பரீக்ஷை கொடுத்தவர். எவ்விஷயங்களையும் நன்றாய் அறிந்த பண்டிதர். தர்க்கத்தில் நிபுணர். சம்வாதங்களில் வலிய சண்டைக்கும் போகார்; வந்தசண்டையையும் விடார்.

சந்திரசேகரம் பிள்ளை பீ. ஏ. பரீக்ஷையில் தேறினவர். மதுரநாயகம் பிள்ளை கச்சேரியில் 400 ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு வெகு நிண்ணயமாய் உத்தியோகம் பண்ணிவந்தார்.

அருமைநாயகம் பிள்ளை எம். ஏ., எம்., டி., பரீக்ஷைகளிலும் ஜெயராமச்சந்திர ஐயர் பி. ஏ., எம். டி. பரீக்ஷைகளிலுந் தேறினவர்கள்.

சிவகாமியம்மாள் தமிழ் நன்ருய் வாசித்த புத்திசாலியான ஸ்திரி. இதுவே இப்பிரபந்த சார சங்கிரஹம்.

A. PAUL.

# பொருள் அட்டவணை.

| அத்தியாயம். | விஷயம். | பக்கம் |
|---|---|---|
| 1. | சரிதைப் பிரசங்கி சுந்தரம் இரமபுரியை விட்டுக் கமலாலயத்துக்குவந்து மதுராநாயகம்பிள்ளை, அபிராமியம்மாள், சரிதை நாயகி மனோரஞ்சிதம் முதலியவர்களை அறிதல். நானுவிஷயங்கள். ... ... ... | 1 |
| 2. | அபிராமியம்மாளின் குணாதிசயங்கள். மனோரஞ்சிதத்தின் தர்ம சிந்தை. துஷ்ட பெண்டீர்கள். மனோரஞ்சிதத்தின் ஞானப்பயிர்ச்சியும் ஞானோபதேச ஆரம்பமும். சுந்தரம் மதுராநாயகம்பிள்ளையை நன்றாயறிதல்... | 12 |
| 3. | மதுராநாயகம்பிள்ளை வைசூரியினால் துன்பப்பட்டு மரணத்துக்குத் தப்பித்துக்கொண்டது. அபிராமியம்மாள் - ஓர் உத்தமப் பெண்டீர்; சகலருக்குஞ் சற்குணஸ்படிகம்; நங்கையர் எல்லோருக்கும் நிகரற்ற நன்மாதிரிகை. ... ... ... ... | 25 |
| 4. | அபிராமியம்மாள் தனது கணவனை நிகரற்ற விதமா யுபசரித்து விசாரித்தல். இவள் இல்லறத்தில் எல்லோருக்கும் மன்மாதிரிகையா யிருத்தல். நானு விஷயங்கள். ... ... ... ... | 34 |
| 5. | மனோரஞ்சிதத்தின் பூகோள பயிற்சி. வேதோபதேசம். கிருபாவான் சுவாமிகள். ஞானோபதேசம். அபிராமியம்மாளின் நிகரற்ற கனிகரம். மதுராநாயகம்பிள்ளையின் பந்துக்கள் வரவு. ... ... ... | 49 |
| 6. | எங்கள் (சுந்தரத்தின்) குலவிருத்தாந்தம். என் மூதாக்களின் பெருமை. எனது தந்தையர். என்பாடசாலை ஜீவியம். என் தங்கை விஜயவல்லிக்கும் மனோரஞ்சிதத்துக்கும் நடந்த நல்லொழுக்க சம்பாஷணை. மனோரஞ்சிதம் - ஓர் அபூர்வ புத்திசாலி. மதுராநாயகம்பிள்ளை ஒரு சிறந்த மேதாவி. ... ... ... | 69 |
| 7. | மனோரஞ்ஜிதத்தின் பூர்வோத்திரமும் குலவிருத்தாந்தமும். மனோரஞ்சிதத்தின் பாட்டனாராகிய சச்சிதா | |

சம்பவங்கள் நடந்தேறிய ஸ்தலம் தென்னிந்தியா.

# பிரபந்தத்தில் நடமாடும் முக்கிய புருஷ ஸ்திரீயர்.

மனோரஞ்ஜிதம் = பிரபந்த நாயகி.

சுந்தரம் = பிரபந்த பிரசங்கி.

மதுரநாயகம்பிள்ளை } = மனோரஞ்சிதத்தின் = { தந்தை
அபிராமியம்மாள் } = மனோரஞ்சிதத்தின் = { தாயார்

திருமறைநாயகம்பிள்ளை } = மனோரஞ்சிதத்தின் = { சிற்றப்பார்
குணமணியம்மாள் } = மனோரஞ்சிதத்தின் = { சிற்றன்னை

சந்திரசேகரம்பிள்ளை } = சுந்தரத்தின் = { தந்தை
சிவகாமியம்மாள் } = சுந்தரத்தின் = { தாயார்

விஜயவல்லி = சுந்தரத்தின் தங்கை = மனோரஞ்சிதத்தின் தோழி.

பத்மாமணி } = மனோரஞ்சிதத்தின் = { பெரியப்பார்மகள்
இராஜாமணி } = மனோரஞ்சிதத்தின் = { அத்தைமகள்.

சுந்தரம்பாள் = விஜயவல்லியின்தோழி = மனோரஞ்சிதத்தின்விரோதி

அ. சுசீலதேவி } = மனோரஞ்சிதத்தின் பள்ளித்தோழிகள்.
ச. சராளதேவி }

பி.ஏ. ஜெயராமசந்திரஐயர் = பெண்பாடசாலைத் தலைமையுபாத்தியாயர்.

ஜடகோபாலாச்சாரி = சந்திரசேகரம்பிள்ளையின் குலகுரு.

சமயோச்சிதமாய் இன்னும் பற்பலர்.



(இரண்டாம் பதிப்புக்கு)

## பதிப்புரை

"மனோரஞ்சித மனோன்மணி" என்னும், அரிய கத்தோலிக்குத் தமிழ் நவகதையினது முதற்பாகத்தின் முதற் பிரிவாகிய இப்புத்தகம் மிக விசனத்துக்குரிய விதமாய் சமீபத்தில் காலஞ்சென்ற சங். அ. சின்னப்பநாத சுவாமிகளால் 1904 ஆண்டில் நவமாய் இயற்றி அச்சிடப்பட்டது. அப்போது அச்சிடப்பட்ட காப்பிகள் அதி தீவிரத்தில் செலவாய்விட்டபடியால் பிறகு அதை ஆவலாய்க் கேட்டவர்களுக்கெல்லாம் இல்லையென்று சொல்லும்படி நேர்ந்ததன்றி அப்போது உடனே அதன் இரண்டாம்பதிப்பு அச்சிடுவதற்கு சாவகாசப்படாமற் போயிற்று. அதுமுதல் அப் புத்தகத்தை அநேகர் விரும்பி அதைத் திரும்பவும் அச்சிட்டுத் தர வேண்டுமென்று கேட்டுக்கொண்டதனால் இவ்விரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. இப் புத்தகம் ஆதி முதல் அந்தம் வரையில் இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருப்பதால் வாசிப்பதற்கு மெத்த மனோகரமா யிருக்கிறதென்பதும், இடையிடையே ஞானவிஷயங்களும், நன்னடக்கைக்குத் தூண்டும்படியான பல நன்மதிகளும் நன்கு விளக்கப்பட்டிருப்பதால் மிகுதியும் பிரயோசனமுடையதென்பதும் இதைச் சற்று வாசிப்பவரெவருக்கும் புலப்படாமற் போகாது. பாவத்துக்கும் தந்திர சோதனைகளுக்கும் இடமான பல வீண் கதைப் புத்தகங்களைப் படிக்கவிடாமல், பிரயோசனமும் மனோகரமும் பொருந்தியுள்ள இவ்வரிய புத்தகத்தை ஒவ்வொரு கத்தோலிக்குக் குடும்பத்தலைவரும் வாங்கித் தம் குடும்பத்தார் இதை வாசிக்கும்படி செய்யவேண்டும். இதை வாசிக்கும் கத்தோலிக்குச் சகோதரர் ஒவ்வொருவரும் இச் சுகிர்த புத்தகத்தை எழுதித் தந்த காலஞ்சென்ற ஷை சங். அ. சின்னப்பநாத சுவாமிகள் ஆத்தும இளைப்பாற்றிக்காக ஒரு பர. பிரி. திரி. வேண்டி ஒப்புக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இதன் இரண்டாம் பாகமாகிய "கன்னிகாபர்வமும்" கூடிய சீக்கிரத்தில் அச்சிடப்படும்.

சென்னை,
22—1—11.

சி. சூ. பா.



கடவுள் துணை

# மனோரஞ்சிதமனோன்மணி.




## உபதேச காண்டம்.

### பாலிகாபர்வம்

### முதல் அத்தியாயம்.

*சுந்தரம் சிரமபுரியை விட்டுக் கமலாலயத்திற்கு வந்து மதுரநாயகம் பிள்ளை, அபிராமியம்மாள், மனோரஞ்சிதம் முதலியவர்களை யறிதல்.*



சீர் சிறந்தொளிரும் சிந்துதேசத்தின் தக்ஷிணபாகத்தில் பாண்டிய நாட்டிற் சிரமபுரி நகரில் வேளாள குலத்தில் வைதீக வைஷ்ணவ தாய் தந்தையரிடத்தில் யான் பிறந்தேன். அதிபாலியத்திலேயே வித்தியாப்பியாசஞ் செய்து விஷ்ணுமதக் கொள்கைகளையுங் கர்மானுஷ்டானங்களையுஞ் சரிவர அநுசரித்துவந்தேன். இதனோடுகூட எனது தந்தையரைப்போல் உத்தியோகஞ் செய்யக் கருதி ஆங்கிலேயபாஷையையும் அப்பியசித்து வந்தேன்.

எனது தகப்பனார் சிரமபுரிபட்டணத்தில் நீதியாசன சாலையிற் சுதேசிகளில் இரண்டாம் வகுப்பு நீதியஸ்தரில் ஒருவராயிருந்தார். அஃது அங்ஙனம் நிகழுங்கால், ஆங்கிலேய துரைத்தனத்தார் எனது தந்தையரைக் கமலாலயத்துக்கு மாற்றிவிட்டார்கள். அவரது பெயர் சந்தரசேகரம் பிள்ளை. இம்மாற்றம் எனக்கும் எனது பந்துக்களுக்கும் பெரும் இடிவிழுந்தாற்போ லிருந்தது. எமது மூதாக்கள் பிறந்து வளர்ந்து சுகத்தை அடைந்த அந்நகரத்தைவிட்டுப் போவது எங்கள் மனத்திற்கு மிக்க கடுமையாயிருந்தது. கமலாலயவாசிகள் சதாச்சாரமுடையவர்களோ அல்லது துராச்சாரமுடையவர்களோவென்று அறியாததால் நாங்களிவ்வாறு அஞ்சிப்

பயப்பட்டோம். ஆயினும் நடக்கும் யாவும் கடவுளின் செயலா லன்றி வேறுவிதமாய் நடக்கிறதில்லையேயென்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டோம்.

எனது தகப்பனார் நமது ஊழியரில் ஒருவனைக் கமலாலயத்துக் கனுப்பி யோர் வீட்டை அமர்த்திக்கொண்டு தனியாய் முன்னமே அங்கு போய்விட்டார். கொடுக்கல் வாங்கல் நிமித்த மின்னும் ஆறு மாதகாலம் வரையில் நானும் எனது தயாருந் தங்கை தம்பிமார் களுங் கிரமபுரியிற் றங்கிவிட்டோம். ஆறு மாசங்கள் சென்றபின் னர் நாங்கள் கமலாலயத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

மறுநாட் காலையிற் சுமார் ஐந்தேமுக்கால் மணிக்கு எனது வழக்கப்பிரகாரம் " ஹரிஹரி ஸ்ரீமந் நாராயண " என்று என் கண் களை நிமிட்டிக்கொண்டு படுக்கையை விட்டெழுந்து வீட்டின்முகப் பில் தெற்குமுகமாய் உட்கார்ந்து அவ்வழி நடக்கும் பாட்டை சாரிகளைப்பார்த்துக்கொண்டிருந்தேன். அவர்களிற் பரபரவென் றோடினார் பலர். கூ! கூ! வென்று கூச்சலிட்டு அடக்க ஒடுக்கமின் றிச் சரசபரிகாசங்கள் செய்துகொண்டு நடந்தார் சிலர். குதிகால் மறையும் வண்ணம் மேரைமரியாதையோடு சேலையுடுத்திச் சிரம றைய நிறைய முக்காடிட்டுக்கொண்டு சில ஸ்திரீகளுஞ் சென்றனர்.

அப்பொழுது சூரியோதயமானதால் ஆதித்தன் தன்கண்களைத் திறந்து தனது கதிராடைகளை யெப்பக்கத்திலும் விரித்துப் பரப்பி வெளியிட்டுவர, எங்கள் வீட்டின் எதிர் மனையினின்று ஓர் பால்ய ஸ்திரீயும் ஒன்பது அல்லது பத்துப்பிராயமுள்ள ஒரு சிறுமியும் நீண்ட முக்காடிட்டுக்கொண்டு வாசற்படியைவிட்டு கிழக்கு முகமா யிறங்கினார்கள். பெரியவளுக்கு இருபத்திநாலு அல்லது இருபத் தைந்து பிராயமிருக்கலாம், அவர்கள் படியைவிட்டு இறங்கவே, பளீர் பளீர் என்று ஜொலித்தெழுந்த சூரிய கிரணங்கள் குளிர்ந்த சந்திரனைப்போன்ற அவர்களுடைய சுந்தரவதனங்களிற் படவே எதிரொளி யென்முகத்தில் வீசினதுபோலத் தோன்றிற்று. நான் இந்த ரூபலாவண்ணிய முகங்களைக் கண்டு பிரமித்து :—

இப்பெண்களைப் பார்த்தால் தெய்வலோகக் கன்னிகைகள் போலத் தோன்றுகின்றதே! இவர்களியார்? இவ்விருபூவையரும் தமக்கை தங்கையராயிருப்பார்களோவென்று நான் ஆலோசித்துக் கொண்டிருக்கும்போதே அவர்கள் மௌன வினயத்தோடு கண் களை வெறெடுக்காமல் ஏதோ சில மந்திர சுலோகங்களை யுச்சரித்துக் கொண்டு கிழக்கே நோக்கிச் சென்றார்கள்.

யாது காரணத்தால் இவர்கள் இவ்வளவு வினயத்தோடு நடக்க வேண்டும்? எங்கே போகின்றார்கள்? என்னத்திற்காக? என்று இவர்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தேன். அவர்களுஞ் சற்று நேரத்துக்குள்ளாக மறைந்துவிட்டார்கள். ஆகவே, திரும்ப அவ்விதி கடக்குஞ் ஜனங்களைப் பார்த்துக்கொண்டிருக்கையில் எனது தாயார் திடீரெனவந்து:—

"சுந்தரம், ஏழு மணியாயிற்றே, பழைய நின்பேரில் உனக்குச் சிந்தனையில்லையா? பாடங்களை வாசிக்கவேண்டாமா? பத்துமணிக்குப் பாடசாலைக்குப்போக நீ நினைக்கவில்லையா?" என்று என்னை அலட்டினார்கள்.

நான் :—

"அம்மா! இன்று நான் பாடசாலைக்குப்போவது சாத்தியமல்ல. நேற்றையதினந்தான் நாம் இங்கு வந்தோம். இன்னுங் கலாசாலை எங்கே இருக்கிறதென்று முதலாய்த் தெரியவில்லை. பள்ளிக்கூடத் தலைவரையுங் கண்டு பேசினேனில்லை. ஆதலால் நான் இன்று பாடசாலைக்குப் போவதில்லை"

என்று பேசிக்கொண்டிருக்கும்போதே கிழக்கேபோன இரு பெண்களுந் திரும்பிவந்தார்கள். வீட்டின் அருகாமையில் வந்தவுடனே, மூத்தாள் இளைஞியை நோக்கி :—

"மனோரஞ்ஜிதம்! நான் எனது ஜெப புஸ்தகத்தைவைத்து விட்டு மறந்து வந்துவிட்டேன்" என

அச்சிறுமி :—

"அம்மா, இக்ஷணமே நான் ஓடி யதை யெடுத்துவருகிறேன்" என்று தீவிரமா யோடத் துவக்கினாள்.

அப்போது மூத்தாள் :—

"அம்மா மகளே! நீ போகிறது போகிறாயே, ஒரு ரூபாய் கொடுக்கிறேன்; நமது குருசுவாமிகளிடம் அதைக்கொடுத்து உனது பாட்டனார் ஆத்ம சாந்திக்காக நாளைக்கு ஒரு பூஜைசெய்யும்படி சொல்லிவிட்டு வா" என்று பணத்தைக் கொடுத்தனுப்பினாள். அதனை அச்சிறு கன்னிகாவிரத்தினம் வாங்கிக்கொண்டு வெகு துரிதமா யோடினாள்.

நான் "தாயைப்போற் பிள்ளை" என்கிற பழமொழியை மறந்தவனாய் அச்சிறு பெண் முதியாளின் தங்கையென்றே அந்நேரமளவும் நினைத்திருந்தேன். அதற்குள்ளாக அந்தஸ்திரீ தன் வீட்டிற்குள் போய்விட்டாள்.

இராமாயணம், மகாபாரதம் முதலிய பிரபந்தங்களைப்பாடின கம்பர், வால்மீகி, வேதவியாசர் முதலிய கவீசுரர் இத்தகைய மாதுமனோன்மணிகளைக் கண்டிருந்தாற் சந்தேகமற அங்கமாலை யொன்று அலங்காரமாகச் சோடித்துக் கூறியிருப்பார்கள் என்று யோசித்தேன்.

அப்போது சாப்பாட்டு நேரமானதால் எனது தாயார் வந்து என்னை அடுத்தடுத்து அலட்ட நான் எழுந்துபோய்ச் சாப்பிட்டு இளைப்பாறினேன். ஆயினுந் தனி வாசம்பண்ணினதால் எனக்கு மெத்த சலிப்புக்கிடமாயிற்று. ஏனெனில் எனது தந்தையார் கச்சேரிக்குப் போய்விட்டார். எனது தாயாருந் தங்கையுந் தங்கள் அலுவலைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். எனது சிநேகிதர்களுங் கிரமபுரியில் நின்றுவிட்டார்கள். எனக்குப் பேச்சுத்துணைக்கு யாருமில்லை. ஆதலின் சலிப்பாயிருந்தது. எனது சலிப்பை ஒழிக்கச் சில கதா புஸ்தகங்களை வாசிக்கத் தலைப்பட்டேன். பின்னுஞ்சற்றுப் பொறுத்து வியர்த்த கதைகளை வாசிப்பதைக் காட்டிலும் வேத பாராயணம் பண்ணுவது உசிதம் என்று எண்ணிப் புராணங்கள், இதிகாசங்கள், உபநிடதங்கள் முதலிய வேதநேத்திரங்களைத் திறந்து வாசிக்க ஏற்பட்டேன். நான் விஷ்ணு பக்தனானதலால் விஷ்ணு புராணங்களை வெகு பக்திவிநயத்தோடு வாசிக்க அவைகளில் ஸ்ரீமந்நாராயணனே மெய்யான கடவுள். அவரே சர்வலோகத்தையும் தாங்கி நடத்துகிறவர். அவரே சர்வசக்தியுள்ள தெய்வம். அவரில் நம்பிக்கையும், விசுவாசமும் வைத்துச் சேவிக்கவேண்டும். சிவனைக் கனவில் முதலாய் நினைக்கத்தகாது. சிவபக்தர் பாஷாண்டபதிதர்; சண்டாளர்; நரகமே அவர்கள் கதி என்று ஹரியைப் புகழ்ந்து ஹரனை யிகழ்ந்து பாடியிருப்பதை வாசித்து மகாமனோல்லாசமடைந்து ஹரி! ஹரி! ஸ்ரீமந் நாராயணா! நாசிம்ஹா! நமோ! நமோ! எனக்கூவி ஆர்ப்பரித்துப் புத்தகத்தை மடக்கி மனோரம்மியம் அடைந்து சற்றுப் பரவசமானேன்.

சிறிது கணங்கள் நிகழ்ந்தபின்னர் சைவசமயார்த்தசாரங்களை யறிய விரும்பி சிவபுராணங்களை ஆராயத் தொடங்கினேன். ஆனால் அங்கேயென்னகண்டேன்? முற்றிலும் விரோதமான சாதனைகளை வாசித்து வெருண்டு மருண்டேன். என்ன! ஹரனைப் புகழ்ந்து ஹரியை இகழ்ந்திருக்கக்கண்டு கோபங்கொண்டவனாய்ப் புஸ்தகத்தைமூடிப் பூமியில் விசிறியடித்துவிட்டு சற்று ஆலோசித்த பின்னர்:—

இவ்விருவகை புராணதிகளைப்பாடினவர்களியார்? இவைகளின் கிரந்த கர்த்தாக்கள் யார்? என மறுபடியும் ஏட்டைப் புரட்டத் துவக்கினவிடத்தில் விஷ்ணு புராணங்களும் சிவ புராணங்களும் வேதவியாசனால் இயற்றப்பட்டனவென்று தெரியவந்தது. அப்போது நான் :—

இவ்வேதவியாசன் ஒன்றில் பித்தனாயிருக்கவேண்டும், அன்றேல் கடவுள், நன்மை, தின்மை, முக்தி, நரகம் முதலிய ஒன்றும் இல்லையென்று சாதிக்கும் நாஸ்திகனாயிருக்கவேண்டும். வியாசன் பித்தனல்லன்; ஏனெனில் அவனுடைய கவிப்புலமையே அவனைச் சிறந்தபுத்தி திட்சண்யமுடைய மேதாவியென்று காட்டுகின்றது. அவன் பித்தனா யிராவிடில் பின்னும் என்னதான்? சுத்த நாஸ்திகன். அவன் ஹரியை நம்பினானில்லை, ஹரனையும் நம்பினவனல்ல. அவன் அவர்கள்மீது சொன்ன விரோத இகழ்ச்சி புகழ்ச்சிகளே அவனுடைய நாஸ்திகத்தை எடுத்துரைக்கின்றன. அங்ஙன மாதலால் விஷ்ணுவையுஞ் சிவனையும் எதுக்காகப் பற்பல விடங்களிற் புகழ்ந்தேற்றினான்? ஏழை ஜனங்களின் கண்களிற் பக்காச்சேர் மண்ணைத் தெள்ளிப்போடுவதற்காகவே அவர்கள்மீது புகழ் கூறினான் என்று எனக்குள்ளே திண்ணமாய்தீர்மானித்துக்கொண்டேன்.

இதனாற் சலிப்புற்றுப் புஸ்தகங்களை யெல்லாம் வாரிப்போய் அலமாரியில் அலங்கோலமாய்ப் போட்டுவிட்டு வெளியில் வந்தேன். அத்தருவாயில் எனது தந்தையார் கச்சேரி முடிவாகிவீட்டுக்குவந்து சேர்ந்தார். நானும் அவரும் ஸ்நானம்செய்து அசனம் பண்ணிவிட்டு சல்லாபக்கூடத்திற்குப் போனோம். அங்கு எனது தகப்பனார் என்னைப்பார்த்து :—

“சுந்தரம், இன்றைக்கேன் இவ்வளவு முகவாட்டம்? என்ன சம்பவித்தது? உனக்கு அசௌக்கியமா? மனஸ்தாபமா?” என்று வினவ :—

நான் :

“இல்லை அப்பா. இன்றையதினம் பள்ளிக்கூடத்திற்குப் போகாமையினாலும் தனிவாசம் பண்ணினதினாலும் முகம் வித்தியாசமாய்க் காணப்படுகிறது போலும்” என்று சாக்குபோக்குச் சொல்லிக்கொண்டேன்.

அப்போது எங்கள் ஊழியரில் ஒருவன் வந்து :— “ஐயா! யாரோ சிலர் தங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள்” என; அதைக் கேட்டு என் தகப்பனார் சட்டென வெழுந்துபோய்விட்டார். அந்த

வேளையில் என் தாயாரங்கு வந்தார்கள். இது நல்லசமயமென்று யோசித்து எனது அன்னையை நோக்கி :—

"அம்மா இந்நாட்டு வளப்பமென்ன? நடவடிக்கை என்ன? இன்று காலமே நான் நமது வீட்டுத்திண்ணையி லுட்கார்ந்துகொண்டு வழிகடக்குஞ் ஜனங்களை நோக்கிக்கொண்டிருக்கும்போது அவர்களிற் சிலர் அமரிக்கையுள்ள சாதுக்களாய் நீண்ட மூக்காடிட்டுக்கொண்டு போனார்கள். வேறு சிலர் அடக்க வொடுக்கமின்றி யாச்சாரமின்றி பரபரவென் றோடினார்கள். இந்த பரஸ்பர வித்தியாசமேன்? அச்சாது ஜனங்கள் யார்?" என்று கேட்டேன். அவர்கள் அதற்கு விடையாக :—

"இந்த ஊரை எனக்கு நன்ருய்த்தெரியும். இந்நகரத்திலேயே நான் பிறந்தேன். இங்கு வெகுநாள் எனது தகப்பனார் உத்தியோகஞ் செய்துகொண்டிருந்தார். இப்பட்டினத்திற் சத்திய கத்தோலிக்குச் சமயத்தாரென்று ஒரு சார்பார் இருக்கின்றார்கள். அவர்கள்தான் நிறைய முக்காடிட்டுக்கொண்டு கீழத்தெருவிலிருக்குங் கோவிலுக்குப் போவார்கள். அவர்கள் மகா சாதுக்கள்; யோக்கியர்கள்; மரியாதையுள்ளவர்கள்" என.

எனக்கிப்போது தெரியவருகிறது. அவர்களை நான்பாடசாலைகளிற்கண்டிருக்கிறேன். அவர்களுக்குக் கிறிஸ்துவர்கள் என்று பெயர்; அவர்களுக்கு ஜாதிபேதம் தீண்டல் முதலியனவைகள் கிடையா. என,

எனது தாயார் :—

"நீ யாரைப்பற்றிச் சொல்லுகிறாய் மகனே, புரோட்டெஸ்டாண்டு கிறிஸ்துவர்களைப்பற்றிப் பேசுகிறாய். நான் சொல்லுகிறவர்களுக்குக் கத்தோலிக்கு கிறிஸ்துவர்களென்று பெயர். அவர்களிடத்தில் ஜாதிபேதம், பிரதிஷ்டை, தீண்டல், சுத்தபக்தம் முதலிய அநுசரணங்களுண்டு. அவர்கள் தத்தம் குலாச்சாரங்களை விடார்கள். ஜாதிதப்பி ஜாதிபோகார்கள். ஜாதி அபிமானத்தைப் புறக்கணித்து நீச்சர்களோடு பந்தி அமரார்கள்; அவர்களோடு கொள்வனை கொடுப்பனை செய்யார்கள்; பஞ்சமரைத் தொடார்கள். இதனிமித்தமே அவர்களுடைய ஆலயங்கள் முக்கவராய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. மேற்குலத்தோர் வேறாயும் இழிகுலத்தோர் வேறாயும் ஆலயத்திற்குள்ளமர்ந்து சுவாமியைத் தொழுவார்கள். சுத்தபக்தமுஞ் சுசிகரமு முள்ள குலமக்களேயவர்கள். ஆனால்

சாமானிய மூட ஜனங்கள் அவர்கண்மீது சொல்லுங்குறைகளை நான் ஒருநாளுங் கண்டதேயில்லை. அவர்களிடத்தில் ஒரே ஒரு குறையைக் காண்கிறேன். சண்டாளருக்கும் பதவியுண்டென்று அவர்களுக்குந் தீக்ஷை கொடுத்துத் தங்கள் சங்கத்திற்சேர்த்துக் கொள்ளுகிறார்கள். இதுதான் எனக்குச் சகிக்கவில்லை" என,

நான் :—

'இதுதானா? வேறாக்ஷேபங்களில்லையா? நமது மதத்திலும் பறையருக்குப் பதவியுண்டென்று கூறப்பட்டிருக்கின்றதே. நந்தன், திருவள்ளுவர் முதலிய ஜாதிப் பிரஷ்டர் முக்தி யடைந்தார்களென்பது நமது சமயக் கொள்கை யன்றோ? என :—

"எனக் கென்ன தெரியும்? நமது மதக்கொள்கைகளை நீ தான் அறிவாய். எனக் குன்னோடு பேச நேரமில்லை மகனே. உன்னைப்போலொத்தவர்களைத் தேடிப் போ; அவர்கள் உன்வினாக்களுக்குத் தக்க விடையளிப்பார்கள்" எனச் சொல்லி யெழுந்து போய்விட்டார்கள் எனது தாயார்.

நான் மறுபடியுந் தனித்திருக்க நேரிட்டது ஆதலால் சலிப்புக் கிடனாயிற்று. இச்சலிப்பையுங் காலமே வேதவியாசன் போதனையால் வந்த கிலேசத்தையும் ஒழிக்கவேண்டி எனது அறைக்குட் போய் நித்திரைத் துணையைத் தேடியும் நெடுநேரம் தூக்கம் பிடிக்காமல் பற்பல சிந்தனைகளிலுழன்று கடைசியாய் இரண்டு மணி தொட்டு ஐந்துமணி வரையிலாழ்ந்து நித்திரைபோய்விட்டேன்.

ஐந்து மணிக்குச் சாவகாசமா யெழுந்து முகங் கழுவிக் கொண்டு ஊரைச் சுற்றிப்பார்க்க வெளியிற் புறப்பட்டேன். அப்போது நான் காலமே கண்ட இரண்டு பெண்களும் தங்கள் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வழக்கப்பிரகாரங் கிழக்கு முகமாய்ப்போனார்கள். நானும் அவர்களைப் பின்பற்றிப் போனேன். பெண்களுக்கு அடக்கமே பெருமையென்ற பெரியோர் மொழிக்கிசைய நிலத்தில் நட்ட கண் நிமிராது அதி விநயத்தோடு நடந்துபோனார்கள். நம தாரியமதப்பெண்களில் இவ்வளவு மேரை மரியாதையுள்ள மங்கையரை யொருநாளும் நான் பார்த்ததேயில்லை. சற்று நேரத்துக்குள்ளாக வானத்தை அளாவும் பிரமாண்டமான ஓராலயத்தி னருகில் வந்து சேர்ந்தோம். அங்கு சென்ற வளவில் இருவரும் உள்ளே பிரவேசித்து ஓர் சிறிய தொட்டியிலிருந்த சுத்த ஜலத்தைத் தொட்டு நெற்றியிலும் மார்பிலும் தோட்பட்டைகளிலும் பூசிக்கொண்டு தேவாலயத்தின் மூலஸ்தானம் வரையிற்

போய்த் திரியாங்க நமஸ்காரஞ் சமர்ப்பித்து எழுந்து நெடுநேரம் முழந்தாட் படியிட்டமேரையாய்ப் பீடஸ்தானத்தை நோக்கி கண்களைப் பக்க பாரிசங்களிற் றிருப்பாமல் ஜெபித்து நியமங்களை நிறைவேற்றினார்கள். அவர்கள் புஸ்தகங்களில் வாசித்தும் சில விசை உத்திராட்சங்களைப் போன்ற மாலைகளை உருட்டியும் போற்றினார்கள். இன்னும் அநேகமநேகம் புருஷ பூவையரும் ஈஸ்வரனைத் தொழுதுகொண்டிருந்தார்கள். ஆனால் மற்றவர்களைக்காட்டிலும் இவ்விரு உத்தமிகளும் அதிக பக்தியோடு கடவுளைத் தோத்தரித்தார்கள். ஆதலால் இவர்கள் தியானயோகத்தில் முதிர்ந்து தெய்வத்தோடு முழு ஐக்கியமான சிறந்த அடியார்களென்று உத்தேசித்துக்கொண்டேன். சற்றுநேரம் அங்கு நின்று அவர்களை உற்றுப் பார்த்து அவர்களது அடக்க வொடுக்கத்தையும், மௌனத்தையும், பக்தி விநயத்தையுங் கண்டு பிரம்மை கொண்டு நான் எனக்குள்ளே :—

" எத்தனையோ விஷ்ணு வாலயங்களையும் சிவாலயங்களையும் பார்த்திருக்கிறேன். அங்கு பிரவேசிக்கும் வைஷ்ணவர் சைவர் முதலிய பக்தர்களையுங்கண்டிருக்கிறேன். அவர்கள் சந்தைக் கடையில் ஓடியாடி விளையாடி விலைகூறி விலைசெய்யும் வியாபாரிகளைப் போலச் சிரித்துப் பரிகசித்து வீணிற்காலங்கழித்து வீட்டிற்குத் திரும்பிப்போவார்கள். இதுவே நான் எவ்விடத்திலும் பார்த்தவிஷயம். அவர்களது நடையில் விநயமும், செய்கையில் அடக்கமும், ஆராதனையிற் பக்தியும், ஸ்துதியில் உண்மையுமுண்டாமென்று நான் கிஞ்சித்தும் நம்பவில்லை. பெருமையே அவர்களுடைய பேரானந்தம். சைவர் பட்டை பட்டையாய் விபூதியையும், வைஷ்ணவர் தாரை தாரையாய்த் திருமண்காப்புகளையு மிட்டுக்கொண்டு கர்வ காம்பீரத்தோடு அவ்வாலயங்களிற் பிரவேசித்து, அங்கு சுவர்களிற் றீட்டப்பெற்றிருக்கும் அசுசிய காட்சியையும், நாணமின்றி நடனஞ்செய்யும் நாட்டியப் பெண்களையும், பாடிப் பசப்பும் வெட்கமற்ற வேசிதாசிகளையும் பார்த்துப் போவதே அவர்களுடைய முக்கிய நமஸ்காரம்! ஆ! இந்தத் தேவாலயத்திற்கும் நமது கோவில்கட்கும் எவ்வளவோ தூரம்! இந்தச் சன்னிதானத்திற் கடவுளைப் புகழ்ந்தேற்றும் அடியாருக்கும் நமது ஆலயங்களிற் றொழப்போகும் பக்தர்கட்கும் எவ்வளவோ பாரதூர வித்தியாசம்! உண்மையும் உயிரும் முக்திக்கு வழியும் எங்கே யிருக்கின்றன? இங்கு தரையோடு [illegible] [illegible] அஷ்டாங்க சாஷ்டாங்கமாய் விழுந்து

ஆண்டவனை ஆராதிக்கும் அடியாரிடத்திலா அல்லது பிறர் மெச்சும்வண்ணம் பெருமைக்கு வெளிப்பட்டுவரும் பிரம்ம சமயத்தாரிடத்திலா? அறியேன்! அறியேன்! ஏ பகவானே! என் இதயக்கண்களைத் திறந்தருள்வாய்!" என்று சொல்லிக்கொண்டு வெளியில் வந்தேன்.

அத்தருவாயில் அக்கோவி லருகாமையில் வடக்குப்பக்கத்திற் கட்டப்பட்டிருக்கும் மூன்றடுக்கு மெத்தைகளினின்று அநேகம் பாலியரும் பையன்களும் என்னைப்போலொத்த நடுத்தர சிறுவர்களும் தேன்கூடு கலைந்ததுபோல் இரைச்சலிட்டுக்கொண்டு வெளிப்பட்டு வந்தார்கள். சுமார் ஐந்நூறு மாணுக்கரிருக்கலாம்.

சற்று பொறுத்து உபாத்தியாயர்கள் புறப்பட்டார்கள். நான் அவர்களில் ஒருவரையணுகி ஆங்கிலேய பாஷையில் வந்தனஞ் செய்தேன். அவர் எனக்குப் பிரதி வந்தனஞ்சொல்லிவிட்டு:—

"தம்பி நீ யார்? எந்த வூர்? எங்கே வந்தாய்? உன்னைப் பார்த்தாற் புதிதாயிருக்கிறதே" என,

நான் அவருக்கு விடையாக:— "நான் கிரமபுரிவாசி; அவ் வூர்நீதியாசன சாலையில் நெடுநாள் சுதேசிகளில் இரண்டாம் வகுப்பு நீதியஸ்தராயிருந்த சந்தரசேகரம் பிள்ளையின் குமாரன். நேற்றைய தினம் இவ்வூருக்கு வந்தேன். இப்பட்டினத்தைச் சுற்றிப்பார்த்து இவ்விடந் தங்களைச் சந்திக்கலானேன்" என,

அவர்:— "ஆகா! நீ சந்தரசேகரம்பிள்ளையின் குமாரனு? அவரை அறிவேன். அவரெனது கல்வித்தோழர். அவரும் நானும் ஒரே கலாசாலையில் வாசித்தோம். அவர் இராஜரீக முறையில் உத்தியோகந் தேடிக்கொண்டார். நான் இக்கத்தோலிக்குக் கலாசாலையிற் றலைவனுயிருந்து அதை நடத்திவருகிறேன். என் பெயர் எம். ஏ. அருமைநாயகம் பிள்ளை; நான் உனது தந்தையரை விசாரித்ததாக அவருக்குச் சொல்லிவை. சமயா சமயங்களில் அவரைக் கண்டு பேசியுமிருக்கிறேன். நான் இன்னொருதடவை யவரை வீட்டில் வந்து தரிசனம் பண்ணிக்கொள்வதாய்ச் சொல்"

"இருக்கட்டும். நீ இங்கிலீஷ் வாசித்திருக்கிறுயா? ஏதேனும் பரிஷையிற் றேறியிருக்கிறுயா? தற்காலம் என்ன வாசிக்கிறுய்? எந்தப் பாடசாலைக்குப் போய்வருகிறுய்?" என,

நான் :—"போனவருஷம் ஆறாவது வகுப்பிற் றேர்ச்சியடைந்துவிட்டேன். இவ்வருஷம் எவ். ஏ. பரிக்ஷைக்குப் போகத் தயார் செய்கிறேன். நான் இவ்வாறு சித்தப்படுத்திக் கொண்டிருக்கும்போதே எனது தகப்பனாரைத் திடீரென இவ்வூருக்கு மாற்றிவிட்டார்கள். எனது தந்தையரின் தாற்பரியம் இன்னதென்று தெரியவில்லை. அவர் என்னை எந்தப் பாடசாலைக்கு அனுப்புவாரோ எனக்குத் தெரியாது."

என்று பேசிக்கொண்டு கலாசாலையின் சுற்று மதிலைவிட்டு வெளியில் வந்தோம். அப்போது எனது தகப்பனாரும் இன்னுமொருவரும் வண்டியிலேறிக்கொண்டு எங்களெதிரில் வந்தார்கள். நான் அதோவருகிறார் என் தந்தையரென்று சுட்டிக் காட்ட, உபாத்தியாயர் விரைவாயோடி யிருவரையுஞ் சந்தித்துக்கொண்டார்.

பிற்பாடு நானும் உபாத்தியாயரும் அவர்களோடு வண்டியிலேறிக்கொண்டு வீட்டுக்கு வரும்போது அவர்கள் மூவரும் இராஜரீக விஷயங்களைப்பற்றிப்பேசின பின்னர் எனது படிப்பு விஷயத்தைக் குறித்தும் பேசினார்கள். நாளை முதல் அருமைநாயகம் பிள்ளை பாடசாலைக்கு என்னை அனுப்புவதாய் எனது தகப்பனார் அவரோடு முடிவு பண்ணிக்கொண்டார். நாங்கள் வீடுவந்து சேர சம்பாஷணையு முடிந்தது. வண்டியினின்றிறங்கினோம். கத்தோலிக்குக் கலாசாலைத் தலைமை உபாத்தியாயரும் இதர உத்தியோகஸ்தரும் எனது தந்தையர்க்கு வந்தனஞ் சொல்லிவிட்டு எதிர்வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

நானும் எனது தந்தையரும் விடுதியிற் சேர்ந்தபின்பு நான் அவரை நோக்கி :—

"அப்பா, எதிர்வீட்டிற் பிரவேசித்தாரே, அவரியார்?" என,

எனது தந்தையர் :—"நான் உத்தியோகஞ் செலுத்துங் கச்சேரியிலிருக்கும் இரண்டாம் உத்தியோகஸ்தர். அவருக்குமேல் ஐரோப்பியர் ஒருவரிருக்கிறார். நானும் மற்ற சுதேச நீதியஸ்தர்களும் நமது எதிர் வீட்டு நடுவருக்கு ஐக்கியப்பட்டவர்கள்" என

நான் காலமே கண்ட பெண்ணின் அங்க அடையாளங்களைக் கூறியபின்னர் :—"அவளது புருஷனா யிருப்பாரோ?" என்றேன்.

அவர் :—"ஆம்" என,

நான் :—"அப்பா, இன்று இரண்டு மணிக்கு எனது தாயார் கத்தோலிக்குக் கிறிஸ்துவர்கள் விஷயமாய் வெகு புகழ்ச்சியாய்ப்

பேசினார்கள். அவர் கத்தோலிக்குக் கிறிஸ்துவராய் இருப்பாரா? அவருடைய நடவடிக்கை ஆசாரங்களை அறிய விரும்புகிறேன்" என,

அவர் :— "மகனே! ஆங்கிலேய அரசாட்சியிற் றற்போது சிறந்த உத்தியோகஸ்தரில் ஒருவர் மதுரநாயகம்பிள்ளை. அவர் பக்திமான். வழுவா நீதிவகித்த புண்ணிய புருஷர். பாரபக்ஷம் ஓர வஞ்சனை ஒழித்த உத்தம நீதியஸ்தர். தற்காலம் இவ்வூரில் நீதிசெலுத்தும் நடுவரிற் சிறந்த புருஷோத்தமர். அவரது நீதியாசன சாலைக்குவரும் பலரும் அவரை எஞ்ஞான்றும் வாழ்த்திக்கொண்டே போவார்கள். நீதருக்கும் அநீதருக்கும் நடுவில் நீதியை விருதுக்கொடியாக நாட்டித் துஷ்டரை சிக்ஷித்துச் சிஷ்டரை ரக்ஷித்துவருவார். விதவைகளும் அநாதப்பிள்ளைகளும் அவரைத் தங்கள் தகப்பனென்பார்கள். மேன்மக்களும் இழிகுலத்தோரும் அவருடைய தவறா நீதியைக்கண்டு பிரமித்து :—"

"இக் கலிகாலத்தில் நீதியே உலகத்தில் மானிட ஜென்மமெடுத்துத் தோன்றியிருக்கின்றதென்பார்கள். இவ்வளவு பெரிய பட்டணத்திற் சகலரும் அவருடைய மித்துருக்களேயன்றி சத்துருக்களொருவருமில்லை, நீதி செலுத்து முறையில் ஐரோப்பியர் முதல் சுதேசிகளிற் கடைசி உத்தியோகஸ்தர் வரையிலியாவரும் அவருடைய ஆலோசனை யல்லாது யாதும் செய்யார்கள். அவருடைய யோசனைகளைக் கேட்டுத் தீர்ப்புச் சொன்னவர்களில் ஒருவரேனும் ஒருநாளும் நீதியினின்று வழுவிப்போனதில்லை."

"அவர் கல்வியிற்சிறந்த நிபுணர், அவருக்கு அநேக விஷயங்கள் தெரியும். தெரியாததென்பதில்லை. யார் எவ்விஷயத்தைப்பற்றி வினவினும் உடனே யதற்குத் தக்க விடைகிடைக்கும். அவர் மிகுந்த சிறந்த சாசனர்த்தி. சர்வலோக சட்டத்திட்டங்களையும் சம்பூரணமாயறிவார். அவைகளை விரித்து வியார்த்திசெய்து அநுஷ்டானத்துக்குக் கொண்டுவருவதிற் பேரோங்கிய விற்பன்னர். அவர் இவ்வாறு சீர்பெற்ற சான்றோராயினும் தமது சாமர்த்தியத்தை ஒருபோதும் பாராட்டுபவரல்லர். அவர் ஒருபோதும் பிறரை நிந்திக்க ஏற்படமாட்டார். அவரொருவருக்கும் அபராதியல்லர். யாருக்கும் அவர் விஷயத்தில் மனஸ்தாபங்கிடையாது"

"அவர் பக்திமான் ஆதலால் நித்தியம் இரண்டு தசைகாலம் ஆலயத்திற்குப்போய்த் தெய்வதரிசனம் பண்ணிக்கொள்வார். அவர்கிருகத்திற் செய்யும் நியமநிஷ்டைகளும், அநுஷ்டானங்களு

மனோகம். இல்லறத் தருமங்களில் மானவ தர்மசாஸ்திரத்தை அறக் கற்றவர். இங்கிலீஷ் பாஷையில் பி,எல்., எம்.ஏ., எம்.எல். வரையிற் பரீக்ஷைகொடுத்து பட்டம்பெற்றவர். பற்பல பாஷைகள் வாசிப் பார்; எழுதுவார்; பேசுவார்; அவைகளுக்கு அர்த்தம் சொல்லு வார். அவர் சமஸ்கிருத பாஷையிலும் பண்டிதர். நாம் சாமான் ணியமாய் எவ்வாறு சம்பாஷணையிற் பழமொழிகளை உபயோகிக் கின்றோமோ அவ்வாறு இவர் கிரந்த சுலோகங்களை உபயோகிப் பார். ஒரே வார்த்தையிற் கூறவேண்டுமானால் சர்வசாஸ்திரார்த்த பண்டிதரென்றே நாம் அவரை மதிக்கவேண்டும்."

---

## 2-ம் அத்தியாயம்.

*அபிராமி அம்மாளின் குணாதிசயங்கள்; மனோரஞ்ஜிதத்தின் தர்ம சிந்தை; துஷ்டப் பெண்டீர்கள்; மனோரஞ்ஜிதத்தின் கானப்பயிற்சியும், ஞானோபதேசம் துவக்கமும், சிறிய சங்கிதையும்; சுந்தரம் மதுரநாயகம் பிள்ளையை நன்குயறிதல்.*

நீ காலமே கண்ட அவரது உத்தம பத்தினியின் குணாதிசயங் கள் அவருடைய குணவிசேஷங்களிலும் குறைந்தவைகளல்ல. அவளுடைய பெயர் அபிராமி. இவ்வுத்தமியின் தர்ம நடக்கைகளை நான் பலவாறு கேட்டும் பார்த்தும் உணர்ந்தமையால், எரிக்கும் வெய்யிலும் பொழியும் மழையும் இவள் பொருட்டேயென்று நினை க்கிறேன். காலைதொட்டு மாலைவரையில் இவள் வீட்டுக்கு வரும் ஏழைஜனங்களுக்குக் கணக்கில்லை. யாரேனுந் தாகமென்று தண் ணீர்கேட்டால் மோர் கொடுப்பாள். நீராகாரம் கேட்டாற் திருப்தி யாகப் போஜனங்கொடுத்தனுப்புவாள். ஓ! பேராச்சரியம்!! அவள் குலமகள். பெரிய உத்தியோகஸ்தரின் சமுசாரம். நீசப் பிச்சைக் காரருடைய கால்களைகழுவி அவர்களுக்குத் தர்மங்கொடுத்து உப சாரஞ் சொல்லியனுப்புவாள். அவர்களுடைய புழுத்து நாறும் இரணங்களைக் கழுவிச் சுத்தம்பண்ணி மருந்திட்டுக் கட்டுக்கட்டி அவர்களை உபசரித்து அனுப்புவாள். இத்தகைய ஊழியங்களைச் செய்வதற்கு சிலவேளை அவர்களுடைய குடிசைகளையுந் தேடிக் கொண்டுபோவாள். திங்கட்கிழமைதோறும் ஆத்துமாக்கள் சாந் திக்கென்று விசேஷ தர்மங்களைச்செய்வாள். வெள்ளிக்கிழமை தோறும் தன்னுடைய இரக்ஷகபெருமானாகிய இயேசுநாயகர் தன் னிமித்தம் வாதைப்பட்டாரென்று எண்ணி அதன் ஞாபகமாக பற்

பல கடின உபத்திரவங்களை அனுபவிக்கிற நோயாளிகளைச் சந்தித்து சிலருக்கு ஆறுதல் சொல்வாள். சிலருக்குச் சற்புத்திகளும் இதபோதங்களும் உரைத்து எல்லோருக்கும் திருப்தி செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி வருவாள்.

இப்புண்ணியசீலி தானம் பண்ணும்போது அவள் அருமை மகள் மனோரஞ்ஜிதம் அவள் அருகில் நின்றுகொண்டு :—

"அம்மா! இவனுக்கு இன்னும் அதிகங்கொடுங்கள். அவனுக்கின்னும் போதாது. அவனுடைய பிள்ளைகள் சாப்பாடில்லாமற்றனே இப்படிக் குச்சிபோலிருக்கிறார்கள். அத்தனைபேருக்கு அதுபோதுமா? இன்றைக்கு எனக்குச் சீரணி மிட்டாயிக்குக் கொடுக்குங் காசை யிவர்களுக்குக் கொடுத்துவிடுங்கள்" என்று,

தனது மதலைப் பாஷையாற் பார்க்குஞ்ஜனங்கள் கன்னெஞ்சராயினுங் கரைந் துருகும் வண்ணந் தனது தாயைக் கெஞ்சி மன்றடி ஏழைகளுக்காகச் சிபார்சு பேசுவாள். இளைஞ்ஞியின் சிபார்சு ஒருநாளும் வியர்த்தமாய்ப் போனதில்லை. தரித்திரர் தியாகத்தைப் பெற்றுக்கொண்டு :—

"தாயே நீ பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்வாய்!" என்பார் சிலர்.

"கடவுள் உனக்குத் தீர்க்காயுசுந் திரண்ட செல்வமும் மாறாத சுகமும் மங்காத கீர்த்தியும் தெளிந்த ஞானமும் ஆழ்ந்த புத்தியும் அளிப்பாராக!" என்பார் பலர்.

"உனது புதல்வி புகுமிடம் புண்ணியக்ஷேத்திரமாகும். அவள் கணவன் வீட்டிற்றொட்டது துலங்கும்; வைத்தது வழங்கும். அவள் மண்ணைத்தொட்டாலும் பொன்னாகும். ஆதலால் அவளுடைய திரவியம் குபேரனுடைய திரண்ட திரவியத்தை மேலிட்டுப்போகும்" என்று மங்களங் கூறிக்கொண்டு பேவார் அநேகர். இதுநிற்க,

இம்மாது சிரோமணியின் இல்லற தர்மங்கள் மகத்தானவைகளே. அவள் தனது கணவன்மட்டிலும் பிள்ளைகள்மட்டிலும் செலுத்துங் கடமைகள் மகா விந்தையானவைகள். நான் கிரமபுரியைவிட்டுக் கமலாலயத்திற்குவந்து ஆறுமாதங்களாயின. இவ்வாறு மாசகாலமாய் நாளும் மதுரநாயகம்பிள்ளையும் நீதிமந்தாத்துக்கு ஒன்றாகப்போய்த் திரும்பிவருவது வழக்கம். அவர் கச்சேரிக்கென்று வெளிப்படும்போதெல்லாம் அவருடைய குலதர்மபத்தினி அபிராமியம்மாள் வாசற்படி வரையில் வந்து நின்றுகொண்டு :—

"அத்தான், சாப்பாட்டுக்கு வரத் தாமதஞ் செய்யாதேயுங் கள். வேளை தப்பி வேளை சாப்பிட்டால் நோய்க்கிடமாகும். "நோய்க்கிடங்கொடேல்" என்ற மூதுரை உங்களுக்கு நன்றாய்த் தெரியுமே. தீர்ப்புச் சொல்வதில் தாமதமாகுமென்று அறிவீர்க ளாகில் உடனே நமது ஊழியரில் ஒருவனை அனுப்பிவையுங்கள்; நான் தக்ஷணமே பசி தீர்க்கச் சில பக்ஷணங்களைக் கொடுத்தனுப் புகிறேன்" என்று,

பலவாறாய் நயவசனங்களைச்சொல்லி வீட்டுக்குள் போவாள். அவர் நீதியாசன சாலையைவிட்டுத் திரும்பிவந்து வாசற்படி ஏறு முன்னமே 'அபிராமி!' என்பார். திறந்தவாய்மூடுவதற்குள்ளாக "அத்தான் இதோ வந்துவிட்டேன்" என்று செம்பில் ஜலமெடுத் துக்கொண்டு துரிதமா யோடிவருவாள். ஏனெனில் அவர் கால் அலம்பாமல் வீட்டுக்குள் பிரவேசிப்பது வழக்கமல்ல. அவர் கால் அலம்பிக்கொள்ளும்போது அபிராமியம்மாள் அவர் அருகில் நின்றுகொண்டு :—

"அத்தான்! இன்றைக்கேன் தாமதித்து வந்தீர்கள்? தாமத மானபோது ஏனெனக்குச் சொல்லியனுப்பவில்லை?" என்று மதுர மொழியோடு முறையிட்டுக்கொள்வாள். அப்போது அவர் தனது காதலியின் இனிய கனிகரத்தையும் அங்கலாய்ப்பையும் பார்த்து மனம்பூரித்து :—

"அபிராமி, என்னைப்பற்றி யேன் உனக்கு இவ்வளவு கவலை? எனதாயுசு குன்றிப்போனால் உனதாயுசுங் குன்றிப்போமா? நான் போனால் உனக்குப் பிழைக்க வகையில்லையா? உன் தாய் தந்தை யரும் தம்பி தமயன்மாரும் பெருத்த பிரபுக்களன்றோ? என,

அவள் :— "ஆ! அத்தான், நீங்கள் இப்படிச் சொல்லவேண் டாம். யாரிருந்தும் எனக்கென்ன சுகம்? சிரசில்லாச் சடலம் உல கத்தில் இருந்தென்ன போயென்ன? எனது கண்கள் நிறைந்த கணவனின் காக்ஷியிழந்து உலகில் உய்வது எனக்கடுக்குமா?" என்பாள்.

அவர் :— "ஆமாந் தெரியுந் தெரியும்; நீ புருஷன்பேரில் மெத்த கண்ணுடையவள்தான் வா" என்று பரிகாசம் பண்ணிக் கொண்டு உள்ளே போவார்.

நான் இந்த இனிய காக்ஷியைக் காணும்போதெல்லாம் :— "இவளே ஸ்திரீ. இவளே குலரத்னம். இவளே மெய்யான இல் லாள். இவளே, விவிலிய நூலிற் புருஷனும் பூவையும் ஒரே மாமி

சம் என்று கூறியிருக்கும் வேதவாக்கியத்தை ரூபிக்கவந்தவள்" என்று நினைத்துக்கொள்வேன்.

இவை யாவும் நான் பைரங்கத்திற்கண்ட விஷயங்கள். அவர்கள் அந்தரங்கத்தில் எவ்வளவு அன்னியோன்னிய முடையவர்களோ நான் அறியேன். சந்தேகமற இத்தகைய அன்பும் கனிகாரமும் பக்ஷமும் உபசாரங்களும் உள்ளத்திற் றதும்பியே வார்த்தைகளால் புறத்துக்கு வரவேண்டும்.

மகனே, நானும் நாற்பத்தைந்து வருஷ காலமா யிப்பிரபஞ்சத்தில் நடமாடிப் பற்பலவிடங்களைச் சுற்றிப்பார்த்து விட்டேன். எவ்விடத்திலும் எந்நாளும் இப்பேர்ப்பட்ட குண சிந்தாமணியைப் பார்த்தேனில்லை. சுந்தரம்! அகன்று விரிந்த இஞ்ஞாலத்தைப்பார். அதில் வசித்துவரும் புருஷ பூவையரின் சதகோடிகளைப்பார். ஒவ்வொரு கிருகத்திலும் பிரவேசித்துச் சற்று சாவகாசமாய் உட்கார். என்ன விபரீத காக்ஷி! என்ன விகாரத்தோற்றம்! பகவான் கட்டின கட்டு குலைந்து களரியிற் கூத்தாடுங் காந்தாரிகள் எத்தனை பேர்! மணையேறி மாங்கல்லியஞ் சூட்டின தங்கள் மணவாளரை மதியாத மதியீன மடந்தைகள் எத்தனையோ பெயர்! வெய்யிலில் வெம்பி வதங்கி வேசாறி வந்து தாகத்திற்குத் தண்ணீர் கேட்குங் கணவர்களுக்கு விடையாக :—

"மலையை வெட்டி மாய்ந்துவிட்டாயோ? வரும்போதே வாரிக்கொண்டு போகிறதோ? பொறுக்கக்கூடாதா?" என்று முறுமுறுத்து நிர்த்தாக்ஷண்ணியமாய்ப் பேசும் நிசித குணம்படைத்த நிர்மூடப் பெண்டீர் எத்தனையோ பெயர்! காலை தொட்டு மாலைவரையிற் கஷ்டப்பட்டு வேலைசெய்து களைத்து வீடுவந்து சாதங் கேட்கும் புருஷருக்கு :—

"வாரிக்கொண்டு வந்துவிட்டாயா? வந்தது வராமுன்னமே வெந்தது போதும் மூன்றுணையிற் கொட்டென்று வரவேண்டுமோ? ஆர அமரச் சாப்பிடக்கூடாதா?" என்று பதில் சொல்லும் அபசாரப் பெண்டீர் எத்தனையோ பெயர்!

மகனே, அமுர்தவாசகன் தனது சமுசாரத்தை நோக்கி :— "சித்திராங்கி! நான் ஸ்நானம்பண்ணி நெடுநாளாயிற்று. கண்ணெரிகிறது; தேகமெல்லாங் காந்தளங்கொண்டுபோயிற்று. இன்றைக்கு நான் அப்பியங்கனஞ் செய்யவேண்டும்; வெந்நீர் வை" என,

சித்திராங்கி என்னசொல்லுகிறாள்? "போ! போ! எனக்கு நேரமில்லை! நாளையமற்றையநாள் பார்ப்போம். இராக்கண் விழித்து

எரிவெடுத்துப் போய்விட்டதா? வெய்யிலிற்போய் வேசரி உடம்பில் வெட்டை தாங்கிக்கொண்டதா?" என்று பலவாறுபேசி தன் கணவன் சங்கற்பத்தை யலக்ஷியம் பண்ணுகிறாள்.

அடுத்தவீட்டுப்பெண் சுந்தரரேகையின் புருஷன் சாந்திதரன் நெடுநாள் வியாதியால் மெலிந்து பலவீனப்பட்டு:—"சுந்தரரேகை! சுந்தரரேகை!" என்றழைக்க.

அவள்:—"ஏ ஏ ஏன்" என்று சட்டையின்றி உத்தரஞ் சொல்லுகிறாள்.

"கால் நோகிறதே சற்றுவந்து பிடியேன்,"

"ஆகா! நான் உனக்கு அடிமையா? எனக்கு வேலையில்லையா? நான் காலைப்பிடிக்கவேண்டுமா? பிடிக்காவிடில் நொந்துபோமா?"

"நீ பிடிக்காவிடினும் போகட்டும் நா வரண்டுபோகிறது; கொஞ்சங் கியாழங் கொண்டுவா."

"இப்போதுதான் அடுப்பில் வைத்தேன்; சற்றுப் பொறு. இந்தக் கல்லு! காடாத்து! எத்தனை நாளைக்கு! இந்த இழவெடுப்பான் என்றைக்குத் தொலைவானோ!" என்று சாபனையிடுகிறாள்.

கடைசி வீட்டுக் கனகவல்லி பாயைவிரித்து உல்லாசமாய் உட்கார்ந்திருக்க, அவளது புருஷன் தோட்டப் புறக்கடையில் ஸ்நானம் பண்ணிக்கொண்டிருக்கிறான். தண்ணீர் வார்த்துக்கொள்ளும் போது.—"கனகவல்லி! கனகவல்லி!" என்றழைக்க,

அவள் உட்கார்ந்த விடம் பெயராமல்:—"என்னய்யா! 'கறு கறு' வென்று கூவுகிறீர்?

"உடம்பு தேய்க்கவா, தண்ணீர் வார்த்துக்கொள்ளப்போகிறேன்; சீக்கிரம் வா."

ஐயா அவர்கள் பௌருஷத்திற்கு நான் உடம்புதேய்க்க வரவேண்டுமா? கெட்ட கேடே! கைகொண்டமட்டும் பார்த்துக்கொள்ளும். என்னால் எழுந்துவர முடியாது" என்று மறுப்புச்சொல்லி குந்தினவள் குந்தினவளே; பெருஞ் சாணிப் பிள்ளையாரே.

அடுத்த தெருவில் ஆறுவது இலக்கமிட்ட வீட்டில் நமது குமஸ்தா ஜம்புலிங்கம் பிள்ளை குடியிருக்கிறார். அவருக்குப் புஷ்பக் கண்ணென்று ஒரு பெண்டீர் இருக்கிறாள். அவள் பொழுது முழுவதும்படுத்த படுக்கையிலேயே; தூக்கத்திற் கும்பகரணனையென்று விடுவாள்! அவள் கணவன் வந்து தட்டி யெழுப்பினாலன்றி அவனுக்குச் சாதம்படையாள். சாதம்படைத்துக் கீழே உட்கார்ந்தாலோ அவளையெழுப்ப எமதர்மராஜா இறங்கிவரவேண்டும். ஜம்புலிங்கம்

சாப்பிட்டுச் சுவைபார்த்து "புஷ்பக்கண்ணு, குழம்பி லுப்பில்லே. உப்பு நானுக்கிக்கொண்டுவா" என,

:—"உப்புத்தின்னிப் பண்டாரம்! மரக்காணத்து உப்பெல்லாம் உன் வாசலில் கொட்டியிருந்தாலும் உனக்குப் போதாதே! அதற்கு நானெங்கேபோவேன்? சாப்பிட்டாற் சாப்பிடு; சாப்பிடாவிட்டால் இரு சும்மா."

:—"இருக்கட்டும் சாதம்போடவா."

:—"உனது ஆத்தாளைக் கூப்பிடே!"

:—"நீ யென்னத்துக்கு இருக்கிருய்?"

:—"இந்தச் சுகத்தை அநுபவிக்கத்தான்."

:—"குடிக்கத் தண்ணீரில்லை."

:—"மொண்டுகொள்ளேன்! தண்ணீர்ப்பானை பக்கத்திலில்லையா? இதற்குக்கூடவா ஒரு ஆள் வரவேண்டும்? இதென்ன காரணம்! இப்பேர்ப்பட்ட சோம்பேறி யாண்பிள்ளையும் உண்டா?" என்று முகத்தை மூன்றுவிரற்கடை தூக்கிக்கொண்டு மூக்கந்தெரித்துக் கூற; ஜம்புலிங்கம்பிள்ளை தானே எழுந்து எல்லாஞ் சரிப்படுத்திக் கொண்டு கையலம்பியெழுந்து, "சிவ சம்பு! சிவ சம்பு! இதுவும் என் தலையிற்போட்ட விதியா? கொள்ளைக்கண் பிரம்மன் எழுதின குருட்டெழுத்தா? ஐயையோ! சிவசிவா!" என்று தலையிலடித்துக்கொண்டு வெந்து நொந்து வியாகூலப்பட்டு வெளியிற்போகிருர்.

:—"சுந்தரம், என்தாய் சிவகாமியின் தம்பி சுவர்க்கலிங்கம் பிள்ளையை நீ யறிவாய். அவர் மகள் அஷ்டகாமியை என்னுடைய பெரிய தாயார் பேரன் பொன்னம்பலம்பிள்ளை விவாகம் பண்ணிக்கொண்டார். ஐயோ நாராயணு! போதும் போதும்! அஷ்டகாமி என்ற பெயர் அவளுக்கேதகும். சூது, வாது, வஞ்சகம், காமக்குரோதம், பொய், களவு, கோபம், பொருமை முதலியதூர்க்குணங்கள் தங்கள் பற்பல பிப்பந்திகளோடு அவளிடம் வசிக்கின்றன. அவள் செல்வாக்கில் வளர்ந்த செல்வப்பிள்ளை. அவள் தன் தந்தை வீட்டில் வைக்கிறதே சட்டம். தூர்க்கிருத்தியங்களைச் செய்யும்போது அவளை அவள் வீட்டில் ஏனென்று கேட்பாரில்லை. அவளிஷ்டம்போல நடந்தாள். இப்போதும் இஷ்டம்போல் நடக்கிருள். அவள் ஒருவரையும் மதிக்கிறதில்லை. யார் என்ன சொன்னபோதிலும் உதறிப்போடு

கிறாள். தன் கணவனைத் தன் காற்றாகிப்போற் பாவிக்கிறாள். அவர் ஒன்று சொன்னால் மூன்று சொல்லுகிறாள். தெற்கே போவென்றால் வடக்கே போகிறாள். செய்யென்று சங்கற்பித்தாற் செய்யேனென்று மறுக்கிறாள். செய்யாதேயென்று தடைபண்ணினால் செய்யமுயலுகிறாள். இன்னவிடத்திற்குப் போகாதே என்றால் நான் அங்கே யப்படித்தான் போவேனென்கிறாள். இன்னாரோடு பேசாதேயென்றால் அவர்கள் தான் எனக்குவேண்டுமென்கிறாள். ஆ! நாராயணா! இத்தகைப்பட்ட பெண்களோடு உலகில் எங்ஙனஞ் சஞ்சாரம்பண்ணுகிறது? மகனே! நான் மேற்கூறிய பெண்களெல்லாம் இராக்ஷத இனங்களல்லவா? இவர்களுடைய நடைக்கும் அபிராமியம்மாளுடைய நடைக்கும் எவ்வளவோ பாரதூர வித்தியாசம்! எனது தாய் சிவகாமி இயல்பில் மிக நல்லவள்தான். ஆயினும் இவளுடைய குணத்துக்கும் அபிராமியம்மாளுடைய குணத்துக்கும் யாதோர் ஒப்பனையுங் கிடையாது" என்று முடித்து எழுந்துபோய் விட்டார்.

அவர் எழுந்துபோன சற்றுநேரத்திற்கெல்லாம் எனது தங்கை விஜயவல்லி எங்கிருந்தோ ஓடிவந்து:—"அண்ணா, இதோ எதிர் வீட்டில் எனது பள்ளித்தோழி மனோரஞ்சிதம் கின்னரம் வாசித்துக் கீர்த்தனை பாடுகிறாள். வந்து பாருங்களேன்! என்ன நேர்மையாய்ப் பாடுகிறாள்! அவளுடைய பாட்டை நீங்கள் எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? எழுந்திருங்களண்ணே! அங்கே போவோம்" என்று என்னைத் தொந்தரை செய்தாள்.

நான்:—"விஜயவல்லி, சும்மாவிரு, நாம் அறியாத வீட்டுக்குப் போகலாமா? என்ன நினைப்பார்கள்? நமக்கு அது மரியாதையா?" என,

அவள்—"என்ன அண்ணே! அப்படிச் சொல்லுகிறீர்கள்? நமது அப்பாவுக்கும் மனோரஞ்சிதத்தின் ஆஜிக்கும் மெத்தப் பழக்கமாயிற்றே. நான் அங்கே எப்போதும் போவேன்! மனோரஞ்சிதம் இங்கேவருவாள். ஆ! அண்ணே! அவர்கள் எவ்வளவோ நல்ல ஜனங்கள். மனோரஞ்சிதம் எவ்வளவோ நல்ல பெண்! என்ன நல்ல குணம்! அந்தப் பிள்ளை எவ்வளவு அழகு! எவ்வளவு கெட்டிக்காரி! அவள் குரலோசையையும் பாட்டையுங் கேட்டீர்களானால் அப்படியே மயங்கிச் சொக்கிப் போவீர்களே!" என்று மனோரஞ்சிதத்தைப் புகழ்ந்து பேசினாள்.

எனக்கோ ஒருபக்கத்திற் சங்கீதத்தின்பேரில் மெத்த விருப்பம் ; மற்றொரு பக்கத்தில் அபிராமியம்மாளையும் அவளது மகள் மனோரஞ்சிதத்தையும் மற்றொருவிசை பார்க்கவேண்டுமென்ற அபிலாஷை மெத்த. எப்படியானாலும் ஆகட்டும் பார்ப்போமென நான் என் தங்கையுடன் எதிர் வீட்டுக்குட் பிரவேசித்தேன். அங்கு கூடத்திலொரு இரத்தினக் கம்பளம் விரித்திருந்தது. அதில் அபிராமியம்மாள் உட்கார்ந்துகொண்டு தனது சிறு பிள்ளைகளுக்கு ஏதோ உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். மதுரநாயகம் பிள்ளை ஒரு குருச்சியி லுட்கார்ந்துகொண்டு தமதருகில் ஒரு மேடையின்மீதுட்கார்ந்திருந்த தமது மகளுக்குக் கானப்பயிற்சியுங் கின்னர சிகிச்சையுஞ் செய்துகொண்டிருந்தார். நான் உள்ளே நுழைந்த வளவில் மதுரைநாயகம்பிள்ளையும் அபிராமியம்மாளும் ஒருவாய்ப்பட்டாற் போல் :—

"வாருங்கள், வாருங்கள் தம்பி! இக்நாற்காலியில் உட்காருங்கள்" என்றுபசரிக்க,

எனக்கிது மிக விந்தையும் ஆச்சரியமுமாயிருந்தது. இதுவே கனவான்களுடைய குணம். அவர்களிடத்து மரியாதைபெற நாம் முன்பின் அறிமுகமுடையவர்களா யிருக்கவேண்டுவதில்லை என்று நினைத்துக்கொண்டேன்.

அவர் நான் கீர்த்தனை கேட்க வந்தேனென்று தெரிந்துகொண்டு தமது புத்திரியை நோக்கி :—

"அம்மா, நீ கின்னரத்தை மீட்டி நமது இரக்ஷாபிரானை வருந்தி அழைத்து அவரது பிறப்பின் பெருமையையும் அதனால் உலகத்துக்கு வந்த சுகத்தையும் பாடிப் புகழ்ந்தேற்று" என அவள் கின்னரத்தை எடுத்து இடது கையிலேந்தி தோளிற் பொருத்தி நாதகிருத்தியை வாத்தியத்தின்பேரி லோட்ட :—

"இயேசுவே! இயேசுவே! இயேசுவே!" என்று மூன்று விசை யது சப்தித்தொலித்தது. பின்பு,

"ஸ்வாமி கொண்டீரே தேகம்—அதனுலிந்த
பூமிபெற்றதே யோகம்.

நாமஞானத்தின்மூழ்கி நாதன்வருகை சொன்ன
நற்றவருரைப்படி பொழியும் அருட்கை மின்ன (ஸ்வாமி)
மனிதர்கொண்ட விஷ மாற்றி நரகொழிக்க
இனிவரும் தீர்வைதன்னில் இடாகற்றி ரக்ஷிக்க

புனிதவரங்களாலே பூவுலகஞ் செழிக்க
கனிவினைத்திடுந்தோஷக் கறைமுற்றுமே அழிக்க (ஸ்வாமி)
முத்துக்குடை யிலையோ? முரசு செங்கோ லிலையோ?
சுற்றும் ரதமெனவே சூரிய சந்திர னிலையோ?
சித்திர பூப்பந்த லணி சிறந்த கொலுவிலையோ?
இத்தனை பஞ்சகோலம் எடுத்தீர் பக்ஷிலையோ? (ஸ்வாமி)"

என்று, மோகன இராகத்தில் ஆலாபித்து இன்னிசைகளை இசைக்கத்தொடங்க, வானத்துக்கேறெடுத்த அவளுடைய கண்களினின்று ஆனந்தபாஷ்பங்கள் ததும்பி கன்னத்திற் றாரை தாரையா யோட அவளுடைய சுந்தரவதனம் சந்திரனைப்போலப் பிரகாசித்தது. மலர்ந்த செந்தாமரையை யொத்த அவள் முகத்தைப்பார்க்க ஆயிரங்கண்கள் வேண்டுமென் றெண்ணினேன். எனக்கு உடம்பு சிலிர்த்துத் தலைமயிர் கூர்ச்சிட்டுப்போக, பரவசமாகிறதுபோலிருந்தது. மெய்மறந்தவனாய் அம்மாது மனோன்மணியை வாரியெடுத்து மார்போடணைத்து முகத்தை முத்தங்களால் நிரப்பலாமாவென்று சற்று மனமயங்கினேன், ஆயினும் அவர்கள் புறமதஸ்தராயும் இதர ஜனங்களாயும் இருந்தமையால் எனக்கு மனந்துணிந்ததில்லை. குழல், யாழ், கின்னரம், வீணை முதலிய கருவிகளினின்றுண்டாகு மினிய தொனிகளாலும், சங்கீத இன்னிசைகளாலும் குழந்தைகள், சிறுவர், மாணாக்கர் முதலிய என்போலியர்களும் மயங்கி வசியமாவது வழக்கமாதலால் எனக்கந்நேரத்தில் இவ்வாறு சம்பவித்தது ஆச்சரியமன்று. ஆயினும் எனது பாசத்தில் மாமிசேச்சை கிஞ்சித்தும் கிடையாது. ஏனெனில் கலாசாலையில் இன்னும் வாசித்துக்கொண்டிருந்த சிறு மாணாக்கனாயிருந்தேன்.

அவர் தமது மகள் ஏசுபிரான் பக்தித் தணலாலும் சிநேக உருக்கத்தினாலும் இளகி அழுகிறாளென்று கண்டு:—

"அம்மா! நிறுத்திவிடு; போதும் நாளையதினம் பார்த்துக் கொள்வோம்; ஞானோபதேச பீடிகையை எடுத்துவா. உனக்குப் பத்துப் பிராயமாகிறது. நீ யினி நவசற்பிரசாதப் பேறடையவேண்டும். இதுநாள்வரையில் நான் உனக்குச் சரியானவிதமா யதை உபதேசிக்கவில்லை. இன்று தொட்டு இன்னும் ஆறுமாசம் வரையில் பிரதிதினமும் ஐந்து மணி முதல் ஆறு மணி வரையிலும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் அரண்மனை இராஜா நாட்களிலும் உனக்கு அதை ஓதிவைப்பேன்," என,

அவள் துரிதமாயோடிக் கின்னரத்தை ஒரு பெட்டியிற் பத்திரப்படுத்திவிட்டு ஒரு புஸ்தகத்தை யெடுத்துவந்து தனது தந்தையார் கையிற் கொடுத்து :—

"ஆஜி ஏதாகிலும் எனக்குச் சொல்லுங்கள். நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன்" என,

மதுரநாயகம் பிள்ளை :—"மனோரஞ்சிதம், உனக்கு மந்திர சுலோகங்களெல்லாந் தெரியுமா? வேதவிரித்துரைச் சுருக்கம் மனப்பாடமாய் வருமா?" என,

மனோரஞ்சிதம் :—"ஆஜி எல்லாம் பிழையறப் படித்துவிட்டேன். மனபபாடம் தாராளமாய் வரும். தப்பு ஒன்று முதலாய் விழாது. ஆனால் சில சுலோகங்களுக்கு அர்த்தமே தெரியவில்லை. அவற்றைத்தான் நீங்கள் எனக்குச் சொல்லித்தரவேண்டும்."

மதுரநாயகம் பிள்ளை :—"சொல்லித் தருகிறேன். உன்னிதயத்தில் ஞானவித்துக்களை விதைக்கப்போகிறேன். அவ்வித்துக்கள் முளைத்தோங்கி பலனைத்தர உனக்கு நேர்மையான மனது வேண்டும்; அமைவு வேண்டும்; ஆசை வேண்டும்; கீழ்ப்படிதல், சிரவணம் வேண்டும்; பிரமாணிக்கம்வேண்டும்; நிலைமைவேண்டும். நல்லதிருக்கட்டும், உனது தாய் தந்தையருக்குக் கீழ்ப்படிகிறாயா? எதிர்த்துப் பேசுகிறதில்லையா? கூடக்கூட வாயாடுகிறதுண்டா? அவர்கள் இட்டவேலையைச் செய்யமாட்டேனென்று எதிர்வீட்டுக்கு ஓடிப்போகிறதில்லையா? உன் தாயை மதியாமற் போகிறதுண்டா? உன் சகோதரரை அடித்துத் தொந்தரை செய்கிறதில்லையா? துஷ்டப் பிள்ளைகளோடு கூடிக் கெட்ட வார்த்தைகளைப் பேசக் கற்றுக்கொண்டு சொல்லவில்லையா? நீ வீட்டிற் சிற்சில சொற்ப திருட்டுகளைக் திருடுகிற தில்லையா? பொய் சொல்லுகிறதில்லையா? நமது வீட்டுப் பணிவிடைக்காரரை நிந்தையாய்த் துடுக்கென்று பேசுகிறதில்லையா?"

மனோரஞ்சிதம் :—"ஆஜீ, இத்தனை கேள்விகள் கேட்டீர்கள். இவைகளில் இரண்டொரு காரியங்கள் மாத்திரஞ் செய்திருக்கிறேன். ஒருநாள் இரண்டணா காசு திருடி நமது வேலைக்காரி சுந்தரகாந்திக்குக் கொடுத்துவிட்டேன். பிற்பாடு அம்மா ளவர்கள் பெட்டி திறந்திருக்கக்கண்டு :—"

"மனோரஞ்சிதம்! பெட்டியைத் திறந்தது யார்? எதிரிலிருந்த இரண்டணா காசையுங் காணோமே; அதை யார் எடுத்தது? நீ செய்த வேலையா?" என்றார்கள்.

"நான் பயத்தினால்:—யாரோ எனக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டேன். அம்மா அவர்கள் என்னைப் பயமுறுத்தித் தண்டித்துப் புத்தி சொன்னார்கள். அன்று முதல் திருட்டையும் பொய்யையும் முழுதும் விட்டொழித்து விட்டேன். மற்றொருநாள் நமது வீட்டு நடு அறையின் வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு தேஜோமணி யென்னும் கிறிஸ்துவ கன்னிகையின் சரித்திரத்தை வாசித்துக் கொண்டிருந்தேன். நமது சுந்திரகாந்தி ஏதோ சாமான் எடுக்க அறையில் நுழைந்தாள். அப்போது அவளுடைய வலது கால் எனது தொடையிற் பட்டுவிட்டது. எனக்கு அசுப்பிற் சுறுக்கென்று கோபம் வர:—"

"அடி! தடிச் சிறுக்கி! என்னடி இவ்வளவு திம்மாக்கு? கண்ணில்லையா உனக்கு? கண்ணைத் தின்றுவிட்டாயா அல்லது கண்ணிற் சதை மூடிக்கொண்டதா? பார்த்துப் போகக்கூடாதா? நான் உன்னுடைய எஜமானுடைய மகளல்லவா? என்று வெகு காரமாய்ப் பேசினேன்."

"அவள் மறுமொழியாக:—'நீ அந்தப் பொரி பொரிக்காதே. நீ யென் எஜமானுடைய மகளானால் நான் உன்னுடைய ஆண்டவனுடைய மகளல்லவா? அதை மறக்காதே,' நானையும் பின்னையும் இந்த மொக்கரிப்பு மொக்கரிக்காதே. என்று முறைப்பாய்ச் சட்டென்று வெளியிற் போய்விட்டாள்."

"நான் சற்றுநேரம் ஆலோசித்து மனஸ்தாபப்பட்டு எழுந்து வேலைக்காரியைத் தேடிக்கொண்டு போனேன். அவள் சமையல் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்தாள். நான் அவள் அருகிற் போய்:—"

"சுந்தரகாந்தி, நீ சொன்னது ஞாயம். நான் மதலை புத்தியினால் அப்படிப் பேசிவிட்டேன். நீ அம்மாளிடம் அதைச் சொல்லாதே. நீ யென்னை மன்னிக்கவேண்டும், என்று அவள் தாழ்வாயைப் பிடித்தேன்."

"அவள்:—'நீ பயப்படாதே மகளே, நான் பரிகாசத்துக்குச் சொன்னேன். நீ திரும்பிப்போய் மகராசியாய் படித்துக்கொண்டிரு' என்று தனது கைகளால் எனது முகத்தைத்தொட்டு தன் தலையில் சடசடவென நெட்டி வாங்க நெறித்துக்கொண்டாள்."

"நான் சந்தோஷமாய்த் திரும்பிவந்துவிட்டேன். அது முதல் நானியாரையும் அடாபடியாய்ப் பேசுகிறதில்லை; திட்டுகிறதில்லை;

ஒருவர் ஜோலிக்கும் போகிறதில்லை. என் வேலையுண்டு; படிப்புண்டு. பள்ளிக்கூடத்துக்குப் போவேன். தோழிமார்களோடு விளையாடும் போது எப்போதும் வாஞ்சனையாய்ப் பேசவேண்டுமென்கிற கவனம் என் ஞாபகத்திலுண்டு. அம்மா அவர்களுடைய வார்த்தைகளை ஒருபோதுந் தட்டுகிறதில்லை. அவர்கள் எதைச்செய்தாலும் நானும் கூடச்செய்கிறேன். ஜெபம்பண்ணினால் நானும்கூட ஜெபம்பண்ணுகிறேன். அவர்கள் திருவாசகம் படித்தால் நான் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவர்கள் கோவிலுக்குப் போகும்போது நானுங் கூடப்போக ஒருநாளும் தவறினதில்லை. அவர்கள் சற்பிரசாதம் வாங்கும்போது எனக்கு ஆசைமெத்த. இயேசுநாதர் எப்போது என்னிருதயத்தில் வருவாரோ என்கிற ஆவல் அதிகம். நானும் ஒருநாள் அம்மாளைப்போல் சற்பிரசாசத்தைப் பெற்றுக் கொள்ளப்போனேன். ஆனால் என்னை அவர்கள் தடுத்துவிட்டார்கள். நான் வீட்டுக்குத் திரும்பி வந்து :—"

"ஏன் அம்மா என்னைத் தடுத்துவிட்டீர்கள் என்று கேட்டேன்"

"அவர்கள் அதற்கு விடையாக:—'உனக்கின்னம் வயசில்லை. விபரமில்லை. சரியான முயற்சியில்லை. உனக்கு வேதோபதேசங்கள் சொல்லிவைக்கவேண்டும். நமது குருவிடத்தில் குற்றங்களை வெளியாக்கி சங்கீர்த்தனம்பண்ணி பாவ மன்னிப்படைந்து இருதய சுத்திசெய்து நமது இயேசுநாயகரை உன்னுடைய இதய அரண்மனையில் வரவழைக்கவேண்டும்" என்றார்கள்.

"ஆகையால் ஆஜி, இப்போதே எனக்கு உபதேசம்பண்ணுங்கள், நான் கேட்கிறேன். நான் உபதேசங்கேட்ட பின்னர், எனது குற்றங்களை நமது குரு சுவாமிகளிடம் சொல்லி மன்னிப்பு பெற்றுக்கொண்டு சற்பிரசாதம் வாங்குகிறேன்" என்று சொல்லி முடியாத ஆவலோடு பேசினாள்.

எனக்கப்போது அதன் அர்த்தம் புலப்படவில்லை. அவர்கள் ஏதோ தங்கள் சமய இரகசியங்களைப்பற்றிப் பேசுகிறார்களென்று நினைத்துக்கொண்டேன்.

அவர் தனது மகளுக்கு விடையாக:—"மந்திர சுலோகங்களெல்லாந் தெரியுமென்று சொல்லுகிறாய். உன் தாய் அவைகளையெல்லாம் உனக்குத் திருத்தமாய்ச் சொல்லித் தந்திருப்பாள். நீயும் வேதோபதேச பீடிகையில் வாசித்து மனப்பாடம்பண்ணிக்கொண்

டிருப்பாய். அது எனக்கு மெத்த சந்தோஷகரம். இனி அவை களைப் படிக்கவேண்டியதில்லை. அர்த்தசாரத்தை மாத்திரம் கவனிக்கவேண்டும். வருகிற ஆதிவாரந்தொட்டு சர்வமந்திர சுலோகங்களை ஒவ்வொன்றாய் விரித்துரைசெய்து அர்த்தம்பண்ணி யெளிய நடையில் விளங்கும்படி சொல்லித் தருகிறேன். இப்போது நீ யெழுந்துபோ" என்று முடித்து :—

"தம்பி! மன்னிக்கவேண்டும்; நீங்களியார்?" என,

உடனே எனது தங்கை விஜயவல்லி:—"அத்தான், உங்களுக்குத் தெரியாதா? இவர்கள் எங்கள் சுந்தரத்தண்ணனல்லவா!" என்று நான் வாய்திறக்கு முன்னே படபடவென்று சொல்லிமுடித்தாள்.

மதுரநாயகம்பிள்ளை :—"உனது அண்ணன் சும்மாவிருக்கிறார். நீ என்ன? தெரிந்ததுபோற் பேசுகிறாயே! நீ எங்களை அறிவாயா?"

விஜயவல்லி:—"ஓ! நன்றாய்த் தெரியும். போன மே மாசம் நான் சோமனபுரத்துக்கு எங்கள் பெரியம்மாள் வீட்டுக்குப் போயிருந்தபோது உங்களை நான் பார்க்கவில்லையா? நீங்களும அபிராமியாச்சி,மனோரஞ்ஜிதமும் வேதநாயகம்பிள்ளைவீட்டில் இருந்தீர்கள். அப்போது நானும் மனோரஞ்சிதமும் அவ்வூர் கன்னியர் மடத்தில் கொஞ்சநாள் படித்தோமே. மனோரஞ்சிதம் நாலைந்து நாள் காய்ச்சலா யிருக்கவில்லையா? அபிராமியாச்சி சூடகுமலை கருவாழைப் பழம் ஒருசீப்பு எனக்குக்கொடுத்தார்களே உங்களுக்குத் தெரியாதா?

மதுரநாயகம்பிள்ளை:—"அதென்னவோ தெரியவில்லை. இந்தக் குறிப்புகளெல்லாஞ் சொல்லுகிறாய்; எனக்கு ஞாபகமில்லை. இருக்கட்டும்: இப்போது உன்னோடுபேச நேரமில்லை." என்று அவளை நிறுத்திவிட்டு என்னை நோக்கி:—"நீர் சந்தரசேகரம் பிள்ளையின் ஜேஷ்டகுமாரனு! நாழிகையாய்விட்டது, இன்னொரு விசை திரும்பிவாருங்கள், சவிஸ்தாரமாய்ப் பேசுவோம். ஊரில் வைசூரியால் திரளான ஜனங்கள் மடிந்துபோனார்கள். இறந்தவர்களுடைய கணக்கு கச்சேரியில் இருக்கவேண்டும். மேற்படி கணக்கை ஐம்புலிங்கம்பிள்ளையிடமிருந்து தருவிக்கும்படி உங்கள் தகப்பனாரிடம் சொல்லுங்கள்" என்று என்னை அனுப்பிவிட்டார்.

நான் வந்தவேளை தூர்வேளையா? வைசூரியும் கூடவா வேண்டுமா? ஐயோ நாராயணா! வென்று வீட்டுக்குத் திரும்பிப் போய் மேற்படி விஷயத்தை என் தகப்பனாரிடம் சொல்லப்போன

விடத்தில் ஜம்புலிங்கம்பிள்ளை அவரோடு பேசிக்கொண்டிருந்தார். நானே நேரில் அவரிடம் மேற்படி சங்கற்பத்தைச் சொல்ல;

அவர்:—"ஐயோ! இப்படி நாடோறும் வாரிக்கொட்டினல் இந்த ஊர் எத்தனை நாளைக்கு இருக்கும்! நகரத்தில் பாதி ஒழிந்து போகும்போலிருக்கிறதே!" என்று பரிதபித்துக்கூறி என தரிக்கையை ஒத்துக்கொண்டார்.

---

## 3-ம் அத்தியாயம்.

*மதுரநாயகம்பிள்ளை வைசூரியினல் றுன்பப்பட்டு மாணத்துக்குத் தப்பித்துக்கொண்டது. அபிராமியம்மாள் - ஓர் உத்தமப் பெண்மணி; சகலருக்குஞ் சற்குண ஸ்படிகம்; நங்கையரெல்லோருக்கு நிகரற்ற நன்மாதிரிகை.*

நான் கமலாலயத்திற்கு வந்த சில தினங்களுக்குப் பின்னர் மதுரநாயகம்பிள்ளைக்குப் பிராணபாய வியாதி நேரிட்டது. நான் முன் சொன்னதுபோல அவ்வூரில் அநேகருக்கு வைசூரிகண்டு உலோகாந்தரம் போய்விட்டார்கள். நகர் முழுவதும் எங்கே பார்த்தாலும் அழுகைப் பிரலாபமும், புலம்பலும், ஓலமும் ஒலித்துக் கொண்டிருந்தன.

இந்தப் பயங்கர நேரத்தில் நமது புருஷோத்தம மதுரநாயகம் பிள்ளைக்கு ஜுரங்கண்டது. துவக்கத்தி லியாதோர் கெட்ட குறியும் காணப்பட்டதில்லை. நானும் மற்றவர்களும் அவருக்கு விபத்தில்லையென்று நினைத்துக்கொண்டிருந்தோம். ஆனல் வர வர ஜுரம் அதிகரித்து வைசூரி, ஒன்றுக்கு நூறுய்க்கிளைத்துச் சர்வாங்கமும் பரவ, சரீரம் பூரித்துப் பலவிடங்களில் வெடித்து ஜலம் வடிய சகிக்கக்கூடாத துற்கந்தம் வீசத் துவக்கிற்று. அதனேடுகூட புழுக்களும் பல இடங்களில் உற்பத்தியாகிவிட்டன. வைத்தியரிற் சிலர் "இனி யிவர் பிழைப்பது அரிகண்டம் எமகண்டம்." என்றுசொல்லி கைவிட்டு நின்றுவிட்டார்கள். அவர்களில் இரண்டொருவர் அவரைவிட் டகலாதிருந்தார்கள். இதனைக் கேள்விப்பட்ட கமலாலயவாசிகள் திரைதிரையாய் முறைமுறையாய் அவரை வந்துபார்த்து, "ஐயோ தெய்வமே! எங்கள் பட்டணத்தில் இவர் நெடுநாள் தவறு நீதிசெலுத்த எங்களுக்குப் புசிப்பில்லாமற் போகவேண்டுமா?" என்று பிரலாபித்துக்கொண்டு திரும்பிப்போவார்கள்,

இக்கடோர சமையத்தில் அவருடைய உத்தமபத்தினி காட்டிய பற்றுதலும், பக்ஷமும், நட்பும், சுயபரித்தியாகமும், புருஷ பக்தியும், தைரியமும் அளவு கடந்தவைகள். அவைகளைச் சரிவரக் கூறுவது என்போலியர்க்கு மிக்க அரிது. ஓ! கண்ணராவியான காக்ஷி! ஓ! ஆச்சரியம்! ஓ! பயங்கரம்! என்ன சொல்வேன்! அவரை அண்டிவரத் துணியவில்லை. தூரநின்றே பார்த்துப் போவார்கள். ஒருவிசை அவரைப் பார்த்தவர்கள் மறுவிசை அவரைப் பார்க்கத் திரும்பிவர ஆசித்தும் அஞ்சுவார்கள். நானும் பலவிசை அங்கேபோனேன். அவர்படுந் துன்பங்களைக் கண்டேன். அவருடைய பெண்டிரும் பிள்ளையும் படும் ஆருத்துயரத்தையுங் கண்ணுற்றேன். ஆயினும் அவருக்கு யாதோர் சகாயஞ்செய்ய என்னால் இயலவில்லை. பிறர் சகாயமற்ற அபிராமியம்மாளும் அவளது சற்புத்திரியும் அந்தத் துர்க்கந்தத்தை தங்கள் முழுமனதோடு முற்றிலும் சகித்துக்கொண்டு தாய் வலதுபக்கத்திலும் மகளிடதுபக்கத்திலுமாக வுட்கார்ந்துகொண்டு தங்கள் ஜீவனைப் பரித்தியாகம் பண்ணத் துணிந்தார்கள். இவ்வியாதி தங்களையுந் தொற்றிக்கொள்ளுமே தங்களுயிருக்குச் சேதம்வருமே யென்கிற எண்ணம் அவர்களுக்குக் கிஞ்சித்துங் கிடையாது, அல்லும் பகலும் ஊணுறக்கமின்றி, சலிப்பின்றி, அரோசிகமின்றி அவருடைய சரீரத்தினின்று புறப்பட்டுவரும் ஜலத்தைத் துடைத்துச் சுத்தஞ்செய்வதும், புழுக்களைச் சேர்த்தெடுப்பதுந் தலையைத் தூக்குவதும், மார்பை தடவி ஆறுதலான வார்த்தைகள் சொல்லி உபசரிப்பதும் இன்னும் பற்பல சகாயங்களைச் செய்வதுமே யவர்களுடைய இடைவிடாத அலுவல். இத்தகைய கஷ்டத்தொழிலை யிவ்வளவு பிரியத்தோடும் பக்ஷத்தோடும் நிறைவேற்றுந் தனது பிராண நாயகியை மதுரநாயகம்பிள்ளை பார்த்து ஒருநாள் :—

“அபிராமி, உன்னுயிரை மாய்த்துக்கொள்ளத் தேடுகிறாயே இது விவேகமா? ‘தனக்கு மிஞ்சித் தர்மம்’ என்கிற பழமொழியை மறந்துவிட்டாயா?” என,

அவள் :—“ஆ அத்தான், இந்த அஞ்ஞான பழமொழியையும் இதனை முதன்முதற் சொன்னவனையும் பேராற்று உடைப்பிற் றள்ளுவது வாசி.”

:—“நீ யெனக்கு உதவிசெய்யக் கடமைப்பட்டவளாயினும் உன்னுயிரைக் காப்பாற்ற இன்னும் உனக்கதிக கடமையில்லையா?”

:—"சாவதும் உயிர் வாழ்வதும் அறப காரியம். இந்த அபிராமிபோனால் இன்னும் உலகத்தில் எத்தனையோ அபிராமிகள் உண்டு! அவர்களில் ஒருத்தி அத்தானைத் தேடிவருவாள். ஆதலால் எனது ஜீவனைப் பரித்தியாகம் பண்ணியென்கிலுந் தங்கள் உயிரை நிலைநிறுத்துவது என்பேரிற் சுமந்த பாரச்சுமை."

:— ஆ என் கண்மணியே! உன் நட்பும் புருஷ பக்தியும் அளவை மிஞ்சினவை, ஆயினும் நீ யென் மட்டில் வைத்திருக்கின்ற அன்பை உனதுபிள்ளைகள் மட்டிலும் வைக்கவேண்டாமா? ஆகையால் இந்தத் தொற்று வியாதி உன்பேரிற் றாவாதபடிக்கு நீ என்னைத் தொடவுந் தூக்கவும் வேண்டாம். நீ யுன்னையும் உன் மகளையுங் காப்பாற்றிக்கொள். மீண்டும் நான் உலகில் ஜீவிக்கப் போவதில்லை யென்று பண்டிதர் நிச்சயிக்கின்றார்கள். அப்படியிருக்க நீயேன் என் விஷயத்தில் வியர்த்தப் பிரயாசப்படவேண்டும்? நான் சாவது நிச்சயம்." என, இதைக்கேட்ட இளஞ்ஞி,

:— ஐயையோ ஆஞி! என்னையும் அம்மாளையும் விட்டுப் பிரிந்து போவீர்களா? போகவேண்டாம்! போகவேண்டாம்!" என்று கதறிப் பரிதபித்து அழுது பிரலாபித்தாள். சந்திரனைப் போன்ற அவளது வதனத்திற் றாரைதாரையாய்த் ததும்பி வழிந்தோடுங் கண்ணீர் அவர் தந்தையர்மீது விழ அவருடைய இருதயம் பதைத்துத் துடிக்க அவர் தமது துக்கப்பெருக்கத்தைத் தாளாமல் :—

"மகளே நாம் இனி என்னசெய்வோம் உங்களை நான் விட்டுப் பிரியுங் காலம் வருகிறது. சாவு யாரைத்தான் விட்டது? என்னையும் விடப்போகிறதில்லை. இனி கடவுளுடைய சித்தத்திற்கு அமைந்திருப்பதே நலம். எனது அருமைப் புதல்வியே! நான் உன்னை உனது அன்னையின் அடைக்கலத்தில் விட்டுப்போகிறேன்." என்று, தனது குமாரத்திற்கு ஆறுதல் சொல்லிவிட்டுத் தமது பெண்சாதியைநோக்கி :—

"அபிராமி, நீ யஞ்சாதே. எனது தாய் தந்தையரும் உடன் பிறப்புகளும் நான் மரித்தபின்னாயினும் வருவார்கள். உன்னையும் உன் பிள்ளைகளையும் அவர்கள் பராமரிப்பார்கள். உனக்கு வேண்டியதெல்லாஞ்செய்வார்கள். எனது சகோதரர் எல்லாரும் மெத்த சாதுக்கள். உனக்கு யாதோர் இம்சையுஞ் செய்யார்கள். நான் உனக்கு அடுத்தடுத்து உன்னைவிட்டுப் பிரிந்துபோகிறேனென்று சொல்லத் தேவையில்லை. என் வியாதியும் நான் இருக்கும் ஸ்திதியும்

நீயென்னை இழந்துபோவாயென்று திண்ணமாய்ச் சொல்லுகின்றனை. ஆயினும் நீ மனோதிடனைக் கைவிடாதே. நான் கடவுளின் பாதாரவிந்தம் போகிறேன; அவரே உனக்கு மெய்யான தகப்பன். அவரில் உனது சர்வ நம்பிக்கையும் வை. நான் சந்தோஷமாய் லோகாந்தரம் போகிறேன். நமது தாயாகிய சத்திய கத்தோலிக்குத் திருச்சபையின் இரீத்திப்பிரகாரம் அந்திய கர்மங்களை நிறைவேற்றி எனது நித்திய பிரயாணத்துக்குவேண்டிய சற்பிரசாதத்தையும் பெற்றுக்கொண்டேன். இனி எனக் கியாதோர் குறையுமில்லை. நான் போகத் தயாராயிருக்கிறேன். நீயெனது புத்திமதிகளை மறந்துபோகாதே. உனது பால்ய காலத்தை நல்வழியிற் கழித்து நான்போகும் இடம்வந்து சேர். எனது பலம் வெகுவாய்க் குறைந்துபோயிற்று. எனது உடலிற் பாதியாகிய பிராண நாயகியே! உன்னையும் உனது மக்களையும் நமது திவ்விய இரக்ஷகராகிய இயேசுபெருமானுக்கு வசிகாரம் பண்ணுகிறேன். அவர் உன்னையும் உன் பிள்ளைகளையும் இகத்திற பராமரித்துப் பரத்தி லென்னிடத்திற் சேர்ப்பாராக." என்று சொல்லிமுடித்து அயர்ந்து சோர்ந்து ஸ்மரணை தப்பிக் கண்களை மூடிக்கொண்டார்.

அந்நேரம் வரையில் மனோதிடனைக் கைவிடாத அபிராமியம்மாள், தனது காதலன் பிரேதத்துக்குச் சமமாய் விரைத்துக்கிடப்பதைக் கண்டு, கோவென்று ஓலமிட்டுப் பதறித் துடித்து மெய் மறந்தவளாய்த் தனது கணவனை வாரியெடுத்து மார்போடணைத்துக்கொண்டு:—

"ஸ்வாமி என்னையும் எனது நேய மக்களையும் விட்டுப் பிரிந்துபோவீர்களா? நீங்க ளென்னைவிட் டகல நான் உயிர் வாழ்வது தகுமா? நீங்கள் ஜீவன் விடுமுன்னமே நான் என் பிராணனைவிடுகிறேன். உங்களைவிட்டுப் பிரிந்து உலகில் உயிர் வுய்வதைக்காட்டிலும் ஆயிரம்விசை உயிரைக்கொடுப்பது உசிதமல்லவா? உங்களைப்பின் செல்வதைக்காட்டிலும் உங்களுக்கு முன்போவது வாசியன்றோ? உங்களைப் போகவிட்டுத் துக்கசாகரத்தி லமிழ்ந்திக் கிடப்பதைவிட உங்களுடைய வருகைக்கும் நேச சஞ்சாரத்துக்கும் எதிர்பார்த்திருப்பது தாவினையல்லோ! ஆ! எனதுயிருக்குற்ற துணைவா! உங்கள்முகத்தைக்கண்டு தரிசித்து, மணையேறி, மாங்கல்லியம்பூண்டு, உங்களோடு மகிழ்ந்துவாழுஞ் பாக்கியஞ் சித்தித்து ஒன்பது வருஷங்களாயின. இவ்வொன்பது வருஷங்களும் ஒன்பது மகோற்சவ

தினங்களை யொக்குமே! உங்களுடைய வாழ்க்கைச் சஞ்சாரம் வானசஞ்சாரமாகுமே! ஐயையோ! என் பிராணநாயகா! எனது இன்ப நாட்களெல்லாம் இனி துன்ப நாட்களாகுமே! தண்டாமரைபோல மலர்ந்த உங்களது முகத்தை நான் காணும்போதெல்லாம் எனது கண்கள் குளிர்ந்து மகிழ்ந்து ரம்மியமடையுமே! உங்களது தர்மநீதியைப் பிறர் புகழ்ந்தேற்றும்போது எனது செவிகள் வாக்கிலடங்கா ஆனந்தமடையுமே! உங்கள் இதபோதனைகளையும் ஞானம் நிறைந்த சாதுரியவசனங்களையும் நான்கேட்கும்போதெல்லாம் எனதுமனம்பூரித்து அக்களிக்க, இருதயம் புடைத்து விம்மி விலா[illegible]க்குமே! இந்நலங்களுக்கெல்லாம் காரணமாகிய உங்களைவிட்டுப் [illegible]ிரிந்திருக்கவேண்டுமா? எனது பெருமானாகிய வசுவே! என்[illegible] மீதியாய் விடாதேயும். எனது பால்யத்தையுஞ் சௌந்த[illegible]த்தையுந் துஷ்டருடைய கண்களுக்கு இரையாகப் போட[illegible]ண்டாம். என் காவலனும் அர்த்தபாகமுமாகிய என் கணவனுக்கு[illegible]ன என்னையெடுத்துக்கொள்ளும். சிரசுபோய் முண்டம் [illegible]பஞ்சத்திற் புரண்டு உருண்டு துள்ளித் துடிப்பதினால் வரும் பயனென்ன? எனது உயிரை வாங்கிக்கொள்ளும் ஸ்வாமி! இனி ஒரு நிமிஷமேனும் உலகில் உயிர் உய்யேன்! உய்யேன்!! இரேன்! இரேன்!!" என்று ஓலமிட்டுப் பிரலாபித்துத் தனது புருஷனுடைய முகத்தைப் பலவாறு முத்தமிட்டுக் களைத்துச் சிந்தை தடுமாறி பிரக்ஞைதப்பி பிரேதம்போல் விழுந்துவிட்டாள். இந்தக் கண்ணாராவி காட்சியைக்கண்ட யாவரும் துக்க சாகரத்திலாழ்ந்து தேறுதல் சொல்லத் திடனின்றித் திகைத்து நிற்க, நானும் சிறுவனானதால் என்ன செய்கிறதென்று தெரியாது ஸ்தம்பித்துப்போய் நின்றுவிட்டேன்.

மனோரஞ்சிதம் பட்ட துயரத்தைக் கண்ட என் மனந்தாளாது, மாலை மாலையா யென்னையுமன்றி யென் கண்களில் நீர் பெருக அதைத்துடைத்துக்கொண்டு மதுரநாயகம்பிள்ளையி னருகிலுட்கார்ந்தேன். அப்போது எனது தந்தை இந்த ஓலோகோலத்தையும் ஒப்பாரியையுங் கேட்டுத் துரிதமாய் ஓடிவந்து, சோபித்து ஸ்மரணை தப்பித் தரையிற் பிணம்போற் கிடக்கும் அபிராமி யம்மாளை, வாரியெடுத்து முகத்தில் ஜலமிறைத்து விசிறினார். சற்று நேரம் பொறுத்து அவள் தன் பெருத்த கண்களைத்திறந்து எனது தகப்பனாருடைய முகத்தை உற்றுப்பார்த்து ஒரு சொட்டுக் கண்ணீர் சிறுக்கென்று விட்டாள். அப்போது,

அவர் :— "அம்மா! மகளே! நீ யஞ்சாதே. ஏனிப்படித் திகைத்து மயங்குகிருய்? உனது இயல்பான மனோதிடனை யெங்கே விட்டுவிட்டாய்? எல்லாவற்றிற்கும் நானிருக்கிறேன். நீ பயப்படாதே மகளே" என்று தென்பு சொல்ல,

அதற்கவள் :— "ஆ! ஐயா! ஒரு உடலில் பாதி உயிர்போய் பாதி உயிர் தங்கலாமா? தங்குமா சொல்லுங்கள்! எனது உடலில் பாதி உடலாகிய எனது பர்த்தாவானவர் மரிக்க, நானிருக்கலாமா? நானும் சாவது உசிதமல்லவா?" என,

அவர் :— "மகளே, நீ யிப்படி நினைப்பது தப்பு! உன் கணவரின் வியாதி கடுமையுள்ளதே. ஆயினும் அவரது உயிரை [illegible] பறிக்கமாட்டாது. அவர் கடவுளின் உத்தம தாசர். அவருடைய கிருபா கடாக்ஷம் உனது கணவர்மீது பிரகாசிக்கின்றது. [illegible] அவர் இன்னும் உலகில் நெடுநாள் உய்வார், அவருடைய [illegible] நீதி இப்பிரபஞ்சத்தில் வெகுநாள் சோபித்துத் துலங்கும் [illegible] கடவுளே பரோபகார நிமித்தம் நீதியாசனசாலையில் உத்தமாசன [illegible] யவருக்குக் கொடுத்திருக்கின்றார். அவ்வாசனத்தின்பேரில் உட்கார[illegible] கொண்டு பல்லாண்டு பலருக்குப் பற்பல உபகாரங்களைச் செய்யப் போகிறார். ஆதலால் நீங்கள் இருவரும் எழுந்துபோய்க் கடவுளுக்கு ஏதேனும் நேர்த்திக் கடனை நேர்ந்துகொள்ளுங்கள். சந்தேகமற அவர் மீண்டும் சொஸ்தமடைவார்," என,

தாயும் பிள்ளையுஞ் சற்று ஆறுதல் அடைந்து அங்கு ஸ்தாபிக்கப்பட்டிருந்த பீடஸ்தானத்தின் முழந்தாட்படியிட்டு நெடுநேரம் உருக்கத்தோடு பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். அதற்குள்ளாக மதுரநாயகம்பிள்ளைக்குச் சோபந் தெளிந்து பிரக்ஞைவந்துவிட்டது.

அப்போதவர் :— "தம்பி, நாழிகையாய்விட்டது சாப்பிடப் போங்கள். கடவுளின் செயலாலன்றி உலகில் எச்சம்பவமும் பிறக்கிறதில்லை. நடக்கிறது நடக்கட்டும். இனி காத்திராதேயுங்கள்." என்று ஆழ்ந்த கிணற்றினடியிலிருந்து பேசுவதுபோ லடைத்த குரலாய்க் கூற,

நான் :—இனி யிவர் சாகப்போகிறதில்லை; இவர் உயிர் வல் லுயிர். அதைப் பறிக்க இயமகோடிகளாலும் இயலாது. இவர் சொஸ்தமடைவது திண்ணம். பகவானுடைய கிருபாகடாக்ஷ நோக்கம் அவரைவிட்டு நீங்கவில்லை. கடவுள் ஒருவன்மீது கண்காணிப்பாராகில் யார் என்ன செய்யக்கூடும்? இவருடைய தாய் தந்தை

யரின் தபோபலனும் பூஜாபலனும் இவருக்குப் பூரணமாயுள்ளன. இவர் இப்போதைக்கு எமன் வலையிற் சிக்கப்போகிறாரில்லை யென்று சந்தோஷமாய் வீட்டுக்குப்போய் சந்தியா கருமங்களை முடித்துக் கொண்டு சாப்பிட்டுச் சல்லாபக் கூடத்திற்குப் போனேன். அங்கு காலப்போக்கிற்கும் இளைப்பாற்றிக்கும் பத்திரிகைகளை வாசித்துக் கொண்டிருக்கும்போது எனது தாய் தந்தையரும் தங்கையும் அங்குவந்தார்கள். அப்போது எனது தகப்பனார்:—

"சுந்தரம், இன்று மதுரநாயகம்பிள்ளை வீட்டில் நிகழ்ந்த அபூர்வ காட்சியைக் கண்டாயா? அம்மாதுசிரோமணி அபிராமியையும் அச்சிறு நங்கை மனோரஞ்சிதத்தையும் பார்த்தாயா? உனது தாயும் தங்கையும் அவர்களுக்குச் சமமாவார்களா? அவர்கள் குணத்துக்குப் இவர்கள் குணத்துக்கும் எவ்வளவு தூரம்!" என,

நானு:—"ஆம், அப்பா! இப்போர்ப்பட்ட பெண்களை நான் எஞ்ஞான்றும் பார்த்ததேயில்லை. தமயந்தி முதலாய்த் தனது காதலனாகிய நளச்சக்கரவர்த்தியைக் கானகத்திற் காணாமற் பரிதவித்தபோது இவ்வளவு கிலேசப்பட்டிருப்பாளென்று நான் நினைக்கவில்லை. சந்திரமதியுந் தனதுகணவன் அரிச்சந்திரனைப் பறிகொடுத்துப் பிரலாபித்தபோதும், தன் னேகபுத்திரன் லோகிதாசனைச் சர்ப்பந்தீண்ட அவனைத் தரையிற் கிடத்தி, அழுத கண்ணீர் ஆறுபோடப் புலம்பித் தவித்தபோதும் இவ்வாறு துக்கமுந் துயரமும் மனசஞ்சலமும் அடைந்திருப்பாளா வென்று நான் சந்தேகிக்கிறேன்." என,

அவர் எனது தாயைநோக்கி:—"சிவகாமி, அபிராமியம்மாளுடைய இல்லறத் தர்மங்களும், சிறந்த குணமும், புருஷபக்தியும், நட்பும், பக்ஷமும், உனக்கு வாவென்கினும் வருமா? நீ யவளது பாடசாலையிற் கிஞ்சித்துப் படித்தாலாகாதா! நீ முற்றிலும் அவளைப்போல குணசிந்தாமணி யாகாவிடினுங் கிஞ்சிற்றேனும் அவளிடங் கற்றுணராயோ?" என,

எனது தாயார் விடையாக:—"சுந்தரத்துக்கும் விஜயவல்லிக்கும் மற்ற இளைஞர்களுக்கும் இதம்போதியுங்கள், அவர்களுக்குச் சுலபமாயேறும். இனி அத்தகைய தர்ம நடத்தை யெனது சுபாவத்திற்படிவது மகாகஷ்டம். நீங்கள் உங்களது இந்நாற்பத்தைந் தாம் பிராயத்தில் மதுரநாயகம்பிள்ளையின் குணாதிசயங்களைப் பின் செல்லும் பக்ஷத்தில் நானும் எனது நாற்பதாம் பிராயத்தில்

அபிராமியம்மாளுடைய சுவடுகளைப்பின்செல்வேன்." என்றுசொல்லி சிரித்துக்கொண்டெழுந்து போய்விட்டார்கள்.

அவர்கள்போகவே நானும் எனது தகப்பனாரும் வெளியில் வந்தோம். அப்போது அநேகர் திரைதிரையாய் வந்து மதுரநாயகம்பிள்ளையைப் பார்த்து வெளியில் வர எனது பிதாவானவர் அவர்களை நோக்கி :—

"நீங்கள் இப்புண்யவாளனைத் தரிசிக்கவந்தது எனக்கு மெத்த சந்தோஷம். சற்று நில்லுங்கள் : சிநேக பாகத்தில் நான் உங்களுக்கு உரைக்கும் புத்திமதிகளைக் கேளுங்கள். நீங்கள் வயோதிகளாயினும், புத்திரரைப்பெற்ற பூவையராயினும், மங்கல்லியம் பூண்ட பாலிய மங்கையராயினும், கற்பழியாக் கன்னிகா விரத்தினங்களாயினும், பள்ளிக்குப்போகும் சிறு நங்கைகளாயினும் இன்னும் யாராயிருப்பினுஞ் சரி; நீங்களியாவரும் உலோக சஞ்சார வியாபார நடையிலிருக்கின்றீர்கள். உங்களில் ஒவ்வொருவருந் தத்தம் ஸ்திதி மதி நிதிக்குத் தக்க குணசம்பத்துக்களையுஞ் சதாச்சாரங்களையும் நல்லொழுக்கப் பிரவர்த்தனங்களையும் அடைந்து சன்மார்க்கத்தி லொழுகவேண்டு மல்லவா? கல்வி க்யாதிகளைத் துன்மார்க்கரிடத்தும் கற்றுணரலாம். ஆனால் சன்மார்க்கமும் சதாச்சாரங்களும் சற்படிப்பினைகளுஞ் சாதுக்களுக்கே சொந்தமாதலால் அவைகளை அவர்களிடத்திலே கற்றறியவேண்டும். நீங்கள் தற்போது பார்த்துவந்த மதுரநாயகம்பிள்ளை வீடே சகலவித கிரக தர்மங்களுங் குடிகொண்டிருக்கும் உத்தம பாடசாலை. அங்கு சகலருக்கும் நன்மாதிரிகை யுண்டு. நீங்கள் விருத்தாப்பியராயினுஞ் சரி, வயோதிகளாயினுஞ் சரி, அபிராமியம்மாள் பாடசாலைக்கு வாருங்கள். அவள் உங்களினும் வயதில் இளந்தையேனும் இல்லறத் தர்மத்தினும் நல்லொழுக்கத்திலும் முதிர்ந்தவள். நீங்கள் விருத்த ஸ்திரீகளாதலால் பொறுமையையும், தெய்வபக்தியையும், மறுலோகச் சிந்தையையும் அவளிடம் கற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் இனி, ஆலயந்தொழுவதே சாலவும் நன்று.' அபிராமி ஆண்டவனைப் பலவிசை பலவாறாய்த் தொழாத நாள் ஒருநாளுமில்லை.

நீங்கள் புத்திரரைப் பெற்ற பூவையரா? மருமக்கள் வாய்ந்த மாமிமார்களா? எனது அருமைமகள் அபிராமி பள்ளிக்கூடத்துக்கு வாருங்கள். அங்கு தயை, தாக்ஷிண்யஞ், சாந்தி, உபசாரம், மரியாதை, விவேகம், விமரிசை, பரோபகாரம் முதலிய உலக சஞ்சார

புண்ணியங்களையும், சிநேகம், வாஞ்சனை, அநுசரணை, ஆதரிப்பு பராமரிப்பு முதலிய குடும்ப சஞ்சார புண்ணியங்களையுங் கிரகித்துக்கொள்ளுங்கள். நீங்கள் உங்கள் பிள்ளைகள்பேரிலும் மருமக்கள்பேரிலுங் கொடுங்கோற் செலுத்தவேண்டாம். கோர ரூபம், கோபம், கொடுமை அபிராமி முகத்தில் எந்நாளும் படரக்கண்டதில்லை. அன்றும் இன்றும் என்றும் அன்பும் இன்பும் பண்பும் ஒரேவிதமாய் அவளது சுந்தரவதனத்திற் பிரகாசிக்கின்றன. இவைகளை அவளது குணாதிசய வதன ஸ்படிகத்தில் உ[illegible]மநோக்கிக் கற்றுக்கொள்ளுங்கள்.

சடுதியில் மணையேறி கணவர்களை க[illegible]டைந்த சுந்தர மடந்தைகளே! நீங்களும் இங்கே ஓடிவா[illegible]ங்கள். எனது குணமணி அபிராமி வரிசையிற் சற்று உட்காரு[illegible]ங்கள். அவள் வாசித்துக் கற்ற மேன்பாடங்களைக் கொஞ்சமே[illegible]ம் படித்துத்தேருங்கள். தயை, சாந்தி, கிருபை சொரியும் அவளது கண்களைப் பாருங்கள். அமிர்தந் துளிக்கும் ரோஜா புஷ்பலாவண்ணிய அவளது வதனத்தைப்பாருங்கள். இரவும் பகலும் ஈகையைப் பொழியும் அவளது கரங்களைப்பாருங்கள். அல்லும் பகலும் தனது கணவன் சுகத்தை விரும்பும் பெண்ணரசி இவளே. வீதியி[illegible] யாரேனும் 'மதுநாயகம்' என்று பேசிக்கொண்டு போவார்களாகில் தனது காதலன் வருகிறானென்று மனங்களித்து தலைவாயில் வ[illegible]ரையிலோடிவரும் மங்கை இவளே. அவளுடைய பக்ஷபாசத்தைப் [illegible]ரிவர வர்ணிக்க நான் அறியேன். தன் பர்த்தாவுக்கு மனோரம்மி[illegible]த்தை வருத்துவதே யவளுடைய இடைவிடா முயற்சி. அவர் [illegible]ருமடங்கு கேட்டில் மும்மடங்கு செய்வாள். தற்போது தன[illegible] புருஷன்மட்டிற் செலுத்தும் கஷ்ட பணிவிடைகளை நீங்களே [illegible]ண்ணுற்றுப் பாருங்கள். உத்தம விதமாய் உங்கள் புருஷர்களை[illegible] நேசிக்க அவளிடம் கற்றுக்கொள்ளுங்கள்."

> "வல்லவாக்கும் பறந்தோடுஞ்
> சொல்லவறியா நற்பாடம்
> எல்லவரையு மிழுத்திழுத்து
> நல்லொழுக்க மதில்நாட்டும்," என[illegible] சிந்தடியிற் சொன்

னபடி ஒருவனுடைய குணாதிசயங்களைக் குறித்துப் பேசுவது வேறு; அவைகளைக் கண்ணுற்பார்ப்பது வேறு. சூரி[illegible] சந்திராதிகளின் இலக்ஷணங்களைப் புகட்டிப் பேசினபோதிலும் [illegible]வைகளைக் காணாத குருடருக்கு அது நன்கு புலப்படாது. அங்ஙனமே யெனது குண

சிந்தாமணி அபிராமியின் புண்ணியங்களைப் பலவாறு பகுத்துத் தொகுத்து உரைக்கினும் நீங்கள் அவைகளைக் கண் குளிரக்கண்டு காதாரக் கேளாவிடில் முற்றும் அவைகளைக் கற்றுக்கொள்ளவறியீர்கள். ஆதலின் நீங்கள் அவளது உத்தம பாடசாலைக்கு அடிக்கடி வாருங்கள். நீங்கள் எக்குலத்தோராயினும், எத்தரத்தோராயினும், எம்மதத்தோராயினுஞ்சரி, யெல்லோருமே அவளிடம் வாருங்கள். அவளுடைய அடிகளைப் பின்பற்றி நடவுங்கள். உங்கள் எல்லோருக்கும் இல்லறத் தர்மங்களில் நல்லறநெறிகாட்டி இவளே; நீங்கள் சன்மார்க்கத்தில் ஒழுகும் நன்மாதிரிகையைக் காட்டி முன்னடக்கும் வயோகதியும் இவளே, தாயும் இவளே; யௌவன மடந்தையும் இவளே; கன்னிகா குமரியும் இவளே; இளைஞியும் இவளே; ஆதலால் நீங்கள் அவளது நட்பை விரும்பிச் சிநேக பாசத்தாற் கட்டப்பட்டு அவளோடு சஞ்சாரம் பண்ணும்பக்ஷத்தில் நான் சொன்னவைகளை அநுபவசித்தியாற் காரியதரிசனமாய் உணர்வீர்கள். நேரமாயிற்று. நீங்கள் கோரிப்போகும் அலுவலைச் செய்துமுடிக்கப் போங்கள்." என்று அவர்களுக்கு உபசாரம் சொல்லி யவர்களை யனுப்பிவிட்டு கச்சேரிக்குப் போய்விட்டார்.

---

## 4ம் அத்தியாயம்.

*அபிராமி யம்மாள் தன் கணவனை நிகாற்றவிதமாய் உபசரித்து விசாரித்தல். இவள் இல்லறத்தில் எல்லோருக்கு நன்மாதிரிகையா யிருத்தல்; நானா விஷயங்கள்.*

அன்று முழுவதும் கமலாலயவாசிகள் கஸ்தியில் மூழ்கி அவநம்பிக்கைப்பட்டு மதுரநாயகம்பிள்ளை யெங்கு இறந்துபோகிறாரோவென்று பயந்துகொண்டிருந்தார்கள். ஆனால் அவர் பகவானுடைய எண்ணத்தில் இன்னம் மரிக்கவில்லை. அவரது தேகத்தில் உற்பத்தியான புழுக்கள் ஒழிந்துபோயின. ஜலம்வடிதல் நின்றுபோயிற்று. நான் சாயந்தரம்போய் அவரைப் பார்த்தபோது நல்ல சுவாதீனத்தோடு உட்கார்ந்திருந்தார். அவருடைய பெண்டிரும் பிள்ளையும் அவருடைய சமுகத்தில் உட்கார்ந்துகொண்டு அவருக்கு அமுதூட்டி ஆறுதல்சொல்லி யுபசரித்துக்கொண்டிருந்தார்கள். அவருக்குப் பலவீனத்தினாற் பேச சக்தியில்லாதபடியால் அவரியாரிடத்துஞ் சரியாய்ப்பேசவில்லை. நான் அதைக்கண்டு வீட்டுக்குத் திரு

ம்பிவந்துவிட்டேன். ஆனால் அவருடைய உயிருக்குவந்த ஆபத்தைப் பற்றின பயம் இன்னும் ஒருவரையும் விட்டகலவில்லை, அந்த இராத்திரியெல்லாம் நான் புரண்டுபுரண்டுபடுக்கினும் தூக்கமேவரவில்லை. கண்களை இறுக மூடினும் நித்திரைமயமே நெடுநேரம் தோற்றவில்லை. எனதாத்மா மதுரநாயகம்பிள்ளை வீட்டிலும், உடல் படுக்கையிலும் இருந்தன. அவர் விறைத்துக் கட்டைபோற்கிடக்க அவரது ரூபலாவண்ணிய பாலிய சம்சாரம் குதிகாலை அளாவுந் தனது நீண்ட கூந்தலை அலங்கோலமாய் விரித்துப்போட்டுக்கொண்டு அவரைவாரியெடுத்து மார்போடணைத்து போன உயிரைத் திரும்பி வருத்த தனது சுவாசத்தை யவர்முகத்தில்விட்டு அவரை யெழுப்ப முயல்வதாயும், மனோரஞ்சிதம் அவருடைய கால்களைத் தழுவிக் கொண்டு :—

"ஆ! ஆ!! நீங்கள் போகவேண்டாம். போனால் எங்களையும் அழைத்துக்கொண்டு போங்கள். உங்களைவிட்டு நாங்கள் இங்கே இருக்கமாட்டோம்." என்று இளங் கன்றைப்போலக் கதறுவதாயுந் தோன்றிற்று.

இவ்வாறு பற்பல சிந்தைகளிலும் தோற்றங்களிலும் உழன்று வெகுநேரஞ் சென்று கண் வளர்ந்துவிட்டேன்.

மறுநாட் காலமே எனது வழக்கப்பிரகாரம் அன்று வகுப்புப் பாடங்களைத் தயார்செய்து வைத்துவிட்டு ஆற்றுக்குப்போய் ஜலத்தில் விழுந்து ஸ்நானம் செய்து, முல்லை மலர்களையும் வில்வத்தளிர்களையும் சம்பாதித்து பஞ்சபாத்திரத்தில் ஜலமெடுத்து ஆற்று மணலில் உட்கார்ந்து மலர்களை ஆகாயத்திற்றூவி ஜலத்தை யிறைத்து :

"சரஸ்வதிதேவி நமோ! நமோ!
பிரம்மபுத்திரி நமோ! நமோ!
மலைமடைந்தை நமோ! நமோ!
கலைமகளே நமோ! நமோ!

"உனது கல்விக் களஞ்சியத்தைத் திறந்து எனது சித்தசித்தியையும், மனோகற்பிதத்தையும், ஞாபகத்தையும், இதயத்தையும், உன் உதாரக் கொடைகளால் நிரப்புவாய் தாயே. உனது தாம்பூல எச்சிலினால் எனது நாவை நனைத்து எனது அறியாமையை நீக்கி அறிவை அளிப்பாய் கமலாசன தேவி" என்று பூஜை செய்து முடித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிவந்து பழையது சாப்பிட்டுப் பாடசாலைக்குப் போகுமுன்னே, மதுரநாயகம் பிள்ளையைப் பார்க்கப்போனேன்.

அப்போது அபிராமியம்மாள் தனது இடது கரத்தால் அவரை மார்போடணைத்துப் பிடித்துக்கொண்டு வலது கையால் ஒரு சிறிய கரண்டியில் அவருக் கமுதளித்துக்கொண்டிருந்தாள். மனோரஞ்சிதம் அவள் அருகில் உட்கார்ந்துகொண்டு தனது தந்தையர் கேட்கும்படி ஒரு புஸ்தகத்தில் ஏதோ வாசித்தாள்.

அவருடைய தேகத்திற்கண்ட வீக்கம் வடிந்துபோயிருந்தது. [illegible]நீர் சுத்தமாய் வற்றிப்போயிற்று. ஆனால் என்றும் பதினாறாய் வரம் வாங்கின மார்க்கண்டனுடைய திருமேனிக் கொப்பான அவரது சரீரம் மாறி உருக் குலைந்துபோயிருந்தது. பழையமேனிவருவதற்கு இன்னும் பலநாட் செல்லுமென் றெண்ணிக்கொண்டேன். அவர் நாலைந்து கரண்டிப் பால் சாப்பிட்டு :—

“அபிராமி! போதும் நிறுத்திவிடு” என, அவள் தனது தூய வெண் பற்கள் பதினாறுந் துல்லிய முத்துச்சரமெனத் தோன்றக் கெஞ்சி :—

“அத்தான்! நல்ல சாப்பாடு சாப்பிட்டு எட்டு நாளாயிற்றே. இன்றைக்கேனும் இன்னும் இரண்டு மூன்று கரண்டிப்பால் சாப்பிடுங்கள்.’ என,

மனோரஞ்சிதம் :—“ஆம், ஆஜி! உங்களைப் பார்த்தால் உருப்படி தெரியவில்லையே! இளைத்து எலும்பாய்ப் போனீர்களே. நன்றாய்ச் சாப்பிடுங்கள். இன்னுங் கொஞ்சம் சாப்பிடுங்கள்” என,

மதுரநாயகம் பிள்ளை :—“ஆமாம், நீங்களும் என்னைப்பற்றி எட்டு நாளாய் விரதம் பிடிக்கின்றீர்கள். தக்ஷணமே எழுந்துபோய் நன்றாய்ச் சாப்பிட்டுவாருங்கள். பிற்பாடு எந்த நியாயமும் பேசலாம்” என, இருவரும் அக்கணமே யெழுந்து ஒரு வார்த்தை முதலாய்ச் சொல்லாமற் போய்விட்டார்கள்.

இந்த உத்தம கீழ்ப்படிதலே புருஷனை வசித்த பெண்டிருக்கும் பிள்ளைகளுக்கும் பெரும் பூஷணமென்று நினைத்துக்கொண்டு நான் பிரம்மைகொண்டு நிற்கும்போது :—

மதுரநாயகம் பிள்ளை :—“தம்பி சுந்தரம், சற்று உட்காருங்கள். எந்தப் பாடசாலைக்குப் போய் வருகிறீர்கள்? இவ்வருஷம் பரீக்ஷையிற் றேறுவீர்களா? மேல் வகுப்புக்குப் போகப் போகப் படிப்பு கஷ்டமாகும். இடைவிடாமுயற்சியே பரீக்ஷையிற் றேறுவதற்கு உத்தம வழி. போன பரீக்ஷையில் அநுகூலமாயிற்று?” என,

நான்:—"ஆம், அத்தான்! போன வருஷத்தில் தெய்வகடாக்ஷத்தால் ஆறாவது வகுப்புப் பரீக்ஷையிற் றேறிவிட்டேன். வருகிற வருஷம் டிசம்பர் மாசம் எவ். ஏ. பரீக்ஷைக்குப்போக தயார் செய்கிறேன். முடிவு எப்படி யிருக்குமோ! தெரியவில்லை" என்று பேசிக்கொண்டிருக்கும்போதே எனது தகப்பனார் அங்கு வந்தார். அவர் வரவே நான் பாடசாலைக்குப் போய்விட்டேன்.

ஆனால் எனக்குச் சொல்லி லடங்காத சந்தோஷமும், அக்களிப்புமாயிருந்தது. ஏனெனில், மதுரநாயகம்பிள்ளை சிங்கத்தின் வாயினின்று விடுதலானதுபோல் கொடிய சாவின் வாயினின்று விடுதலாய்விட்டார். அதுவே போதும். ஆகையால், "உத்தம புண்ணிய புருஷர் உலகில் இன்னும் சிறிது காலம் உயிர் உய்யப் போகிறார். அவரது நீதி போதனைகளைக் கேட்கும் பாக்கியம் எனக்குச் சித்தித்தது! சித்தித்தது!" என்று சொல்லிக்கொண்டு மனமகிழ்ச்சியோடு கலாசாலைக்குப் போனேன்.

நான் திரும்பி வந்தபின் நாலு மணிக்கு ஒரு வைத்தியர் வந்து தாதைப் பரிக்ஷித்து முகக்குறி தேகக் குறிகளையும் பார்த்து: "இனி இவருக்கு ஆபத்தில்லை. ஆனால் இன்னும் இரண்டு மூன்று மாசங்கள் வரையில் மகா எச்சரிக்கையோடும் பக்குவத்தோடும் அவரை விசாரிக்கவேண்டும்" என,

அபிராமி யம்மாளும் மனோரஞ்சிதமும் ஒருவாய்ப்பட:— "ஆபத்து நீங்கினதே போதும்! இன்னும் இரண்டு மாசங்கள் மாத்திரமல்ல. ஆறு மாசங்களாயினும் ஆறு வருஷங்களாயினுஞ் சரி, யெங்கள் உயிரைக் கொடுத்தேனுஞ் சரியான விதமாய் அவர்களை விசாரிக்கத் தயாராயிருக்கிறோம்." என,

வைத்தியர்:—"நீங்கள் இனிமேல் அஞ்சவேண்டுவதில்லை. அவருடைய உயிருக்கு நான் உத்தரவாதி" என,

இதைக் கேட்ட தாயும் பிள்ளையும், முகம் தண்டாமரைப் புஷ்பத்தைப்போல் மலர:—"எப்போது இந்நல்வாக்கு பிறக்குமோவென்று காத்துக்கொண்டிருந்தோம். இதோ இந்நேரத்திலேயே யெங்கள் கவலை தீர்ந்துபோயிற்று. இனி யெங்களைப் போல பாக்கியசாலிகளில்லை. எங்கள் பாக்கியமே பாக்கியம்! எங்கள் சுகமே சுகம்!" என்று ஆர்ப்பரித்துச் சந்தோஷித்தார்கள்.

அப்போது மதுரநாயகம்பிள்ளை:—"அபிராமி, இன்றைக்குத்தான் உனது முகம் நமது திருமணக்காலத்தில் மகிழ்ச்சியினால் ஜொலித்துப் பிரகாசித்ததுபோல் துலங்குகின்றது" என,

அவள் :— "அத்தான்! எனது பாதி உடலில் பட்ட வினை நீங்கிப்போயிற்று. இனி யானிகரமே யில்லையென்ற மங்கல்லிய வார்த்தை யெனது காதில் விழும்போது எனதுள்ளம் பூரிக்காதா? பூரிப்பினாற் பிறந்த சந்தோஷம் முகத்தில் வடியாதா?" எனச் சொல்லி தனது மெல்லிய கரங்களை நீட்டி யவரைத் தழுவி முத்த மிடப்போனாள். ஆனால் நானும் வைத்தியரும் அங்கிருந்தமையால் நாணி, நினைத்ததைவிட்டுத் தலையை நட்டுக்கொள்ள,

மனோரஞ்சிதம்:— "ஆஹ், இவ்வளவு கேவலமாயிருக்கிறீர்களே! எப்போது உங்களுடைய பழைய மேனி யுங்களுக்கு வரும், ஐயோ! அவ்வளவு அழகான உடம்பு இப்படிக் கருகி மங்கிப்போயிற்றே!" என்று அங்கலாய்க்க, அவர் தனது இளங் கன்னிகையின் இனிய கனிகரத்தைக்கண்டு அக்களித்து, அவளை வாரி யணைத்து "மகளே! நீ யேன் இப்படி அங்கலாய்க்கிறாய்? இதோ உனது தாயைப் பார், இன்னும் பதினைந்து தினங்களுக்குள்ளாக என் மேனியைப் பழைய மேனியைவிட பதின்மடங்கு அதிகமாக்குவாளே. எனது உயிர் உஜ்ஜீவிக்கவேண்டி நாடோறும் ஒரு சேர் மானிட இரத்தம் வேண்டு மென்று வைத்தியர் கேட்பாராகினுந் தனது சொந்த இரத்தத்தைக் கொடுக்கப் பின்வாங்காளே! இப்பேர்ப்பட்ட கனிகரம் நிறைந்த மனைவி என்னை விசாரிக்கத் தயாராயிருக்க மகளே! நீ யென்னத்திற்காக இப்படி பரிதபிக்கிறாய்?" என்று உள்ள மூவந்துகூற, தன்னை யெல்லோர் முன்னிலையிற் றனது கணவன் புகழக் கேட்ட அபிராமியம்மாள் முகத்திற் செங்களரிப் படர்ந்து நாணி வெட்டென வெழுந்து வீட்டுக்குட் போய் விட்டாள்.

வைத்தியர் மதுரநாயகம்பிள்ளைக்கு உபசாரஞ் சொல்லித் திரும்பிப் போய்விட்டார்.

நானுஞ் சற்றுநேரம் அவரோடு சம்பாஷித்துக் கொண்டிருந்து :— "அத்தான், நேரமாயிற்று, என் தாய் தந்தையர் எனக்கெதிர்பார்த்திருப்பார்கள்; நான் போய்வருகிறேன்." என்று சொல்லி வீட்டுக்குப்போய் இராப் போஜனஞ் செய்து காலப் போக்குக்காக எனது தந்தையரோடு சல்லாபித்துக்கொண்டிருக்கும்போது அவர் மறுபடியும்—அபிராமி யம்மாளைப்பற்றின பேச்சு வர—அவளைப் புகழத் துவக்கினார்.

நான் அவரை நோக்கி :— "அப்பா! இவளுக் கேது இவ்வளவு நன்னடக்கையுங், குணசம்பத்துக்களும், இல்லறத் தர்மங்

களும்? இவளுக்கு இவைகள் எங்கேயிருந்து வந்தன? இவை களுக்குக் காரணம் ஈஸ்வர கடாக்ஷமல்லவா?" என,

அவர்:—"ஆம் மகனே, அது ஈஸ்வர கடாக்ஷந்தான். ஆயினும் பெற்றோர் முயற்சியினாலும் பிள்ளைகள் சன்மார்க்கத்திற் பிரவர்த் திக்கவேண்டும். அவர்கள் தங்கள் சிசுக்களுக்குப் பாலோடு கல ந்து உண்பிக்கும் நல்லுணர்ச்சிகளே காலக்கிரமத்திற் பலத்து மர மாகி நற்கனிகளைத் தருகின்றன. சிறுவர்கட்குச் சிறுபோதே எதைப் பழக்கினோமோ அதுவே யௌவன காலத்திலும் முதிய வயதிலும் வழங்கும். 'தொட்டிற் பழக்கஞ் சுடுகாடு வரைக்கும்' என்ற பழமொழியை மறந்துவிடாதே. அபிராமியுடைய தாய் தந் தையர் அவள் சிறுபிராயத்தில் அவளுக்குப் படிப்பித்த நல்லுணர் ச்சிகளையே நாம் இப்போது அவளிடம் பார்க்கின்றோம். அங்ஙன மாதலால் மகனே! 'இளமையிற்கல்' என்கிற மூதுரைக்கேற்ப நீ சிறுபோதே தத்துவகியானங்களையும் இல்லறத் தர்மங்களையுங் கற்றுக்கொள். நீ யவைகளைப் படித்துணரத் தூரப்போகவேண்டுவ தில்லை. நமது எதிர்வீட்டுப் புருஷ பூவையரை நோக்கினாலே போதும். நான் நாடோறும் கிரக தர்மோத்தம அபிராமியைக் கண்டு வியப்படைகிறேன். அவளது குணநாயகன் மதுரநாயகம் பிள்ளையின் புண்ணிய படிப்பினைகள் கொஞ்சமா? நீ பார்த்திருக்கி றாயே. நிகழும் காலத்திலும் பார்க்கிறாயே. இத்தருண தம்பதிகளை நிகர்த்த ஸ்திரிபூமான்கள் உலகில் உண்டா? கிரமபுரியில் நமது பந் துக்கள் எத்தனையோ பேர் இருக்கின்றார்கள்! இவ்வூரில் எத்தனை யோ வர்ணாசிரம ஜனங்கள் வசிக்கின்றார்கள்! இளம்புருஷ பூவை யரை நாம் பார்த்ததில்லையா? அத்தனை சதகோடி சங்கத்தில் இவ் வளவு நேர் சீர்பொருந்திய தம்பதிகளுண்டா? இராமாயணக் கதா நாயகராகிய ஸ்ரீ ராமரும் சீதையும் இவ்வளவு அன்னியோன்னிய மாய் உயிர் வாழ்ந்தார்களா? இல்லையில்லை; ஸ்ரீராமரும் ஒருக்கால் சீதைமீது ஐயமுற்று அவளை நிராகரித்துவிட்டாரே. ஆனால் இவர் கள் விஷயத்தில் அப்படி யெஞ்ஞான்றும் ஆகாதென்று நிச்சயமா ய்த் தோன்றுகிறதே! இவர்களுடைய சிநேகம் பஞ்சபாண்டவரின் பதிவிரதா பத்தினியான துரோபதையின் துயில் வளர்ந்ததுபோல் வளர்கின்றதே! இவர்களுடைய பாசபந்தனம் அர்ச்சுனனுடைய வில்லில் நரம்புக்கொடிகள் நாணேற்ற வேற்றப் பலப்பட்டு வந்தது போல தினந்தோறும் பலப்பட்டுக்கொண்டு வருகிறதே தவிர கிஞ் சித்தும் தளரக் காணோமே!

:—"ஆமப்பா இதென்ன விந்தை! நமது வைஷ்ணவரிடத்திலுஞ் சைவரிடத்திலும் இத்தகைய கிரக தர்மோத்தமரைக் கண்டோமில்லை. நானும் இரண்டுமாத காலமாய்ப் பலவாறாய்ச் சிந்தித்துப்பார்க்கிறேன். இதற்குச் சரியான காரணமும் மூகாந்தரங்களும் எனக்குத் தெரியவேயில்லை. நீங்கள்தான் எனக்குச் சொல்லவேண்டும். நீங்கள் அவர்களோ டுறவாடிப் பழகியிருக்கின்றமையால் அவர்களுடைய மதக்கொள்கைகளும், வேதாந்த சித்தாந்த வெளிச்சங்களும், தர்மசாஸ்திர தாற்பரியங்களும் உங்களுக்கு ஒருவாறாய்த் தெரியவேண்டும். அவைகளை யெனக்குக் கொஞ்சமேனும் விவரிக்கவேண்டுமாய்க் கோருகிறேன்."

:—"மகனே அவர்கள் அனுசரிக்குங் கிறிஸ்து வேதமும் அதிலடங்கிய நட்ப சற்போதனைகளும் அதற்கு முக்கிய காரணம். அதனோடு அவர்கள் இளமையிற் கிறிஸ்துவ கலாசாலைகளிலுங் கன்னியர் மடங்களிலும் வித்தியாப்பியாசஞ் செய்ய விடப்படுகிறபடியால், அவ்விடத்தில் நமது பிரம்மச்சாரிகளுக் கொத்த சில துறவிகள் அவர்களுக்கு ஓதுவிக்கும் ஸ்திதி சம்பந்த தர்மங்கள் அதற்கு அநுசரண காரணம்; பெற்றோர்களுடைய புண்ணிய பிரவர்த்தனங்களே யதற்கு உப காரணம்."

:—"அப்பா, தாங்கள் குறிப்பாய்க் கூறின இவ்விஷயம் எனக்கு விளங்கவில்லை யாதலாலதை விவரித்தே கூறவேண்டுகிறேன்."

:—கவனித்துக்கேள் மகனே, "கிறிஸ்துவ வங்கிஷபதிகள் சிறுவயதிலேயே தங்கள் இளைஞர்களைக் கலாசாலையில் குருக்கள் வசத்திலும் சிறு நங்கைகளைக் கன்னிகாமடத்திற் கன்னியர் வசத்திலும் முற்றிலும் ஒப்பித்துவிடுகிறார்கள். அத்துறவிகள் வேதோபதேசங்களையும், இல்லற துறவறத் தர்மங்களையும், லௌகிக கியானங்களையும் கலந்து சாதத்தோடு நெய்யை உண்பிப்பதுபோல் மெல்லமெல்ல அச்சிறுவர்களுக்கு உணர்த்தி அப்பியசித்து விடுகிறார்கள். இவ்வாறு இளமையிற் கற்ற இதபோதங்கள், நல்லுணர்ச்சிகள் முதலிய சற்பிரவர்த்தனங்களின் ஒளியின்கீழ் அவர்கள் தங்கள் ஜீவியகாலத்தையெல்லாம் கடத்தி சன்மார்க்கத்தில் பிரவர்த்தித்துத் தங்களுடைய ஸ்திதி தர்மங்களைப் பூர்த்திசெய்து தங்கள் வாணாட்களை நிறைந்த தினங்களாக முடிக்கின்றார்கள்."

:—"நமது ஆரிய சமயத்தார் ஏனிவ்வாறு செய்தலாகாது? தம்பிரான்களும் பற்பல பிரம்மச்சாரிகளும் அநேக சதவேளி பூஸ்திதி

களோடு விஸ்தாரமான மடங்களைக் கட்டிக்கொண்டு ஜம்பமாய்
வாழ்ந்திருக்கின்றார்களே. நமது வைஷ்ணவ சைவ சமையங்களிற்
கன்னிகா பதிவிரதைகள் இருத்தலாகாதோ? பள்ளிக்கூடங்களை
யுங் கலாசாலைகளையும் ஏற்படுத்த அவர்களுக்குக் கடனில்லையோ?
கல்வியோடு கலந்து நமது சமயக் கொள்கைகளையும் மாணுக்க
ருக்குப் போதிக்க அவர்களடைந்த போதனுனுபவ மியல்பல்
லவோ? இவைகளைச் செய்யாவிடில் பின்னே துக்காகத்தா னவர்க
ளிருக்கிறார்கள்?" என,

:—"ஆ! விஜயராகவ பாலசுந்தரம்! நீ வரவர அதிவினைய
கேள்விகளைக் கேட்கத் தலைப்படுகிறாய்! சொல்லவேண்டுமாகில்
அவைகள் ஒருவாறு விஷமக் கேள்விகளாய்த் தோன்றுகின்றன! நீ
கேட்டுவிட்டாய். நான் சொல்லியே தீரவேண்டும். ஆதலால் நமது
சமயத்தாருக்கு போதனுனுபவங் கிடையாது. அவர்கள் போதி
க்கும் ஸ்தாநுபத்தியத்தை யாரிடத்தேனும் பெற்றுக்கொண்டார்க
ளில்லை. இயேசுபெருமான் தமது சிஷ்யருக்குப் பிரசங்கிக்கும் அதி
காரமும் அநுவனுங்கொடுத்து ஜகத்தினெத்திசையிலும் லோக
முடிவு பரியந்தம் போதிக்க ஆக்ஞாபித்து அவர்களை அனுப்பினது
போல நம்மிலியாரும் யாரையும் அனுப்பினுரில்லை. நம்மில் ஒருவ
னுந் தன் குடும்பத்தைவிட்டுத் தன்னைப் பரித்தியாகம் பண்ணிப்
பரோபகார நிமித்தந் தன் வாணுட்களைச் செலவிட மனந்துணிந்த
வனில்லை. ஆதலாற் கிறிஸ்துவ கலாசாலைகளைப்போலவுங் கன்னி
யர்மடங்களைப் போலவும் ஒத்த ஸ்தாபனங்களை யேற்படுத்த நம்மில்
முயற்சி செய்கிறவனுர்? அக்கரையுள்ளவனுர்? அவனை அனுப்பு
கிறவனுர்? அவனுக்கென்ன அதிகாரம்? அவன் யாரிடத்தில் ஸ்தா
நுபத்தியத்தைப் பெற்றான்? எங்கு ஸ்தாநுபத்தியமில்லையோ,
அங்கு போதனுனுபவமும் பிரசங்கமுமில்லை. எங்கு பிரசங்கமில்
லையோ அங்கு வேதமும் வேதாநுட்டானங்களும் பிரகாசியா.
அவைகள்பிரகாசியாவிடத்து மகனே, நீ கோரினவை நிறைவேறா."

:—"நாமே மேற்கூறிய சத்விருத்தங்களை அறியலாகாதா?
அவைகளுக்கு வழியென்ன?"

:—"அவைகளை அறியவேண்டுமாகில் நீ அவர்களுடைய பாட
சாலைகளில் வாசிக்கவேண்டும். அவர்களுடைய புஸ்தகங்களைப்
படித்தறியவேண்டும்."

:—"அப்புஸ்தகங்கள் எங்கே யகப்படும்?"

:—"நீ தற்காலம் வாசித்துவரும் கலாசாலையில் அவைகள் எதேஷ்டம். கலாசாலைத் தலைவராகிய அருமைநாயகம் பிள்ளையிடங் கேட்பாயாகில் அவர் அவைகளைச் சேகரித்துக்கொடுப்பார். பலவிஷயங்களிலு மறிவடைவது விசேஷந்தான்" என்று சல்லாபத்தை நிறுத்திவிட்டுத் தமக்கேதோ சிரமமாயிருப்பதாகச் சொல்லிக்கொண்டு கண்வளரப் போய்விட்டார்.

நான் அதைக்கேட்டுச் சந்தோஷமடைந்து:—"திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்று ஔவை சொல்வதுபோல் தீவாந்தரங்களைக் கடந்துபோகாமற் றர்ம சாஸ்திர திரவியங்களையும் விசேஷமாய் அவைகளின் அநுஷ்டானங்களையும், பாடசாலைகளிலும் அறநூற்களிலும், மதுரநாயகம்பிள்ளை வீட்டிலும் ஏராளமாய்த் திரட்டியெடுத்துக்கொள்ளலாமென்று திண்ணமாய்த் தீர்மானித்துக்கொண்டேன்.

மறுதினம் காலமே நான் மதுரநாயகம் பிள்ளையைப் பார்க்கப் போனபோது அவர் தனியாய் ஒரு குருச்சியில் உட்கார்ந்துகொண்டு இடது கையில் மடக்கின புஸ்தகத்தோடு வானத்துக்கேறெடுத்த கண்கள் இமை கொட்டாமல் நெடுநேரம் அசைவின்றி மௌனமாயிருந்தார். பிறகு என்னைக்கண்டு:—

"அவ்வாசனத்தின்மீது உட்காருங்கள். எனது அநுதின அநுஷ்டானங்கள் முடிந்தபின்னர் பேசுவோம்" என்று திரும்பப் புஸ்தகத்தில் வாசித்து மௌனம் சாதித்தார். பிற்பாடு முழந்தாட்படியிட்டு கொஞ்சநேரஞ் செபித்துவிட்டு எழுந்து குருச்சியில் உட்கார்ந்து:—"தம்பீ சுந்தரம், ஏதின்றைக்கு இவ்வளவு காலையில்" என,

நான்:—"அந்தான், தங்கள் சரீர சௌக்கியத்தின்பேரில் எனக்கெந்நேரமும் இரவும் பகலுங் கவலையாயிருக்கின்றது. தங்களைப்பார்த்துச் சாவகாசமாய்த் தங்களோடு சம்பாஷித்துப்போகலாமென்று வந்தேன்" என,

மதுரநாயகம்பிள்ளை:—"பாடசாலையின் கடமைகள் தீர்ந்துபோயினவா? அவைகளை அசட்டைசெய்து இங்கு வருவீர்களாகில் குற்றமாகுமே. இளமையிற் கற்கவேண்டும். இளந்தையில் வளையாக் கொம்பை முதுமையில் நிமிர்த்தால் முறிந்துபோம். ஆதலால் உங்கள் இளவயதை வீணிற் கழிக்கவேண்டாம்."

:—"அத்தான்! எனது படிப்பின் மட்டிற் றங்களுக்கு யாதோர் ஐயுறவுவேண்டாம். கடவுள் கடாக்ஷத்தால் நான் மகா எளிதில் வாசித்துவருகிறேன். எனது தோழர்களெல்லோரும் தங்களுக்குத் தெரியாதவைகளை யென்னிடத்தில் எப்போதும் கேட்டுக்கொள்வார்கள். எனது உபாத்தியாயர்கள் இதுநாள்வரையில் என் மட்டில் யாதோர் குறையும் முறைப்பாடும் சொன்னார்களில்லை. என் வகுப்பில் நான் எந்நாளும் முதல்வனாயிருக்கிறேன். ஆதலால் இவ்விஷயத்திற் றங்களுக்குக் கலக்கம்வேண்டாம்."

:—"அப்படியாகில் எனக்கு மெத்த சந்தோஷம். ஆயினும் உங்கள் தந்தையரின் தாற்பரியத்தை அறியவேண்டும். நான் இதர மதஸ்தனாயிருப்பதால் உங்கள் பந்துக்களுக்கு நீங்கள் எனது சஞ்சாரத்தைத் தேடுவது பிரியமாயிராது."

:—"அப்படி நினையாதேயுங்கள். எனது தாய் தந்தையர் உங்கள் மட்டில் வைத்திருக்கும் நம்பிக்கையும் நல்லெண்ணமும் அணைகடந்தவைகள். நான் உங்கள் சஞ்சாரத்தையுஞ் சகவாசத்தையும் தேடிவருவது அவர்களுக்கு மகா சந்தோஷகரம். அதற்கு விரோதமாய் அவர்கள், 'மகனே, நீ அவ்வளவு பெரிய அதிகாரியின் சமுகத்திற்கு அடிக்கடி போகிறாயே. எச்சரிக்கை! மரியாதை தப்பிப்போகாதே. நமது வீட்டில் இருப்பதுபோல அவர்வீட்டிலும் இராதே' என்னும் இவை முதலான புத்திமதிகளை யெனக்கடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறார்கள். ஆதலால் தாங்கள் அவர்கள் மட்டிலும் ஐயமுறவேண்டாம். நான் இங்கு நல்லுணர்ச்சி கற்றுக்கொள்ளவருகிறேன். இதுவுமன்றி இவ்வூரில் வேறு ஜனங்களை யறியேன், அவர்களை நான் அறிந்தபோதிலும் அவர் வீட்டுக்குப்போக எனக்கிஷ்டமில்லை. வந்தாற் றங்கள் வீட்டுக்கு வருவேன். இல்லாவிடில் பாடசாலைக்குப்போவேன். அதுவுந் தப்பினால் எனதறையில் படித்துக்கொண்டிருப்பேன். நான் தங்கள் வீட்டுக்கு வருவது ஏதேனும் ஆக்ஷேபத்துக்கிடமா?"

:—இல்லை யில்லை, கிஞ்சித்தும் இல்லை; நீங்கள் வருவது எங்களுக்கு மெத்த சந்தோஷகரம். இனி நீங்கள் எங்கள் வீட்டில் உங்கள் வீட்டில் இருப்பதுபோல எண்ணிக்கொண்டிருக்கலாம்'', என்று பேசிக்கொண்டிருக்கும்போதே அபிராமியம்மாளும் மனோரஞ்சிதமும் நிறைய முக்காடிட்டுக்கொண்டு வெளியிலிருந்து உள்ளேவந்தார்கள். அவர்கள் உள்ளே பிரவேசித்தவளவில்,

மதுரநாயகம்பிள்ளை :— "அபிராமி, இன்றைக்கு மெத்த பசியாயிருக்கிறது, சீக்கிரஞ் சாப்பாடு கொண்டுவா."

:—"அத்தான், இதோ ஒரு கைநொடிப் பொழுதிற் கொண்டு வருகிறேன். எப்போது பசியெடுத்துச் சாப்பாடு கேட்பீர்களோ வென்று வெகு ஆவலோடு காத்திருந்தேனே. இன்று எனது அபிலாஷை பலித்ததா? நமது ஆண்டவராகிய இயேசுநாயகருக்கு ஸ்துதி" என்று சொல்லிக்கொண்டே, வெட்டென ஓடி இரண்டு நிமிஷங்களுக்குள்ளாக பல தினுசு ஊறுகாய்களோடு சாதங்கொண்டுவந்து மேஜைமேல் வைத்துவிட்டு :—

"அத்தான்! எழுந்துவாருங்கள். சாப்பாடு தயாராய் இருக்கிறது. கை கால் அலம்பிக்கொள்ளுங்கள். இன்றைக்கு நீங்களே சாப்பாடுகேட்டது எனக்கு எவ்வளவோ ஆனந்தம். நீங்கள் மாத்திரந் தள்ளுகடையின்றி சாப்பிடுங்கள். இன்னும் ஒருமாதத்துக்குள்ளாக உங்களது பழயமேனி வந்துவிடுகிறதா இல்லையாவென்றுபாருங்கள். வராவிடில் நான் அதற்கு உத்தரவாதி. உங்களுக்கு எவ்வகைப் பதார்த்தங்களின்பேரில் ஆசையோ அவைகளைக்கேளுங்கள். தில்லியில் இருந்தாலும் தேடிக்கொண்டுவருகிறேன்" என,

அவர் எழுந்து பந்தியமர்ந்தார். அவருக்கு வைசூரியினால் வந்த இரணங்கள் இன்னும் சரியாய்க் காயாததினால் அபிராமியம்மாளே யவருக்குக் கரண்டிகொண் டமுதூட்டினாள். ஊறுகாய் வகைகட்குக் கணக்கில்லை, கவளத்துக்கு வகையாலொன்று வைத்தாள். இன்னும் சில ஊறுகாய்களில் கை வைக்கவேயில்லை.

அதற்குள்ளாக அவர் :— "அபிராமி, போதும் போதும்! நிறுத்திவிடு" என,

அவள் :—"அத்தான்! இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள்" என்று கெஞ்சி பின்னுஞ் சில கரண்டி சாதமருந்தச் செய்தாள்.

:—"அபிராமி உனக்கேன் இவ்வளவு அக்கரை? நான் சாப்பிட்டால் உனக்குப் பசி தீருமா?"

அபிராமி :—"புருஷனும் பூவையும் ஒரே மாம்ஸமல்லவா? நீங்கள் அதை விவிலிய நூலில் வாசித்ததில்லையா? ஆதலால் நீங்கள் சாப்பிட்டால் எனக்குச் சுகமல்லவா? இன்னும் நாலைந்து வகை ஊறுகாய்கள் மீதியிருக்கின்றன. இன்னும் நாலைந்து கரண்டி சாதஞ் சாப்பிட்டுவிடுங்கள் போதும்" என்று மகா மாதுரியத்

தோடு ஒரு சிறு நங்கையைப்போல் மழலைப் பாஷையால் அவரைப் பலவந்தம் பண்ணினாள்.

அவர் சற்று மனஞ்சலித்தவராய்.— "அபிராமி! உனது பக்ஷம் குருட்டுப்பக்ஷம். அது குருட்டு இருதயத்தினின்று புறப்பட்டுவருகின்றமையால் அதற்குக் கண்ணில்லை. பக்ஷத்துக்கு ஆலோசனை வழிகாட்டியாயிருக்கவேண்டும். நானிருக்கும் ஸ்திதியைப்பார். அளவை மிஞ்சினால் அமிர்தமும் விஷமல்லவா? இவ்வளவு பலவீனமாயிருக்கிறேனே. இதில் மிதமிஞ்சிச் சாப்பிட்டால் அஜீரணத்திற்கு இடமல்லவா?"

அபிராமி:—"நீங்கள் இன்னும் அளவை மிஞ்சிச் சாப்பிட்டுப் போடவில்லை. இன்னும் நாலைந்து கரண்டி சாதம் வாங்கிக்கொள்ளுங்கள். கணக்குச் சரிப்பட்டுப்போய்விடும்" என்று பிடிவாதம் பண்ண, அவர் தனது கனிகரம் நிறைந்த காதலியின் முகத்தை முறிக்கமாட்டாமல் வருத்தப்பட்டுச் சாப்பிட்டு முடித்தார்.

அவர் கை அலம்பிக்கொண்டு உஸ் என்று ஆயாசத்தோடு நாற்காலிமேல் உட்கார்ந்தார். அப்போது அபிராமியம்மாள்:— "என்ன அத்தான் களையாயிருக்கிறதா?" என்று பறக்கப் பறக்க ஓடிவந்து விசிறத் துவக்கினாள். அப்போது அவர்:—"மெத்த அக்கரைதான்! இப்போது விசிற வந்துவிட்டாயா? நீ செய்த வேலையல்லவா இது? பெருமூச்சுவிட்டுத் தத்தளிக்கிறேனே. அபிராமி! நான் அன்றையத்தினம் உலோகாந்தரம் போயிருந்தால் நீ தற்போது யாரை விசாரிப்பாய்? இந்த மிதமிஞ்சின கனிகரம் எங்கே போயிருக்கும்? உனது அன்புக்கு ஓர் அளவு இருக்கவேண்டும். மட்டுத் திட்டமில்லா பக்ஷம் கேட்டுக்கு வழிதிறக்கும்" என,

அவள்:—"நீங்கள் உலோகாந்தரம் போயிருந்தால், அபிராமிக்கு இங்கென்ன வேலை? தக்ஷணமே உடன்கட்டையேறியிருப்பேன். நான் அஞ்ஞானிகளைப்போல உயிரோடு சமாதியிற் கூடக் குதிக்காவிடினும் உங்கள் சடலத்தை அடக்குமுன் ஆறாத் துயரத்தால் நொந்து மாய்ந்திருப்பேன். உடனே மடியாவிடினும் துக்கப்பெருக்கத்தால் அத்தானை யடக்கம்பண்ணி வந்திருக்கும் புண்ணியவான்களுடைய பாதத்தில் விழுந்து மடிந்திருப்பேன். அப்போதெனக்கென்ன? நீங்கள் போய்ச் சேர்ந்திருக்கும் இடத்திற்கு நானும் வந்து சேர்ந்திருப்பேன். நானும் அத்தானும் ஓரிடத்திலிருக்க இன்னும் யாரைவிசாரிப்பேன்" என,

அவர் :— "உனது பட்சம் மிஞ்சினது! மிஞ்சினது எப்போதும் குற்றமாகும்" என,

அபிராமியம்மாள் :— "குறைந்து குற்றவாளியாவதைக் காட்டிலும் மிஞ்சித் தவறிப்போவதே வாசி" என்று வீட்டுக்குள் போய்விட்டாள்.

இதனைக்கேட்கும் நண்பரே, ஸ்திரீ பூமான்களே, பதிவிரதா பத்தினிகளே, கன்னிகா விரத்தினங்களே, இளம் நங்கைகளே, நீங்கள் இப்புருஷ பூவையரையும் அவர்களுடைய புத்திர சந்தானங்களையும் பின் செல்லுங்கள். இவர்களுடைய சுவடுகள் அறத்துக்கும் பரத்துக்குங் கூட்டிக்கொண்டுபோகும் அகன்ற விராஜ மார்க்கம். முன்னொருகால் எமது ஆரியமதத்தின் தேவ ஆக்ஞைகளிலும், அநுஷ்டானங்களிலும், இராஜ நீதியிலும் இல்லறத் தர்மங்களிலும் பிரகாசித்திராநின்ற சந்திரமதி அரிச்சந்திரனைப்போலவும், தமயந்தி நளச்சக்ரவர்த்தியைப்போலவும், நானாவித தர்மங்களாற் றுலங்கும் இவ்வுத்தம குடும்பத்தை யுற்றுநோக்குங்கள். இதோ தன்னுடைய கணவனருகில் நின்றுகொண்டு அவர் ஆயாசத்தைத்தீர்க்க முயலும் அபிராமியம்மாளைப் பாருங்கள். என்ன ஆச்சரியம்! இவள் சந்திரமதியையுந், தமயந்தியையுஞ் சிநேகத்திற் றோற்கடித்து விடுவாள்போலும்! என்ன கனிகரம்! என்ன பக்ஷம்! நெடுநாள் மலடியாயிருந்து தவப்பலத்தினால் ஆண்மகவைப் பெற்ற தாயும் தனது பாலனுக்கு இவ்வளவு அன்போடு அமுதூட்டுவாளா? சந்தேகம்! அவள் உள்ளத்திற் பொங்கிய அன்பின் பெருக்கம் அவளது சுந்தர வதனத்தில் வடியக்கண்டேன். இளையவள் குடியிருக்கும் அவளுடைய முகப்பொலிவை எவ்விதம் வர்ணிப்பேன்! கல்லையுங் கரைக்கக்கூடிய அவளுடைய கண்களின் கெஞ்சிய நயனங்களைச் சொல்லிக்காட்ட எனக்குச் சரியான பதங்கள் கிடைக்கவில்லையே! அவளுடைய மெல்லிய கண்டத்தின் இனிய தொனியை எதற்கொப்பிடலாம்? கோகிலப் பக்ஷியின் மதுர சுரத்தையும் தோற்கடித்துவிடுமே! என்ன சாந்தகுணம்! எத்தகைய தயை நிறைந்த இருதயம்! எனது தந்தையார் பலதடவைகளில் வியாதிப் பட்டிருந்தாரே, எனது தாயார் இவ்வளவு அக்கரையோடும் பக்ஷத்தோடும் அவரை விசாரித்ததாக நான் பார்த்ததில்லையே.

கொஞ்சநேரம் அவரோடு சம்பாஷித்த பிற்பாடு அவரிடஞ் செலவுபெற்றுக்கொண்டு பாடசாலைக்குப் போனேன். அங்கு கலா

சாலைத் தலைமைப் புலமை நடாத்தும் அருமைநாயகம்பிள்ளை சந்தோஷகர சம்பவமொன்றை எனக்கறிவித்தார். பிள்ளைகள் அனைவரும் பாடப் பயிற்சிகளை முடித்துக்கொண்டு நாடகசாலைக்கு வந்தார்கள். அவர் மேடைமேலேறி:—“மாணுக்கர்களே! இதோ முதுவேனிற்காலம் துவக்கப்போகிறது. கச்சேரிகளும் நீதிமந்தரங்களும் வருகிற மே மாதம் முதற் றேதிக்குச் சாத்தப்படும். இராஜரீக உத்தியோகஸ்தரெல்லாரும் இளைப்பாறும் நாள் வருகிறது. அக்காலத்திற் பாடசாலைகளும் ஒழிவுபெற்றிருக்கவேண்டும். ஏனெனில் வெய்யற்காலம் வித்தியாப்பியாசத்திற்கு வெகு விருத்துவம். உபாத்தியாயரும் மாணுக்கருஞ் சில மாதங்கள் இளைப்பாறவேண்டும். இடைவிடாது நாணேற்றின வில் விசைகொண்டடிக்காது. சரீரமும் புத்தியும் சிறிதுகாலம் இளைப்பாருவிடில் கல்விப் பயிற்சியிற் சோர்ந்துபோம். மே மாதம் ஆறுந்தேதி வாவுகாலம் ஆரம்பிக்கும். பரீக்ஷை ஏப்பிரெல் இருபத்திரண்டாந்தேதிக்குத் துவக்கி மே மாதம் மூன்றுந்தேதிக்குள்ளாக முடிந்துபோம். நாலுமாதங்கள் பூராவும் வகுப்பில் வசிக்காதவர்கள் பரீக்ஷையில் ஏற்றுக்கொள்ளப்படமாட்டார்கள். நாட்சென்று வகுப்பிற் சேர்ந்தோர்களெல்லோரும் வருகிற டிசம்பர் மாதம் பரீக்ஷைக்குப்போகலாம். ஆதலால் பரீக்ஷைக்குப்போகவேண்டியவர்களெல்லோரும் சகலவிஷயங்களையும் தக்கவிதமாய்த் தயார்செய்யவேண்டும்” என்று முடித்து மாணுக்கர்களை அனுப்பிவிட்டார்.

எனக்கொருபக்கத்தில் வாவுகாலத்தை நினைக்கும்பொழுது சந்தோஷகரமாயினும், வேறோர் பக்கத்திற் பரீக்ஷைக்குப்போகக் கூடாமை கஸ்தியை வருத்தினது.

நான் இப்படி கவலைப்பட்டுக்கொண்டிருக்கும்போது அருமைநாயகம்பிள்ளை யென்னை அணுகி:—“சுந்தரம்! ஏனிப்படித் தனியாய் உட்கார்ந்து கஸ்திப்பட்டுக்கொண்டிருக்கிறாய்?” என,

நான் அவருக்கு விடையாக:—“இவ்வருஷப் பரீக்ஷைக்குப்போக சாத்தியப்படவில்லையே என்கிற எண்ணம் என்புத்தியைப் பிடித்துக்கொண்டிருக்கிறது” என,

அவர்:—“பயப்படாதே நீ பரீட்சைக்குப்போகாவிடினும் வேறெவ்வளவோ விஷயங்களைக் கற்றுணரலாம். புத்திசாலிகளுக்கு உபாத்தியாயர்வேண்டுமோ? இன்னும் ஆறுவது மாசம் வரப்போகும் பரீக்ஷைக்குப் போவாய். மகனே உனக்குத் தெரியாத

வைகளைக் கற்றுக்கொள். மிக்க அவசியமான விஷயங்களைத் தயார் செய்துவை" என்று எனக்குத் தென்புசொல்லி யென்னை யனுப்பி விட்டார். நான் உடனே வீட்டுக்குத் திரும்பிப்போய் மேற்படி சங்கதியை என் தந்தையருக்குத் தெரிவித்தேன்.

அவர் :—"என்ன கெட்டுப்போய்விட்டது? விதைக்கு ஈரம் போய்விட்டதா? நீ கஸ்திப்படாதே. பள்ளிக்கூடம் ஆரம்பிக்க இன்னும் மூன்று மாசங்கள் இருக்கின்றன. அதுவரையில் நீ யெங்கும் போகாமல் உனது கல்வி விஷயங்களைக் கவனித்துக்கொண்டு கிரமமாய் இரு. நீ மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குத் தாராளமாய்ப் போகலாம். அருமைநாயகம்பிள்ளை உன்னைத் தன் சவகாசத்தில் வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில் நீ அவர் வீட்டுக்குப்போவது உசிதம். நமது பந்து சங்கரநாராயணப்பிள்ளை வீட்டுக்கு நீ போக வேண்டாம். அவன் சுத்த நாஸ்திகன். சன்மார்க்க மறியாத கசடன். நமது குலகுரு ஜடகோபாலாச்சாரி வீட்டுக்குப் பயமின்றிப்போகலாம். அவரிடம் அடுத்தடுத்துப்போய் நமது கொள்கைகளையும் வேதோபதேசங்களையுங் கற்றுக்கொள்வது நன்று. பெண் பிள்ளைகள் கலாசாலைத் தலைமை உபாத்தியாயர் ஜெயராமச்சந்திர ஐயருடைய சவகாசத்தையுந் தேடலாம். அவர் சதுர் வேதங்களையும் முற்றும் கற்றுணர்ந்த வேதவிற்பன்னர். தர்க்கத்தில் நிபுணர். அவரைவெல்ல யாராலும் முடியாது. இராமாயணம், மகாபாரதம், பதினெண்புராணங்கள், இதிகாசங்கள், உபநிஷத்துக்கள் முதலிய பிரபந்தங்களும் அவர் மனதிற்றெளிந்த தண்ணீர்ப்பாடம். எவ்வித ஆக்ஷேபங்களுக்கும் அவர் உடனே சமாதானம் கூறுவார். முற்காலத்தில் சங்கராச்சாரியார் தோன்றினது போல இக்காலத்தில் ஜெயராமச்சந்திர ஐயர் தோன்றியிருக்கிறார். ஆதலால் மகனே, நீ யவரிடம் வேத ஒளிகளையும் தர்மசாஸ்திர உணர்ச்சிகளையும் பூரணமாய்க் கிரகித்துக்கொள்ளலாம்" என்று முடித்துச் சகலவித நல்லுணர்ச்சிகளையும் அடையும் வண்ணம் பலவழிகளைக் காட்டிவிட்டார்.

எனக்கு ஏதும் பெரிதல்ல. மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப்போய் அடிக்கடி அவரது அமிர்தவசனங்களைக் கேட்பதே பெரும் பாக்கியமென்று திண்ணமாய் நினைத்துக்கொண்டேன். மதுரநாயகம்பிள்ளையின் வியாதி சொஸ்தமாய்விட்டாலும் இன்னும் சரியான சுகமடைய ஆறுமாதங்கள் செல்லும். அதற்குள்ளாக நான் எவ்வளவோ காரியங்களைக் கற்றுக்கொள்வேன்! இதுவே யென்பெரும் லாபம் என்று எண்ணிக்கொண்டு மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப் போனேன்.

## 5-ம் அத்தியாயம்.

பூகோளப்பயிற்சி; வேதோபதேசம்; இருபாவான் சுவாமிகள்; ஞானோப தேசம்; அபிராமியம்மாளின் ஒப்பற்ற சரிதம்; மதுரநாயகம்பிள்ளையின் பந்துக்களின் வரவு; குலமக்கள்.

நான் உள்ளே பிரவேசிக்கும்போது மனோரஞ்சிதம் பூகோள சாஸ்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டு தனது தந்தையரை யணுகி:—"ஆஜி! நேற்றையதினம் உபாத்தியாயர் பூகோளத்திற் சில வினாக்களை வினவி அவைகளுக்குச் சரியான விடைகள் எழுதிக்கொண்டு வரும்படி கண்டிப்பாய்ச் சொல்லியிருக்கிறார். அநேகங் கேள்விகள் கேட்டார். அவைகளுக்கெல்லாம் விடையெழுதிவிட்டேன். பின்வரும் மூன்று வினாக்களுக்கு விடைகள் தெரியவில்லை. லோகத்திலுள்ள நதிகளில் அதிக நீண்டதும் வேகமுள்ளதும் எது? அதிக விஸ்தாரமானது எது? உலகில் அதிக தன தானியமுள்ள தேசம் எது? இவைகளுக்கு விடைகள் சொல்லித் தாருங்கள்" என,

அவர்:—"மகளே, நான் பூகோளத்தைப் பார்த்து வெகு நாளாயிற்று, எனக்குத் தற்போது மறதியாயிருக்கிறது. சுந்தர அத்தானைக் கேள். அவர் உனக்குச் சொல்லித்தருவார்" என,

அவள் நாணத்தினால் தலையை நட்டுக்கொண்டு கேட்க அஞ்சி நின்றாள். அப்பொழுது நான் அவள் கையைப் பற்றி யிழுத்து:— "நீ பயப்படாதே. நான் சொல்லப்போகிறதை எழுதிக்கொள்: நதிகளில் அதிக நீண்டதும் வேகமுள்ளதும் வட அமெரிக்காவில் ஓடும் மிசிசிப்பி என்ற நதி. அதிக விஸ்தாரமானநதி: தென் அமேரிக்காவில் ஓடும் அமாஜோன்நதி. உலகில் அதிகசெழித்ததேசம்: பிராஞ்சு தேசம்" என்றேன். அவள் உடனே வெகு துரிதமாய் அவைகளை எழுதிக்கொண்டாள்.

மதுரநாயகம்பிள்ளை பூமி சாஸ்திரப் புத்தகத்தைக் கையில் வாங்கிக்கொண்டு:—"மகளே, அநேகங் கேள்விகளுக்கு விடை தெரியுமென்றாயே; எங்கே! பார்ப்போம்: பூமி எத்தனை கண்டங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது?"

மனோரஞ்சிதம்:—"ஆசியா, ஆபிரிக்கா, ஐரோப்பா, அமெரிக்கா, ஓசையானியா என்று ஐந்து கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது."

:—"இராஜ சமஸ்தானங்க ளெத்தனை? முக்கிய தேசங்க ளெவை?"

:—"ஆசியாவில்-துர்க்கியா, பெர்சியா அல்லது பாரசீகம், உருசியா, கொரியா, ஜப்பானியா, சீனா, அன்னும், சியாம், நமது மகா இந்துஸ்தானமுமாம்."

"ஐரோப்பாவில்—இங்கிலாந்து, நோர்விஜியா, உருஷியா, ஜெர்மானியா, ஆஸ்திரியா, பிரான்ஸ், இஸ்பானியா, இத்தாலியா, கிரேசியா, துர்க்கியாவுமாம்."

"ஆப்பிரிக்காவில் எஜிப்து, மொரோக்கோ, அபிசீனியா இன்னும் பற்பல ஐரோப்பிய ஸ்வாதந்தரியங்களுமாம்."

"அமெரிக்காவில்-ஐக்கியநாடுகளும், மெக்சிகோ, பெருவியா முதலிய ஸ்தானங்களுமாம்."

"ஓசைனியாவில் - அஸ்த்ரேலியா முதலிய தீவுகளும் முக்கியமாம்."

:—"இங்கிலாந்துக்கு ராஜதானி யெது?"

:—"இலண்டன்."

:—"பிராஞ்சுக்கு?"

:—"பாரிஸ்."

:—"சீனத்துக்கு?"

:—'பெக்கின்."

:—"உருஷியாவுக்கு?"

:—"பீட்டர்ஸ்பர்க்."

:—"சிறந்த பட்டண மெது?"

:—"பாரிஸ்."

:—"அதிக விஸ்தாரமான தெது?"

:—"பெக்கின்."

:—"அதிக ஜனமடர்ந்தது எது? எத்தனை இலக்ஷம்?"

:—"இலண்டன் பட்டணம். முப்பது லக்ஷம் ஜனங்களடங்கியது."

:—"நமது இந்துஸ்தானத்தின் முக்கிய நதிகளெவை?"

:—"சிந்து, கங்கை, பிரமபுத்ரா, யமுனா, கோதாவிரி, காவிரி முதலிய நதிகளாம்."

:—"உலகில் அதிக உயர்ந்தமலை எது? அது எங்கே உள்ளது?

:—"இந்துஸ்தானத்தின் வடகோடியில் இருக்கும் இமயகிரி பர்வதமாம்."

:—"மனோரஞ்சிதம்! பிரபஞ்ச காரியங்களில் இவ்வளவு உணர்ச்சி போதும். இப்போது சமுசார விஷயங்களிலும், ஞானார்த்த விஷயங்களிலும் சில கேள்விகளைக் கேட்கப்போகிறேன். அவைகளுக்கு விடைசொல் பார்ப்போம். உன்னைப் பெற்றவர்கள் யார்?"

:—"நீங்களும் அம்மாளுந்தான்"

:—"உன்னைப் படைத்தவர் யார்?"

:—"கடவுள்."

:—நீ கடவுளைப் பார்த்திருக்கிறாயா? அவர் எங்கே இருக்கிறார்? நாம் அவரைக் காணாதபோது அவர் இருக்கிறார் என்று எப்படி சொல்லுகிறது?

:—"என்ன ஆஜி! இபபடிச் சொல்லுகிறீர்கள்! சுவாமி எங்கும் இருக்கிறாரே. தூணிலும் இருக்கிறார், துரும்பிலும் இருக்கிறார். நாம் தேவனைக் காணுகிறதில்லை. காற்றைக் காணுகிறோமா? மரம் அசைகிறதைக்கண்டு காற்று இருக்கிறதென்று அறிகிறோம். அதுபோலவே நாம் லோகத்தைப் பார்க்கிறோம். உலகம் தானாய் உண்டாயிற்றா? இல்லை. அதை ஒருவர் உண்டாக்கினார். அவர்தான் சுவாமி. இப்படித்தான் சோமனபுரத்து மடத்திற் கன்னியாஸ்திரீகள் சொல்லிக்கொடுத்தார்கள். இங்கே பள்ளிக்கூடத்தில் வேதோபதேசஞ் சொல்லிக்கொடுக்கிறதில்லை. கொஞ்ச நாளைக்கு முந்தி எனக்கு உபதேசம்பண்ணுவதாகச் சொன்னீர்களே. எனக்குச் சீக்கிரம் வேதத்தைக் கற்றுக்கொடுங்கள். நான் சற்பிரசாதம் வாங்க ஆசையாயிருக்கிறேன்."

:—"இதைப்பற்றியே மகளே, இந்தக் கேள்விகள் கேட்டேன். இனிமேல் நாடோறும் வேதோபதேசம் உனக்குச் சொல்லி வைப்பேன். நீ கவனமாயும் நுண்துணுக்கமாயும் கற்றுக்கொள். இதனோடுகூட உனது வகுப்பு விஷயங்களையும் மறந்துபோகாதே. நீ கூடிய சீக்கிரத்தில் பரீக்ஷைக்குப்போகவேண்டியிருக்கும். பரீக்ஷைமுடிந்தபின் துல்லியமணி கிராமத்திலிருக்கும் நமது தோட்ட வீட்டுக்குப் போவோம். அங்கு சகலமும் உனக்கு சமிர்த்தியாய்ச் சொல்லித்தருவேன்."

"அதற்குள்ளாக மந்திர சுலோகங்களையும் வேதோபதேசங்களையும், அர்த்தம் தானே விளங்கும்படியாய் எளியநடையில் விளக்

கிச் சொல்லிவிடுகிறேன். மந்திரங்களில் நமது முன்னோர் சமஸ்கிருத பதங்களை உபயோகித்து அர்த்தம் விள்ளாமலிருக்கும்படி செய்துவிட்டார்கள், அவைகளுக் கர்த்தம் சொல்ல அப்போதப் போது ஒரு பதார்த்திவேண்டும். அவைகளுக்கு அப்போதைக்கப் போது அர்த்தஞ் சொல்லினுஞ் சிறுவர்கள் உடனே அவைகளை மறந்துபோகிறார்கள். இது நான் அநுபவசித்தியால் அறிந்தகாரியம். நான் பாடசாலைக்குப்போய் லத்தீன் பாஷையில் மந்திரங்களைக் கற்றுக்கொள்ளுந்தனையும் அவைகளிற் பேர்பாதிக்கு அர்த்தமே தெரியாது. நான் வேதத்தை நன்றாய் அறிந்து அதை அநுஷ்டித்துவரும் நல்ல வம்மிசத்திற் பிறந்தவன். எனக்கு சுவாமி கொடுத்த புத்தி கொஞ்சமேனும் உண்டு. நானே அக்காலத்தில் கண்டுபிடியாவிடிற் பஞ்சமரும், புதுக் கிறிஸ்தவர்களும் புத்தியில்லாத சாமானிய ஜனங்களும் எவ்விதம் அவைகளைக் கண்டுபிடிப்பார்கள்? மேற்படி மந்திரங்களைத் திராவிட பாஷையிற் திருப்பினவர்கள் யார்? சில போர்த்துகாலிய குருக்களும் இத்தாலிய பிரசங்கிகளுமாம். அவர்கள் தங்கள் சுயபாஷையில் எவ்வளவு நிபுணராயினும் அன்னியபாஷைகளைச் சரிவர அறிந்தவர்களல்ல. பாஷையின் நுட்பநடைகளையும் வார்த்தைகளையுந் தேடியெடுக்க அறியார்கள். நாம் இங்கிலீஷ், பிரெஞ்சு முதலிய அன்னிய பாஷைகளைக் கற்றிருக்கிறோம். அவைகளிற் பிறந்துவளர்ந்து அவைகளை வாசித்து அப்பியசித்த ஐரோப்பியரைப்போல நாம் எழுதுவோமா? பேசுவோமா? இல்லையே. அங்ஙனமே ஐரோப்பியர் நமது பாஷையை எழுதவும் வாசிக்கவும் மாட்டார்கள். இது நிமித்தமே நமது மந்திரங்களும் வேதோபதேசங்களும் வாய்க்குவழங்காத கொடுந் தமிழிலும் புத்திக்குப் புலப்படாத செந்தமிழிலுமே யெழுதப்பட்டிருக்கின்றன. தற்போது சுத்த தமிழிலும் எளிய நடையிலும் எழுதித் திருச்சபையிற் பரப்புவது நம்மைச் சேர்ந்த காரியமல்ல. நமக்கு அதிகாரமுங் கிடையாது. அது நம்மை நடத்தும் நமது தந்தையராகிய மேற்றிராணியாரைப் பொறுத்தது. மகளே! நான் உனது சொந்த உபயோகத்துக்காகவும், நன்மைக்காகவும் பிரயோசனத்துக்காகவும் பின்வருமாறு எளிய நடையில் திராவிட பாஷையில் சொல்லுகிறேன்."

"சிலுவை மந்திரம்."

"பிதாச்சுதன் இஸ்பிரீத்து சாந்துவின் நாமத்தினாலே. ஆமேன்."

"ஆறிலக்ஷண மந்திரம்."

1. "தேவனுக்கு பிறப்பு இறப்பு இல்லை.
2. துவக்க முடிவு இல்லை.
3. சரீரமில்லை.
4. அவர் சகல நன்மைக்கடலாய்,
5. எங்கு நிறைந்தவராய்,
6. எல்லாத்திற்கு மூலமாய் இருக்கிறார். ஆமேன்."

"கர்த்தர் ஜெபம்."

"மோக்ஷத்திலிருக்கும் எங்கள் தகப்பனே! உமது பெயர் பரிசுத்தமாகுக. உமதிராச்சியம் வருக. உமது மனசு வானத்தில் நிறைவேறுவதுபோல பூமியிலும் நிறைவேறுக. எங்கள் அனுதின உணவை எங்களுக்கு இன்றைக்குக் கொடும். எங்கள் குற்றவாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல, எங்கள் குற்றங்களை எங்களுக்கு மன்னியும். எங்களைச் சோதனையில் விடாதேயும். ஆனால் எங்களைத் தின்மையினின்று இரக்ஷியும். ஆமேன்."

"தேவதூத மங்களம்."

"பிரியப்பிரசாதம் நிறைந்த மரியே நீர் வாழி! கர்த்தர் உம்மோடு. மங்கையருக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர் நீரே. உமது கருப்பப் பலனாகிய இயேசுவும் ஆசீர்வதிக்கப்பட்டவரே. பரிசுத்த மரியே, தேவதாயே, பாவிகளாகிய எங்களுக்காக இப்போதும் எங்கள் மரணசமயத்திலும் வேண்டிக்கொள்ளும். ஆமேன்."

"பன்னிரு விசுவாசப் பிரமாணங்கள்."

"வானம்பூமியின் சிருஷ்டிகரும் சர்வ சக்தியுள்ள பிதாவுமான தேவனையும், இஸ்பிரீத்துசாந்துவினால் கன்னிமரியிடத்தில் பிறந்து, போஞ்சுபிலாத்தி னதிகாரத்தில் வாதைப்பட்டு, சிலுவையிலறையுண்டு, மரித்தடக்கமாகி, பாதாளங்களிலிறங்கி, மூன்றுநாள் மரித்தோரைவிட்டு உயிர்த்து, மோக்ஷத்துக்கேகி, சர்வ சக்தியுள்ள பிதாவின் வலதுபக்கத்தில் உட்கார்ந்திருக்கும் அவருடைய ஏககுமாரரும் நமது கர்த்தருமான இயேசுக்கிறிஸ்துவையும்விசுவசிக்கிறேன். இஸ்பிரித்துசாந்துவையும் சாதாரண திருச்சபையையும் முக்தர்களுடைய சமபிரயோஜனத்தையும், பாவ மன்னிப்பையும், சரீர உத்தானத்தையும் நித்திய ஜீவியத்தையும் விசுவசிக்கிறேன். ஆமேன்."

"தேவகற்பனைகள் பத்து."

"1. நாமே உன் தேவன், நமது சமுகத்தில் உனக்கு வேறு தேவர்கள்வேண்டாம்.

2. தேவனுடைய பெயரை வீணில் வழங்காதே.
3. தேவனுடைய திருநாட்களை அநுசரி.
4. தாய் தகப்பனுக்குச் சங்கைசெய்.
5. கொலை செய்யாதே.
6. மோகிக்காதே.
7. திருடாதே.
8. பொய்சொல்லாதே.
9. உனது அயலான் பெண்டிரை இச்சிக்காதே.
10. பிறர் சொத்தை ஆசிக்காதே.

இப்பத்தும் இரண்டில் அடங்கும்.

முந்த உன் தேவனைச் சகலத்தையும் பார்க்க அதிகமாய் நேசி.
பின் உன்னைப்போல் சகலரையும் நேசி. ஆமேன்."

"திருச்சபைக் கட்டளைகள் ஐந்து."

"1. ஞாயிற்றுக் கிழமைகளிலுங் கடன் திருநாட்களிலும் முழுப் பூசை காணு.
2. வருஷத்திற் கொருவிசை யென்கிலும் நல்ல பாவ சங்கீர்த்தனஞ்செய்.
3. பாஸ்குக் காலத்தில் சுத்த இருதயத்தோடு சற்பிரசாதம் வாங்கு.
4. வெள்ளிக்கிழமைகளிலும் சதுர் காலங்களிலும், தபசுகால புதன், சனிக்கிழமைகளிலும் மாம்ஸத்தைத் தள்ளு. வருஷத்திய ஒன்பது ஒரு சந்திகளையும் அநுசரி.
5. விலக்கமான காலத்திலும் குறைவான பிராயத்திலும் பந்துக்களோடு கல்யாணஞ்செய்யாதே. ஆமேன்."

"மனஸ்தாபக் கிரியை."

"அளவில்லாத இரக்கமுள்ள தகப்பனே, சர்வநன்மைக்கடலே, சர்வத்தையும்விட உம்மை அதிகமாய் நேசிக்கிறேன்.

நான் உமக்குத் துரோகஞ்செய்தபடியால் முழுமனதோடு துக்கப்படுகிறேன்.

அறியாமற் சேய்தேன் அறியாமற் செய்தேன். அறிந்தும் அறியாமலுஞ் செய்தேன். தயையுள்ள தகப்பனே, திரும்பத் துரோகம் செய்யேன்.

உமது திருக்குமாரன் இரத்தப் பலன்களைப் பார்த்து என் பாவங்களை மன்னியும்.

உமது நேசகுமாரன் முகத்தைப்பார்த்து எனக்கு மோக்ஷ முடியைத் தருவீர் என்று முழுதும் நம்புகிறேன்.

திருச்சபை போதிக்கும் சகல சத்தியங்களையும் நானும் உறுதியாக விசுவசிக்கிறேன். ஆமேன்'' என்று சொல்லி முடித்தார்.

தக்ஷணமே மனோரஞ்சிதம்:—“ஆஜி! எவ்வளவோ தெளிவாய் இருக்கிறதே. இப்போது சகல மந்திரங்களும் அர்த்தம் சரியாய் விளங்குகிறதே, இதுவரையில் சமஸ்கிருத பாஷையில் மந்திரங்களைப் படிக்கிறோமென்று நினைத்தேன்” என,

அவர்:—“ஆம் மகளே, வடமொழிகள் திராவிடத்தில் வந்து கலந்துவிட்டன. நமது பூர்வீக சுவிசேஷப் பிரசங்கிகள் பிராமணருக்கு மெய்ப்பாக சமஸ்கிருத பதங்களை வெகுவாய் உபயோகித்தார்கள். அதனாலேயே நமது திருமந்திரங்களில் அவ்வளவு இருட்டு. அதனாலேயே பலதடவைகளிற் பிள்ளைகள் சரியாய் உச்சரிக்கக்கூடாமல் உளறுகின்றார்கள். பாதி வார்த்தையை விழுங்கிப்போடுகிறார்கள். கொச்சையாயும் உச்சரிக்கிறார்கள். இன்னும் பற்பல வழுக்களுஞ் சம்பவிக்கின்றன.'' என,

மனோரஞ்சிதம்:—“ஆமாம் ஆஜி! போன ஆதிவாரம் பூஜை முடிந்தபின் நமது குரு ஸ்நானீக கிருபாவான் சுவாமிகள் எனக்கும் எனது தோழிகளுக்கும் மந்திரங்களைச் சொல்லிக்கொடுத்தார். அவர்கள் மந்திரங்களை ஒப்பிக்கும்போது எனக்குச் சிரிப்பும் வேடிக்கையுமாயிருந்தது.

பிறந்த பாப்பாள் ‘பிதாவுடையவும் சுதனுடையவும்’ என்பதற்குப் பதிலாய் ‘பிதா உடையும் சுதனுடையும்’ என்று எப்போதுஞ் சொல்லுகிறாள். நமது சுவாமிகள் நூறு விசை ‘உடையவும்’ என்று சொன்னபோதிலும் அவள் எப்போதும் ‘உடையும், உடையும்’ என்று சொல்லுகிறாள்.

நமது வேலைக்காரி சுந்தரகாந்தியின் மகள் ஜெகதம்பாள் ‘சர்வேசுரன் தாமாயிருக்கிறார்’ என்கிறதற்குப் பதிலாய் எப்போதும் ‘தவமாயிருக்கிறார் தவமாயிருக்கிறார்’ என்று சொல்லுகிறாள்.

பிறந்த பாப்பாளுடைய அக்காள் தனபாக்கியம் நாக்கைச் சப்பிக்கொண்டு, ‘பரமண்டலங்களிலேயிருக்கிற’ என்கிறதற்குப் பதிலாய் ‘பரமடங்களிலேயிருக்கிற’ என்றே சொல்லுகிறாள்.

பஞ்சம பிள்ளைகளில் ஒருத்தி சொர்ணக்கண் என்கிற பெண் 'பிதாவே யென்கிறதற்குப் பதிலாய்' 'பிராவே, பிராவே' என்றாள்.

அப்போது கிருபாவான் சுவாமிகள்:—" எங்கே! சொர்ணக் கண்ணு! 'பிராவே பிராவே' யென்கிறாயே மந்திர முழுதுஞ் சொல் பார்ப்போம் " என,

சொர்ணக்கண்ணு :-" பரமடங்களிலே இருக்கிற எங்க பிராவே உம்முடைய ராமம் அச்சிக்க வடுவதாக."

:—" எப்படி யெப்படி சொர்ணக்கண்ணா! இன்னுமொரு தரஞ் சொல்லு! பிராவா! பிதாவென்று சொல்."

:—" பிரா, பிரா, பிரா."

:—" பி + தா என்று சொல்."

:—"பி + ரா."

:—"போயொழியட்டும்; பறமடமுமல்ல பஞ்சமர்மடமுமல்ல. பரமண்டலங்கள் என்று சொல்லவேண்டும். சொல பார்ப்போம். "பரமண்டலங்களிலே யிருக்கிற."

:—"பரமண்டலிக்கிற"

:—" அது கெட்டது போ! உம்முடைய ராமம் அர்ச்சிக்கப் படுவதாக அல்ல, உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக என்று சொல் "

:—" உம்முடைய ராமம் அச்சிக்க வடுவதாக."

:—உர்ர்ர்ரு என்ன! மட்டி! நாமம் என்று சொல்லக்கூடாதா? அசை அசையாகச்சொல். உம்முடைய நா + ம + ம்,

:—"உம்முடைய ரா + ம + ம்."

:—"சீச்சீ முட்டாள்! ஓடிப்போ! கதாகிதி! நீ எழுந்து சொல் பார்ப்போம். உம்முடைய இராச்சியம் வருக மற்றதும் சொல்,"

:—" உம்முடைய ராச்சியம் வருக. உம்முடைய சித்தம் பரமண்டத்திலே செய்யப்படுமாப்போல பூமியிலேயுஞ் செய்யப்படு வதாக. அண்டண்டுள்ள எங்கவுப்பன்" என்கிறாள் கலாகிதி.

ஆ! சிரிப்பு எங்களைத் தூக்கிக்கொண்டுபோனது போலி ருந்தது. வாயிற் றுணியை வைத்துக்கொண்டோம்.

சுவாமிகள்:—"எப்படிச்சொன்னாய்? எங்களப்பனா? எங்க ளப்பம் என்றுசொல்."

:—"எங்கள் அப்பம்."

:—"அப்பா! நீ கலாநிதியல்லவா? அதனுல் உனக்கு எளிதாய் வந்துவிட்டது. நல்லது குறையும் சொல்."

:—"எங்களுக்கு ரெண்டு தாரம்."

:—"அப்பாரர்ருத்தி! ரெண்டு தாரமா? இரண்டு புருஷனென்று சொல்லுகிருயா? யாருக்கு இரண்டு தாரம்? உன் தகப்பனுக்கா? வைப்பாட்டி யொருத்தியா? என்கிருர் கிருபாவான் சுவாமிகள். எங்கள் வாயிலிருந்த துணி யெங்கேயோ ஓடிப்போய் விட்டது. நாணும் எனது தோழிமார்களும் தரையில் உருளுகிருேம். வயிறெல்லாம்புண்ணுய்ப்போகிறது. கொலேரென்று சிரிக்கிருேம். குடலெல்லாம் சரிந்துபோகும்போலிருக்கிறது. அப்போது,

சுவாமிகள் :—"நீதாணு கலாநதி. கலாநதியல்ல; வெறும் நதிதான். போதும்போதும்!உட்கார்" என்று எங்களைச்சுற்றிப்பார்த்து

"ஆ இராசாத்தியம்மாள், நீ யெழுந்து சொல்" என,

அவள் எழுந்து "அன்றன்றுள்ள எங்களப்பம் எங்களுக்கு இன்று தாரும். எங்கள் கடன்காரருக்கு நாங்கள் பொறுக்குமாப்போல எங்கள் கடன்களை எங்களுக்குப்பொறும். எங்களைச் சோதியிலேயும் பிரவேசிப்பாதிலேயும்" என,

கிருபாவான் சுவாமிகள் :— "என்னமாய்? என்னமாய்? சோ........................"

:—"சோதியிலேயும்."

:—"அல்ல சோதனையில் பிரவே......................"

:—"பிரவேசிப்பியாதியிலேயும்."

:—"இல்லை இல்லை! பிரவேசிப்பியாதேயும்."

:—இனிமேல் அவ்விடத்தில் வரும்போது திருத்தித் திருத்தமாய்ச் சொல்" என்று சொல்லி வேருெர் பெண்ணைப்பார்த்து :—"நீ யெழுந்திரு. உன் பெயரென்ன?" என,

அவளெழுந்து:— "செல்லாபாய்" என்றுள்.

:—"உன் தகப்பன் பெயரென்ன?"

:—"சுந்தாநாத்ஜி."

:—"உன் தாய் பெயர்?"

:—"அன்ஞ பாய்."

:—"அன்ஞ பாயியா? என்ன! அன்ஞ பாய்? நீங்கள் மராட்டியரா? இருக்கட்டும். விசுவாசப் பிரமாணத்தில், இஸ்பிரித்து சாந்துவை விசுவசிக்கிறேன், என்பதில் இருந்து சொல்."

:—"இஸ்பிரித்து சாந்துவை அதியோக்கிய பக்தியாக விசுவசிக்கிறேன். பொதுவாயிருக்கிற அர்ச்சியஷ்டசபையையும் அர்ச்சியஷ்டவர்களுடைய சமோதிர பிரசங்கத்தை விசுவசிக்கிறேன். பாவப் பொறுத்தலை விசுவசிக்கிறேன். மாம்ஸ உத்தானத்திலே விசுவசிக்கிறேன். சதாமான சீவியத்திலே விசுவசிக்கிறேன்."

:—என்ன? செல்லாபாய்! நீகூட இப்படிச்சொல்லுகிறாயே! பஞ்சமர் ஏழை ஜனங்கள் இப்படிப் பேசுவது ஆச்சரியமல்ல. நீ நல்ல வங்கிஷபதியின் மகள். நீகூடவா தப்புந்தவறுமாய்ச்சொல்லுகிறது? இனி புத்தகத்தில் நன்றாய்ப்பார்த்து அக்ஷரப் பிசகின்றி படித்துச் சொல்லவேண்டும்" என்று சொல்லிப் பொன்னுக்கண்ணைப்பார்த்து: "நீ யெழுந்து பத்துக் கற்பனையில் ஆறுமுதற் கடைசிவரையிற் சொல்" என, அவள்,

:—"ஆறுவது மோகம் ஆமியாகவனம் பண்ணாரே யிருப்பாயாவ.

ஏழாவது: களவு காணாமே யிருப்பாயாவ.

எட்டாவது: பொய் சாக்கிச் சொல்லாரே யிருப்பாயாவ.

ஒன்பதாவது: பலகாரத்தை அவிச்சி வைக்காரே இருப்பாயாவ"

;—"என்ன என்ன! பலகாரத்தையா? பரதாரம். பரதாரம் என்றாற் புறத்தியாருடைய சமுசாரம் என்றர்த்தமாகும். நீ யொரு வார்த்தை முதலாய்ச் சரியாய்ச் சொல்லவில்லை. நீ யின்னொரு தடவை யொப்பிக்கும்போது சரியாய் உச்சரிக்கவேண்டும்" என்று வேறோர் பிள்ளையைப்பார்த்து, தோட்டிபிள்ளை சின்னம்மாள், நீ உத்தம மனஸ்தாப மந்திரம் ஒப்பி பார்ப்போம்" என,

அவள்...."ஆனந்தத் தாயே சருவியாக்கிற என் சர்வேச்சுராச்சாமி, தேவரே அளவில்லாதச் சகல நம்மே சிறந்தவரா இக்கிற படியினாலே அல்லாத்தையும் பாக்க உம்மே நா முழுமனச்சோடே செனேகிக்கிறேன். இப்படிப்பட்ட தேவர்களுக்கு' என்று,

அந்தத் தோட்டிப்பிள்ளை சொல்லும்போது ஆஹா! என்ன சொல்வேன்? எல்லோரும் உருண்டு புரண்டு, சிரிப்பு தாங்கமாட்டாமல் மந்திரசாலையைவிட்டு வெளியிலோடிப்போனோம்" என்று மனோரஞ்சிதம் சொல்லி முடித்தாள்.

அப்போது மதுரநாயகம்பிள்ளை :—"மகளே, நீ யிப்படித் தப்பாய் உச்சரிக்கமாட்டாயா?"

மனோரஞ்சிதம்:—"இல்லை ஆஜி! அவக்கும்போதே அம்மாள் எனக்குத் திருத்தமாய்ச் சொல்லிக் கொடுத்துவிட்டார்கள். எனக்கு உச்சரிப்புப் பிழை விழவே விழாது." என்று சொல்லிக் கொண்டிருக்கையில் வீட்டி னந்தப்புரத்திலிருந்து அபிராமியம்மாள் அவளை யழைக்க அவள் தகப்பனைவிட்டு வீட்டுக்குள்ளே போய்விட்டாள்.

நானப்போது:—"அத்தான்! தங்கள் மகள் இந்நேரம் வரையிலுஞ் சொன்னவைகளுக்கு அர்த்தம் விளங்கவில்லை. அதன் தாற்பரியமென்ன?" என,

மதுரநாயகம்பிள்ளை:—"தம்பி! சுந்தரம், மந்திர சுலோகங்கள் எல்லா ஜனங்களுக்கும் சொந்தம். சகலரும் அவைகளை அப்பியசித்து அநுஷ்டிக்கவேண்டும். அப்படியிருந்தும் அவைகளை வாய்க்கு வழங்காத அன்னிய வார்த்தைகளாலும் கடுநடையாலுந் தொடுக்கப்பட்டிருக்கின்றமையாற் பிள்ளைகளுஞ் சாமானிய ஜனங்களும் விசேஷமாய்ப் பஞ்சமரும் அவைகளை உச்சரிக்கக் கஷ்டப்படுகிறார்கள். கண்டு பிடியாமலும் போகிறார்கள். ஆதலாற் திருமந்திரங்களிற் சாதாரண வார்த்தைகளையும் சாமானிய நடையையும் உபயோகிக்கவேண்டும். இதனிமித்தமே மேற்படி திருமந்திரங்களை எளிய நடையில் விளக்கித் தெளிவாய்ச் சொல்லித்தந்தேன். இனி யவைகளுக்கு அர்த்தஞ் சொல்வேன்; உங்களுக் கிஷ்டமானால் வரலாம்" என,

நான்:—"அத்தான்! எப்போதெப்போதென்று காத்திருக்கிறேன். எனது தகப்பனாரும் எனக்கு பூரண உத்தரவு கொடுத்திருக்கிறார்" என,

மதுர:—"நல்லது சாயந்திரம் பேசிக்கொள்வோம். வீட்டுக்குப் போய்வாருங்கள். நான் சற்று இளைப்பாறப்போகிறேன்" என, நான் எழுந்துவந்துவிட்டேன்.

அப்போது எனது தந்தையார் வீட்டுக்குத்திரும்பிவந்தார். வந்தவுடன்:—"சுந்தரம், நேற்றையத்தினம் அருமைநாயகம் பிள்ளை பரீட்சைக்குப்போக நாள் இல்லையென்று சொன்னதனால், நீ இன்றைக்குப் பாடசாலைக்குப்போகவில்லையென்று நினைக்கிறேன்" என,

நான்:—"ஆமாம் அப்பா! இங்கு பற்பல விஷயங்களைக்கற்றுணர்வதில் உத்தியோகமாயிருக்கிறேன். மனசொப்பி காலத்தை வீணிற் கழிக்கவில்லை" என,

அவர் :—"அப்படியே செய், மகனே, புத்திமனுதிகளை எவ்விதமேனும் விருத்திசெய்வதே முக்கியம். புத்தியைக் கல்வியினாற் றீட்டி தீக்ஷண்ணியப்படுத்துவதோடுகூட மனசை தர்மங்களாற் சோதிக்கவேண்டும். அதற்கு மதுரநாயகம்பிள்ளை வீடே யுனக்குத் தர்ம பாடசாலையாகும், அவருடைய புண்ணிய பாடசாலையில் நீ வாசிப்பாயாகில் அறநெறியில் பூரணச் சந்திரனைப்போல என்னான்றும் பிரகாசிப்பாய்?" என

நான் வெகு சந்தோஷப்பட்டு :—"அப்பா, வருகிற வருஷப் பரீக்ஷைக்குப் பாடசாலைத் துவக்க இன்னும் மூன்றரை மாசங்கள் இருக்கின்றன. அதுவரையில் எங்கும் போக எனக்கிஷ்டமில்லை. நமது வீட்டிலும் மதுரநாயகம்பிள்ளை வீட்டிலும் நான் இளைப்பாறிக்கொண்டிருக்கிறேன்" என,

அவர் :—"என் முழு மனசோடு உத்தரவளிக்கிறேன். அப்படியே இரு மகனே" என்று கூறி எனது ஐயுறவையெல்லாந் தீர்த்துவிட்டார்.

"இது எனது நல்ல அதிர்ஷ்டம். எனக்கு வாவுநாள் கிடைத்தது. மதுரநாயகம் பிள்ளை வியாதிப்பட்டு கொஞ்சநாள் இளைப்பாறும்படி சம்பவித்தது. இக்காலத்திற் றமது குமாரத்திக்குச் சன்மார்க்கத்தைப் போதிக்கப்போகிறார். நான் அதில் பங்கடைவேன். சமையம் வாய்த்தது. எனக்கிது நல்லகாலம் பகவானுடைய கிருபா கடாக்ஷமே யிது" என்று எண்ணிக்கொண்டேன்.

மாலையில் நாலு மணிக்கு மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப் போய் மேற்குறித்த சங்கதியை அவருக்குத் தெரிவித்தேன். அவர் அதை யறிந்து மெத்த சந்தோஷப்பட்டார்.

அப்போது பள்ளிக்குப் போயிருந்த மனோரஞ்சிதம் மேன்மூச்சு கீழ்மூச்சுவாங்க குடல் தெறித்துப்போகும் வண்ணம் ஓடிவந்தாள்.

இதைக்கண்ட மதுரநாயகம்பிள்ளைக்கு ஒருவாறு கோபம்வர "ஏனம்மா இப்படி யோடிவருகிறாய்? பெண்பிள்ளைகளுக்கு இது அழகா? நீ யொருநாளும் இப்படிச் செய்ததில்லையே! நீ வயதில் வளரவளர உனக்குப் புத்தி கெட்டுப்போகிறதா? இனி நாளையும் பின்னையும் இப்படிச் செய்யாதே" என.

மனோ:—"ஆஞி, என்னை மன்னியுங்கள், ஒரு வெறியன் கெட்ட வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு என்னைப் பிடிக்க வந்தான், நான் பயந்து ஓடிவந்தேன். இது தப்பானால் என்னை மன்னியுங்கள்" என்று தனது தந்தையார்முன் முழந்தாளிலிருந்தாள்.

மதா:—"அது அப்படியாகில் உன்பேரில் தப்பு இல்லை; நீ யெழுந்திரு மகளே. உனது அமரிக்கையின்பேரில் நான் ஐயமுற்றது சரியல்ல" என,

அவள் எழுந்து :—"வருகிற புதன்கிழமை யெனக்குப் பரீக்ஷை துவக்கப்போகிறது."

:—"இவ்வளவு ஜல்நியிற் பரீக்ஷைநாளை வைத்துக்கொண்டார்கள்? நீ யென்னசெய்வாய் மகளே? உனக்கு அனேக விஷயங்கள் தெரியமாட்டா. இவ்வருஷம் நீ பரீக்ஷையிற் றேறுவது கஷ்டம். இன்னும் ஆறு மாதங்கள் படித்துத்தான் தீரவேண்டும்."

:—"இல்லை இல்லை! ஆஞி, அப்படியல்ல. எல்லா விஷயங்களும் எனக்கு நன்றாய்த் தெரியும். நான் ஒன்றிலும் பிசகிப்போகேன்."

:—"உனக்கு என்னென்ன விஷயங்கள் தெரியும்?"

:—"சரித்திரம், பூகோளம், கணக்கு, தையல், சுகாதார விளக்கம், பதார்த்தகுணசிந்தாமணியில் பாக விளக்கம் முதலானவைகளும் தாராளமாய்த் தெரியும்."

:—"மனோரஞ்சிதம், பாக விளக்கமென்றால் என்ன?"

:—"சமையல் காய்கறி முதலான பாதார்த்தங்களைப் பக்குவமாய்ப் பாகஞ் செய்வதை விளக்குவதுதான் பாக விளக்க மென்கிறது."

:—"அப்படியானால் பரீக்ஷையில் நீ தேறுவாயா?"

:—"ஓ சந்தேகமில்லை,

:—"இப்பரீக்ஷையில் அனுகூலமடைவாயாகில் வருகிற பள்ளிக்கூட ஆரம்பத்தில் இங்கிலீஷ்பாடசாலைக்குப்போய் அதில் நாலைந்து வருஷமளவும் வாசிப்பாய். நீ படிக்கப்படிக்க படிப்பு உனக்குச் சுகத்தைத்தரும், கற்கக்கற்கக் கசடறும், கல்வியை யுண்ண உண்ண புத்தி தீக்ஷண்ணியம் அடையும். உனக்கு இங்கிலீஷ் வாசிக்க இஷ்டந்தானா?"

;—ஆமாம்; ஆஜி! பிரியந்தான். இதுவரையில் உங்களைக் கேட்கப் பயந்துகொண்டிருந்தேன். இப்போது நீங்களே சொல்லு கிறபடியால் எனக்கு மெத்த சந்தோஷம். இங்கிலீஷ் அக்ஷரங்க ளெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியும். எடுத்த புஸ்தகம் தடை யின்றி வாசிப்பேன். கூடியவரையில் இங்கிலீஷில்கணக்கும் எண்ணு வேன். வருஷம், மாதம், வாரம், தினம், மணி, நிமிஷம் முதலியவை களை இங்கிலீஷில் கற்றுக்கொண்டிருக்கிறேன். இங்கிலீஷில் வந்த னம் சொல்லவும் எனக்குத் தெரியும்."

;—"மனோஞ்சிதம், இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது! யார் உனக்கு இங்கிலீஷ் சொல்லிக்கொடுத்தார்கள்? நீ யெனக்கு இது வரையிற் சொல்லவில்லையே."

;—"ஆஜி, வடக்குத்தெரு ஸ்தெல்லா அக்காள் எனக்குச் சொல்லிக்கொடுத்தார்கள். உங்களிடம் அதைச் சொன்னால் பெண் பிள்ளைக்கு இங்லீஷ் என்னத்துக்கென்று கோபித்துக்கொள்வீர்க ளென்று பயந்து சொல்லவில்லை."

;—"ஸ்தெல்லாளுக்கு இங்கிலீஷ் தெரியுமா?"

;—"தெரியும், நன்றா யெழுதுவார்கள்; வாசிப்பார்கள்; கண்டுபிடிப்பார்கள், ஆனால் வெட்கத்தினாற் பேசுகிறது மாத்திரம் இல்லை. அவர்களுடைய தாயார்;—"ஸ்தெல்லா இங்கிலீஷ் பேசு" என்று கண்டிப்பாய்ச் சொன்னாலும் பேசமாட்டார்கள்."

;—"நீ பேசுவாயா? நீ வெட்கப்படமாட்டாயா?"

;—ஓ! உடனே பேசுவேன் ஆஜி! என்னத்திற்கு வெட்கப்படு கிறது? நான் பேசும்பொழுது தப்பிப்போனால் மற்றவர்கள் சிரிப் பார்கள். அது எனக்கு வருத்தமாய்த்தானிருக்கும். அதைச் சுவா மிக்கு ஒப்புக்கொடுத்தால் எனக்குப் புண்ணியமா யிராதா?" என,

மதுரநாயகம்பிள்ளை தனது மகளை வாரியெடுத்து தழுவி முத் தமிட்டு;—"ஆ! எனது அருமைக் குழந்தாய்! இவ்வளவு சிறு பிராயத்தில் உனக்கிவ்வளவு புத்தியும் ஆலோசனையும் இருக்கின்ற னவா? உனக்கும் எனக்கும் தீர்க்காயுசை சுவாமி பிரசாதிப்பா ராக. உனது வயது காலத்தில் வெள்ளிகளுக்குள் வேந்தனைப் போற் பிரகாசிப்பாய். நீ போய் ஏதாகிலுஞ் சாப்பிட்டுவா. பிற்பாடு பேசிக்கொள்வோம்" என்று அவளை அனுப்பிவிட்டார்.

நான் அப்போது:—"அத்தான்! தங்கள் மகளுக்கென்ன பிராயம்? என்று கேட்டேன்.

அதற்கவர்:—"வருகிற டிசம்பர் மாத முடிந்தால் ஒன்பது பிராயம் பூர்த்தியாகும்" என்றார்.

:—"எத்தனையாவது வகுப்பில் வாசிக்கிறாள்"

:—"நான்காவது வகுப்பில் வாசிக்கிறாள். சற்றுமுன்னமே நான் சொன்னதுபோல வருகிற புதன்கிழமை பரீக்ஷைக்குப் போகிறாள்."

:—"அத்தான்! இவ்வளவு சிறு பிராயத்திற் பெண்பிள்ளைகளிடத்தில் இவ்வளவு கல்வியை நான் பார்த்ததில்லை. ஒன்பது பிராயத்தில் நான்காவது வகுப்பு முடிப்பதுமிக வரிது. எனது தங்கை விஜயவல்லிக்குப் பதின்மூன்று பிராயம் நடக்கிறது. இன்னும் மூன்றாவது வகுப்பில் வாசிக்கிறாள். இவ்வருஷம் பரீக்ஷையிற் றேறுவாளோ என்னவோ தெரியாது. இராக்காலங்களில் அவளுக்கு வெகுநேரஞ் சொல்லிக்கொடுக்கிறேன். ஆனால் தங்கள் குமாரத்திக்குப் படிப்பேறுவதுபோல அவ்வளவு சுலபமாய் அவளுக்கேறவில்லை. மனோரஞ்சிதத்துக்குத் தெரிகிற விஷயங்களில் பத்தில் ஒரு பங்கு முதலாய் அவளுக்குத் தெரியாது. இவளைப்போல கண்டுபிடிக்குஞ் சக்தியும் அவளுக்கில்லை. தங்கள் மகளுக்கு இவ்வளவு சிறு வயதில் இத்தகைய கியானங்களும், உணர்ச்சிகளும், புத்திதீக்ஷண்ணியமும் இருக்குமாகில் பால்யதசையிலும், முதிர்ந்த வயதிலும் எவ்வளவு சிறந்தவளாயிருக்கவேண்டும்!"

:—"இது யாருடைய செயல்? இவைகள் யார் அளித்த கொடைகள்? ஜீவகாருண்ணியரான கடவுளின் தானங்களல்லவா? இவைகள் ஒருவனுடைய கோரிக்கையினாலும் அல்ல, பிரயத்தனத்தினாலுமல்ல. தயாள சம்பன்னரான கடவுளின் அனுக்கிரகத்தினாலேயே உண்டாகிறது: "*Neque nolentis, neque currentis, sed miserentis est Dei*" என்று வேதவாக்கியம் இருக்கிறதே. ஆதலால் எவ்விஷயத்திற்கும் கடவுளின் அநுக்கிரகமே முக்கியம்.

:—"ஆம், அத்தான்! அதில் எனக்குக் கிஞ்சித்துஞ் சந்தேகமில்லை. இப்போது தாங்கள் சொன்ன வாக்கியம் என்ன பாஷை?"

:—"அது இலத்தீன் பாஷை. இந்தப் பாஷையிலே எங்களுடைய வேத் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்தப்

பாஷையிற்றான் கடவுளுக்கு பூஜை பலிகளும், தீபார்ச்சனைகளும் நைவேத்திய நமஸ்காரங்களும், ஸ்துதி யாராதனைகளும் நடந்தேறும் விதம் கூறப்பட்டிருக்கின்றன" அப்படியே நடந்தும் வருகின்றன.

:—"இந்நாட்டு வேத சாங்கியங்களில் உபயோகிக்கப்படும் சமஸ்கிருத பாஷைக்கு இலத்தின் பாஷை சமமாகுமா?"

:—"ஆம்; தம்பி! மிகச் சிறந்த பாஷை இது. சகல பாஷைகளிலும் மிக மதுரமான பாஷை. மிருதுவான பாஷை. அதை உச்சரிப்பது மகா எளிது. விர்ஜில், ஒவீது, ஓராஸ், யூவனல் முதலிய கவீச்சுரரும், சேனேகா, எப்பிக்தேத்து முதலிய ஞானிகளும், சிசரோ, குவிந்திலியன் முதலிய பிரசங்கிகளும் சல்லுஸ்து, தாசித்து, தித்துலிவு, பிளீன் முதலிய சரிதையார்த்திகளும் மேற்படி பாஷையை விளக்கித் துலக்கிப் பிரகாசிக்கப்பண்ணினார்கள். அகுஸ்தீனர், இயெரோனிமர், அம்புரோசியர், தோமாஸ் முதலிய வேத விற்பன்னர்கள் இலத்தீன் பாஷையில் எழுதிவைத்த தர்க்கம் நியாயம் வேதவியாத்தனைகள், வேத விளக்கம் முதலிய பிரபந்தங்களுக்கு கணக்கில்லை. அவைகளைப் படித்துப் பாராயணம்பண்ண ஒரு மனிதன் தன் ஜீவியகாலமெல்லாம் செலவிட்டபோதிலும் நூற்றில் ஒரு பாகம் வாசித்து முடிக்கான்" என,

நான் பாடசாலையிற் கற்றுக்கொள்ளும் இஷ்ட பாஷையாகிய சமஸ்கிருதத்தோடு இலத்தீன் பாஷையையும் அப்பியசித்துக் கொள்வேன் என்று, என்னில் தீர்மானித்துக்கொண்டேன்.

அதற்குள்ளாக மனோரஞ்சிதம் சாப்பிட்டுத் தன் தகப்பனரிடம் வெகு சீக்கிரமாய் ஓடிவந்தாள்.

அப்போதவர்:—"மகளே! எனக்குக் களையாயிருக்கிறது. அபிராமியைக் கூப்பிடு" என,

மனோரஞ்சிதம்:—"அம்மா, ஆஜி யுங்களை யழைக்கிறார்கள். கடுகி யோடுவாருங்கள்" என,

அபிராமியம்மாள்:—"என் அத்தான்? என்னத்துக்காக என்னை அழைத்தீர்கள்? முகத்தைப் பார்த்தால் நீங்கள் பசியினால் வருந்துவதாய்த் தோன்றுகிறதே! என்ன வேண்டும்? பாற்கஞ்சி வேண்டுமா? பாயசம் வேண்டுமா? இன்னும் எது வேண்டும்? சொல்லுங்கள். தக்ஷணமே கொண்டுவருகிறேன்" என்று வெகு அக்கறையோடும் கனிகரத்தோடும் கேட்க,

அவர் ;—" இப்போது கொஞ்சம் பாயசம்கொண்டுவா என,

அவள் உடனே கொண்டுவந்து கொடுத்துவிட்டு :—" அத்தான்! நான் பன்னிரண்டு மணிக்குச் சொன்னேனே கேட்டீர்களா? நீங்கள் மத்தியானஞ் சரியாய்ச் சாப்பிட்டிருந்தால் நாலு மணிக்குப் பசிக்குமா? போதுமானமட்டுஞ் சாப்பிடவில்லை யென்றதற்கு 'நீ அஜீரணத்திற்கு வழிபண்ணுகிறாய். உன் பக்ஷத்துக்குக் கண்ணுண்டா? அபிராமி! உன் அன்புக்கு ஆலோசனை யென்கிற கண்வேண்டும். கண்ணில்லாப் பக்ஷம் கல்வைக்கு உதவாது' என்று கோபித்துக்கொண்டீர்களே. நாலுமணி நேரத்தில் இவ்வளவு பசியெடுக்கக் காரணமென்ன? நீங்கள் நன்று யோசித்துப் பாருங்கள். எல்லா விஷயத்திலும் உங்கள் வார்த்தைக்கு இரண்டில்லை. எனது சிரவணத்தின்மட்டில் உங்களுக் கியாதோர் ஐயம்வேண்டாம். எனது கீழ்ப்படிதலையும் அமைவையும் எவ்வகையிலுஞ் சோதித்துக் கொள்ளுங்கள். நீங்கள் எதைச் சொன்னபோதிலும் செய்யத் தயாராய் இருக்கிறேன். உங்களைப்பற்றிச் சாகவேண்டுமானாலும் எனது உயிரைப் பரித்தியாகம்பண்ணக் காத்திருக்கிறேன். யாதொன்றுக்கும் பின்வாங்கேன். என்னோடு நீங்கள் சஞ்சரித்த இந்தக் கொஞ்சகாலத்தில் அதைப் பரீக்ஷித்திருப்பீர்கள். ஒரேயொரு விஷயத்தில் உங்களுக்குக் கீழ்ப்படிய எனக்கு மனமில்லை. பொன்னை மங்கடிக்கும் உங்கள் மேனி மங்கிக் கருகிப்போயிருக்கிறதை நான் பார்க்கப்பார்க்க எனது உடம்பு வெலவெலத்துப் போகிறதே. எனது இருதயம் பிய்ந்து நைய்ந்து பொடிப் பொடியாய்ப் போகிறதே! நான் சாப்பிடும் உணவு எனது உடலில் ஒட்டவில்லையே! அல்லும் பகலும் அறுபது நாழிகையும், எப்போது உங்கள் பழையமேனியைக் கண்டடைவேனோ என்கிற கவலை என்னைவிட்டகலவில்லை. எப்போது என் மனம் குளிருமோ! அத்தானை நான் சரியாய் விசாரிக்கிறேனோ? விசாரணையில் குறை செய்கிறதில்லையா? எனது அசட்டைத்தனம் பாவமல்லவா? என்று பலவாறாய்க் கிலேசப்பட்டுக்கொண்டிருக்கிறேன். ஆதலால் நீங்கள் இவ்விஷயத்தில் என் வார்த்தையைத் தட்டவேண்டாம். உங்கள் சரீர விசாரணைமட்டில் நீங்களியாதோர் தடை செய்யவில்லை யென்று எனக்கு உறுதி வாக்குக் கொடுக்கவேண்டும்" என,

மதுரநாயகம்பிள்ளை ;—" அபிராமி நான் உன்னைக் கலியாணம் பண்ணின நாள்முதற்கொண்டு என்னுடைய உடலை யுனக்குத்

தத்தம் பண்ணிவிட்டேன். நீ யதை யென்ன செய்தாலுஞ் செய்ய லாமே. நீ யின்னும் நமது கிறிஸ்தவ திருமணப்பெருமையை யறிகிற தில்லையா? புருஷனும் பூவையும் ஒரே மாம்சமல்லவா? நீயும் நானும் ஒரே யுடல்தானே. நீ யதிற் சந்தேகிக்கிறாயா? நீ சாப்பிட்டாலென்ன? நான் சாப்பிடிலென்ன? இரண்டும் ஒன்று தானே. நீ நன்றாய்ச் சாப்பிட்டால் நான் சாப்பிட்டாப்போலா யிற்றே" என,

அபிராமியம்மாள் :—"அத்தான்! நீங்கள் எப்பொழுதும் இப்படித்தான். இதையும் அதையுஞ்சொல்லி யேய்த்துப்போடு கிறீர்கள்! எனது பக்ஷத்தினருமையை யலக்ஷியம்பண்ணுகிறீர்கள். நீங்கள் தடியால் எனது தோளில் ஓரடி யடித்தாலுஞ் சந்தோஷ மாய்ப் பட்டுக்கொள்வேன். ஆனால், இவ்வாறு எனது கனிகரத்தை யலக்ஷியஞ்செய்வது எனது இருதயத்தில் வாளால் ஊடுருவுகிறது போலிருக்கிறது" என்று பேசிக்கொண்டிருக்கும்போதே கண்ணீர் ததும்பி மலமலவென்று கன்னங்களில் வழிந்தோட, அவள் கண் களைத்தேய்த்துக்கொண்டு நின்றாள்.

அப்போது மதுரநாயகம்பிள்ளை :—"அபிராமி! இங்கே வா; நீ யழாதே, இனி உன்னுடைய வார்த்தைக்கு இரண்டில்லை. இவ் விஷயத்தில் மாத்திரமல்ல. இன்னும் எவ்விஷயங்களிலும் உன் பேச்சை ஒருபோதுந் தட்டேன். என் அருகில் வா கண்மணியே! இரமணியே! சகசாணியே! இங்கு வா" என,

அவள் நாணத்தினாற் கிட்டிவர அஞ்சி நிற்க, அவர் எழுந்து அவள் கையைப்பற்றி யிழுத்து தன் குட்டையால் அவள் கண்க ளைத் துடைத்து:—"ஆ! என் கண்ணாட்டி! ஈசவா மருந்தே! உனது கண்ணீர்த்துளிகள் எனது வன்னெஞ்சைக் கரைத்துவிட் டன. உனது சிநேகம் நிறைந்த இருதயத்தை நோகப்பண்ணுவ தைக்காட்டிலும் நான் சற்று இம்சை அடைவது வாசி. உனது லக்ஷ்மிகர வதனத்தைக் கோணச்செய்வதைப் பார்க்க நான் கிஞ் சித்து வருத்தப்படுவது உசிதம். உனது நட்புக்கு வரம்பில்லை. இந்தப் பத்து வருஷ காலமாய் உனது பக்ஷத்தில் எட்பரிமாணங் குறை கண்டேனில்லை. நீ சந்தேகமற குணத்திலும் சிநேகத் திலும் இரேபக்காளை வென்றாய்! உரூபலா வண்ணியத்தில் இராக் கேலை வென்றாய். ஆலோசனையில் தேபோராளை வென்றாய். திருமணப்பிரமாணிக்கத்தில் சூசன்னாளை வென்றாய். பந்து பக்தி யில் உரூத்தாளையும் எஸ்தாரையும் வென்றாய்." என்று பேசிக் கொண்டிருக்கும்போதே வீதியிற் பெரிதான ஜனசந்தடியும்

இரைச்சலுங் கேட்டனே. அப்போது நான் இதென்னவென்று வெளியிலோடிப் பார்க்கச் சில வண்டிகள் வந்து நின்றன. அவைகளினின்று அநேக ஸ்திரீ புருஷரும் பிள்ளைகளும் பரபரவென்று இறங்கி வீட்டுக்குள்ளே துரிதமாயோடிவந்தார்கள். உள்ளே பிரவேசித்த வளவில் மங்கிக் கருகியிருக்கும் மதுரநாயகம்பிள்ளையைக்கண்டு சொல்லிலடங்காத் துக்கம் மூண்டவர்களாய் ஓவென்றழத் துவக்கினார்கள். அப்போது வயோகதியான அவருடைய தாயார் அவரைக் கட்டிப் பிடித்துக்கொண்டு:—"ஐயோ மகனே! ஏன் இப்படியிருக்கிறாய்? உனக்கென்ன சப்பவித்தது? மேனிமாறி வேற்றுருவாயிருக்கிறாயே? இக்கொடிய வைசூரி உன்னுயிரை பறிக்காமல் விட்டுவிட்டதே போதும். உன் பொன்னுனை முகத்தைக் காணும்பாக்கியம் எங்களுக்குச் சித்தித்ததே! அதுவே யெங்களுக்குப் போதும்! போதும்!" என்று பலவாருப்த் தனது குமாரனுடைய முகத்தை முத்தமிட்டுக் கண்ணீரால் நனைத்தாள்.

அத்தரவாயிற் சமயோச்சிதமாய் அவ்விடம் வந்திருந்து எனது தந்தையர் அங்கு கண்கலங்கிக்கொண்டிருக்கும் பெண்டிர் புருஷரையும், பிள்ளைகளையும் பார்த்து:—"நீங்கள் அழவேண்டாம் ஈசுவரனுடைய கிருபாகடாக்ஷத்தால் மதுரநாயகம்பிள்ளை சாவுக்குத் தப்பித்துக்கொண்டார். கடவுள் அவருக்குத் தீர்க்காயுசைக் கொடுத்திருக்கிறார். தற்காலம் அவருடைய தேகத்திற்பட்ட இந்த அற்பவின்னங்கள் நீங்கிப் பழைய சொர்னவடிவுக்கு வந்துவிடும். அதுக்காகவே நீங்கள் கடவுளுக்கு ஸ்துதி செலுத்துங்கள்" என அவர்களெல்லோரும் தேறுதலடைந்து முழந்தாட்படியிட்டு நான் அறியாத பாஷையுல் ஏதோ கீர்த்தனையொன்று பாடிக் கடவுளை ஸ்துதித்தார்கள். கீர்த்தனை முடிந்தபின்பு எழுந்து சந்தோஷமாய் உட்கார்ந்து மதுரநாயகம்பிள்ளைக்கு வியாதிவந்த விதம், அது வலுத்தவகை, சொஸ்தமானது, தங்கள் குடும்ப விஷயங்கள் முதலியவைகளைப்பற்றி அன்னியோன்னியமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

நான் அதை யறிந்து இனி இருப்பது சரியல்லவென்று நினைத்து இவர்களிடம் செலவு பெற்றுக்கொண்டு வீட்டுக்குப்போய் விட்டேன்.

மதுரநாயகம்பிள்ளையின் பந்துக்கள் வந்திருந்தபோதிலும் நான் என் வழக்கத்தைவிட்டவனல்ல. எப்போதும்போல காலை மாலை இரண்டு தேசகாலம் அவர் வீட்டுக்குப்போவதை நிறுத்த

வில்லை. அவருடைய பந்துக்களின் வரவினிமித்தம் அவரோடு பேச அவகாசமில்லாவிடினும் அவருடைய தரிசனத்தை யிழந்தவனல்ல. நான் நாடோறும் அங்கே போகும்போதெல்லாம் அவர்களனைவரையுங் கண்டு வியப்படைவேன். அவர்களெல்லோருங் கும்பலாய்க் கூடி சம்பாஷித்துக்கொண்டிருக்கும்போது இன்னாரென்றறிவது மகா கஷ்டம. அத்தனை நாள் பழகி நான் பார்த்துவந்த அபிராமியம்மாளையும் மனோரஞ்சிதத்தையும் அறியக்கூடாமற்போயிற்று. ஏனெனில் அவர்களெல்லோருந் தம்பி தமையருந் தங்கை தமக்கையருமாயிருந்தமையால் அவர்களுக்குள்ளே பலத்த சாமியம் இருந்தது. அவர்களில் சிலர் மதுரநாயகம்பிள்ளைக்குச் சமமாயிருந்தார்கள், வேறு சிலர் நடையிலும் உயரத்திலும், வடிவத்திலும் முக வசிகரத்திலும், கண்டத் தொனியிலும் அபிராமியம்மாளுக்கும் மனோரஞ்சிதத்துக்கும் முற்றுஞ் சமமாயிருந்தார்கள், உள்ளபடியே மதுரநாயகம்பிள்ளையின் அண்ணன்மார் இரண்டு பெயரும் தம்பி ஒருவரும் தங்கையர் மூன்றுபேரும் வந்திருந்தார்கள். அபிராமியம்மாளுடைய தமயன்மார் மூன்றுபேரும், தமக்கையர் இரண்டுபேரும், தங்கை யொருத்தியும் இவர்களுடைய பிள்ளைகளும் இன்னும் சில இதர புருஷ பூவையரும் வந்திருந்தார்கள். அவர்களுடைய நடையுடை, நயனஞ் சம்பாஷணை, ஆச்சார முதலியனவைகளைப் பார்க்கில் அவர்களைப் பிரபுக்களுடைய பிள்ளைகளென்றே சொல்லவேண்டும். சரீர அலங்காரம் முக விலக்ஷணம் உடற்கூறு முதலியவைகளை நோக்கில் அவர்கள் ஒரே குடும்பத்தில் உதித்து தங்கள் தாய் தந்தையரை யுரித்துக்கொண்டு பிறந்தவர்களாய்த் தோன்றினார்கள், தயை, தாக்ஷண்ணியம், குணம், மரியாதை, செய்கை, வினயப்பிரவர்த்தனங்களைக் கவனிக்கில் ஒரேபாடசாலையில் வாசித்து; ஒரே குருவினிடத்தில் உபதேசங் கேட்டுக்கொண்டவர்களாய்க் காணப்பட்டார்கள். அவர்களுடைய சம்பாஷணை சல்லாபங்களைக் கேட்கில் தீர்க்க வாசித்த சான்றோர் என்பதில் கிஞ்சித்தும் சந்தேகங் கிடையாது, இத்தகைய பிரபுக்களுடைய பிள்ளைகளிடம் பேசிச் சம்பாஷிக்க நான் அபிலாஷை கொண்டபோதிலும் அதற்குச் சாவகாசமிருந்ததில்லை.

## 6-ம் அத்தியாயம்.

எங்கள் குலவிருத்தாந்தம். என் மூதாதைகளின் பெருமை. எனது தந்தை, என் பாடசாலை ஜீவியம், எனது தங்கை விஜயவல்லிக்கும் மனோரஞ்சிதத்திற்கும் நடந்த நல்லொழுக்க சம்பாஷணை, மனோரஞ்சிதம்-ஒரு அபூர்வ புத்திசாலி, மதுரநாயகம் பிள்ளை-ஒரு சிறந்த மேதாவி.

ஆதலால் பரோபகார நிமித்தம் எனது பூர்வோத்தரத்தையும், பாடசாலை ஜீவியத்தையும், எனது குல விருத்தாந்தத்தையும் சுருக்கமாய்ச் சொல்லிவிடுகிறேன். எனது நேய பாராயணிகளே! உங்களுக்குத் தெரிந்ததுபோல எனது குலம் வேளாள குலம். எனது மூதாக்கள் பாண்டிய நாட்டையாண்டு பரிபாலித்துவந்த அரசர்களின் வம்சத்திற் பிறந்தவர்கள். அவர்கள் மகம்மதியரால் அபஜெயமடைந்து திரிசிரபுரம் நவாபுகளுக்குக் கப்பங்கட்டி வந்தார்கள். வெகுகாலம் சென்று இஸ்லாமித்தார் அநீதமாய் எனது பிதாக்களுடைய இராஜரீகத்தை முழுதும் அபகரித்துக்கொண்டார்கள். நெடுநாள் அவர்கள் தங்களுடைய முன்னோர்களால் விடப்பட்ட தனசம்பத்துக்களை வைத்துக்கொண்டு கவரதையாய்க்காலக்ஷேபம் பண்ணிவந்தார்கள். அவைகளை யவர்கள் தக்கவிதமாய் விருத்தி செய்யாததனால் நாளடைவில் அவைகள் குறைந்துபோயின.

அதற்குள்ளாக மகம்மதியருடைய அரசாட்சி முடிவுபெற்றது. ஆங்கிலேயர் தங்களுடைய விவேகத்தினாலும் முயற்சியினாலும், இடைவிடாத பிரயாசத்தினாலும் இந்துஸ்தானத்தில் ஓர் பெரும்பாகத்தை தங்கள் ஆதீனத்துக்கு ஐக்கியப்படுத்திக்கொண்டார்கள். எனது மூப்பாட்டனார் அங்கிலேயரைப் பேடியடுத்தார். அவர் இராஜ வம்சத்திற் பிறந்தவராதலால் அவர்கள் அவரைக்கொண்டு இராஜரீக முறையில் அநேகங் காரியங்களைச் சீரிட்டுக்கொண்டு அவர் செய்த வுபகாரத்திற்குக் கைம்மாறாக மதுரை நாட்டுத்திவான் உத்தியோகத்தை அவருக்குக் கொடுத்தார்கள். சம்பள விஷயத்தில் இரண்டாயிரத்து ஐந்நூற்றுச் சில்லரை ரூபாய் வாங்கிக்கொண்டிருந்தாராம். இது எனது பெரியோர்களுடைய தனம் க்ஷீணித்துப்போயிருந்த காலத்தில் அவர்களுக்கு மிகுந்த சகாயமாயிருந்தது. ஆனால் எனது பாட்டனார் சுந்தரேசம்பிள்ளையின் அபலத்தனத்தினால் அவரது தந்தையரின் திவான் உத்தியோகம் அவருக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் தமது பெரியோர்கள் தேடி வைத்த திரவியங்களைச்செலவிட்டு எனது தகப்பனாரைப் பள்ளிக்கு

வைத்து வித்தியாப்பியாசஞ் செய்துவைத்தார். அவர் ஆங்கிலேயர் ஏற்படுத்திய கலாசாலைகளில் வாசித்துக் கல்வியிற் றேறி, 1832-ம் ஆண்டிற் கிரமபுரி நீதியாசனசாலையில் இருபத்தைந்து ரூபாய் சம்பளத்துக்குக் குமஸ்தாவா யமர்ந்தார். 1838-ம் ஆண்டில் உதவி நீதியஸ்தரில் ஒருவரானார். 1840-ம் ஆண்டில்சுதேசிகளில் இரண்டாம் வகுப்பு நீதியஸ்தரில் ஒருவராய் உயர்த்தப்பட்டு நானூறு ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தார். எனது தந்தையர் வீட்டில் செல்வத்திற்குக் குறைவில்லை. அவர் எவராலும் சங்கை பெற்று நீதிவழுவா நடுவரென்று சிறப்புப் பெயரும் அடைந்தார். இவ்வாறு சமஸ்த காரியங்களும் அவருக்குக் கைகூடி வருங்கால் 1842-ம் ஆண்டு ஜனவரி மாதம் 22உ மாலை 3-மணிக்கு எனது தாயின் கெற்பகாத்தைவிட்டு பூமியில் விழுந்து சூரியவொளியைச் சுகிக்கலானேன். அப்போது மந்தாரம் போட்டுக்கொண்டிருக்க, எங்கள் தோட்டத்திலிருக்கும் திரளான மரங்கள் கொள்ளாமற் கணக்கற்ற பக்ஷிகள் வந்து வெகு நேரம் மிக்க வக்களிப்பாய்ப் பாடிக்கொண்டிருந்து திரும்பிப் போயினவாம். இதைக்கண்ட ஜனங்களெல்லோரும் ;—" இப்பாலகன் வெகு யோகசாலி, தன் தாய் தந்தையருக்கு நல்ல அதிஷ்டத்தைக் கொண்டுவந்துவிட்டான். இனி யவர்களுக்குக் குறையில்லை. இவன் ஒருநாள் பெரும் பிரக்கியாதியையும், பெருமையையும் அடைந்து சகலராலும் புகழப்படுவான். இவனைப்பெற்ற தாய் தந்தையர் பெரும் பாக்கியசாலிகள்." என்று சொல்லிக்கொண்டுபோனார்களாம். இதை யெனது தாயார் எனக்குப் பலதடவை சொல்லியிருக்கிறார்கள்.

1847-ம் ஆண்டில் எனது பெற்றோர் கனத்த செலவுசெய்து என்னைப் பள்ளியில் வைத்தார்கள். 1852-ம் ஆண்டில் தமிழிலும் தெலுங்கிலும் நான்காவது பரீக்ஷை கொடுத்துத் தேறினேன். 1852-ம் ஆண்டில் இங்கிலீஷ் வாசிக்கத் துவக்கி 1856-ம் ஆண்டின் ஆருவது பரீட்சையில் முழுதும் அநுகூலமடைந்தேன். 1857-ம் ஆண்டின் மத்தியில், எவ். ஏ. பரீக்ஷைக்கு தயார் செய்துகொண்டிருக்கும்போது திடீரென்று எனது தகப்பனாரைக் கமலாயத்துக்கு மாற்றிவிட்டார்கள். நானும் எனது மற்றுள்ள பந்துக்களும் எனது தந்தையர் கமலாயத்துக்குவந்த ஆருவது மாதம் அங்கு வந்து சேர்ந்தோம். சிறிது தினங்களுக்குப்பின் உங்களுக்கு நன்றாய்த் தெரிந்ததுபோல மதுரநாயகம்பிள்ளையின் சவகாசத்தையும் சந்

சாரத்தையும் அடையப்பெற்றேன். அவர் எனக்குச் சொன்ன ஆலோசனைகளைக் கைக்கொண்டு இடைவிடா முயற்சியினால் ஏராளமான பலன்களைக் கண்டடைந்து வருகிறேன். பிற்பாடு நடக்கும் எனது உலகசஞ்சாரப் பிரவர்த்தனங்களை யெல்லாங் காலக்கிரமத்தில் அறிந்துகொள்வீர்கள்.

நான் மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப் போகவர இருப்பதை அவருடைய தாயார் பார்த்திருந்து என்னை யொருநாள் கூப்பிட்டனுப்பினார்கள். மனோரஞ்சிதம் எங்கள் வீட்டுக்கு வந்து எனது தாயாரை நோக்கி:—" அத்தையம்மா! எங்கள் ஆஜிபம்மாள் அத்தானை யழைத்துவரச் சொன்னார்கள் " என,

நான்:—" ரஞ்சிதம்! என்னிடத்தில் நேராய்ச் சொல்லக் கூடாதா? நான் வரமாட்டேனா?" எனச் சொல்லி யவள் பின்னால் அவள் வீட்டுக்குப் போனேன்.

போனவிடத்தில் அப்பெரியம்மாள் என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டு:—" நீ சிவகாமியின் மகனென்று எனக்குத் தெரியாது. நீ யாரோவென்று நினைத்தேன். கோபித்துக்கொள்ளாதே மகனே, நான் உன்னோடு பேசாமல் இருந்தது உனக்கு வருத்தமா? என,

நான் :—" இல்லை இல்லை! பாட்டியம்மா! உங்கள்மட்டில் எனக்கென்ன கோபம்? என்ன வருத்தம்? அப்படி நினையாதேயுங்கள் " என அவர்கள் என்னைக் கட்டி முத்தமிட்டு நல்லவார்த்தை சொல்லி அனுப்பிவிட்டார்கள்.

பிற்பாடு நான் மதுரநாயகம்பிள்ளையைக் கண்டு :—" அத்தான் இரண்டு மூன்று நாளாய் நான் தங்களோடு சம்பாஷிக்க ஆசித்தும் அவகாசமில்லாமற் போயிற்று. இன்னும் சிறிது நாள் இப்படித்தான் இருக்குமென்று நினைக்கிறேன் " என,

மதுரநாயகம்பிள்ளை :— " இன்னும் இரண்டு வாரங்கள் போகட்டும். எனது பந்துக்கள் இருக்கிறவரையில் நாம் கொஞ்சம் இளைப்பாறுவோம். அதற்குள்ளாக எனது மகளுக்குப் பரீட்சை முடிந்துபோகும். அதன்பின் காரியங்களை ஆற அமர ஆராய்வோம் " என்று சொல்லி யென்னை யனுப்பிவிட்டார்.

சுமார் காலை யொன்பது மணி யிருக்கலாம். நான் எங்கள் வீட்டு நடையில் உட்கார்ந்து பூர்வீக சரித்திரங்களை வாசித்துக் கொண்டிருக்கும்போது மனோரஞ்சிதம் தனது பாடப்புஸ்தகங்களை

யெடுத்துக்கொண்டு எங்கள் வாசற்படியில் நின்றவளாய்:—"விஜய வல்லி! விஜயவல்லி! நேரமாயிற்றே! நீ பாடசாலைக்கு வரவில்லையா? வருகிற புதன்கிழமை பரீட்சை துவக்கப்போகிறதே" என,

நான் :—"மனோரஞ்சிதம் உள்ளே வா! விஜயவல்லி இப்போது ஸ்நானம் பண்ணிக்கொண்டிருக்கிறாள். இன்னும் சற்று நேரம் செல்லும். அதற்குள்ளாக இங்கேவா" என, அவள் நாணத்தினால் உள்ளேவர மனமில்லாமல் நின்றாள்.

நான் எழுந்துபோய் அவள் கையைப்பிடித்து உள்ளே அழைத்துவந்தேன். அப்போது எனது தாயார் என்னைப்பார்த்து: "சுந்தரம் நீ பெண்பிள்ளையை மெய் தீண்டலாமா? அவளது தாய்தந்தையர் இதைப் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? இதுவுமன்றி அவர்கள் புறமதஸ்தரா யிருக்கிறார்களே. அப்படியிருக்க நீ முன்பின் ஆலோசிக்காமல் காரியங்களைச் செய்யலாமா" என,

நான் விடையாக :—'அம்மா! நானும் சிறுவன்; மனோரஞ்சிதமும் இளங்கன்னிகை. ஆகவே இதிலென்ன தோஷம்? தீங்கொன்றுங் காணேன். அவளுடைய தாய் தந்தையரை நான் அறிவேன். அவர்கள் பதருப்பேர்வழிகள்." என்று பேசிக்கொண்டிருக்கும்போது விஜயவல்லி புஸ்தகங்களை யெடுத்துக்கொண்டு வெளிப்பட்டாள்.

இருவரும் பாடசாலையை நோக்கிப்போக நானும் அவர்களுடைய பள்ளிக்கூடத்தைப் பார்க்க இச்சித்து அவர்களை முன்னே விட்டுப் பின்னே போனேன்.

வழிகடக்கும்போது மனோரஞ்சிதம் :—"விஜயவல்லி! நாம் இன்று நேரம்சென்று போகிறோமே. உபாத்தியாயர் நமது தாமதத்துக்கு ஞாயங்கேட்டால் என்ன சொல்லுகிறது? தக்க மறுமொழியில்லாவிட்டால் தண்டனை கிடைக்குமே."

விஜய :—"என்னத்திற்குத் தண்டனை? நமக்கு ஞாயமில்லையா? நாம் இன்று ஸ்நானம்பண்ணிக்கொண்டோம். அப்படியிருகக அவர் நம்மைத் தண்டிக்க வழியில்லை."

மனோ :— "ஆம், உனக்கு ஞாயமுண்டு. எனக்கென்ன ஞாயம் இருக்கிறது? நான் உன்னைப்போற் பேசினால் அது பொய்யல்லவா? பொய் பெரும் பாவமாயிற்றே. பொய்ப் பேசுவதைக காட்டிலும் உபாத்தியாயரிடம் சில அடிகள் வாங்கிகொள்வதே நல்லது."

விஜய :—" அடிபட உனக்கு இஷ்டமானால் அது உன் பாடு. நான் எந்தப் பொய்யும் சொல்லித் தபாலித்துக்கொள்வேன்."

மனோ :—" இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்னே ஒரு தடவை நான் பெட்டியைத் திறந்து இரண்டணா காசை எடுத்து எங்கள் வேலைக்காரிக்குக்கொடுத்துவிட்டேன். சற்றுப் பொறுத்து என் தாயார் வந்து :—' அம்மா! பெட்டி திறந்திருக்கிறதே. நீ யதைத் திறந்தாயா? மேற்றட்டிலிருந்த காசை எடுத்தாயா'? என, அப்போது எனக் காறு பிராயம். அடிவருமென்கிற பயத்தால் நான்:—'காணேன் அம்மா!' என, எனது தாயார் சுந்தரகாந்தியைக் கூப்பிட்டு :—' பெட்டியைத் திறந்தது யார்?' என, அவள் வாய் குளறிக்கொண்டு :—' நானல்ல அம்மா. மனோரஞ்சிதந் தான் அதைத் திறந்து இரண்டணா காசிருக்கும்; எடுத்து எனக்குக் கொடுத்துவிட்டாள்' என்று உள்ளதைச் சொல்லிவிட்டாள். எனது தாயார் :—' மனோரஞ்சிதம்! இவ்வளவு சிறு பிராயத்திற் றிருடவும் இருடினதும் போதாதென்று பொய்சொல்லவும் ஏற்பட்டாயா? என்று என்னை வெகு கோபத்தோடு விறைக்க விறைக்கப் பார்த்தார்கள். நான் பயந்து சிலிசிலித்து அவர்கள் காலைப் பிடித்துக் கொண்டு :—' அம்மா பயத்தினால் பொய் சொன்னேன், இனிமேற் றிருடவும் இல்லை; பொய் சொல்லவுமாட்டேன். என்னை மன்னியுங்கள்.' என்று நான் அழ, எனது தாயார்:—'சுந்தரகாந்தி! நீ சிறு பிள்ளைகளுக்குச் சூதும் வாதும் கற்றுக்கொடுக்கிறாயா? இளைஞர்களுக்கு விஷமூட்டி அவர்களுடைய ஆத்மாவைக் கொலைசெய்ய ஏற்பட்டாய். இதுமுதல்தடவையுங் கடைசிவிசையுமாயிருக்கட்டும் என்று அவளை அனுப்பிவிட்டு என்னைநோக்கி :—' நீ பெருங் குற்றவாளி. உன் குற்றத்துக்காக முழங்காலிலேயிரு. நான் உனக்குத் தாவுபண்ணும் வரையில் எழுந்திராதே' என்று கண்டித்துவிட்டு வீட்டுக்குள்ளே போய்விட்டார்கள். நான் அரைமணிநேரம் முழங்காலிலிருந்தபின் :—' அம்மா! அம்மா! வெளியில் வாருங்கள்.' என்று அழுகையோடு கூவினேன். எனது தாயார் என் பிரலாபத்தைக்கேட்டு வெளியில்வந்து என்னைத் தூக்கிவிட்டு எனது கண்ணீரைத் துடைத்துத் தமது மடியில் என்னை உட்கார்த்தி:—"மகளே! நீ யெடுத்தது அற்பப்பொருள். அது திருட்டாகாது. நீ கேட்டிருக்கும்பக்ஷத்தில் அது உனக்குக் கிடைத்திருக்கும். அற்பப் பொருளை உத்தாரமின்றி யெடுத்தது அற்பப்பாவம். அற்ப குற்றந்

செய்து அதை மறைக்கப்பொய்சொன்னதேபெருங்குற்றம். பொய் சொல்லும் நாவு தனது ஆத்மாவைக் கொலை செய்கின்றது பொய் சொல்லும் வாய்க்குப் போஜனம் எட்டாது. பொய் கடவுளுக்கு நேர் விரோதமான குற்றம். ஆதலால் மகளே, நீ யினி யொருநாளும் பொய்யைக் கனவிலும் நினையாதே' என, நான் :—'அம்மா யினி மண்டை மடிந்தாலும் ஒருநாளும் பொய் சொல்லேன். அபத்தம் என் வாயில் வரவேவராது' என, அவர்கள் :—'நல்லது நீ விளையாடப்போ' என்று என்னை யனுப்பிவிட்டுத் தங்கள் அலுவலுக்குப்போய்விட்டார்கள். அதுமுதல், விஜயவல்லி! இதுவரையில் பொய்யென்றால் எனக்குத் தலைமயிர் கூர்ச்சிட்டுப்போகிறது. பொய் அசங்கிய பாவம். ஆகையால் நீயும் நானும் எப்போதும்பொய் சொல்லாமல் இருப்போம்," என்று பேசிக்கொண்டே மனோரஞ்சிதமும் விஜயவல்லியும் பாடசாலைக்குள் விரைவாய் ஓடி நுழைந்தார்கள். நானுமவர்களைத் தொடர்ந்து சென்று அங்கு நின்றேன்.

அப்போது உபாத்தியாயர்:—"இன்றைக்கேன் இவ்வளவு தாமதம்."

விஜய :—"நான் இன்று குளித்தேன். அதனாற் றாமதமாயிற்று."

உபாத் :—"நீ ஸ்நானம்பண்ணினால் எனக்கென்ன? பரீட்சை நாள் கிட்டிக்கொண்டிருக்கிறது. நாளை யின்நேரமெல்லாஞ் சரியாய் ஒப்பிக்காவிடில் பன்னிரண்டு மணிச் சாப்பாட்டுக்குப் போகமாட்டாய்" என்று அவளைக் கண்டித்துவிட்டு மனோரஞ்சிதத்தைநோக்கி "அவள் இந்த நியாயஞ் சொன்னாள், நீ யென்ன நியாயம் சொல்லுகிறாய்? நீ யொருநாளும் தாமதப்பட்டு வந்ததில்லையே. எனின்றைக்கு இப்படி?" என,

மனோரஞ்சிதம்:—"நான் விஜயவல்லிக்காகக் காத்திருந்தேன் அதனால் தாமதமாயிற்று" என்று சொல்ல,

உபாத்தியாயர் :—"நீ சொல்லுகிற நியாயம் எனக்கு அக்கறையில்லை. நீ யுன் பாடங்களைச் சரியாய் ஒப்பிக்கவேண்டியது, ஒப்பிக்காவிடில் உன்பேரில் அபிராமியம்மாளிடம் பிரியாதுபோகும். சீக்கிரம்! இன்னும் அரைமணி நேரத்திற் படித்து ஒப்பிக்கவேண்டும்" என்று பயமுறுத்திப் பாடசாலையின் மேற்றட்டுக்குப் போனார்.

அதற்குள்ளாக இருவரும் பட படவென்று கண்ணேட்ட மாய்ப் பாடங்களை வாசிக்கத் துவக்கினார்கள்.

உபாத்தியாயர் வந்து பாடங்களை வினவ ஆரம்பித்து :— "மனோரஞ்சிதம்! உனக்கென்ன பிராயம்?"

:—"ஒன்பது பிராய மய்யா."

:—"உன் பாடங்களெல்லாம் உனக்கு நன்றாய்த் தெரியுமா?"

:—"சுமாராய்த் தெரியும்."

:—"உன் புத்தகத்தை மடக்கி வைத்துவிட்டு இந்துஸ்தானத்தில் அரசாட்சிசெய்த சக்கிரவர்த்திகளுடைய சரித்திரத்தை யாதியோடந்தமாய்ச் சுருக்கிச் சொல்."

:—"ஐயா, சரிதையார்த்திகள் சொல்வதுபோல இந்துதேசத்தில் மெய்யான சரித்திரங் கிடையாது. பூர்வீக சரித்திரத்தினுண்மை நமக்குச் சரிவர விளங்குகிறதில்லை. புராதின காலத்து வித்வான்கள் வசன காவியங்களை யலக்ஷியஞ்செய்து, கவி நாட்டத்தினால் கணிதம், அகராதி, இலக்கணம், வைத்திய சிகிச்சை முதலிய நூற்களை கவியாய்ப் பாடிவிட்டார்கள். இவ்வாறே சரித்திரமும் செய்யுளில் எழுதப்பட்டது. இதனால் சரித்திரத்தில் சுருக்கப் பெருக்கமுண்டாயிற்று. இராமாயணக் கதாநாயகனாகிய இராமன், இலக்ஷ்மணன், மகாபாரத புருஷர்களாகிய பாண்டு புத்திரர்களும் திரியோதனாதிகளுஞ் ஜீவித்தது நிச்சயம். ஆனால் வால்மீகி, வியாசன் முதலிய கவிஞர்கள் மேற்கூறிய இராஜமக்களிற் சிலருக்குத் தெய்வத்துவத்தையுஞ் சிலருக்குத் தெய்வக்கலையையுஞ் சிலருக்கு மனுஷ சத்துவத்துக்கு மேற்பட்ட பராக்கிரமத்தையுஞ் சூட்டிக் கவிப்புலமையைக் காட்டினார்களேயன்றி சரித்திர யதார்த்தத்தைக்காட்டவில்லை. ஆதலால் இராமாயணம், பாரத முதலிய மகா பிரபந்தங்களில் நடந்தேறியதாய்க் காணப்படுஞ் சம்பவங்கள் நாம் நம்பத்தக்கவைகளாயில்லை. ஆதலால் பூர்வீக ஆரியச் சக்கரவர்த்திகளுடைய சரித்திரம் அந்தகாரம் நிறைந்ததாயிருக்கிறது.

ஆரியருக்குப்பின் மகம்மதியர் இந்துஸ்தானத்தை யாளத்துவக்கினார்கள். இவர்கள் வரவே இந்துதேசச் சரித்திரத்துக்கு ஓர் கண் துலக்கமாயிற்று. மகம்மதியர் வெகுநாள் சிந்துநாடுகளைக்கட்டியாண்ட பின்னர் அவர்களுடைய அதிகாரஞ் க்ஷீணித்த காலத்திற் போர்த்துக்காலியர் இந்துஸ்தானத்தின் மேல்மாகாணங்களிற் பிரவேசித்துப் பல நாடுகளைக் கட்டியாண்டார்கள். போர்த்துகாலிய

ருடைய அரசாட்சி க்ஷீணித்துப்போக மகம்மதியருடைய இராஜ்ஜியபாரம் முடிவுபெறப் பிராங்கியர் இந்துதேசக் கீழ்ப்பிராந்தியங்களிலும் ஆங்கிலேயர் வடமாகாணங்களிலும் பிரவேசித்து மகம்மதியரையும் போர்த்துக்காஸியரையும் வஞ்சித்தார்கள். காலத்தோடு ஆங்கிலேயர் பிராங்கியரையும் வஞ்சித்துச் சதிமார்க்கமாய் இந்துஸ்தான முழுவதையும் கவர்ந்துகொண்டார்கள். தற்காலம் நாம் ஆங்கிலேயருடைய பிரஜைகளாயிருக்கிறோம். இதுவே இந்து தேச சரித்திர சாரசங்கிரகம்" என்று சொல்லி முடித்தாள்.

தக்ஷணமே உபாத்தியாயர்:— "மனோரஞ்சிதம்! எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்கிறது. நீ இவ்வளவு சிறுமியாயிருக்கிறாய். நீ வாசிக்கும் புத்தகத்தில் இவ்வளவு தெளிவாயில்லை. உனக்கு இவ்வளவு தெளிவாய்ச் சொல்லிக்கொடுக்கிறவர் யார்."

மனோரஞ்சிதம் :—"ஐயா! எனது தந்தையர் காலை மாலையிலும் ஓய்வு நாட்களிலும் மேற்கூறியவைகளைச் சொல்லிக்கொடுக்கிறார்."

:—"உனது தகப்பனார் இன்னும் என்ன சொல்லித்தருகிறார்?".

:—"பூகோள சாஸ்திரத்தில் இல்லாத பற்பல விஷயங்களையும் எனக்குக் கற்பிக்கிறார்."

:—"இந்துஸ்தானத்தின் வடபாகங்களில் என்ன பாஷை பேசுகிறார்கள்?"

:—"இந்தி, இந்துஸ்தானி, குஜராத்தி, மராட்டி, பஞ்சாபி, பெங்காலி முதலிய பாஷைகள் பேசுகிறார்கள்."

:—"இவைகளில் முக்கியமும் விஸ்தாரமுமான பாஷை எது?"

:—"இந்துஸ்தானி."

:—"தக்ஷிண இந்துஸ்தானத்தில் வழங்கும்பாஷைகள் எவை?"

:—"தெலுங்கு, கன்னடம், மலையாளம், தமிழுமாம்."

:—"இவைகளில் அதிக மதுரமான பாஷையெது?"

:—"தெலுங்கு."

:—"அதிக சிறப்பை யடைந்தது எது?"

:—"தமிழ்."

:—"இவைகளுக்குப் பொதுப்பெயரென்ன?"

:—"திராவிடம் என்று பெயர்."

:—"மனோரஞ்சிதம்! உனது தகப்பனார் உனக்கு வேதோபதேசம் பண்ணுவாரா?"

:— "பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் சர்க்கார் இராஜா நாட்களிலும் எனக்கும் என் சகோதரருக்கும் எங்கள் வீட்டுவேலைக்காரருக்கும் வேதபிரமாணங்களையும் நல்லொழுக்கங்களையும் நெடுநேரம் போதிப்பார்."

:— "நீ இவ்வளவு சிறியவளாயிருக்கிறாயே, உபதேசம் பெற்றிருக்கிறாயா? ஜெபிக்கத் தெரியுமா?"

:— "தெரியும். வேத விஷயத்தில் இன்னும் நான் அவ்வளவு தேர்ச்சியடையவில்லை, இப்போதுதான் எனது தந்தையார் எனக்குக் கண்டிப்பாய் உபதேசம் பண்ணிவைக்கிறார். அவர் இல்லாத சமயத்தில் அம்மாள் எனக்கும் மற்றவர்களுக்கும் உபதேசம் பண்ணுவார்கள். ஜெபிக்கிற விஷயத்தில் நாங்கள் ஒருநாளும் தப்பிப்போகிறதில்லை. அநுதினமும் எனது தாய் தந்தையரும் நானும் எங்கள் வேலையாட்களும் காலை மாலை ஜெபம்பண்ணாமலிருக்கிறதில்லை. சாப்பிடும்போதுஞ் சாப்பிட்ட பின்னுஞ் சுவாமிக்கு நமஸ்காரம்பண்ணாமலிருக்கிறதில்லை."

:— "நீங்கள் அநுசரிக்கும் வேத மென்ன?"

:— "கிறிஸ்து வேதம்."

:— "ஐயோ! இழிவான வேதமாயிற்றே, பறையர்!......"

:— "ஐயா! போதும் போதும்! நிறுத்துங்கள். இது தர்க்கக் கிளாசல்ல. என்னிடத்திற் றர்க்கம்பண்ணவேண்டாம். நீங்கள் எங்கள் ஆஞியிடத்தில் வந்தால் அவர்கள் உங்களுக்குத் தக்க மறுமொழி சொல்லுவார்கள். வேறே பேச்சு பேசுங்கள்."

:— "ஆமாம் மெய்தான். உன் கருத்தையறிய அப்படிப் பேசினேன். நீ கோபித்துக் கொள்ளாதே. நமது பாடசாலையின் விஷயங்களைக் கவனிப்பது நலம்" இதுநிற்க, "உனக்கு இன்னும் என்ன பாஷை தெரியும்?"

:— "தெலுங்கும் கன்னடமுந் தெரியும்."

:— "அவைகள் உனக்கெப்படித் தெரியும்?"

:— "சுந்தரகாந்தி யென்னும் தெலுங்க சேடச்சி யொருத்தியும் இரத்தினாங்கி என்னும் ஓர் கன்னட சேடச்சி யொருத்தியும் எங்கள் வீட்டில் வெகுநாளாய் வேலைசெய்கிறார்கள். சிறுவந்தொட்டு அவர்களோடு பேசுவது எனக்கு வழக்கம். அதனோடுகூட ஆஞி எனக்குத் தெலுங்கும் கன்னடமும் சொல்லித்தருகிறார்கள்.'

:— "மெய்தானா?"

:— "மெய்தான். பொய் சொல்லமாட்டேன்."

:— "தெலுங்கிலும் கன்னடத்திலும் இரண்டாம்பாட புத்தகங்களை வாசிப்பாயா?"

:—" இவ்விரண்டு பாஷைகளிலும் நான்காம்பாடம் வரையில் வாசிப்பேன், எழுதுவேன், அர்த்தம் சொல்வேன். தமிழைப்போலவே தெலுங்கும் கன்னடமும் பேசுவேன். வேமனசதகம் பத்தியம், சுமத்தி சதகம் முதலிய பாட்டுகளைத் தெலுங்கில் பாடுவேன்."

:— "உன் தகப்பனாருக்கு எத்தனை பாஷைகள் தெரியும்?"

:— "இலத்தீன், பிரஞ்சு, இங்கிலீஷ், சமஸ்கிருதம், இந்தி, இந்துஸ்தானி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், கொங்கனி முதலிய பல பாஷைகள் தெரியும்."

:— "அப்பா! போதும்! போதும். இனி யுன்னை வினவத் தேவையில்லை. இப்பாடசாலையில் இருக்கும் சில உபாத்தியாயர்களைவிட உனக்கதிகம் தெரியும்போல் இருக்கிறது. இவ்வளவு நிபுணரும் மேதாவியுமான தந்தையர் வயிற்றிற் பிறந்த நீயே பாக்கியசாலி. உனது தகப்பனார் மெய்யாகவே கல்விக் களஞ்சியம். அவருடைய புண்ணியங்களும், கல்வி கலைக்கியானங்களும் உனக்குச் சொந்தம். அவருடைய சாஸ்திரக் களஞ்சியத்தில் எடுக்க எடுக்க வளரும். நீ நாளுக்கு நாள் ஆயுசிலும் அறத்திலும் அறிவிலும் விருத்திச் சந்திரனைப்போல வளருவாய் மகளே! நான் உன்னை யினி எஞ்ஞான்றும் நன்கு மதிப்பேன். உனது கல்வித் திராணியை யொருநாளும் மறவேன். உனது தாய் தந்தையர் தரிசனம் எனக்குக் கிடைக்குமாகில் பெரும் சிலாக்கியமடைவேன். நான் ஓர் ஆதிவாரம் உங்கள் வீட்டுக்கு வருகிறேன். அதை உன் தந்தையருக்குச் சொல்லிவை. மறவாதே" என்று சொல்லி முடித்து அவளை யுட்கார்த்தி யெனது தங்கையைக் கூப்பிட்டார். அவள் எழுந்து நிற்க,

உபாத்தியாயர் :— "விஜயவல்லி! உனக்கென்ன தெரியும்? மனோரஞ்சிதம் இந்துதேச சரித்திரத்தைச் சங்க்ஷேபமாய்ச்சொல்லி முடித்தாள். நீ பூகோளத்தில் இந்துஸ்தான நதிகளைப்பற்றி உனக்குத் தெரிந்தவைகளைச் சொல்?"

:—"நீங்கள் கேளுங்கள். கேட்ட கேள்விகளுக்கு நான் விடை சொல்லுகிறேன்."

:—"இந்துதேச முக்கிய நதிகளில் முதல் நதி யெது?"

:—"தாம்பிரபர்ணி."

:—"ஆமாம், உன் முன்னோர்கள் பாண்டிய நாட்டில் பிறந்து திருநெல்வேலியில் வசித்த காலத்தில் தாம்பிரபர்ணியில் அடிக்கடி தீர்த்தமாடினதைக் குறித்து உன்னிடத்திற் பேசினார்களா? அதனால் முக்கிய நதியென்கிறாயா? அது நதிகளின் கணக்கில் முதலாயில்லை. கங்கையை முதல்நதியென்று சொல்லலாம். இருக்கட்டும், சிந்து நாடுகளில் எத்தனை நதிகள் இருக்கின்றன?"

:—"நாலு நதிகள்."

:—"எவை?"

:—"காவேரி, கோதாவரி, இயமுனை, கங்கையுமாம்."

:—"சிந்து, பிரமபுத்திர நதிகளெங்கேபோயின? மறந்துபோனாய். நதிகளில் எதில் கப்பல் நீந்தும்? எதில் நீந்தாது"?

:—"காவேரி, கோதாவரிகளில் கப்பல் நீந்தும். மற்றவைகளில் நீந்தாது."

:—"முழுதும் விரோதமாய்ச் சொல்லுகிறாய். கங்கை, இயமுனை, சிந்து, பிரமபுத்திரா நதிகளிற் கப்பல் நீந்தும். காவேரி, கோதாவரியில் தோணி முதலாய் நீந்தாது, நல்லதிருக்கட்டும். இந்து தேசத்தின் பூர்வீகக் குடிகளியார்?"

:—"யார்? நாம்தான்."

:—"மனோரஞ்சிதம் நீ யெழுந்து நில். விஜயவல்லிக்கு யாதொன்றுந் தெரியவில்லை. நீ சொல். பூர்வீகக் குடிகளியார்?"

:—"பஞ்சமர் அல்லது பறையர்."

:—"அவர்களைக் கீழ்ப்படுத்தினவர்களியார்?"

:—"ஆரியரும், திராவிட ஜனங்களுமாம்."

:—"திராவிட ஜனங்களென்றால் யார்?"

:—"தெலுங்கு, கன்னடம், மலையாளம், தமிழ், முதலிய பாஷைகளைப் பேசுகிறவர்களே திராவிடர் என்று சொல்லப்படுகிறார்கள்."

:—"திராவிட ஜனங்களுடைய அதிகாரத்தை அபகரித்தவர்களியார்?"

:—"ஆரியர்."

:—"மனோரஞ்சிதம் உனக்கெதுதான் தெரியாது? கலைமகள் எந்நேரமும் உனது நாவிற் குடிகொண்டிருக்கிறாள் என சொல்லத்தகுமே"! என்றுரைத்து எனது தங்கை விஜயவல்லியை நோக்கி "உனக்கு நான்கு பிராயத்துக் இளந்தையான மனோரஞ்சிதம் எல்லாவிஷயங்களிலும் உன்னைத் தோற்கடித்தாள். உனக்கு நாணமில்லையா? நீ பாடங்களைச் சரியாய் ஒப்பிக்கவில்லை யாதலால் நீ சாப்பாட்டுக்குப் போகமாட்டாய்" என்று அவளைக் கண்டித்துவிட்டு வேறு பிள்ளைகளை வினவத் துவக்கினார்.

நான் ஒருபக்கத்திலே எனது தங்கையின் அறியாமையைக் கண்டு வெட்கி நின்றேன். இன்னொரு பக்கத்தில் மனோரஞ்சிதத்தின் சாமார்த்தியத்தையும், நுட்பபுத்தியையும் யோசிக்கும்போது என்னை பிரம்மைபிடித்துக்கொண்டது. அவள் தனது தந்தையார் மீது பற்பல பாஷைகளின் விஷயமாய்ச் சொன்ன புகழ்ச்சிகள் எனது காதில் விழவே, இன்னும் அதிகமதிகமாய் அவரோடு பழங்கி வழங்கி சம்பாஷிக்கவேண்டுமென்கிற அவாவும் அபிலாஷையும் என்னிடத்தில் பலத்துப்போயின. ஏனெனில், அவர் மெய்யான பண்டிதர். 'சதசுலோகேன பண்டித'—நூறு சுலோகங்கள் தெரிந்தவர் சான்றோர் என்று நீதிநூல் சொல்லுகின்றதே. அப்படியிருக்க அவ்வளவு உணர்ச்சிகளும் அத்தனை பாஷைகளுந் தெரிந்த நிபுணரைக் கல்லூரி யென்று சொல்லுவது கொஞ்சமேனும் அநுசிதமாமா? உபாத்தியாயர் சொன்னதுபோல் சரஸ்வதி யெந்நேரமும் அவர் நாவிலும் வசிக்கிறாளென்றே சொல்லவேண்டும். அவர் உண்மையில் கல்விக் களஞ்சியமே! அதிலெடுக்க எடுக்க நிறையுமேயல்லாது குறையாது. சாமான்னிய ஜனங்களுக்குக் கண்ணிரண்டே; ஆன்றோர்க்குக் கல்விக்கண் ணொன்று ஜாஸ்தி. பிச்சையிடும் புண்ணியவான்களுடைய வலது கரத்தில் பஞ்சநேத்திரங்கள் பிரகாசிக்கின்றன. தெய்வத்தோடு ஐக்கியப்பட்ட ஞானிகளுக்கு அநேக காரியங்களை ஒரு நொடியிற்பார்க்கும் ஞானநேத்திரமும் உண்டு. எனது ஆசான் மதுரநாயகம்பிள்ளைக்கு முற்கூறிய மூன்றுவகை கண்களுமுள்ளனவாம். நான் அவரைப் பின்செல்லும் பக்ஷத்தில் அந்தகாரத்தில் நடமாடேன்" என்று நினைத்துக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

அங்கு எனது தந்தையார் எனது வரவுக் கெதிர்பார்த்துக் கொண்டிருந்தார். நான் வீட்டிற் பிரவேசித்த வளவில் அவர்:—

"சுந்தரம்! எங்கேபோனாய்? இதுவரையில் என்ன செய்தாய்? நீ
உன் மாணாக்கக் கடமைகளைக் கவனிக்கிறாயில்லை. 'எண்ணும்
எழுத்தும் கண்ணெனத்தகும்' என்ற மூதுரையை நீ மறந்துபோ
கிறாய்! கல்விமட்டில் உனக்குக் கவலையில்லை. இளசில் வளையாக்
கொம்பு மூப்பில் வளையுமா? சிறுவயதில் கற்காவிடில் முதிர்ந்த
வயதில் என்னசெய்வாய்? நீயேன் பெரியோர்சொல்லை அலக்ஷி
யம் பண்ணுகிறாய்?" என்று முறையிட்டுக்கொண்டார்.

நான்:—"இல்லை; அப்பா, உங்களுடைய வார்த்தையை
நான் ஒருபோதும் அலக்ஷியம் பண்ணேன். துஷ்ட சகவாசத்திற்
கும் போகிறதில்லை. இவ்வூரிலிருக்கும் கிரகங்களையும் கிரகபதி
களையும் அறியேன். உங்களுக்குத் தெரிந்ததுபோல நமது எதிர்
வீடுதான் எனக்குத் தெரிந்தவீடு. இன்றையத்தினம் பெண்பிள்ளை
களின் பாடசாலையைப் பார்க்கப்போனேன். அங்கு பிள்ளைகள்
பாடம் ஒப்பிக்கும் வகையை நெடுநேரங் கவனித்துக்கொண்டிருந்
தேன். அதனாற் கொஞ்சந் தாமதமாய்விட்டது. தயைசெய்து
என்னை மன்னியுங்கள். இனிமேல் வெளியிற் போகவில்லை" என,

எனது தந்தையார்:—"நீ யெங்கும் போகக்கூடாதென்று
நான் சொல்லுகிறதில்லை. நீ பாடசாலைக்குப் போனாலும் போகா
விடினும் சரி. கல்வியை முக்கியமாய்க் கவனிக்கவேண்டுமென்பதே
எனது தாற்பரியம்" என்று சொல்லி வெளியிற் போய்விட்டார்.

உடனே எனது தாயார் என்னிடம் வந்து:—"மகனே!
நீ நாடோறும் மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப்போவது சரியல்ல.
நமது பந்துக்கள் அதைக் கவனிக்கிறார்கள். நாம் கிறிஸ்துவர்க
ளோடு அதிக அந்நியோந்நியமாயிருக்கத் தகாது. அவர்களுடைய
நடையுடை நாகரிகம் முதலியவைகளை நாம் பின் செல்லத் தகாது.
நமது சுற்றத்தார் நம்மை நிந்திப்பார்கள்" என,

நான்:—"நமது பந்துக்கள் நம்மை நிந்திப்பார்களென்று
பயந்து நல்லொழுக்கங்களை விடுவது வாசியா? ஒருவர் சொல்லுக்
கஞ்சி நன்மையைத் திரஸ்கரித்துத் தின்மையைச் செய்யலாமா?
நமது நன்மையுந் தின்மையும் நம்மைச் சாருமேயல்லாது பிறரைச்
சாராது. அப்படியிருக்க, நாம் தீங்கு புரிவோமாகின் தெய்வ சந்நி
தானத்தில் நமது தின்மையைப் பிறர் பரிகரிப்பார்களா?" என,

எனது தாயார்:—"கிறிஸ்தவர்களோடு பழகத் தலைப்பட்
டதினால் நீ யவர்களைப்போற் பேசுகிறாய்" என,

நான் :—"அம்மா! நமக்கு வேறு நியாயம் இதில்லவர்களுக்கு வேறு நியாயமா?" என,

எனது மாதா :—"நீ யெப்போதும் இப்படித்தான். உனக்குத் தர்க்கம் என்றால் சர்க்கரைபோலாம்" என்று கோபித்துக் கொண்டு போய்விட்டார்கள்.

---

# 7-ம் அத்தியாயம்.

## மனோரஞ்சிதத்தின் குலவிருத்தாந்தம்.

இங்கு மதுரநாயகம் பிள்ளையின் வம்ச விருத்தாந்தத்தைச் சொல்லிவிடுகிறேன். என் குலத்தைப்போலவே அவரது குலமும் வேளாளகுலம். பூர்வம் திரிசிரபுரஞ் சமஸ்தானத்தை யாண்டு பரிபாலித்துவந்த சுவர்க்கநாத பிரபுக்களின் வம்சத்திலுதித்தவர்; அவருடைய முன்னோராகிய கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாத பிரபு திரிசிரபுரம் சக்கரவர்த்தியாகிய ஆகாசலிங்க சுவர்க்கநாதரின் கொடுமைக்கு அஞ்சி வடகிழக்குப் பிராந்தியத்திலிருக்குந் திரிபுவனசாலைக்குப்போய்க் குடியேறினார். கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதரும் ஆகாசலிங்க சுவர்க்கநாதருங் கூடப்பிறந்த இரு சகோதரர். இவர்களுடைய தந்தையாகிய பன்னிரண்டாம் அம்பலலிங்க சுவர்க்கநாதர் தமது ஜேஷ்ட குமாரன் ஆகாசலிங்க சுவர்க்கநாதருக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து இராஜ்யபரிபாலனத்தை அவர் கையில் ஒப்பித்துத் தனது கனிஷ்ட குமாரன் கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதருக்கு இளவரசுபட்டங்கட்டித் தஞ்சை மாகாணங்களில் அவருக்கு அநேக சதவேலி நிலங்களைச் சர்வமானியமாய்விட்டு இரு சகோதரரும் நகமும் சதையும், இரத்தமும் மாம்சமும், உடலும் உயிரும்போல நித்திய சமாதானமாய் ஒத்து வாழும்படி இதம் போதித்து உலோகாந்தரஞ் சென்றுவிட்டார். சிறிதுகாலம் இருவரும் சமாதானமாய் ஜீவித்தார்கள். ஆனால் காலக்கிரமத்தில் இராஜரீக பரிபாலனத்தில் அவர்களுக்குள் விகற்பமுண்டாயிற்று; கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதர் ஆழ்ந்த ஆலோசனையுள்ளவர். இராஜரீக முறையில் மிகுந்த முன்னோக்கமுடையவர். ஒரு சமஸ்தானத்திற் சகலவித வைபவ சம்பத்துக்களும் செங்கோல் நீடித்து நிலைபெறச் செய்யக்கூடிய மகா மந்திரி. ஆனால் அவருடைய சகோதரரின் நோக்கம் முழுவதும் விருத்த

வமானது. வியர்த்த பெருமையிலும், வேசி விருப்பத்திலும் விருந்திலும், விநோத வேடிக்கைகளிலும், சரீர சுகபோகத்திலுந் திரவியங்களை வீணிற் செலவிடுவார். இதைக்கண்ட கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதர் மிக்க கிலேசமுற்று:—"அண்ணா! நாம் பெரிதான சமஸ்தானத்தைப் பரிபாலித்து வருகிறோம். நம்மைச் சூழ்ந்திருக்கும் நமது சத்துருக்கள் நம்முடைய சோழமண்டலத்தின் பேரில் எந்நேரமும் கண்ணோக்கமாய் இருக்கின்றார்கள். வடபிராந்தியங்களில் மராட்டியர் ஒவ்வொரு சமஸ்தானமாய்ப் பிடித்துக்கொண்டு வருகிறார்கள். நமது சமஸ்தானத்துக்கும் அதே கதி சம்பவிக்கக்கூடும். ஆதலால் நமது கோட்டை கொத்தளங்களைப் பலப்படுத்தவேண்டும். இராணுவங்களைப் பெருக்கவேண்டும். ஆயுதசாலைகளைக் கட்டவேண்டும். பீரங்கிதோக்குகளை விருத்திசெய்யவேண்டும். இராணுவத்திற் பேர்வகித்த சேனாதிபதிகளை ஸ்தாபிக்கவேண்டும். படைவகுப்புகளை அடிக்கடி பயிற்றித் தேற்றவேண்டும். பயிற்சி வித்தை அறியாப்படை, கலப்பை முகம் அறியாக் கிருஷிகனுக்குச் சமம். இன்னும் பற்பல குறைகளும் உலோபங்களும் நமது இராஜ்ஜியத்தில் உள்ளன. இவைகளைத் திருத்தி விருத்திக்குக்கொண்டுவராவிடில் நமது அரசாட்சி நிலைபெறுவது மிகவரிது. வியர்த்த செலவுகளை நிறுத்தி பணவகைளை யுத்தகாரியங்களில் உபயோகிக்கவேண்டும்," என்று பலவாறு பலநாள் சொல்லிக்கொண்டு வந்தார்.

இவ்வாறு அவர் சக்கரவர்த்திக்கு அடுத்தடுத்துச் சொல்ல இராஜா தமது சகோதரன்பேரில் கோபம் மூண்டவராய்:—"தேஜோலிங்க சுவர்க்கநாதா! நீ யெந்நேரமும் நம்மை இம்சிக்கிறாய். அடிக்கடி நம்மை வீணில் அலட்டுகிறாய். உன் ஆலோசனைகளைக் கேட்கக்கேட்க எமக்குக் கிலேசம் அதிகரிக்கிறது. நீ யமைச்சனாயிருக்கும்பக்ஷத்தில் அரசன் இன்ப சுகங்களையெல்லாம் ஒழித்துவிடவேண்டும். பாலைவனத்தில் கப்பலையுடைக்குந் திமிங்கலத்தையும் பனை மீன்களையுங் காட்டுகிறாய். நமது ஜலக்கிரீடா தடாகத்திற் சிங்கம் புலிகளைத் தோற்றுவிக்கிறாய். சத்துருக்களின் படைகள் நமது மதிலின்பேரில் ஏறுவதை ஏற்கெனவே காண்பிக்கிறாய். நமது தூளிகா மஞ்சத்தின் அசமானகிரியின் தலைமாட்டிற் கனத்த தோற்பட்டயம் மயிர் இழையிற் கட்டித் தொங்கலாடுகிறதென்கிறாய். போதும் போதுந் தம்பி! உன் னாலோசனைகளைக் கேட்கில் என்றும் விடியாது. சதா விருட்டுவந்து நம்மைக் கப்பிக்

கொள்ளும். நமது தந்தையர் உனக்குச் செய்யவேண்டியவைகளைச் செய்துவிட்டார். உனது ஜீவனும்சத்துக்கும் குடும்ப சம்ரக்ஷணைக்கும் வேண்டிய திரவியங்களையும் பூஸ்திதிகளையும் ஏராளமாய்க்கொடுத்துவிட்டார். ஆதலால் உனது ஸ்வாதந்தரியங்களிருக்கும் ஸ்தலத்துக்கு நீ குடிபோகலாம். உனது சஞ்சாரம் இங்கு இஞ்சித்தும் உதவாது. இன்னும் மூன்று மாதங்களுக்குள் நீ நமது இராஜதானியைவிட்டுப் போகாவிடில் உனக்கும் நமக்கும் பெரும்பகை வந்து நேரிடும். நமது அரசாட்சியை நடத்த நமது அமைச்சர் கும்பேசுர சாஸ்திரி இருக்கிறார். நீ நமது சமஸ்தானத்தைத் தாங்கிக்கொண்டிருப்பதாய் எண்ணாதே'' என்று தமது சகோதரனைக் கண்டித்துத் தமது மந்திராலோசனை சங்கத்தினின்று அவரை நீக்கிவிட்டார்.

கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதர் தமது சகோதரரை நோக்கி:—' அண்ணா! தேவரீருடைய வாக்குக்குப் பிரதி வாக்கில்லை. நான் தேவரீரோடு கூடப்பிறந்த தோஷத்திற்காக கடைசி வார்த்தையொன்று சொல்லிப்போகிறேன்.''

" யானை வரும் பின்னே மணியோசைவரும் முன்னே
கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே'' என்ற பழமொழியை மறக்கவேண்டாம்.

" நான் நமது இராஜதானியைவிட் டகன்றபின்னர் நேரிடும் இராஜ கலகத்திற்கும், துர்ச் சம்பவங்களுக்கும் நான் உத்தரவாதியன்று. நன்மைவரினுந் தின்மைவரினுந் தேவரீருடைய தலைமீதிற் சூழ்ந்கிய பாரம்'' என்று சொல்லி [illegible]டித்துத் தமது ஆசிரமத்திற்குப் போய்விட்டார்.

சக்கரவர்த்தி சிஞ்சித்தும் கவனித்தாரில்லை. தமது சகோதரன் மேற்சொன்ன சுலோக வார்த்தைகளைப் பித்தனுடைய வார்த்தைகளென்று எண்ணிக்கொண்டார்.

கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாதர் தனது தமையன் தன் ஆலோசனைகளை அலக்ஷியம் பண்ணுவதைக்கண்டு விசனப்பட்டுத் தன் சம்பத்துக்களை யெல்லாம் சேர்த்தெடுத்துக்கொண்டு திரிபுவனசாலைக்குக் குடிப்போய்விட்டார்.

அவரங்கு சென்ற சில வருஷங்களுக்குப் பின்னர் வடநாட்டு நாயுடுகாரு படையெடுத்துவந்து திரிசிரபுரத்துச் சக்கரவர்த்தியோடு போராடி யுத்தத்திற் செயித்துச் சோழமண்டல முழுவதை

யும் வசப்படுத்திக்கொண்டார்கள். பதின்மூன்றும் ஆகாசலிங்க சுவர்க்கநாதரோடு சோழவம்ச வேளாளச் சக்கரவர்த்திகளின் அரசாட்சி முடிவுபெற்றது.

கைலாச தேஜோலிங்க சுவர்க்கநாத பிரபு திரிபுவனசாலையில் வெகுநாள் க்ஷேமமாய் ஜீவித்தபின் தன்னேகுமாரன் சதாசிவலிங்கசுவர்க்கநாதருக்குத் தமதுதிரளானதிரவியங்களையும் பூஸ்திதிகளையும் விட்டுச் சமாதியை அடைந்துவிட்டார்.

சதாசிவலிங்க சுவர்க்கநாதருக்கு சுந்தரேசலிங்க சுவர்க்கநாதர், சிதம்பரலிங்க சுவர்க்கநாதர், அர்த்தநாரீசுரலிங்க சுவர்க்கநாத என்று மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள்.

இவர்களில் மூத்தவராகிய சுந்தரேசலிங்க சுவர்க்கநாதர் ஆரியமத புராணங்களையும் பிரபந்தங்களையும் வாசித்துச் சந்தேக நிவர்த்தியாகாமல் நெடுநாள் தத்தளித்துக் கடைசியாய் ஓர் ஐரோப்பிய கிறிஸ்துவ குருவைக்கண்டு பலநாள் பல சமயங்களில் அவரோடு தர்க்கம்பண்ணிச் சங்கை நிவர்த்திசெய்துகொண்டு குடும்ப சகிதமாய்க் கிறிஸ்துவேதத்தைத் தழுவிக்கொண்டார்.

இவருக்குச் சச்சிதானந்த சுந்தரதாசு, கிருபாநிதி, என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். இந்த சச்சிதானந்த சுந்தரதாசு பிள்ளையே எனது ஆசான் மதுரநாயகம்பிள்ளையின் தந்தையார். கிருபாநிதியம்மாள் நமது அபிராமியம்மாளுடைய தாயார். அபிராமியம்மாளுடைய தகப்பனும் மதுரநாயகம்பிள்ளையின் தாயாரும் கூடப் பிறந்தவர்கள். அவருடைய தாயார் பெயர் ரூபலாவணியம்மாள். அபிராமியம்மாளுடைய தந்தையர் பெயர் சுவாமி சவுந்தரநாயகம்பிள்ளை. சச்சிதானந்த சுந்தரதாசுபிள்ளையும் சுவாமி சவுந்தரநாயகம்பிள்ளையும் அத்தை பிள்ளை அம்மான் பிள்ளைகள். இவர்கள் இருவருடைய குடும்பங்களின்பேரிலும் கடவுளுடைய ஆசீர்வாத மழை ஏராளமாய்ப் பொழிந்தமையால் சச்சிதானந்தம்பிள்ளைக்கு அமிர்தநாயகம், அருமைநாயகம், மதுரநாயகம், திருமறைநாயகம் என்று நாலாண்மக்களும், பத்மாமணி, இரவாமணி, இராஜாமணி யென்று மூன்று பெண் மக்களும் பிறந்தார்கள். சுவாமி சவுந்தரநாயகம்பிள்ளைக்குச் சுந்தரதாஸ், புருஷோத்தமதாஸ், கிருபாகரதாஸ் என்று மூன்று ஆண்பிள்ளைகளும், ஞானம்பாள், தேஜோவல்லி, அபிராமி, இராஜாகுணமணி யென்று நான்கு பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள். இவ்விரண்டு குடும்பப்பிள்ளைகளும்

கொள்வன கொடுப்பன நெருக்கிடையால் இரண்டொருவர்போக மற்றெல்லோரும் வெளியிற்போகாமல் இனத்திலேயே கல்யாணம் முடித்துக்கொண்டார்கள். இவர்களில் எனது அண்ணாவி மதுரநாயகம்பிள்ளையைக் கண்டோம். குணசிந்தாமணி அபிராமியம்மாளைப்பார்த்தோம். இவர்கள் இராஜ வம்ச புருஷ பூவையரென்றறிந்துகொண்டோம். இவ்விரு தம்பதிகளும் இல்லறத்தில் நல்லறநெறி காட்டிகளென்று பார்க்கின்றோம். இச்சரிதைநாயகி மனோரஞ்சிதம் இவர்களுடைய புத்திரியென்றறிவீர்கள். அவள் 1847-௵ ஜனவரிமீ 30௳ மாலை 3-மணிக்குப் பிறந்தாள். தீக்ஷைகாலத்தில் அவளுக்குக் கத்தரீன் கிருபாநிதியென்று பேர் சூட்டினார்கள். மனோரஞ்சித மென்னும் சிறப்புப் பெயர் ஐந்து பிராயத்தில் அவளுக்கமைந்ததாம். மனோரஞ்சித புஷ்பத்திற்குப் பற்பல வாசனைகளுண்டு. அது புஷ்பித்திருக்குந் தோட்டத்தில் பிரவேசித்தால் ஒரே நேரத்தில் மல்லிகை, முல்லை, மகிழ், லீலி, ரோஜா முதலிய புஷ்பங்களின் நறுமணங்கள் வீசுவதாய்த் தோன்றும். அங்ஙனமே யவள் தனது சிறுவயதிலேயே தன்னை யெடுப்பவர்களுக்குத் தனது பற்பல சற்குணங்களால் மனரஞ்சிப்பை உண்டாக்கினமையால் மனோரஞ்சிதம் என்று சிறப்புப்பெயர் வகித்தாள். 1851-ம் ஆண்டில் அவளுக்கு ஐந்துவயது நடக்கும்போது மதுரநாயகம்பிள்ளை அவளைப் பள்ளியில்வைத்தார். இந்த 1856-வருஷம் நான்காவது பரீக்ஷை முடித்தாள். அவளுடைய தந்தையர் அவளுடைய சாமர்த்தியத்தையும் புத்தி தீக்ஷண்யத்தையுங் கண்டு இங்கிலீஷ் பாடசாலையில் வைத்தார்.

---

## 8-ம் அத்தியாயம்.

*மதுரநாயகம்பிள்ளையின் சொஸ்தம். அவரது பந்துக்களின் பிரயாணம். உருபலாவண்ணியம்மாள் தன் மகனுக்குப் புத்திமதிகூறுகிறாள். அவர் மாமியார் முன்னிலையில் மருகியைப் புகழ்கிறார். மனோரஞ்சிதம் ஒரு உத்தமபுத்திரி. கன்னிமை விரதத்தத்வத்தின் பேரில் ஓர் உபந்நியாசம். மதுரநாயகம்பிள்ளையும் அபிராமியும் ஒப்பற்ற புருஷ பூவையர்.*

சில தினங்கள் சென்றன. மதுரநாயகம்பிள்ளையின் வியாதி துரிதமாய்ச் சொஸ்தமாகிக்கொண்டு வந்தது. வைசூரி சுத்தமாய்க் காய்ந்துபோயிற்று. இரணமென்பது கிஞ்சித்தும் அவர் தேகத்தில் இடையிலே கிடையாது. அவர் எழுந்து தாராளமாய் நடமாடத் துவக்கிவிட்டார். அவருடைய பந்துக்களெல்லோரும் கிலேசப்

நீங்கி சந்தோஷமடைந்து அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு தத் தம் ஊருக்குப் போய்விட்டார்கள். ஏனெனில் அவர்களெல்லோ ருப் பற்பல விடங்களில் பெரிதான உத்தியோகங்களை வகித்துப் பெரும் பிரக்யாதியோடு அவைகளை நடத்திவந்தார்கள்.

மதுரநாயகம்பிள்ளையின் தாயாராகிய உரூபலாவணியம்மா ளும் அவருடைய கடைசி தம்பி திருமறைநாயகம்பிள்ளையும் அபி ராமியம்மாளுடைய தாயாராகிய கிருபாநிதியம்மாளும், அவள் தங்கை இராஜாகுணமணியம்மாளும் அவர் வீட்டிலேயே நெடுநாள் தங்கிவிட்டார்கள். திருமறைநாயகத்துக்கும் இராஜாகுணமணிக் கும் இன்னும் கல்யாணமில்லை; உத்தியோகமும் இல்லை.

மற்றவர்கள்போன இரண்டொரு தினங்களுக்குப்பின் உரூப லாமணியம்மாள் ஒருநாள்;—"மகனே! நீ யிங்கு விபத்து நிறைந்த வேலைகளை நிறைவேற்றுகிறாய். அடிக்கு ஆயிரம் ஆபத்துக்கள் வெள்ளப் பிரவாகமாய்ப் பரவுகின்றன. இவ்வூரில் வசிக்கும் கிறிஸ் துவ ஜனங்களைப் பார். தெய்வ பக்தியென்பது கொஞ்சமேனும் காணோம், உலகமே சதமென்றெண்ணுகிறார்கள். பெருமையை யெங்குந் தேடித் திரிகிறார்கள். திரைகடலோடித் திரவியம் தேடு கிறார்கள். அழியாத நித்திய பொக்கிஷத்தைக் கனவிலும் நினைக் கின்றார்களா? இல்லை. அவர்களுடைய விசுவாசம் எங்கே? அநு நாடோறும் குன்றிப் போகின்றது! விசுவாசம் குறையக் குறைய மனிதர்கள் பிரபஞ்ச சுகசெல்வங்களை நன்குமதித்துத் தங்கள் சிரு ஷ்டிகர்த்தாவை மறந்துபோகின்றார்கள், பதவியை இழந்துபோ கும் வண்ணம் துன்மார்க்கத்திற் பிரவர்த்தனம் அடைகிறார்கள். துன்மாதிரிகைகள் எப்பக்கத்திலும் பிரளயம்போல பெருகி ஓடு கின்றன. மகனே! இந்நாட்டில் துர்ஜனர் மிகுத்திருக்க, சஜ்ஜன ரும் சாதுக்களும் அபூர்வமே. 'பள்ளமுள்ளவிடத்தில் வெள்ளம்' என்றதுபோல பாவிகள், பாதகர், வஞ்சகர்பின் பலர் ஓடுவார் களே. 'இயற்கை வாசனை சேர்க்கை வாசனை' சுகந்தத்தோடு சேர்ந்தது சுகந்தம் வீசும்; துர்க்கந்தத்தோடு சேர்ந்தது துர்க்கந் தம் வீசும்; மனிதர்களுந் துஷ்டரோடு துஷ்டராயுஞ் சிஷ்டரோடு சிஷ்டராயும் பிரவர்த்திப்பார்கள், நீ நெடுநாள் என்னைவிட்டுப் பிரி ந்து துஷ்டர் நடுவில் சஞ்சரித்து இதர சமயத்தார் மத்தியிற் ஜீவித்துவருகின்றாயே. உனது விசுவாசக்கண்ணின் ஒளி மங்கிப் போகவில்லையா? என்று சிந்திக்கிறேன்" என்று கேட்க,

மதுரநாயகம்பிள்ளை :—"அம்மா! நீங்கள் அமுதூட்டும் போதே ஆரம்பித்து நாளடைவில் புகட்டிய தெய்வ பயமும் நல்லொழுக்கமும் சதாச்சாரங்களும், இதபோதனைகளும் இன்னும் எனது இதயத்தை விட்டகன்றனவல்ல. அதற்கு விருத்துவமாய் நாளுக்கு நாள் விருத்தியாகிக்கொண்டே வருகின்றன. நீங்கள் நன்னடக்கை விஷயங்களில் வரைந்து காட்டிய வரம்பை யொரு நாளும் நான் தாண்டினவனல்ல. 'தாயிற் சிறந்ததோர் கோவிலுமில்லை' என்று புறமதஸ்தருந் தங்கள் மாதாவின் சொற்களைச் சன்மானித்து அனுசரிப்பார்களே. அங்ஙனமிருக்கக் கிறிஸ்துவ தாய் தந்தையரிடத்திற் பிறந்து கிறிஸ்து மறையை நுண்ணியவிதமாய் அனுஷ்டித்துக் கிறிஸ்துவைத்தானே உடையாகத் தரித்திருக்கும் நான் எவ்விதம் என் மாதாவின் சொற்களை மறந்துபோவேன்? நான் எங்ஙனமேனுங் கிலாபகப் பிசகிறைற் றப்பிப்போவேனுகில் எனது வழுக்களைத் திருத்தி யென்னைச் சன்மார்க்கத்தில் நிலைநாட்டி எனது குலத்தைக் காக்கச் சம்மனசொன்றை யாண்டவர் எனக்குக் கடாக்ஷித்திருக்கிறார். நான் எவ்விதம் பிசகிப் போகக் கூடும்?" என,

உரூபலாவணியம்மாள் :—"மகனே, நீ யெந்தச் சம்மனசைச் சுட்டிப் பேசுகிறாய்? நமது பிறப்புமுதற் கடவுள் நமக்குக் கட்டளை பண்ணியிருக்குங் காவற் சம்மனசா" என,

மதுரநாயகம்பிள்ளை :—"இல்லை இல்லை! அம்மா, இதோ தக்ஷணமே கண்ணிறைந்த சம்மனசைக் காட்டப்போகிறேன்" என்று சொல்லி "அபிராமி! நீ யிங்கே தீவிரமா யோடிவா" என,

அவள் :—"இதோ வருகிறேன்" என்று சொல்லி யவர் எதிரில்வந்து நின்றுகொண்டு;—"அத்தான்! என் என்னை அழைத்தீர்கள்?"

மதுரநாயகம்பிள்ளை :—"நீ யெனக்குச் செய்த அபராதங்களை யுனது அத்தையிடத்திற் சொல்லிக்கொண்டேன். தற்காலம் விசாரணையாகி முடிவுசெய்து எனது தாயார்முன்னிலையில் உன்னை சிக்ஷிக்கப்போகிறேன்."

அபிராமி :—"அத்தான்! ஒருபோதுந் தங்களுக்கு வேண்டுமென்று எவ்வித அபராதமுஞ் செய்யவில்லையே. எப்போதேனும் கவனக்குறையால் யாதோர் குற்றஞ்செய்திருக்கும் பக்ஷத்தில் வாஸ்தவமாய் மனமுருகித் தங்களிடத்தில் மன்னிப்புக் கேட்கிறேன். தயைசெய்து எனக்கு முழுதும் மன்னிக்கவேண்டும்." என்று முழந்

தாட்படியிட்டுக் கண்கலங்கத் துவக்கினாள். அப்போது அங்கு நின்ற மனோரஞ்சிதம் மலமலவென்று கண்ணீர் உதிர்த்துக்கொண்டு தானும் முழங்காலிலிருந்து:— "ஆஞியம்மா! நீங்கள் அம்மாளுக்குப் பரிந்து பேசவேண்டும். அவர்கள் ஒருபோதும ஆஞியிடத்தில் எதிர்த்துப் பேசினதே யில்லை. ஆஞி கூப்பிட்ட குரலுக்கு ஓடிவருவார்களே. கேட்ட பொருள் இல்லையென்று சொல்லமாட்டார்களே! சொன்ன சொல் தட்டார்களே! என்ன குற்றம் செய்திருப்பார்கள்? எதாகிலும் செய்திருக்கும் பக்ஷத்தில் நானும் ஆஞியிடத்தில் அம்மாளுக்காக மன்னிப்புக் கேட்கிறேன்" என்று சொல்லித் தனது தந்தையை நோக்கி:—"ஆஞி! அம்மாளைத் தண்டிக்கவேண்டாம். அம்மாளுக்குப் பதிலாய் என்னை யடியுங்கள்" என்று தனது சிறிய கரங்களை கட்டிக்கொண்டு கன்னெஞ்சுங் கரையும் வண்ணம் கெஞ்சினாள். உடனே தாயும் மகளும் ஒரே நேரத்தி லெழுந்து தகப்பன் பிள்ளையையும் மாமியார் மருகியையும் வாரித்தழுவி முகத்தை முத்தங்களால் நிரப்பினார்கள்.

அப்போது மதுரநாயகம் பிள்ளை:—"நீ யென்மட்டில் ஐயமுறவேண்டாம். உனது சற்குணங்கள் சந்திரனைப்போலப் பிரகாசிக்கவேண்டி யுன்பேரிற் கற்பனா குற்றங்களைச்சாட்டினேன். உண்மையும் பொய்யும் ஒரு நொடியிற் றுலங்கின. உனது நட்பும் நன்னடக்கையும் வாஞ்சையும் நிகரற்ற புருஷ பக்தியும் உனது அத்தை முன்னிலையிற் பட்டப்பகலிலும் வெட்ட வெளிச்சமாய் ஜொலித்துவிட்டன. உனது கிரகதர்மங்களை நான் எவ்வளவுதான் புகட்டிச் சொல்லினுஞ் சரிவர விளங்காது. இப்போதோவெனில் உனது சன்மார்க்கப் புண்ணியங்களை யதார்த்தமாய்ப் பார்த்துக்கொண்டார்கள். நீ யெனக்கு மனைவியாய் வாய்த்தது என் தாயார் செய்த புண்ணிய பலன். நீ செய்யும் புண்ணிய பலன்கள் உன் மக்கட்குச் சித்திக்கும்.

சலோமோன் ஞானி:—"*Mulierem fortem quis inveniet?*"
"திடசுத்தியுள்ள பெண்டீரை நாமெங்கே கண்டடைவோம்?" என்று வினவத்துவக்கி அவளுடைய குணாதிசயங்களை நமக்கு விவரித்தும் காட்டினார்.

மேற்படி வினா நமக்கென்ன படிப்பிக்கின்றது? "உலகிற் குலதர்மபத்னிகள் மகா அபூருவம் என்று கூறுகின்றது. அபிராமீ, அது மெய். ஞாலத்திற் சதகோடி பத்தினிகளிருப்பினும் அவர்க

ளில் உத்தமபெண்டீர் கொஞ்சம்பேர். நீயோ உத்தமரில் உத்தமி; குணசிங்காரி; குலமடந்தை; எனது கோத்திர லக்ஷ்மணம் ; எனது தாயார் முதல் உருபலாமணி. நீ இரண்டாவது உருபலாமணி" என,

அபிராமியம்மாள் :—"அத்தான்! தாங்கள் சொல்லும் புகழ்ச்சிக்கு நான் கிஞ்சித்தும் பாத்ரவதியல்ல. எனக்குச் செலவு கொடுங்கள். நான் வீட்டுப்பணிக்குப் போகிறேன்" என்று சொல்லிப் போய்விட்டார்கள்.

பின்பு பாட்டியார் தமது பேத்தியை மடியிலுட்கார்த்தி :— "மகளே! இவ்வளவு இளமையில் உனக்கு இவ்வளவு விமரிசையும் நல்லொழுக்கமுங் கற்பித்ததியார்? உனது தாயல்லவா? என் கண்மணியே! குலமாணிக்கமே! நீ புகுமிடம் புண்ணிய க்ஷேத்திரமாகும்! உன் வாணாட்கள் பிறருக்கு வானோர் சஞ்சாரமாகும்! நீ தரித்திரருக்குத் தாயாவாய்! கண்ணில்லார்க்குக் கண்ணாவாய்! நடையற்ற வயோதிகர்களுக் கூன்றுகோலாவாய்! ஆறுதலற்றவர்க்குத்தேறுதல் சொல்வாய்! உன் கழுத்துவாய்க்குங் கணவனுக்குக் கசவா அமிர்தமாவாய்! அவனிருதயம் உன்னிருதயத்தைவிட்டு ஒருபோது மினை பிரியாது! உனது உத்தம நடக்கை யவனுக்கு உன்னத பாடசாலையாம்! எவன் உன்னைக் கைக்கொள்வானோ அவன் இகத்திலும்பரத்திலும் பெருஞ் சுகத்தை யடைவான்! மகளே! நீ யுன் மாதா நடக்குஞ் சன்மார்க்கத்தில் தவறுதொழுகு;அவள் எனது குலசம்மனசு. நீயும் அவ்வாறே யுனது கணவன் குலத்தைக் காத்துச் சகலத்திலும் அவனுக்குத் தீர்க்க ஆலோசனை நிறைந்த மந்திரியாயிருப்பாய்" என்று பலவாறு அச்சிறு நங்கையை வாழ்த்தினார்கள்.

அப்பெருமாட்டியைப்போலவே நானும் நினைத்தேன். அச்சுந்தர நங்கை யாருக்கு வாய்ப்பாளோ சந்தேகமற அவன் பாக்கியவான். இளைஞியின் முகத்தில் சர்வ ரூபலாவண்யங்களும், கல்வி, ஞியானம், தயை, சாந்தி, ஜீவகாருண்யம் முதலிய சற்குணங்களும் வயதோடு வளரக்கண்டேன்.

ஜெயராமச்சந்திர ஐயர் சொன்னதுபோல மனோரஞ்சிதம் விருத்திச் சந்திரனுக்கொப்பாயிருக்கிறாள். சந்திரன் வயதில் வளர வளரப் பிரகாசத்திலும் அலங்காரத்திலும் அதிகரிப்பதுபோல இச்சிறு நங்கையும் வயதிலும் அறிவிலுஞ் சரீர சோபனத்திலுந் தினேதினே வளர்ந்துகொண்டேவந்தாள். மனோரஞ்சிதத்தைக் காண்பதே யெனக்குமனோரம்மியம். அவளது இனிய தொனியைக்

கேட்பதே யென்செவிகட்கு அதி மதுரம். ஆ! இச்சுந்தரமானதை பொருநான் திருமணப் பந்தலில் மங்கல்யஞ்சூட்டி யடையேனே! ஜாதிபேத மில்லாவிடினும்! ஐயோ! மதபேதம் மலைபோற் குறுக்கிடுகிறதே!" என்று ஆறுத் துயரத்தோடு வீடுபோய்ச் சேர்ந்தேன்.

சற்றுப் பொறுத்து எனது தங்கை விஜயவல்லியும் மனோரஞ்சிதமும் பரீக்ஷைக்கென்று சொல்லிக்கொண்டு பாடசாலைக்குத் தீவிரமாயோடினார்கள். அப்போது சுமார் பத்துமணியிருக்கலாம். பன்னிரண்டடித்து இரண்டு மணிக்குத் திரும்பிவந்தார்கள். வந்தவுடன் என் சகோதரி வெகு அக்களிப்போடு என்னிடமோடிவந்து:—"அண்ணு! நல்ல சமாச்சாரங் கொண்டுவருகிறேன். நீங்களெனக்காக இரவும் பகலும் பட்டப் பிரயாசை வீணுய்ப்போகவில்லை. இன்றையத்தினம் பரீக்ஷை நடந்தது. நான் மூன்றுவது வகுப்பிற் றேறிவிட்டேன்" என,

நான்:—"நீ யெவ்விதந் தேறினுய்? பூகோளம் உனக்குச் சுத்தமாய்த் தெரியாதே" என,

விஜயவல்லி:—"நல்லவேளையாய் பூகோளத்தில் என்னை யொன்றுங் கேட்கவில்லை. மற்ற விஷயங்களைக் கேட்டபோது நான் சரியாய்ச் சொன்னேன். கணக்கைப் பிழையின்றி யெழுதிவிட்டேன். சுகாதாரவிளக்க மெனக்குச் சரியாய்த் தெரியாமலிருந்தது. இந்த விராத்திரி நன்றுய்ப் படித்துவைத்திருந்தேன். ஆதலால் அதிற்கேட்ட கேள்விகட்குத் தக்க விடை யெழுதிவிட்டேன். நான் முதல்வியாய் வராவிட்டாலும் மூன்றுவது நான்காவதுக்குள்ளிருப்பேன். அதுவே போதும்" என,

நான்:—"எனக்கு மெத்த சந்தோஷம். இவ்வருஷகாலத்தில் நான்காவது வகுப்புப் பாடங்களை வாசித்துப் பயிற்சி செய்யவேண்டும். உன் விஷயமிப்படியாகில் மனோரஞ்சிதத்தின் விஷயமெப்படி? சோதனையிற் றேறினுளா?" என,

விஜயவல்லி:—"அண்ணே! அவள் எப்போதாகிலும் எந்தப் பரீக்ஷையிலாகிலுந் தப்பிப்போனுளா? இப்போது தப்பிப்போவதற்கு, சொல்லுங்கள். அவளெப்போதும் முதல்வி. இப்போதும் முதல்விதான்" என அதைக்கேட்டு நான் சந்தோஷித்துக்கொண்டிருக்கும்போது, இராஜகுணமணியம்மாளும் மனோரஞ்சிதமும் என்னையும் எனது பந்துக்களையுந் தேடிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்தார்கள்.

பிறகு நானும் என் தாய் தந்தையரும் மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப்போக, அவர் எங்களை யுபசரித்து ஆசனங்களிலுட்கார்த்தி யெங்களை நோக்கி :—"எனது ஜேஷ்ட குமாரத்தி இன்றையத்தினம் பரீக்ஷையிற் றேறிவிட்டமையால் எனது தம்பி திருமறைநாயகத்துக்கும் என் மச்சி இராஜகுணமணிக்கும் ஓர் சிறிய விருந்திடப்போகிறேன். இந்த நாள் சந்தோஷகரமான தினமாதலால் என் மித்திரருக்குச் சிற்சில மரியாதைகளைச்செய்வது எனக்கு வழக்கம்" என்று சொல்லி, சகலருக்குஞ் சர்க்கரை வழங்கிச் சந்தனம், பூவாரம், தாம்பூல முதலிய இரஸ்துக்களைப் பரிமாறினர்.

பின்பு எனது தந்தையராகிய சந்திரசேகரம்பிள்ளை :—"திருமறைநாயகத்துக்கும் இராஜகுணமணிக்கும் இன்னும் விவாகமாகாமலிருப்பதற்குக் காரணமியாது ?" என்று வினவ,

மதுரநாயகம்பிள்ளை ;—"இராஜகுணமணி தனக்கு விவாகம் வேண்டுவதில்லை. தான் என்றங் கன்னிகையாய் நிலைத்திருக்க வேண்டும். தன்னுடலை யாண்டவனுக்கு வசீகரம்பண்ணி மானிட தேக சங்கமத்தை யொழிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறாள். எனது தம்பி திருமறைநாயகம் பி. எல். வரையில் வாசித்து பரீக்ஷையிற் றேறியுஞ் சர்க்கார் உத்தியோகத்திற் பிரவேசிக்க மனமின்றி சிலவிசை பாடசாலைகளில் உபாத்தியாயராகப் போகவேண்டுமென்றும் வேறு சமயத்தில் உலகத்தைத்துறந்து சந்நியாசஞ் சாதிக்க வேண்டுமென்றுங் கருதுகிறான். ஒருக்கால் கல்யாணம்பண்ணிக்கொள்வதாயுஞ் சொல்லுகிறான். தான் இல்லறத்தை விரும்பும் பக்ஷத்தில் குணமணியையன்றி வேறு யாரையு மேற்றுக்கொள்வதில்லையென்று சொல்லுகிறான்."

என் தந்தை :—"என்ன விந்தை ! தம்பி திருமறைநாயகம்! ஒருமனிதன் கல்யாணமின்றிப் பிரமச்சாரியாயிருப்ப தியல்பா? எங்ஙனமிருக்கக்கூடும்? உலக விர்த்திக்காகக் கடவுள் ஆணையும் பெண்ணையுஞ் சிருஷ்டித்தார். அவர்கள் பிறக்கும்போதே பற்பல பாசங்களோடு பிறக்கின்றார்கள். பாசங்களில் முக்கியமான ஆண் பெண்ணையும் பெண் ஆணையுந் தேடுவதாம். இந்நாட்டமியல்பு; தேவர்களும் பெண்டிரோ டிருக்கின்றார்கள். ஜீவஜந்துக்களும் ஆணும் பெண்ணுமாய்க் கூடி வாழ்கின்றன. ஆதலால் மனிதன் பெண்ணைத் துறந்து பிரமச்சாரியாய் ஜீவிப்பது அபத்தம்!"

திருமறைநாயகம் :— "அத்தான்! நீங்கள் சொல்லுவதில் மெய்யுமுண்டு; பொய்யுமுண்டு. விவிலிய நூலில் நாம் பாராயணம் பண்ணுவதுபோல, கடவுள் உலக விர்த்திக்காக ஆதியில் மனிதனை யாணும் பெண்ணுமாய் நிர்மித்தார். அதுமெய். ஆனால் இப்போது உலகம் போதுமானவரையில் விர்த்தியடைந்துவிட்டது. சிலர் சன்னியாசிகளாய் ஜீவிக்கில், அதனால் இனி யுலக விருத்தி குறைந்து போகாது. ஒவ்வொருவனும் விவாகம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று எப்போதேனும் எவ்விடத்தேனும் யாருக்கேனும் ஆக்ஞை பிறப்பித்தாரா? கிஞ்சித்துமில்லை. ஒவ்வொருவனுக்கும் ஸ்வாதீனமுந் தனக்கிஷ்டமானதைச் செய்ய அல்லது தியஜிக்க மனஸ்வதந்தரியமுமுண்டு. சன்னியாச நோன்பு நோற்க எனக்கிஷ்டமாகில் கடவுள் சந்நிதானத்தில் எவ்வாற்றானும் நான் அபராதியன்று. எங்குருவாகிய இயேசுபெருமான் மனிதனா யவதரித்து சந்நியாசம் புரிந்து தவநோன்பைக் காட்டி, சன்மார்க்கத்தைப் போதித்து, ஜீவலோகங்களை யிரக்ஷித்து, சகலத்தையுஞ் சீரிட்டு பரகதிக்கேறிவிட்டார். நான் அவருடைய சிஷ்யனாதலால் அவரது திருச்சுவடுகளைப் பின்பற்றி நடப்பது தக்கதன்றோ? நிர்ஞானஜெந்துக்களிலுஞ் சில சரீரம் பின்னமடையாமலே ஜீவிக்கின்றன; சில ஆண் பெண்ணைத் தேடாமலும், பெண் ஆணை நாடாமலும், நாடி வரினும் ஒப்பாமலுஞ் சஞ்சரிப்பதை யறிவோம். நிர்மதி விலங்குகள் அவ்வாறு ஜீவிக்குமேல் அறிவைப்படைத்த மனிதனேன் சந்நியாசஞ் சாதிக்கக்கூடாது? மனிதரில் எல்லோருமே விவாக பாசத்தால் பீடிக்கப்பட்டிருக்கின்றார்களா? ஐம்புலன்களை யறுத்துச் சுட்டவர்களில்லையோ? மாம்சேச்சையை வெறுத்தொழித்தவர்களெத்தனைபேர்! ஆகலின் நான் சந்நியாசநோன்பில் நிலைபெறுவேனாகில் அது இயல்பை முரணாது."

"உங்களது தேவர்க்களின் உதாரணம் உங்களுக்கே யல்லாது எங்கட்கு எள்ளளவேனுஞ் செல்லாது. கடவுள் ஆணுமல்லர் பெண்ணுமல்லர். யாதாமொருவர் பெண்டீர் பிள்ளைகளை வைத்துப்படைப்பாரேல், அவர் கடவுளல்லர்; அது இயல்பு. ஆமெனல் தர்க்க நியாயங்களுக்கு முற்றிலும் விரோதம். பெண்டீர் பிள்ளைகள் சகிதரானவர்களை யெங்ஙனந் தேவர்களென்று சொல்லுகிறது? அவர்களை தேவர்க்களென்பது தகாது. அப்படியிருக்க அவர்களைப் பின்செல்ல நமக்குக் கடமையேது?"

சந்திரசேகரம்பிள்ளை :— "ஏது? நீ தர்க்கத்தில் நிபுணனு யிருப்பாய்போலும். எதிரி சம்வாதம்பண்ண ஏற்படும் பக்ஷத்தில் பலத்த சத்தமுஞ் சண்டையும் வரும்போலிருக்கிறதே!"

மதுரநாயகம்பிள்ளை :—"அத்தான்! அவன் சிறுவன். அவனுடைய சொற்களைக் குற்றமாகக் கொள்ளவேண்டாம். அவனுக்குத் தர்க்கமென்றால் கரும்பு. வயதிற் சிறியவனாயினும் வாதிப்பதிற் பெரியவன். இராமாயணம் மகாபாரதம் முதலிய பதினெண் புராணாதிகளையுங் கரைத்துக் குடித்துவிட்டிருக்கிறான். ஆங்கிலேய பாஷையிற் திருப்பப்பட்டிருக்கும் வேதங்கள், வேத பிரமாணங்கள், உபநிடத்துகள், வேதாந்தம், நியாயம், சாங்கியம், வைசேஷிகம், யோகம் முதலிய நூல்களை வாசித்திருக்கிறான். அவன் தர்க்கம்பண்ணத் தலைப்பட்டானானால் சாப்பாட்டை முதலாய் மறந்துவிடுவான். சிறுவமுதல் அவனுக் கதுவே யப்பியாசம். அவனியாதோர் காரியத்தைப் பார்த்தானானால் அதன் குணங் குறிகளை யறியாமல்விடான், நுண்ணறிவு வகித்தவனாதலால் எவ்விஷயத்தையு நுட்பமா யறிந்துகொள்வான். நூறுபேர் அவனோடு சம்வாதம் பண்ணினபோதிலும் ஒவ்வொருவனுக்குந் தக்கவிடையளிப்பான்; ஆக்ஷேபிப்பான்; சமாதானங்கூறுவான். அவன் பேச்சிற் சதுரன்! பேசவாரம்பித்தானே பெருஞ் சாமாரி பொழிவான். எதிரி திக்குமுக்கலாடித் திகைத்து நிற்பான். வேண்டுமென்று யாரையுந் தேடிப்போகான். வலிய சண்டைக்குப் போகான்; வந்த சண்டையும் விடான். இதுவே யவனுடைய முக்கிய குணம்."

சந்திரசேகரம்பிள்ளை :— "அப்படியாகில் வாயைப் பொத்திக்கொண்டு கூட்டிலடங்குவது வாசி."

திருமறைநாயகம் :—"அத்தான்! மன்னிக்கவேண்டும். தங்களுக்கு மனோவியதை வருத்தவேண்டுமென்பது கிஞ்சித்தும் எனது தாற்பரியமல்ல. தங்க ளாக்ஷேபங்களுக்குச் சமயோசிதமாய் விடைகளுஞ் சமாதானமுங் கூறினேனே தவிர நான் வேறொன்றுங்கொண்டவனல்ல."

சந்திரசேகரம்பிள்ளை :—"நானும் பரிகாசத்திற்கு மேற்கூறிய வண்ணம் பேசினேனேயல்லாது இதர நோக்கத்தோடு பேசவில்லை. உனது தாற்பரியத்தையுந் தெரிந்தேன்" என்று முடித்து குணமணியை நோக்கி :—"மகளே! நீ யேன் கல்யாணத்தை வெறுக்கிறாய்? நீ மணமுடித்து, மங்கல்யந் தரித்துக்கொள்வது மங்களக

மாயிற்றே. கடவுளின் ஆக்ஞைக்குப் பயந்து நிர்மித்த சாசன சம்பந்தமான கல்யாண சுகபோகங்களைச் சுகிப்பது தோஷமல்லவே. அங்ஙனந் தோஷமல்லாத கிரியைகளைப் புரிந்தாலென்ன ?"

குணமணியம்மாள் :— "அப்பா! நீங்கள் சொல்வது நிஜமாயினும், நீங்களெனக்குச் சொல்லிக்காட்டியவை நிர்தோஷக நலங்களாயினும் இந்நிஜத்தை மேலிட்ட நிஜமும் இந்நலங்களை மேலிட்ட நலங்களுமுள்ளன. எனக்கு மனதும், மனஸ்வதந்தரியமும், ஸ்வாதீனமும், ஸ்வயக்கிரியைகளுமுள்ளன. என் செயல்களுக்கு நானே யுத்தரவாதி. நான் செய்கிறதை யின்னதென்றறிகிறேன். கன்னிகா விரத நோன்பு நோற்கிறேன். சரீர சுசிகரத்தையும் இருதய சுத்தியையும் விரும்புகிறேன். ஆண் பெண்ணைத் தொடுவதும், பெண் ஆணைத் தொடுவதுந் தீண்டலல்லவா? எனைய மெய்த்தீண்டலால் ஒவ்வொருவரின் சுசிகரம்போயிற்று; சரீரத்திற் குன்றலும் ஆத்ம தத்துவங்களிற் குறையு முண்டாகின்றன. மாம்சேச்சைகள் மேற்கொள்ளத் தலைப்படுமேல் தன்னிதய காதலனாகிய கடவுளை எங்ஙனம் உத்தமவிதமாய் நேசிக்கிறது? வேதாகமத்தில் நானென்ன வாசித்தேன்? எம்பிரான் இயேசுநாயகரின் மகா ஸ்தானபதியாகிய ஸ்ரீமத் பவுல் உபதேசிப்பதென்ன? 'புருஷன் முக மறியாக் கன்னிகை தனது ஆத்ம சரீர சுசிகரத்தோடு இருக்கவேண்டி, தனதாண்டவனுக்குச் சம்பந்தப்பட்டவைகளை நினைக்கிறாள். சுமங்கலையோவெனிற் றன் கணவனுக்கும் உலகத்துக்கும் எங்ஙனம் பிரியப்படுகிறதென்று கவலைப்படுகிறாள். யாதாமொருவன் தன் கன்னிகையை ஒருவனுக்குப் பாணிக்கிரகணம்பண்ணிக் கொடுப்பானுயின் அது நன்றே; பாணிக்கிரகணம் பண்ணுவிடில் உத்தமம்" என்கிறார். அஃதாவது: தனது கன்னிகா முத்திரை பின்னப்படாமல் பதிவிரதையாய் நின்று மனப்பூர்வமாய்த் தன்னிதய காதலனாகிய கடவுளைச் சேவிக்க முயலுகிற வொரு பெண்ணை, அவளது தகப்பன் மாணிடமெய்த் தீண்டலுக்கு அவளைக் கையளிக்காமற் காப்பானுயின் அது பெருஞ் சலாக்கியமே. இத்தப் பேறான விருத்தியையே நான் விரும்புகிறேன். எனது அத்தான் திருமறைநாயகம் பிள்ளைக்கு மிதுவே பொருந்தும். அவரும் பரசங்க தீண்டலைத் துறப்பாராயின் அதுவே யவருக்குப் பெரு மோக்ஷசாதனமாகும். நாளும் அவரும் விரத கன்னிகாதம்பதிகளாய் ஜீவித்து பரமபதவியை யடைவோம். அதுவே யென் றுத்பரியம்."

சந்திரசேகரம்பிள்ளை :— "மகளே! நீயுந் திருமறைநாயகம் பிள்ளையு மாத்திரம் பதவியை யடைவீர்கள்! சம்சார வாழ்க்கையைத் தழுவிக்கொண்டு இல்லறத் தர்மங்களை யனுஷ்டித்துவரும் மதுரநாயகம்பிள்ளையும் உனது தமக்கை யபிராமியம்மாளும் நானும் இன்னு மற்றுள்ளோரும் பதவியை யிழந்துபோவோமா?"

குணமணி :— "அப்பா! அதுவல்ல என் கருத்து. முக்தியிலும் படிகளிருக்கின்றன. பிரயாசப் பிரயத்தனங்களுக்குத் தக்க வேலை; வேலைக்குத் தக்க சம்பளமும். இராஜரீக முறைமையை நோக்குங்கள்: அரசும், அமைச்சும், பிரதானிகளும், பற்பல பரிசுகளுங் கூடி யரசாளுகின்றார்கள். ஆயினும் ஒரு கண்டசிராயாளுகிறார்களா? இல்லை. அவர்க ளதிகாரமுறையிற் படிகளுள்ளன. அவர்கள் சம்பளத்திலுஞ் சுகத்திலுந் தாரதம்மியமிருக்கின்றது. சக்கரவர்த்தி சகலரையுஞ் சரியாய் நேசிக்கிறானா? அதுவுமில்லை. அவன் சமஸ்தரோடும் ஒரேவண்ணமாய் ஐக்கியப்படுகிறானா? இன்னுங்கிடையாது! அவனுக்குப்பயிரங்க சங்கங்களும், இரகசிய மந்திராலோசனைகளுமிருக்கின்றன. அரசன் தன் மந்திராலோசனையிற்கூடி வருஞ் சகல சாமாசிகளுக்குந் தன்னிருதயத்தைத் திறந்து காட்டுகிறானில்லை. அவர்களில் விசேஷ சலுகையடைந்தவர்கள் மகா சொற்பம் பெயர். அவனுடைய முழுசலுகைக்கொண்டவர்கள் அதிலுங் கொஞ்சம் பெயர். வேந்தனுடைய சகல இரகசியங்களையு மறிந்து அவனுடைய பூர்ண பக்ஷத்துக்குரித்தானவர்கள் இரண்டொருவர். அவர்களிலுமுதல்வன் இரண்டாவது என்றுசொல்லப்படுகிறார்கள். அப்படியிருக்க, தெய்வ இராஜாங்கத்தில் தெய்வ நீதி............"

சந்திரசேகரம்பிள்ளை :— "ஓ!! இதுவெல்லாம் மனுநீதிக்கொவ்வுமே தவிர தெய்வநீதிக்கொவ்வாது. கடவுள் பாரபக்ஷமில்லாதவர். அங்ஙனமாதலால் அவர் சகலருக்குஞ் சமமாய் முக்தியளித்தல்வேண்டும். ஆதலின் நீ சொல்வது முற்றிலுந் தப்பு."

திருமறைநாயகம் :— "குணமணி கூறுவது கிஞ்சித்தேனும், ஓரணுவேனுந் தப்பாகாது. அவள் சொல்லும் நியாயங்கள் பாரமானவைகளே. அவள் ஐந்து வயதுதொட்டுப் பதினறு வயது வரையிற் பாடசாலைகளில் வாசித்தது வியர்த்தமன்று. அவள் சாமான்னிய பெண்ணல்ல: நாலுங்கற்றறிந்த சுமதி. எழுத்து, இலக்கணம், கணிதம், தர்க்கம்முதலிய நூற்களிற் சிறந்த மேதாவி. அபிராமியண்ணியிடத்திற் குண அழகு முக்கியம். அவள் சொல்லும் நியாயங்களிற்

குறையேது.' அவைகளைச் சீர்தூக்கிப்பாருங்கள், அவைகளில் வீண் வார்த்தைகளுண்டா? அவள் எடுத்துரைத்த மானிட அரசியல்பு கடவுளது அரசின் பிரமாணிக்கப்படம். அவரிடத்தில்லாதது நம்மிடத்திலில்லை. சகலமும் அவரிடத்தினின்று வருகிறது. அவர் சமஸ்த சிருஷ்டிகளுக்கும் அவைகளின் கிரியைப் பிரவர்த்தனங்களுக்கும் மூலசொரூபம். இம்மூலசொரூப வடிவமாகவே யுலகத்தையும் அதனையாளும் அரசு பரிபாலனத்தையும், பரிபாலன வகையிற் படிகளையும், படிகட்குத் தகுந்த பலன்களையும், பலன்கட்குத் தகுந்த பதவிகளையும் அமைத்தார். நீங்கள் சொன்னதுபோல், அவர் பாரபக்ஷமில்லாத கடவுளாதலால் அவர் தாரதம்மியம் பார்த்தே பதவியை யளித்தல்வேண்டும். அவர் தம்மை முற்றிலு நேசித்தவர்கட்கும் அற்ப சொற்பமாய் நேசித்தவர்கட்குஞ் சமமாய்ப் பதவியை யளிப்பாராயின் அவரது நிறைந்த நீதி யெங்கே? விரத்தனுங் கன்னிகையும் பாசங்களை யடக்கிப் பஞ்சபுலன்களை யறுத்துச் சுட்டெரித்து, ஆத்ம சரீர சுசிகர சீலராய் அவரை நேசித்து அவரோடு உத்தம விதமாய் ஐக்கியப்பட்டு உத்கிருஷ்ட புண்ணியங்களைப் புரிந்தவர்களாதலால் உச்சித பதவிக் குரித்தானவர்களல்லவா? உங்கள் பிரம்ம சமயத்திலும் பற்பல பதவிகளுண்டென்று சொல்லுகிறீர்களே அவைகளை யறியீர்களோ? அறிந்தும் நம்பவில்லையா?

சந்திரசேகரம்பிள்ளை:—"அவைகள் எவை?"

திருமறைநாயகம்:—"சாலோக்கிய, சாரூப்பிய, சாமீப்பிய, சாயுஜ்ய பதவிகளாம்."

சந்திரசேகரம்பிள்ளை:-"சாலோக்கிய பதவியென்கிறதென்னை?"

திருமறைநாயகம்:—"சாலோக்கிய மென்பது 'சஹலோகம்' என்று விரியும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு மார்க்கங்களில், சரியை யென்னு மார்க்கத்தைத் தெரிந்துகொண்டு அதன் தர்மங்களை யநுஷ்டித்தவன் சாலோக்கிய பதவியை யடைந்து கடவுளோடு அவரது இராஜ்ஜியத்திற் சுகத்தைப் பெறுவான்."

சந்திரசேகரம்பிள்ளை:—"மற்றுமுள்ள மூன்று பதவிகளையும் விரித்துரை பார்ப்போம்."

திருமறைநாயகம்:—"சாமீப்பிய பதவி கிரியை மார்க்கத்துக் குரித்தானது. ஸ்நானம், நியமம், நிஷ்டை முதலிய நித்திய கர்மங்

களை நிறைவேற்றினவன் சாமீப்பிய பதவியைப் பெற்று கடவுள் நாட்டில் அவரருகில் உட்கார்ந்து பெருஞ் சுகத்தை யடைவான். சாரூப்பிய பதவி யோகமார்க்கத்துக்குக் கைம்மாறாக அளிக்கப்படும் பதவியாம். பதஞ்சலி முனிவர் வெளியிட்ட யோக மார்க்கத்தைப் பின்சென்று அதன் சகல இரீதிகளையும் விதிகளையும் அநுசரித்தவனுக்குச் சாரூப்பிய பதவி கிடைக்கும். இம்முத்தியைப் பெற்றவன் சற்றேறக்குறைய தெய்வ ரூபமாய் மாறிப்போவானாம்! இதனைக் கண்டவனியார்? சாயுஜ்ய பதவி ஞானமார்க்கத்துக்குப் பிரதிபலனாம். அறியாமை நீங்கி யறிவு வந்தவிடத்து, மனிதன் தன் கடத்தைவிட்டகன்று சாயுஜ்ய பதவியை யடைந்து, தானுந் தெய்வமும் வேறாயின்றி யொன்றாய்ப் போகிறானாம். 'ப்ரம்ஹாஸ்மி' (*Brhamasmi*) 'நான் ப்ரம்ஹமாயிருக்கிறேன்' என்ற வேதாந்தசுலோக மப்போதுதான் நிறைவேறுகின்றதாம். அஃதென்னமோ! நானறியேன்!! அத்தான் இது எமது கொள்கையன்று நம்மிருவர் கொள்கைகளெப்படியிருப்பினுஞ் சரி. உங்களது கொள்கைப்பிரகாரம் முத்தியிற் படிகளிருக்கின்றனவென்று தெற்றெனத் துலங்குகின்றது. எனது இரக்ஷகபெருமானாகிய இயேசுநாயகருந் திருவாய் மலர்ந்து:—'*In domo Patris mei mansiones multae sunt*' 'என் பிதாவின் வீட்டில் வாசஸ்தலங்கள் வெகுவாயுள்ளன' என்றார். அஃதாவது: முத்தி யொன்றாயினும், முத்தியைச் சுகிப்பதிற் படிகள் பலவுண்டென்றும் அது ஒவ்வொருவனுடைய பிரயாசப் பிரயத்தனம் கிரியைகளுக்குத் தக்கதாயிருக்குமென்றுந் தாற்பரியப்படும்."

சந்திரசேகரம்பிள்ளை:—"அப்பப்பா! போதும் போதும்!! உன் பேர் உனக்கேத்தகும். உன்னைத் திருமறைநாயகமென்றாற் போதாது! இனி வெகுமறைநாயகமென்றே யழைக்கவேண்டும். உனக்கு ஒருமத மாத்திரமல்ல, பற்பல வேதங்களும் அவைகளின் கொள்கைகளும் பரிபூரணமாய்த் தெரியும்போலிருக்கிறது' உன்னையும் உனது குணமணியையும் வெல்ல என்னாலுமாகாது; இன்னும் யாராலுமாகாது. மதுரநாயகம் பிள்ளையும் உன்னெதிரில் வாய்ப் பொத்திக்கொள்ளவேண்டுவதுபோலும்! நீயும் குணமணியும் இல்லாச்சிரமத்தைத் தழுவிக்கொள்ளும்பட்சத்தில் மதுரநாயகம் பிள்ளையையும் அபிராமியம்மாளையும் மேலிட்டுப்போவீர்கள்; அவர்களைவிட நூறுமடங்கு அதிகம் பிரகாசிப்பீர்களென்று திண்ணமாய் நம்புகிறேன்" என,

திருமறைநாயகமும் குணமணியும் ஒருமொழியாய் :—" ஆ! அப்படிச் சொல்லாதேயுங்கள்!"

சந்திரசேகரம்பிள்ளை ;— "அதிற்றடையென்ன?"

திருமறைநாயகம் :— "பெருந்தடையுண்டு! நீங்கள் சொல்வது பேரபத்தம்! எனது தந்தையர் சச்சிதானந்தம்பிள்ளைக்கு நாங்கள் எட்டுபேர் புத்திரர். எங்கள் ஐவரில் எனது தமயன் மதுரநாயகம்பிள்ளை மூன்றாவது புத்திரராயிருப்பினும் அவர் ஏழு சிறு நக்ஷத்திரங்கட்குள் சூரியனைப் பிரகாசிக்கின்றார். எனது மாமா ஸ்வாமி சவுந்தரநாயகம்பிள்ளை எட்டுப்பிள்ளைகளைப் பெற்றார். எணமரில் அபிராமியண்ணி சந்திரன்போல இலங்குகின்றார்கள். எங்களிரு குடும்பங்களில் யாரேனும் ஒருபோது மிவ்விருவரையு மேவிடப்போகிறதில்லை. விளையும் பயிர் முளையிற்றெரியும். இதுகாறும் எனது தமையனார் பேரிலும் அண்ணிபேரிலும் யாரேனும் எக்குறையுஞ் சொல்ல நான் கிஞ்சித்துங் கேட்டேனில்லை. மற்றுள்ள பதின்மூன்று பிள்ளைகள் பேரிலுஞ் சிற்சில குறைகளுண்டு. நான் தாய் தந்தையர்மீது பக்ஷமில்லாக் கன்னெஞ்சன். குணமணி சகலவித நற்குணங்களைப் படைத்தவளாயினும் க்ஷணத்துக்கு க்ஷணம் மூன் கோபங்கொள்வாள். எனது தமக்கை பத்மாமணியம்மாளுக்குப் புருஷனைத் தவிர மற்ற யாருந் தேவையில்லை. எனது தங்கை இராமணிக்குத் தாயார் எப்போதுந் தன் பக்கத்திலிருக்கவேண்டும்; அவர்கள் மற்றப்பிள்ளைகளிடம் போகக்கூடாது, இவ்வாறு எங்களனைவருக்குஞ் சிற்சில சுயபக்ஷம் நிறைந்த சில்லறைக் குற்றங்களுளவாயிருக்கும். இவர்களிடத்திலோ இச்சில்லறைக் குற்றங்களையும் கண்டுபிடிக்க இயலாது. அப்படியிருக்க நீங்கள் சொன்னது முற்றும்பொய். எனது தாயாராகிலும் என் அத்தையென்கிலும், என் தந்தையராகட்டும், எனது மாமாவாகிலும் ஒருகாலத்திலும் என் றமையனார்மீதும் அபிராமியண்ணிமீதுங் குறைசொன்னதை நான் கேட்டறியேன். இவ்விருவரும் நல்லபிள்ளைகளில் உத்தமராயிற்றே. மற்ற பதினால்வரில் இவர்களைவிடக் கல்வியிலுங் குணத்திலுந் தேகாலங்காரத்திலு மீசுரமானவர்களியார்? ஒருவருமில்லை. சிலவேளை மனோஞ்சிதம் இவர்கட்கு மீசுரமாயிருப்பாள் போலும் தாயைப்போற் பிள்ளை; நூலைப்போற் சரடு. தாயுந் தந்தையுங் குணாலங்கார புருஷ பூவையர். ஐடாலங்கார சதிபதிகள்; சமஸ்த தர்மாலங்கார தம்பதிகள். ஆதலால், இவர்களுடைய குண அழ

னும், புண்ணியப் பிரவர்த்தனங்களுஞ் சீர இலக்ஷணமும் எங்கள் மனோரஞ்சித கன்னிகையிடத்து எறுபொழுதைப்போல் மேன்மேலும் அதிகரிக்கக் காண்கிறோம். இவர்களுடைய குணஸ்திதிகளை யடைவதற்கு எனது சிறுவிக்குப் பெருமதிஷ்டமுண்டு."
இன்னும்,....................என,

மதுரநாயகம்பிள்ளை :— "திருமறை நாயகம்! போதும்! போதும்!! வீண் கதாப் பிரசங்கப்பண்ணாதே. அளவை மிஞ்சி யாரையும் புகழாதே. யாரும் உயிரோடிருக்கும்போது எதிரிலியாருஞ் சொல்லாதே; மறைவில் மிதமாய்ப் பேசு. இதுவே நமது கிறிஸ்துவேதத்துக் கொவ்வும்" என,

என் பிதாவாகிய சந்திரசேகரம்பிள்ளை :— "இன்றைக்கு இவ்வளவு போதும், நமது தோட்டவீட்டிற் சமயம் வந்தாற் பேசிக் கொள்வோம். எனக்குச் செலவுகொடுங்கள். கல்பமணிக் கிராமத்திற்குப்போகச் சாமான்கள் தயார்செய்யப்போகிறேன். ஆனாற் குணமணியுந் திருமறைநாயகமும் இனி யெந்நாளு நம்மைவிட்டுப் பிரியாமலிருப்பதே யெனது கோரிக்கையும் அபிலாஷையும்" என்று சொல்லி யெழுந்துபோய்விட்டார்.

நான் எனக்குள்ளே :— "இவ்வாறு எவ்விடத்தும் யாவராலும் புகழப்படு மிச்சிறு நங்கை தன் றாய்தந்தையையு மேவிட்டுப் போவாளென்பதிலென்ன தடை? அவளிடத்து என்ன குறையிருக்கின்றது? அவளது அறிவோ நுண்ணறிவு. சடலமோ அரம்பையின் சடலம். குணமோ மதிப்பிலாதது. இவள் யாருக்கு வாய்ப்பாளோ! நானவளை யாசித்தாலாகாதோ? இக்குண லக்ஷ்மி யொருநாள் எனக்குச் சித்திக்காளோ? ஏ! பகவானே! ஏனிந்த ஜாதிபேதம்? ஏனிந்த மதபேதம்? ஏனிந்த முன்னோர் சம்பிரதாயக் கட்டு? ஜாதி சம்பிரதாயக்கட்டின்றி ஐரோப்பியர் பாக்கியவான்களாய் ஜீவிக்கவில்லையா? அவர்களல்லவா நம்மை யாளுகின்றார்கள்? அவர்களாள, நாமேன் தாழவேண்டும்?" என்று நான் பலவாறு யோசித்துக்கொண்டிருக்கும்போது,

## 9-ம் அத்தியாயம்.

மதுரநாயகம்பிள்ளையுஞ் சந்திரசேகரம்பிள்ளையுந் துல்யமணிகிராமத்திற்குப் போதல். காலையுல்லாசம். இராஜாகுணமணி எனுங் கவிச்சிரோமணி, சிருஷ்டிகர்பேரில் ஓர் உபந்நியாசம். வேதாந்தகண்டனம். சிருஷ்டிகர் வேறு; சிருஷ்டி வேறு.

மனோரஞ்சிதம் எல்லோரும் எழுந்துபோய்விட்டதைக்கண்டு தனது தந்தையை யணுகி :—“ஆஜி! பரீக்ஷை முடிந்துபோயிற்று. நான்காவது வகுப்பில் நான் தேறிவிட்டேன். இனி நானென்ன செய்யவேண்டியது ?”

மதுரநாயகம்பிள்ளை :— “இனி நீ யென்ன செய்யவேண்டுமென்று கேட்கிறாய்? உனக் கேற்கெனவே நான் சொல்லியிருப்பது போல வருகிற ஆகஸ்டு மாதம் ஆரம்பமுதல் இங்கிலீஷ் பாடசாலைக்குப்போய் ஆங்கிலேய பாஷையை யின்னும் ஏழு எட்டு வருஷமளவும் அப்பியசித்துவருவாய். ஆனாலதற்கு நீ நவ சற்பிரசாதமடைந்துவிடவேண்டியது. எனக்குச் சற்றேறக்குறைய சொஸ்தமாய்விட்டது. நீதியாசன சாலைகட்கெல்லாம் இராஜா நாளாரம்பிக்கப்போகிறது. பாடசாலைகட்கும் வாவுகாலந் துவக்கப்போகிறது. இன்னுமிரண்டு மூன்று தினங்கட்குள்ளே யெல்லாப் பள்ளிக்கூடங்களுங் கலைந்துபோம். மே மாதம் ஐந்தாறு தேதிக்கெல்லாம் நாம் துல்யமணி கிராமத்திற்குப் போவோம். நீ யுனது உடுப்புக்களையெல்லாஞ் சலவைக்குப் போட்டுப் பெட்டியில் வைத்துக்கொள். உனது சில்லறை சாமான்களையும் பாடசாலைப் புத்தகங்களையும் ஞானோபதேச புத்தகங்களையு மறந்துபோகாதே” என்று கூறிவிட்டு எழுந்து வெளியிற்போக ஆரம்பித்தார்.



அப்போது அவரது தாயார் உரூபலாமணியம்மாள் விரைவாயோடிவந்து:-“மகனே! நீ தோட்டத்துக்குப்போகிறது நிஜந்தானோ? கொஞ்ச நாட்சென்று போனாலாகாதா? இப்போது என்ன அவசரம்? உனது உடம்பு இன்னுஞ் சரியாய்ச் சொஸ்தமாகவில்லையே! நீ வண்டியிற்போனால் உடம்பு அதிர்ந்துகொள்ளாதா?” என,

மதுரநாயகம்பிள்ளை ;—“இல்லை அம்மா! இனி யாதோர் விபத்தும் வாராது, சீக்கிர முழு சவுக்கியமடையவேண்டுமாகிற் றோட்டத்துக்குப்போவதே யுசிதம். நீங்களங்கு வருவீர்களா? வரமாட்டீர்களா?” என,

உரூபலாமணியம்மாள் :— "மகனே! இனி யொருக்காலும் உன்னைவிட்டுப் பிரியேன். இந்தப் பதினெட்டு மாதங்களா யுன்னை விட்டுப் பிரிந்துதான் உன்னைத் தோற்றுவிட இருந்தேனே! கால் மணிநேரம் உன்னை விட்டகலேன்" என,

மதுரநாயகம்பிள்ளை :— "அம்மா! என்னருகிலிருந்து என்னைப்பார்த்துக்கொண்டிருந்தால் மற்ற பிள்ளைகளைக் கவனிக்கிறதி யார்? அவர்களைக் காட்டிலு நான் மேலா?"

உரூபலாமணியம்மாள் :— "ஆ! என் கண்ணே! கண்மணியே! மற்ற பிள்ளைகளைவிட நீ மேலா வென்று என்னைக்கேட்கமனந் துணிந்தாயா? உனக்கும் என் மற்றபிள்ளைகளுக்கும் உரியொப்பனை யுண்டா? மேலா வென்று மெல்லக் கேட்கிறாயே! உன்பேர் தனுநந்தனல்லவா? உன்னை யேதுக்காக மதுரநாயகமென்று கூப்பிடத் துவக்கினேன்? உன் சிரவண குணத்துக்கல்லவா? ஆ! என்னதி மதுரமே! என் மற்ற மக்கள் நீ யாவார்களா? இதோ இங்கு நிற்கிறானே யிந்த கன்னெஞ்சப் பயல்! இந்தப் பேச்சுக்கற்ற திருமறை நாயகமிருக்கிறானே! பெற்ற மாதா கூப்பிட்டால் ஏனென்று கேட்பானா? மேஜை நிறையப் புத்தகங்களை விரித்துப் போட்டுக்கொண்டு பொழுது முப்பதும் படித்தவண்ணமா யிருப்பான். சாப்பாட்டுக் கழைத்தால் வருவானா? கூப்பிட்டால் ஏனென்பானா? இவன் கிட்டப்போய்ப் புத்தகத்தைப் பிடுங்கியெறிந்துவிட்டு கையைப்பிடித்து இழுத்துவந்தால் சாப்பிடுவான். சொன்னபடி கேட்காத பயல்! உன்னிடத்திலப்பேர்ப்பட்ட குணமுண்டா? நீ பிறந்து முப்பதுவயதாயிற்றே. என்றைக்காகிலும் என்வார்த்தைகளைத் தட்டினையா? ஒருபோதுமில்லையே" என,

மதுரநாயகம்பிள்ளை :— "அதுபோகட்டும், அம்மா! சிலர் போஜனப்பிரியராயிருப்பதுபோல், திருமறைநாயகம் வாசகப்பிரியனாயிருக்கிறான். நான் என்னசெய்யலாம்? நாம் அதை நிறுத்தப்பிரயத்தனஞ் செய்வோமாகில் அவனுக்குப் பைத்தியம் பிடிக்கும். அவ்விஷயத்தில் அவனைச் சும்மா விட்டுவிடுவது நன்று" என்று தமது தாயாருக்குச் சமாதானங் கூறிவிட்டு தமது தம்பியை நோக்கி :— "திருமறைநாயகம்! நீ யென்ன நினைக்கிறாய்? நீயும் வருகிறாயா? கொஞ்சநாள் தோட்டத்தி லிளைப்பாறுவது சரீரத்துக்கும் புத்திக்குஞ் சுகத்தைத்தரும். எந்நேரமு நாணியேற்றின வில்விசைகொண்டடிக்காது. அதற்கு நாணி யேற்றுங்காலமும் நாணி யிறக்குநேரமு

முண்டு. அங்ஙனமே புத்திக்கிளைப்பாற்றிவேண்டும். இடைவி
டாது கல்வியிற் கவனித்த அறிவு பலமற்று தனது தீக்ஷண்யத்தை
யிழந்து போகக்கூடும். ஆதலால் நீ துல்யமணி கிராமத்திற்கு வந்து
சேர். என்ன சொல்லுகிறாய்? குணமணி! உனக்கங்கு வர இஷ்
டந்தானா? நீ வந்தால் எங்களுக்குப் பரம சந்தோஷம்" என, அவர்
களிருவருந் தாங்கள் வருவதா யொப்புக்கொண்டார்கள்.

பிற்பாடு நான் வீட்டுக்குப்போக அங்கு எனது தந்தையர்
ஆட்படைகளை வைத்துக்கொண்டு இரண்டு மூன்று மாதங்களுக்கு
வேண்டிய இரஸ்துக்களை வண்டியிலேற்றிக்கொண்டிருந்தார். துல்
யமணிகிராமத்தை நினைக்கும்போது எனக்கு மிதமில்லாச் சந்தோ
ஷம். மே மாதம் நாலாந்தேதி நீதியாசன சாலைகளும் பள்ளிக்கூடங்
களுஞ் சாத்தப்பட்டன. மதுரநாயகம்பிள்ளையின் சாமான் வண்டி
கள் துல்யமணிக்குப்போய்விட்டன. அன்று தினமே யென் தகப்
பனார் தமது சாமான்களையும் மேற்படி யூருக்கனுப்பிவிட்டார்.
ஏற்கெனவே மதுரநாயகம்பிள்ளையின் தோட்டக்காரன் அவரை
யழைத்துப்போக வந்துவிட்டான். நானும் எனது பந்துக்களும்
மதுரநாயகம்பிள்ளையும் அவரது சுற்றத்தாரும் அடுத்த தினந்
துல்யமணிக் கிராமத்துக்குப் போய்ச்சேர்ந்தோம். அங்கு மதுரநாய
கம்பிள்ளைக்கு அநேக வேலிநிலங்களும் மாவிடை மரவிடை முத
லிய தோப்புக்களுமிருக்கின்றன. மனோகர உத்தியான மென்கிற
சோலையின் மத்தியில் மூன்றடுக்கு வகித்த மெத்தை வீடொன்று
அவருக்கிருக்கிறது. அதனையும் அதற்கு ஐக்கியப்பட்ட ஐம்பது
வேலி நிலங்களையுந் தோட்டங்களையுந் தோப்புகளையுந் தமது நேய
புத்திரியாகிய மனோரஞ்சிதத்துக்குப் பிற்காலத்தில் ஸ்ரீதனமாகக்
கொடுத்துவிட்டார். அங்கு எங்களுக்கும் ஓர் மெத்தை வீடுண்டு.
அவர் தமது வீட்டிலும் நாங்கள் எங்கள் வீட்டிலும் எங்கள்
இராஜா நாட்களைக் கழித்துக்கொண்டு ஒருவர் வீட்டுக்கொருவர்
போக்குவரத்தாயிருந்தோம். ஓர்நாள் காலையிற் சாப்பிட்டுக் காலப்
போக்குக்காகச் சொற்கேட்டான், சதுரங்கம் முதலிய லீலைகளிற்
காலங்கழித்துச் சற்றுச் சலிப்புற்று வெளியிற் புறப்பட்டு மதுர
நாயகம்பிள்ளையின் மனோகர வுத்தியான சாலைகளில் உல்லாசமா
யுலாவித் திரிந்த பின்னர்; மலர்ந்து வாசனை கமழும் மலைமல்லிகை
மரத்தடியிலுட்கார்ந்தோம். அங்கு எனது தாய் தந்தையர், மதுர
நாயகம்பிள்ளை, அபிராமியம்மாள், திருமறைநாயகம்பிள்ளை, குண

மணியம்மாள் முதலியவர்களும் ஆஜராயிருந்தார்கள். தென்றலடிக்க, சுகந்தம் வீச, நாங்கள் மனங்களித்து இராஜநீதி, தெய்வநீதி, நீதம், அநீதம் முதலிய விஷயங்களைப்பற்றிச் சவிஸ்தாரமாய்ப் பேசிக்கொண்டிருந்தோம்.

அப்போது என் தகப்பனார் :—"அம்மா குணமணி! நீ தமிழிற் சிறந்த வித்வ சிரோமணியென்று பலரெனக்குப் பலதடவைகளிற் சொல்லியிருக்கிறார்கள். நானும் நேரில் உன் சாமர்த்தியத்தைச் சற்றுப் பார்த்தேன். உனக்குச் செய்யுட் பயிற்சி நிரம்ப வென்று கேள்வி. ஆதலால் இங்கு உட்கார்ந்திருப்பாறும் நம்மில் யார்பேரிலேனும் ஏதேனுங் கவி பாடுவாயா? நீ பாடுவாயேல், நாமெல்லோருஞ் சந்துஷ்டி யடையலாம்."

குணமணி :—"அப்பா! நான் பெண்; பெண்ணிலும் ஒரு பேதைப் பெண். அப்படியிருக்க, நானென்ன கவிபாடுவேன்? மன்னிக்கவேண்டும். என்னிலுங் கற்றறிந்த கல்லூரிகள் பலரிருக்கின்றார்கள். அவர்களை மறந்து என்னை யம்பலத்திற் கொண்டுவருவது உங்களுக்குத் தர்மமல்ல."

திருமறைநாயகம் :—"கிருக்கி பண்ணாதே! பெரியோர் சொல்லும்போது எதேச்சையாய்ச் செய்யாவிடினும் அவர்கள் பிரியத்துக்கேனும் பாடவேண்டும்" சரிதான்; ஏதேனும் பாடு."

குணமணி :—"அப்படியாகிற் பாடுகிறேன். பிழைகளுண்டானால் மன்னிக்கவேண்டும்" என்று சொல்லிப் பின்வருமாறு இரண்டு நிலமண்டில வாசிரியப்பாக்களை,

"மதுர மதுர மபிராமி யின்னு மதி
மதுர மென்னத்தா னீரெட்டா மக்கள் யா
மோரெட்டு மல்ல ரநுவருமல்ல ருத்தமர்
பாரெட்டு மட்டு மிருவ ரிவ்விருவரே
பாரின்கண் ணுத்தம பதிசதி யன்னோராம்
பாரியா மென்னுச்சிப் பாற்குணப் பதிபக்தைத்
தார்வேந்தர் புத்திரா மென்னத்தான் தார்மீகர்
பார்ப்பினி யென்பிறப்புப் பார்த்தீர் பர........."

மதுரநாயகம்பிள்ளை :—"குணமணி! நிறுத்திவிடு. போதும் இனி பாடுவாயேல் அது மிதமிஞ்சினதாம். மிதமிஞ்சினதெப் போதும்..............."

சந்திரசேகரம்பிள்ளை :—"எங்ஙன மிதமிஞ்சினது? உங்களைப் புகழ்வதால் மிஞ்சிப்போயிற்றோ? பரிச்சேதயில்லை! அதெங்

னமேனு மிருக்கட்டும், மகளே! நீ கூறியவை சிறந்த கவிகளே அவைகட்குப் பொழிப்புரை சொல், பார்ப்போம்."

குணமணி:— "இதோ எனது செய்யுளின் பொருள்: எனது தமக்கை யபிராமியம்மாள் சகல கல்யாண குணங்களுஞ் சரிவர அமைந்தவள், எனது அத்தான் அதினு மேன்பாடுள்ளவர். எங்க ளிரு குடும்பங்களிலும் எங் தாய் தந்தையருக்கு நாங்கள் பதினறு பிள்ளைகள் பிறந்தோம். எங்களிலுத்தமர் என் றமக்கையும் அத் தானுமே. எங்களில் மீதி எண்மரும் அறுவரும் அவர்களை யொப் புவோமோ? இல்லை யில்லை! பூமியின் ஒருகோடி தொட்டு மறு கோடி வரையில் இவர்கள் பூஜிக்கப்படத் தக்கவர்களே. இவர் கள் இல்லறத்தில் உத்தம புருஷ பெண்டீர், பசும்பால் வடித்த பற் பல மதுரகுணங்களை யடைந்தவள் எனதக்காள். நீங்கள், பார்வதி யென்றோமுஞ் சிவனைச் சிந்தித்துக்கொண்டிருப்பதாய்ச் சொல் வீர்கள், என் றமக்கை யவளுக்கிணைத்தவளல்ல ......................
எனது அத்தான் இராஜவம்சத்திலுதித்தவர். அவர் பெருந் தர்ம சீலர். சகஜமாய்ப் பிராமணப் பெண்களைச்சிறந்த பெண்களென் பார்கள்; ஆயினும் என் பிறப்பு ஆயிரம் பிராமணத்திகளை யொரே மிக்க வெல்லுவாள்."

சந்திரசேகரம்பிள்ளை:— "ஆ! மகளே! நீ இவ்வளவு கல்லூ ரியா? நானவ்வளவாக நினைத்ததில்லை ...... இருக்கட்டும் ...... நீ மனிதர்மீது ஏதேனும் பாட்டுபாடுவாயின் சிலருக்கினிப்பாயுஞ் சிலருக்குக் கரிப்பாயுமிருக்கும். ஆதலால் அதைத் தவிர்த்துக் கடவுள்பேரி லேதேனும் பாடு" என,

குணமணி பின்வரும் அளவடி யாசிரியப்பாவைத் துவக்கி:—

"பிறக்க விறக்க வறியா வீசனீ
பிறக்கே விறக்கேயென் றுஞ் சாஸ்வதனீ
பிரகடன சடலமதை யொழித்தோய் நீ
பிரமானந்த கடலாய் மூற்று நின்றோய் நீ
பிரபஞ்சமனைத்துங் கடந்து நின்றோய் நீ
பிரபஞ்சாகி லாண்டகோடிகட்கு மூலநீ
பிரபல்ய பேருலகிற் புனித மனிதனாய்ப்
பிறந்தெழுந்த பெருமானு நீயே."

"(இதன்பொருள்) கடவுள் பிறக்கவு மிறக்கவுமாட்டார்; பிறந்திறக் காதவர்; என்று நித்தியர். அவருக்குடலுருவில்லை. சகல நன்மைக்

கடலாய் நீடித்துப் பிரபஞ்சத்தை நிரப்பியுங் கடந்துஞ் சிருஷ்டி
கோடிகட் காதி காரணமாயுமிருக்கிறார்" என,

சந்திரசேகரம்பிள்ளை :—"ஓ! வித்வ சிரோமணியே! இனி
உன்னை நிமிஷக் கவி குணமணி யென்றே யழைக்கவேண்டும். நமது
நாட்டில் ஒளவையோடு ஸ்திரீகவிகள் அற்றுப்போயினர்களென்று
நினைத்தேன். இதோ நீ ஒரு சிறந்த கவிப்பெண்ணாய்த் துலங்குகின்
றாய்" என்று, அவளை வியந்துகொண்டு :—"தம்பீ! திருமறை
நாயகம்! உனது குணமணி தெய்வ இலக்ஷணங்களைக் குறுக்கிய சூத்
திரங்களிற் றெளிவாய் விளக்கிக் காட்டிவிட்டாள். ஆயினுங் கடைசி
சுலோகம் நான் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயில்லை. என் குருவாய
ஜடகோபாலாச்சாரி மேற்படி சுலோகத்தை யொப்பார். ஏனெனில்
அவர் சங்கராச்சாரியாருடைய சிஷ்யரும் வேதாந்தாநுசாரியுமா
யிருக்கிறார். சிருஷ்டியே கிடையாதென்று வேதாந்தம் போதிக்
கின்றது. 'நவஸ்துனோ வஸ்து சித்தி' வெறுமையினின்று ஏதும்
வாராது. உள்ளது போகாது; இல்லது வாராது. அங்ஙனமாத
லாற் சிருஷ்டி எங்ஙனஞ் சாத்தியம்? சிருஷ்டி யென்கில் வெறு
மையினின்று எடுக்கப்பட்டதென்று விரியும். இது சுத்த தப்பு.
பிதா மாதாக்களின்றிப் பிள்ளையுண்டா? வித்தின்றி மரமா? விளக்
கின்றி வெளிச்சமா? தீயின்றி யுஷ்ணமா? இல்லை இல்லை! யொன்று
மில்லை. அப்படியிருக்கச் சிருஷ்டியேது? அது வெறும் வழக்கச்
சொல்; அநர்த்த வார்த்தை."

திருமறைநாயகம் :—"அத்தான்! எவ்விஷயத்திலுங் அரி
தப்படல் ஆகாது. பதறினாற் காரியம் பாழாம். அதைப்பலவாறு
உய்த்துணரவேண்டும். ஆராயும் பொருட்டே கடவுள் நமக்கு அறி
வாகரத்தை யளித்திருக்கிறார். ஆராய்ச்சி காலத்துப் பொருட்களை
யநுசிதமாயளத்தலாகாது. மலையை யணுவாலளக்கலாமா? அளப்
பினும் அணுவும் மலையுஞ் சரியாமா? என் பரிமாணத்தால் தங்களை
யளக்கலாமா? சிருஷ்டி யளவாற் கடவுளை யளப்பது வாசியோ? இல்
லாப்பொருளை யியற்ற மனிதனால் மாளாது. ஆதலாற் கடவுளாலு
மாளாதென்கிறீர்கள். அதோ பாருங்கள்! அங்கு நிற்கு மகிழ
மரத்தைப்பிடுங்கி பெரிய ஓரெறும்பாற் சாத்தியப்படாது. ஆகை
யாலானையாலுஞ் சாத்தியப்படாதோ? மனிதன் ஓர் மயிரி
ழையை முதலாய்ச் சிருஷ்டிக்க வறியான். ஆதலின் அதை நிர்
மிக்கக் கடவுளாலுமாகாதோ?"

சந்திரசேகரம்பிள்ளை :— "ஆகாது! எங்ஙனமாகும்? இல்லது வருமா?"

திருமறைநாயகம் :— "இதைப்பற்றி பிற்பாடு பேசுவோம். என் வார்த்தைக்கு வார்த்தையால் வாயடைக்கும்படித் தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுளுக்கு நித்தியம் அல்லது தீர்க்காயுசுண்டா?

:—"உண்டு!"

:—தீர்க்காயுசென்றாலென்ன?"

:—"தீர்க்காயுசென்றால் நிறைந்த வயது. குறைவில்லா வயது; பூர்ண வயதென்று விரியும்."

:—"அத்தான்! கடவுளுக்கு ஞானம், வல்லமை, தயை முதலிய இலக்ஷணங்களுண்டா?"

:—"திருமறைநாயகம்! இவ்விஷயத்தில் எவன் சந்தேகிக்கக்கூடும்? எவனேனு மிதை மறுப்பானே?"

:—"சரி. சந்தேகிப்பாரியாருமில்லை. அது என் உடன்பாடே; ஆனால் இத்திரி லக்ஷணங்கட்கும் என்ன குணங் கூறுகின்றீர்கள்? அவரது ஆயுளைப்போல இம்மூன்றும் பூர்ண லக்ஷணங்கள்தானே? அதாவது: அவரது ஞானஞ் சர்வ ஞானமா? அவரது வல்லமை சர்வவல்லமையா? அவருடைய தயை குறைவில்லாத தயையா?"

:—"அவ்வித்தில் எட்டுணையும் அநுமானமா!"

:—"ஆதலால் அவர் சர்வ சக்தியைப் பூஷணமாய்த் தரித்திருப்பது என்னத்திற்கு? வீணுக்கோ? இல்லை யில்லை! நாமனுதினமும் நம்முடைய கிரியைப் பிரவர்த்தனங்களில் நமது சக்தியை யுபயோகிப்பதுபோல கடவுளும் இல்லாததை நிர்மிக்கவும் நிர்மித்ததைப் பரிபாலிக்கவுந் தமது சர்வ சக்தியை யுபயோகிக்கின்றார். இதுவே நியாயம்; இதுவே தர்க்க நூற்சாரம். நீங்கள் அவருக்குச் சர்வ சக்தியில்லை யென்பீர்களா? நான் அவருக்கு நித்தியாயுசில்லை யென்பேன். நீங்கள் எந்தத் திருஷ்டாந்தங்களால் அவருக்குச் சர்வசக்தியைத் திரஸ்கரிப்பீர்களோ அந்த திருஷ்டாந்தங்களாலேயே கடவுளுக்குத் தீர்க்காயுசுமில்லையென்று நிரூபிப்பேன். தர்க்க நூற்பிரகாரம் அவருடைய திவ்ய இலக்ஷணங்களில் ஒன்றுக்கொன்று எக்குத் தக்கிருக்கத் தகாது. இதுகாறும் அவருடைய நித்தி

யாயுசு மட்டி லியாருக்குஞ் சந்தேக மேற்பட்டதில்லை. இந்த நியாயமே அவரது சர்வ சக்திமட்டிலுங் கூறவேண்டும். இல்லாத காரியத்தை நிர்மிப்பதற்கே சர்வ சக்தியென்று பேர். கடவுளுக்குச் சர்வ சக்தியுண்டென்று நியாயத்தாற் றெளிந்தோம். சர்வ சக்தியுள்ளபோதே சிருஷ்டி சாத்தியமாய்விட்டது."

சந்திரசேகரம்பிள்ளை:—"நவஸ்துனே."

திருமறைநாயகம்:—"தற்போது அஃதை யுசாவுவோம் 'நவஸ்துநோ வஸ்து சித்தி' வெறுமையினின்று ஏதும் வராது. அது எஞ் சம்மதமே. 'உள்ளது போகாது' நிர்மிப்படைந்த எவ்வஸ்துவும் என்றும் போகவே போகாது. அதுவும் என்னுடன்பாடே. 'இல்லது வராது.' எவ்வகையிலும், எக்காலத்தும், எவ்விடத்தும் இல்லாப் பொருள் வராது. இதை நான் நிரூபிக்க வந்தேனில்லை. ஆனால் எவ்வகையிலேனும் எப்பொருளிலேனும் எப்போதேனும் நிலைபெற்ற வஸ்து வராதென்பது தப்பு. மரத்துண்டிலடங்கிய அக்கினியைப்போற் கடவுளின் சத்தியிலடங்கியது சிருஷ்டி. அவரிடத்தில் இருத்தல், அறிவு, வல்லமை, மனசு, சித்தம், நலம், நீதி, தயை, இரக்கம், எல்லாமுளவைக் கடந்தது. இவை சிருஷ்டியிடத்து அளவிலடங்கியவை. கடவுளின் ஆயுசு தீர்க்காயுசென்பது நீங்களே யொப்பிய விஷயம். உங்கள் வேதாந்தக்கோள் என்னவெனில், பிரபஞ்சமும் நித்ய ஆயுசையுடையதாம்; நித்யத்தை யாயுசாகக் கொண்டது பூரண வஸ்துவாம்; பூர்ண வஸ்துவுக்கு எக்குறையு மிருத்தலாகாது. அறியாமை, பலவீனம் முதலிய குறைகள் அதற்குக் கிஞ்சித்தும் பொருந்தா. இங்கு மனிதனை நிதரிசனமாக எடுத்துக் கொள்ளுவோம்: வேதாந்தக் கொள்கைப் பிரகாரம் அவன் அநாதி நித்தியன். நித்தியகாலத்தை வயதாக அடைந்தவனுக்கு எனிந்தப் பலவீனம்? எனிந்த அறியாமை? என் மற்றநேகாநேக நலக்குறைகள்? மனிதனுடைய பற்பல விலக்ஷணங்களில் ஒன்றை, அதாவது: வயதை நித்ய வயதாகவுங் குறையில்லா ஆயுளாகவும், மற்ற விலக்ஷணங்களைக் குறைந்த இலக்ஷணங்களாகவுங்கொள்ள நியாயமென்ன? கடவுளிடத்து நாம்காணும் பற்பல இலக்ஷணங்களில் இருத்தல் என்னுமிலக்ஷணமே முக்கியம்; அதுவே மற்ற விலக்ஷணங்களுக்கு மூல லக்ஷணம். இதினின்றே மற்ற விலக்ஷணங்கள், மலையினின்று அருவிசுரந்தோடுவதுபோற் சுரந்தோடவேண்டும். பானையிற்சாதமிருக்குமேல்

அகப்பையில் வராதா? ஏரியில் ஜலமிருக்குமாகில் வாய்க்கால்வழி யோடாதோ? நெருப்புண்டானல் ஒளியும் உஷ்ணமுங் கூடவிருக்க வேண்டுமே. காரணமின்றிக் காரியமேது? அறிவு, ஞானம், வல்லமைமுதலிய குணங்கள் மனிதனிடத்துக்குறைந்த இலக்ஷணங்கள். இக்குறைந்த விலக்ஷணங்களுக்கு மூலமாகிற இருத்தல் என்னும் இலக்ஷணம் குறைந்த விலக்ஷணம். குறைந்தது நித்தியமாகாது. நித்யமாகாத எதுவுஞ் சிருஷ்டிக்கப்பட்டது. சிருஷ்டிக்கப்பட்டது காலத்திலானது. காலத்திலானது நித்யரான கடவுளாலானது. கடவுளால் நிர்மிக்கப்பட்டது சிருஷ்டி. ஆதலாற் கடவுள் சிருஷ்டிகர்; பிரபஞ்சஞ் சிருஷ்டி. ஆகவே சிருஷ்டி யசாத்தியமன்று."

"இல்லது வராது. எம் வேத போதனையு மிதுவே. உள்ளது தான் வரும். கடவுளின் சர்வ சக்தியிலடங்கியதே வெளிப்படும். நாமும் வனைய சிருஷ்டி கோடிகளும் அநாதி நித்தியமாய் ஜீவிக்கின்றோம். எங்கு? கடவுளிடத்து. தச்சன் ஒரு பதுமையை யமைக்கச் சிந்திக்கிறுன். பதுமையா யமையவேண்டிய மரத்துண்டெங்கேயிருக்கிறதோ அறியான். அங்ஙனமாயினும் ஏற்கெனவே யவனறிவிற் பதுமை ஜீவிக்கின்றது. அவனிங்கு யாதோர் காரணத் துணையின்றி புத்தியிற் பதுமையைக் கிரகித்துவிட்டான், பதுமைக்குக் காரணமாகிய மரமெங்கே யிருக்கிறது? துணைக்காரணங்களாகிய யத்தனங்களெங்கேயிருக்கின்றன?! தச்சனுக் கின்னுந் தெரியாது. பதுமையைத் தன் புத்தியில் நிர்மித்துக்கொண்ட பின்னர் ஓர் மரத்துண்டைத் தேடுகிறுன்; தன் னாயுதங்களைத் தேடுகிறுன். பிற்பாடு தன்னறிவிற் ஜீவிக்கின்ற பதுமையின் சாயலாக மரத்தைத் தொழிற்படுத்தி வேறு பதுமையை நிர்மிக்கிறுன். அவன் தன் புத்தியிற் ஜனித்த பதுமையை யப்புறப்படுத்திவிட்டானே? அல்லது அதற்குச் சமமாய் வேறொன்றை யமைத்தானே? சந்தேகமற வேறொன்றையே யுருவியற்றினன். அவன் புத்தியி லுற்பவித்த உரூபம் அப்புறப்படவில்லை; ஒருபோதும் அதைவிட்டு அப்புறப்படவுமாட்டாது. அப்புறப்பட்டதெது? உரூபிதம் அல்லது உரூபத்தின் சாயல் வெளிப்பட்டது. உரூபம் வேறு; உரூபிதம் வேறு. தச்சனுடைய புத்தியிற் ஜனித்த பதுமை யுரூபம்; அவனுடைய ஆயுதத் துணையால் மரத்திளின்று தொழிற்படுத்தபபட்ட பதுமை உரூபிதம்."

"இன்னும் வேறு உதாரணத்தால் நமது விஷயத்தைப் பரிஷ்கரிப்போம்: ஓர் சக்கரவர்த்தி தன்னிளவரசுப் புத்திரனுக்கு ஓர்

விநோத விசித்திர அரண்மனை கட்டவேண்டி ஒரு சிற்பியை யழைப்பிக்கிறான். சிற்பி வரவே, அரசன் தன் குமாரனுக்கு அலங்காரமான இராஜோலக்கத்தைக் கட்டும்படி யவனுக்கு ஆக்ஞாபிக்கிறான். அந்நேற்பரி கல், மண், சுண்ணாம்பு, இரும்பு, ஈயம், மரம் முதலியவையும் நானாவித ஆயுதங்களும் எங்கேயிருக்கின்றனவென் றறியான். அறியாவிடினுஞ் சற்று சாவகாசமா யுட்கார்ந்து ஆலோசிக்கிறான். உடனே யவனது புத்தியில் அரண்மனை யுற்பத்தியாய்விட்டது. அரண்மனையாய் அமையவேண்டிய கற்களைப் பார்த்தானா? சுண்ணாம்பைப் பார்த்தானா? இரும்பு மர முதலிய சாமான்களைப் பார்த்தானா? இல்லை. ஆயினும் இராஜ மந்தரம் ஏற்கெனவே அவனுடைய புத்தியிற் ஜீவிக்கின்றது. பிற்பாடு சகல சாமான்களுஞ் சேகரமானவிடத்து சிற்பி யவைகளைச் சகலத்தையுங் கிரமமாய்ச் செய் தொப்பேற்றவே, அவனது அறிவிலமைந்த அரண்மனையைப் போல் வேறோர் அரண்மனையை யதார்த்தமாய்ப் பார்க்கிறோம். ஆனால், இரண்டு மொன்றோ? இல்லை யில்லை! எட்டுணையுமில்லை! அவனுடைய புத்தியிலமைந்த மூல சொரூபமாகிய அரண்மனை வேறு; அவன் கல், மண், சுண்ணாம்பு முதலியவற்றாற் றெழிற் படுத்திய அரண்மனை வேறு. மூல சொரூபம் வேறு; மூலசொரூப வடிவமாயமைந்த உரூபிதம் வேறு."

"அரண்மனை கட்டப்பட்டு முடிவுபெற்றது. பூபதியுடனே யொரு சித்திரனைத் தருவித்துப் புதிய இராஜோலக்கத்தை விதவித விசித்திர சித்திரங்களாற் ஜோடிக்கும்படி அவனுக்குச் சங்கற்பிக்கிறான். நேற்பரி யரண்மனையைச் சுற்றிப் பார்க்கிறான். சுற்றிப் பார்க்கும்போதே செடி, கொடி, புஷ்பம், பக்ஷிகள், மனிதர் முதலிய நானாவித உரூபங்களைத் தன் புத்தியிற் திருஷ்டிக்கிறான். மேற்கூறிய வுரூபங்களாக அமையும் விவித மைகளெங்கே? தூரிகையெங்கே? அதற்குத் துணையாக நிற்கும் பற்பல ஆயுதங்களெங்கே? சித்திரன் அவைகளைப்பற்றி யின்னுஞ் சிந்திக்கவில்லை. ஆயினும் அவ்வரண்மனையிற் றோன்றவேண்டிய சித்திரத் திரட்களியாவும் அவனது புத்தியி லுற்பத்தியாய்விட்டன. பின்னர் அவன் தன் புத்தியி லமைத்திருக்கும் பற்பல வுரூபங்களின் சாயலாக வேறுவடிவங்களை மைகள், தூரிகை, ஆயுதங்கள் முதலிய கருவித் துணையால் அரண்மனையின் பற்பல விடங்களில் அமைத்துவிடுகிறான். ஆனாற் சுவரி லமைந்த வடிவங்கள் வேறு; சிற்பியின் புத்தியில

மைந்த வடிவங்கள் வேறு. அவனது அறிவிலமைந்த வடிவங்கள் சுவரிற்போ யமைந்துவிட்டன என்பீர்களா? 'ஆம்' என்னும் பக்ஷத்தில் மேற்கூறிய வடிவங்கள் சுவரிற் காணப்பட்டவுடனே நேற்பரியின் புத்தியில் மறைந்துபோகவேண்டுமே. ஆனாற் கிஞ்சித்து மறையவில்லையே! சுவரிற்றோன்றிய உருபங்கள்தான் அவனுடைய புத்தியிற் புலப்படுகின்றன என்பீர்களா? இல்லை யில்லை! அதற்கு முற்றிலும் விரோதமாய் புத்தி யுற்பனங்களே சுவரிற்றோன்றுகின்றன."

"அத்தான்! இதோ இங்கு நாமெல்லோரும் உல்லாசமாய்ச் சல்லாபித்துக்கொண்டிருக்கிறோம். நமது சம்பாஷணை நேரத்தில் ஓர் தேஜோசித்திரி வந்து நமது படங்களைப் பிடிக்கவேண்டி நம்மை யணுகிவந்து, நம்மை நோக்கி:—"பிரபுக்களே! இது சுந்தர புருஷ பூவையராற் றுலங்கு மலங்கார சங்கம். அடியேன்பேரிற் கிருபா கடாக்ஷித்து, நீங்களெல்லோரு மெழுந்து வரிசையாய் நிற்பீர்களாகில் உங்கள் உருபங்களைப் பிடித்துக்கொள்வேன். உலோகாதி யந்தமுஞ் சர்வ ஜாதி ஜனங்களும் அவைகளைக்கண்டு சந்துஷ்டி யடைவார்கள். அதனால் நானும் பிரயோஜனமடைவேன்." என்று, நம்மை வேண்டுகிறான்."

"நாமவன் வேண்டுகோளுக்கிரங்கி நாமனைவரும் எழுந்துவரிசையாய் நிற்க, தேஜோசித்திரி சூரிய னொளித் துணையாலுந் தன் பெட்டித் துணையாலும் நம்முருவங்களைப் பிடித்துக்கொள்ளுகிறான். அவன் நமது சிரமத்துக்குப் பிரதி பிரயோஜனமாக ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் படங்கொடுக்கிறான். நா மவைகளை வாங்கிப் பார்க்கவே, நமக்குப் பிரமையுந் திகைப்புமாயிருக்கிறது. நம்மில் ஒவ்வொருவரும் நம் முன்னிலையில் நிற்பதாகத் தோற்றுகிறது. நிறம், குறி, தோற்றம், நிலமையெல்லாஞ் சரியா யமைந்திருக்கின்றன. இங்ஙனம் இவைகளை யியற்றியவன் யார்? ஓ! பேராச்சரியம்!!" என்று கூவி யெழுந்து சபை நடுவில் நின்று எனது பிதாவைப் பார்த்து:—"அத்தான்! இந்த பிரதி யுருபமேது? எங்கே யிருந்து வருகிறது? என்ன காரணத்தாற் றோன்றுகிறது?" என,

சந்திரசேகரம்பிள்ளை:—"அது நமது தேகத்தின் சாயல். சூரியனுடைய பிரகாசம் பெட்டித் துணையால் அந்த வடிவத்தை நிர்மித்து விடுகிறது."

திருமறைநாயகம் :—"ஆகா! சூரியப் பிரகாசம் பெட்டித் துணையாற் பிரதி யுருவங்களை யமைக்க மாட்டுவதோ?"

சந்திரசேகரம்பிள்ளை :—"மாட்டு மென்பதற்குத் திருஷ்டாந்தம் நாம் கண்காட்சியாய்ப் பார்க்கும் படங்களே."

:—"இந்த வுருபங்கள் நாம்தானோ?"

:—"இல்லை! நமது சாயல்."

:—"அங்ஙனமாகில், நாம் வேறு; நமது சாயல் வேறு?"

:—"அதற்குச் சந்தேகமா?"

:—"நம்மினின்று இச்சாய லெடுபட்டதா? அல்லது இதர வஸ்துக்களால் நமது தேக நிழற்றுணையால் நமது சாயலாக அவ் வடிவ மமைந்ததா?"

:—"ஏனிந்த வியர்த்த வினு? திருமறைநாயகம்! பற்பல ஏதுக்களால் நமது வடிவம் இந்தப் படத்தில் வந்தமைகின்றது. அதில் நமக்குத் தொந்தப்பட்டதி யாதுங் கிடையாது."

:—"அங்ஙனமிருக்க, நமது முகத்தி லடிக்கடி ஜனிக்கும் புன்னகை, சிரிப்பு, கோபம் முதலியவைகள் அப்படத்திற்கு றோன்றுவானே? நமது நிறம், நிலைமை, ஆசனம் முதலியவைகள் அதிற்றோன்றுவானேன்?"

:—"சூரிய கிரணங்கள் நமது தேக நிழற்றுணையால் நமது சாயலைச் சகல குணங்குறிகளோடு நிர்மிக்கக்கூடும். சூரியப்பிரகாசத்துக்கு நமது சரீரங் குறுக்கிடாவிடில் அதன் வடிவம் படத்திலமையாது. அதாவது, நாமில்லாவிடில் நமது சாயல் படத்திலமையாது. ஏதற்கும் மூலமொன்றிருக்கவேண்டும். ஊற்றில்லாவிடிற் சுனையில்லை. அதாவது: காரணமின்றிக் காரியமில்லை..........."

திருமறைநாயகம் :—"அத்தான்! எனக்கு நல்ல வழி திறந்தீர்கள்! பேருபகாரம்! தச்சன், சிற்பி, சித்திரன், தத்தம் புத்தியிலமைந்த வடிவங்களைப்போற் பிரதி வடிவங்களை நிர்மிக்கவல்லோர்கள், இன்னு மென்ன சொல்வேன்? சூரியப்பிரகாசம் நம்மை நமது சகல குணங் குறிகளோடு படத்தி லமைக்கவல்லது. எங்கடவுளாகிய சர்வ சக்தியுள்ள ஆண்டவர் தம்மில் அநாதி நித்தியமாயமைந்த வடிவமாய்ச் சிருஷ்டியை நிர்மிக்க வகையறியார்போலும். அறிவு, வல்லமை, ஞானவீனரான தச்சன், சிற்பி, சித்திரன், காலத்திலமைந்த வடிவங்களுக்கு நேரான பிரதி வடிவங்களை யியற்றுவார்களாயின் அநாதி நித்யரான எங்கடவுள் அநாதி நித்தியமாய்த் தம்மி

வியல்பா யமைந்த மூல சொரூபத்தின் வடிவமாய்ச் சிருஷ்டியை நிர்மிக்க அசக்தரோ? எறும்பு ஓர் தானிய மணியை யெடுத்துப் போகுமேல் யானை சுமக்கும் பார மெளிதாமோ? காலம், இடம், வகை முதலியவற்று லளக்கப்படும் மனிதன் தன் புத்தியிலமைந்த வடிவங்களைத் திருஷ்டியில் இயற்றுவானாயின், காலம் இடம் வகை முதலியவற்று லளக்கப்படாத கடவுள் என்றுந் தம் புத்தியி லடங்கிய மூலசொரூபச் சாயலாகச் சிருஷ்டியை யேன் படைக்கக்கூடாது? சிருஷ்டி முரணுகுமா?"

சந்திரசேகரம்பிள்ளை:— "முரண்தான்! இல்லது வருமா? இல்லாக் காரியங்களைக் கடவுள் படைப்பாரா? பரிச்சேதமில்லை."

திருமறைநாயகம்:— "இல்லாக்காரியங்களை நிர்மித்தலே சிருஷ்டித்தலென்று சொல்லப்படும். எப்பொருளினு மடங்காத விஷயம் ஒருபோதும் வரவே வராது. எங்ஙனம் ஒரு பதுமை யதார்த்தமா யுருவடையு முன்னமே சிற்பியின் புத்தியில் உருபம் பெற்றிருக்கிறதோ அங்ஙனமே நித்யரான கடவுளின் புத்தியில் அநாதி நித்யமாய் நிலைபெற்றிருக்கின்றது சிருஷ்டி. ஆன்மகோடிகளும் ஜீவகோடிகளும், ஏனைய சிருஷ்டிகோடிகளும் அநாதி நித்யமாய் ஜீவிக்கின்றன. எங்கு ஜீவிக்கின்றன சிருஷ்டிகரிடத்து ஜீவிக்கின்றன. சிற்பியின் புத்தியி லமைந்த பதுமை யெப்படி யதனை விட்டெடுபடுகிறதில்லையோ அப்படியே அநாதி நித்தியமாய் அவரில் அமைந்த சிருஷ்டியின் மூல சொரூபம் அவரைவிட்டெடுபடாது. சிற்பி தன்னிலமைந்த பதுமையின் சாயலாக வேறு பதுமையை யியற்றவும் இயற்றும லிருக்கவுங் கூடும். அது அவனுடைய மன ஸ்வாதந்தரியம். அவ்வண்ணமே கடவுள் தம்மில் அநாதி நித்தியமாயிருக்கு மூலசொரூப வடிவமாய்ப் பிரபஞ்சத்தை யுண்டு பண்ணலாம், உண்டுபண்ணுமலிருக்கலாம். அது அவரது இஷ்டம். வரம்பிலடங்கிய மனிதனுக்கு ஸ்வாதந்தரியமும் ஸ்வாதீனமுமிருக்குமேல் சிருஷ்டிகோடிகட்கு மூலமாகிய தேவனுக்கேன் ஸ்வாதந்தரியமும் ஸவாதீனமுமிரா? மீண்டும் இல்லது வராது: சிருஷ்டி, காரண ரூபமாய்க் கடவுளின் அறிவினும் இயற்கையினுஞ் ஜீவிக்கின்றது. பதுமை மரத்துண்டின் துணையாலும் ஆயுதத் துணையாலும் உருபமடைவதுபோல், சிருஷ்டி கடவுளின் சித்த சகாயத்தாலுஞ் சர்வ சக்தித்துணையாலும் உருபத்தைப் பெறுகின்றது. இதனைத் தான் நாம் சிருஷ்டியென்கிறோம். இது புதிதுமல்ல, பழயதுமல்ல! காரணத்தி லிது அநாதி நித்தியம்; காரியத்தி லிது காலத்

திலுண்டானது. ஆதலால் இல்லது வரவில்லை. உண்டானதே வந்தது. சிற்பியை மறந்துபோகாதேயுங்கள். சிற்பி வேறு; சிற்பியின் புத்தியி லமைந்த பதுமை வேறு. சிற்பி மரத்திலின்று தொழிற்படுத்திய பரிசனபதுமை வேறு. இவ்வாறே கடவுள் வேறு; கடவுளிடத்து அநாதி நித்யமா யமைந்த சிருஷ்டியின் மூல சொரூபம் வேறு, இம்மூல சொரூபம் அவரது பற்பல பூர்ண லக்ஷணங்களிலொன்று. அவர் காலத்தில் நிர்மித்த சிருஷ்டி வேறு; இதுவே நாம் அக்ஷார்த்தமாய்ப் பார்க்கும் உலகம். ஆதலாற் சிருஷ்டியாதிருப்பதி லென்ன தடை? சிருஷ்டி யிருப்பதி லென்ன முரண்? சிருஷ்டி சாத்தியமே யல்லாது அசாத்தியமன்று. ஆதலாற் குணமணி......... 'பிரபஞ்சாகிலாண்டகோடிகட்கு மூல நீ' என்று பாடினது பொய்யல்ல."

சந்திரசேகரம்பிள்ளை:—"அர்த்த ராத்திரி யமாவாசை யிருட்டில் மினுக்கு என்று எரியுஞ் சிறியவிளக்கு வெளிச்சத்தில் வீட்டுக்குள் கிடக்கும் நானாவித சாமான்களிற் பெருத்தவைகளை நாம் காண்பதுபோல் உனது நீடிய உபந்நியாசத்தாற் பெருத்த அம்சங்களைப் பெறும்படியாய்க் கிரகித்துக்கொண்டேன். வேதாந்தத்திலெங்கும் விளையாடித் திரியும் மாயை, அவித்யை என்னும் இரண்டு பெருந் திரைகள் இன்னும் என் கண்களை மறைக்கின்றன."

திருமறைநாயகம்:—"அத்தான்! இங்ஙோ மதற்குச் சமயமன்று, வேறு சமயங்களில் அவைகளை யாராய்வோம்."

சந்திரசேகரம்பிள்ளை:—"நீ யிதுகாறும் உபந்நியசித்த விஷயத்திற்கு ஆகமத் தினை யேதேனு முண்டா?"

திருமறைநாயகம்:—"உண்டு. ஸ்ரீமத். பவுல் கொலோசருக்குப் பின்வருமாறு:—

'*Qui est imago Dei invisibilis,*
*primogenitus omnis creaturæ,*
*quoniam in ipso condita sunt*
*universa in caelis et in terra*
*visibilia et invisibilia, sive throni*
*sive dominationes, sive principotus,*
*sive Potestates : omnia in ipso et per*
*ipsum creata sunt. Et ipse est ante*
*omnes et omnia in ipso constant.*'

(இதன்பொருள்:) 'அவர் (என் னிரக்ஷகப்பெருமான்) அரூப கடவுளின் உருபம்; சிருஷ்டி யனைத்துக்கு மூல சொரூபம்; வானத்

தினும் பூமியிலுஞ் சேதனுசேதனங்களாகிய சமஸ்தமும், பத்திரா சனரும், பிராதமிகரும், நாதகிருத்தியரும், பலவத்தரும் அவரில் நிர்மிக்கப்பட்டார்கள். எல்லாம் அவர்சாயலாக அவராற் சிருஷ்டிக் கப்பட்டன. அவர் சகலருக்கு முன்னிருக்கிருர். சமஸ்தமும் அவ ரில் நிலைபெற்றிருக்கின்றன' என்றெழுதினர்."

"இந்தச் சுலோகங்களினுல் நமக்கு விளங்குகிறதென்ன? சிருஷ்டிகோடிகட்கு மூல சொரூபம் எனது இரக்ஷகராகிய இயேசு பெருமானென்றும் அவர் தமது சாயலாகச் சிருஷ்டிகளையமைத் தாரென்றுந் துலங்குகின்றது."

"சுவிசேஷகரான ஸ்ரீமத் யோவான் :—'*Omnia per ipsum facta sunt*' அவரால் சமஸ்தமு நிர்மிக்கப்பட்டன. '*In ipse vita erat*' அவரிற் ஜீவனிருந்தது. '*Et vita erat lux hominum*' அஜ்ஜீ வன் மனிதருக் கொளியாயிருந்தது. என்ருர்."

சந்திரசேகரம்பிள்ளை :— "இவ்வாக்கியங்களின் ருற்பரிய மென்ன? நீ யொளியென்கிருய். ஆனுல் ஒளி நன்ருய்ப் பிரகாசிக்க வில்லை. தீபத்தைத் தூண்டி நன்ருய்த்துலங்கச்செய்: பார்ப்போம்."

திருமறைநாயகம் :—"என்னுல் இயன்றதெதுவோ அதைச் சொல்லுகிறேன், சற்று கவனியுங்கள். சிருஷ்டிக்கு மூலமுஞ் ஜீவி யமும் பிரகாசமும் எமது இயேசுபெருமானே. அவர் பிரபஞ்சத் துக்கு மூலசொரூபமாதலால் அது அவரது கரங்களினின்று அவர் சாயலாகப் புறப்பட்டது. அநாதி நித்தியமாய்க் கடவுளிடத்துக் காரண ரூபமாயமைந்த சிருஷ்டி காலக்கிரமத்தில் உரூபம் பெறுவ தற்கு அவரேவழி. எமது இரக்ஷகர் கடவுளின் குமாரர். கடவு ளுக்கு ஜனிப்பிக்குந் தன்மையில்லாவிடில் அவருக்குச் சிருஷ்டி சக்தியேது? கடவுள் அநாதிநித்தியமாய் எண்ணி இயேசுநாயகரைப் பெற்றுக்கொண் டிருக்கிருர். இதனுலேயே சிருஷ்டி சாத்திய மாயிற்று.

மதுரநாயகம்பிள்ளை :— "திருமறைநாயகம்! இவைகள் வேத விற்பன்னரைப் பொறுத்த கேள்விகள். நீ யவைகளிற் றலை யிட்டுக்கொண்டு சாமான்ய ஜனங்களுக்கு உபந்நியாசம்பண்ணத் தலைப்படுவாயாகில், வினுக்களும் விடைகளு மலையாய் வளர்ந்து கெபியாய் முடியும். சமயோசிதமாய் யுக்தாயுக்தமறிந்து வித்வ சிரோமணிகளுடைய சங்கத்தில் மேற்படி விஷயங்களைப்பற்றி நீ சம்வாதம் பண்ணுவாயாகில் ஏதேனும் நலமிருக்கும். இத்தகைய சிறந்தநோக்கமின்றி இரண்டொருவர் தெளிவுக்காகவேண்டி, பின்

லைகள் பெண்டீர் கூடியிருக்குங் கூட்டத்திற் சாதாரணஜனங்களுக்குப் புலப்படாத அரியவிஷயங்களை யம்பலத்திற்குக் கொண்டுவருவது வாசியல்ல, உபந்நியாசத்தை நிறுத்திவிடு; போதும். காலம் வாய்த்தவிடத்து அவைதைப்புனர்விசாரத்தில் வைத்துக்கொள்வோம்" என்று சொல்லிக் கூட்டத்தைக் கலைத்துவிட் டெழுந்துபோய் விட்டார். அவ்வாறே ஒவ்வொருவருந் தத்தம் கிரகம்போய்ச் சேர்ந்தார்கள். அதற்குள்ளாக சாப்பாட்டுநேரம்வர, எங்கள்பரிசாரகன் வந்துஅசனத்துக்கழைக்க, நாங்கள் போய்ப் பந்தியமர்ந்து எங்களுக்குப்படைத்த பக்ஷணங்களைச் சந்துஷ்டியாய்ச்சாப்பிட்டுச் சல்லாபக்கூடத்துக்குப் போனோம். அங்கு என்தந்தையர் திருமறைநாயகம்பிள்ளையையுங் குணமணியம்மாளையும் வெகுவாய் வியந்து உபாசித்தார். அவர்கள்மீது மிதமில்லாப்புகழ்ச்சிகளைக் கூறினார். அவர் கூறினவைகளைச் சொல்லச்சொல்ல சங்கதை விரியும்............."

---

## 10-ம் அத்தியாயம்.

மதுரநாயகம்பிள்ளை தமது புத்திரிக்குப் போதிக்கும் பற்பல வேதோபந்நியாசங்கள்.

"நான் என் வழக்கப்பிரகாரங் கண்வளர்ந்து விழித்தெழுந்து மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப்போனேன், அங்கு அபிராமியம்மாள், குணமணியம்மாள், மனோரஞ்சிதம் மற்றுள்ள சிறுவர்களும் இரத்தினக் கம்பளத்து மீதுட்கார்ந்து எனது அண்ணாவி, மதுரநாயகம்பிள்ளையின் முகத்தை யிமை கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார்கள். திருமறைநாயகம்பிள்ளை யவரை வினவியும், அவருக்கு விடையளித்துக் கொண்டுமிருந்தார்."

"நான் சங்கத்தில்நுழைந்த சற்றுநேரத்துக்குப்பின்னர் மதுரநாயகம்பிள்ளை பின்வருமாறு:—"அபிராமி! பெண்களுக்கு நான்கு தசைகள் அல்லது பருவங்களுள்ளன. அவைகள் இளமைப்பருவம், கன்னிப்பருவம், கல்யாணப்பருவம், வயோதிகப்பருவமுமாம், இந்நான்கு தசைகளில் இளமை, பிறப்பு முதற்பதினான்குவரையிலும், கன்னிப்பருவம், பதினான்குதொட்டுப் பதினெட்டுவரையிலுங், கல்யாணப்பருவம், பதினெட்டுமுதல் நாற்பத்தைந்து அல்லது ஐம்பது வரையிலும், வயோதிகப்பருவம் ஐம்பது தொட்டு நூறு வரையி

லும் பிரவர்த்திக்கும். இந்நான்கு பருவங்களிலும் ஸ்திரீகள் முறை முறையாய் யநுஷ்டிக்கவேண்டிய தெய்வ சஞ்சார தர்மங்களும், மானிட சஞ்சார தர்மங்களும், ஸ்வயாத்ம சம்பந்த தர்மங்களும், இல்லறத்தர்மங்களும் பலவாயிருக்கின்றன. மேற்படி தர்மங்களைப் பூர்த்திசெய்யவேண்டி, நமது சிறு நங்கையின் தர்ம பாடசாலையை-(1) பால சிக்ஷை. (2) கன்னிகா இதபோதங்கள். (3) யௌவன தம்பதிகளின் சத்விருத்தங்கள். (4) வயோதிக ரநுஷ்டானங்கள் என நான்கு பாகங்களாகத்தொகுத்து, நானுவித புண்ணியங்களையும் பற்றும் பற்றாய் அவளுக்கு உபதேசிக்கப் போகிறேன். ஆதலால் நீங்களுங் கண்ணூற்றுச் செவியுற்றுக்கவனிப்பீர்களாயின் உங்கள் சித்த புத்தியில் ஞான வொளி பிரகாசிக்கும். உலகில் எவனும் அந்தகாரத்தில் நடமாடச் சம்மதியான்.—அவன் இகத்திற் சஞ்சரிப்பதற்கு ஆதித்தனுடைய சோதிப்பிரகாசமாவது, சந்திரனுடைய குளிர்ந்த ஒளியாவது, தீபங்களுடைய வெளிச்சமாவது அவனுக்குச் சகாயமாக நிற்கவேண்டும். இல்லாவிடில் எங்குந் தடுமாறுவான்; ஏதுஞ் செய்யவறியான். செய்வானுயின் கிரியைகளின் குணங் குறிகளைத் தொகுத்தறியான். அங்ஙனமே நம்மை மறுலோகத்திற் கூட்டிப் போகுங் கிரியைகளில் ஞானவொளி பிரகாசிக்கவேண்டும். உண்மையென்னும் ஞானவுணவை யூட்டி நமக்கு நித்ய ஜீவனைப் பெறுவிக்க ஓர் ஆசான் வேண்டும். அவ்வாசான் நமது இரக்ஷக பெருமானுகிய இயேசு நாயகரே. அவரும் அவரது முதன்முதற் சிஷ்யருஞ் சவிஸ்தாரமாய்ப் போதித்துவிட்டார்கள். தற்காலம் நம்மை நடாத்துந் தெய்வப்பிரதிநிதி குருபீடஸ்தானமும் அதே யலுவலைத் தொடர்ந்து நடத்திவருகின்றது. நம் ஞான ஆயரான கத்தோலிக்கு குருப்பிரசாதிகளும் புரியும் உத்தியோகமு மதுவே. குருக்கள் எல்லோருக்கும் பொது ஆசான்கள், ஒவ்வொரு குடும்பத்திற்கும் விசேஷ ஆசான் இருப்பது நியாயம். அவ்வா சான் குடும்பத்தி னெசமானல்லாது பின்னு மியார்? தகப்பன் தன் குடும்ப சஞ்சாரக் கடமைகளை யொருங்குடன் நிறைவேற்றுவிடிற் கடவுள் சமுகத்திற் பெருமபாதியாவான். 'எண்சாணுடம்பிற்குச் சிரசேபிரதானம்' மானிட தேகமென்னும் இரதத்தை நடத்த சிகரமாகிய கிரீடத்தையும் ஆண்டவர் அமைத்துவிட்டார். அச் சிரசிலேயே கண், மூக்கு, செவி, வாக்குப் பரிசன முதலிய பஞ்ச புலன்களை நிர்மித்துவிட்டார். சிரசின் சிரமத்தாலும், ஆக்ஞையாலும், யோசனையாலும் மானிட தேகம் நடக்கின்றதுபோல் ஒவ்வொரு குடும்பமுந் தன் தலையாகிய

எஜமானுடைய சங்கற்ப-சித்த-யோசனைகளுக்கு அமைந்து பிரவர்த்திப்பது கடமை.

"அபிராமி! உனக்கும் உன் பிள்ளைகட்கும் நாடோறுஞ் சன்மார்க்கத்தை யுபதேசிக்க நான் பெரும் பாரச் சுமையைத் தாங்கினவன். நீங்கள் என்னுடைய யாலோசனைகட்கு அமைந்து நடக்க வேண்டியவர்கள். நாம் மற்றவர் குடும்பங்களைக் கவனிப்பது அவசியமன்று. ஆதலால் நமது சுமைக்கு நாம் ஆயந் தீர்த்துக்கொள்வோம். நமது இரமணி மனோரஞ்சிதம் நல்ல இளைஞியாயிருத்தல் வேண்டும்; உத்தம கன்னிகையாய்த் துலங்கவேண்டும்; பரமோத்தம பெண்டீராய்ப் பிரகாசிக்கவேண்டும்; வானோர் சஞ்சாரத்தில் வசிக்கும் முக்தரைப்போலத் தன் முதிர்வயதில் தன் புத்திர பௌத்திராதிகட்கு நானாவித புண்ணிய சாதகமாகவேண்டும். இதில் எனது கோரிக்கை, தாற்பரியம், நோக்கம் முடிவு மடங்கிவிட்டன. நமது சிறுமியைச் சகலவித தர்ம பூஷணங்களால் அலங்கரிப்பது நமதுபேரிற் சுமந்த பாரம். நாம் நால்வரிருக்கின்றோம். நம்மில் ஒவ்வொருவரும் ஓர் விஷயத்தை யெடுத்துக்கொள்வது நன்று. திருமறைநாயகம்! நீ மனோரஞ்சிதத்துக்குச் சரிதை யாசிரியனாயிருப்பாய். புண்ணிய புருஷ பூவையர், கன்னியர், பாலியர், இளைஞர், இளைஞிகளின் சரித்திரங்களைச் சமயோசிதமாய் அவளுக்குச் சொல்லிச் சரிதை சாரத்தை யூட்டிச் சன்மார்க்கத்தைப் போதிப்பாய். அபிராமீ! நீ யவளுக்குப பக்தி மார்க்கத்தையுங் கிரகப் பணிவிடைகளையுங் குறையின்றியுபதேசிப்பாய். பெண்கட்குப் பூஷணம் பக்தி. வஸ்திர-ஆபரண-அலங்கிருதமில்லாப் பெண் அநேகருக்குப் பிரியப்படாள். பக்தியில்லாப் பெண் யாரை யிரம்மிப்பாள்? அவள் கொஞ்சம் பேருக்குப் பிரியப்பட்ட போதிலுங் கடவுளுக்கும் மற்றநேகருக்கும் பிரியப்படாள். மெய்யான தெய்வ பக்தை யாவருடைய எண்ணத்திலும் நன்குமதிப்புற்று சமஸ்தருக்கும் பிரயோஜனப்படுவாள். ஆதலால் அவளுக்குப் பக்தி மார்க்கத்தைப் பற்றும் பற்றாய் உபந்நியாசித்து விடு. 'தாயைப்போற் பிள்ளை' யென்பதைக் கிஞ்சித்து மறவாதே. நமது சிறு நங்கை யுன்னை யுரித்துக்கொண்டு பிறந்திருக்கிறாள். உன் குணாதிசயங்களும் புண்ணியப் பிரவர்த்தனங்களும் பொதுவாயிருக்கவேண்டுமென்பது எனது அபிலாஷை.

"குணமணி! நீ, மனோரஞ்சிதத்துக்கு ஜனசஞ்சார புண்ணியங்களையுந் தர்மங்களையும் இதமாகப் போதித்துவிடு. ஏனெனில்

நமதுகுழந்தை காலக்கிரமத்தில் நாட்டோடும் ஊரோடும் ஒத்து வாழவேண்டியிருக்கும். உலகில் முகங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறாயிருப்பதுபோல ஒவ்வொருவன் குணமும் வெவ்வேறுதான். ஒவ்வொருவன் குணத்திற்குத் தக்கபடி நடந்துகொள்வது மனிதன் கற்றுக்கொள்ளவேண்டிய கல்விகளில் முக்கிய கல்வி. எக்காலத்தும் யாரேனும் என் மகன்மீது எக்குறையுஞ் சொல்லச் சம்மதியேன். அவன் சகலருக்கும் இல்லறத்தில் நல்லறநெறிகாட்டியாயிருத்தல் வேண்டுமென்பது எனது தாற்பரியம். நீ யதைப் பூர்த்திசெய்யவேண்டி யுன் கல்விச்சாமார்த்தியத்தையும் புத்தி தீக்ஷண்யத்தையு முற்றிலு முபயோகிக்கவேண்டும்."

"நானேவெனில் என் மகள் போதனையில் அபிவிர்த்தியடையும்படிச் சிரத்தை யெடுத்துக்கொள்வேன் இதனோடுகூட உங்கள் மூவருடைய உபந்நியாசங்களையுங் கண்காணிப்பேன்." என்று

அம்மூவருக்குஞ் சங்கற்பித்துவிட்டுத் தமது மகளைநோக்கி: "மனோரஞ்சிதம்! வேதோபதேச பீடிகையை யெடுத்துவா; இன்றுதொட்டு எனது இராஜா நாட்களை யெல்லாம் உனது உபதேசசிக்ஷையிற் செலவிடவேண்டும். இன்னு மிரண்டு மூன்று மாதங்கட்குள்ளாக உனது ஞானோபதேசத்தை முடித்துவிடவேண்டும். என்னுடைய இராஜா நாட்கள் வியர்த்தமாய் நிகழத்தகாது. உனது பாடசாலை நேரத்தை வேதோபதேசத்திற் செலவிடுவதும் யுக்தமல்ல. இதற்காகவே கடவுள் காலக்கிரமத்தை நமக்குக் கடாக்ஷித்திருக்கிறார். காலம் அணியணியாய்க் கடக்கும்படி, அதைவினாடி, நிமிஷம், மணி, இரா, பகல், வாரம், மாதம், வருஷம், யுகங்களாகப் பாகித்து விலையேறப்பெற்ற கொடையாக நமக்குப் பிரசாதித்திருக்கிறார். ஆதலின் காலம் நிகழும்போதே யொவ்வொரு விஷயத்தையுங் கிரமமாய்ப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டும். ஆனதுகொண்டு நீ யுன் புத்தகத்தைத் திறந்து வாசி."

மனோரஞ்சிதம்:—"ஆஞை! இதோ வாசிக்கிறேன்: சர்வேஸ்வபராய நமஃ"

மதுரநாயகம்பிள்ளை:—"போதும், நிறுத்து. 'சர்வேஸ்பராயநமஃ' என்னிற் சமஸ்த சிருஷ்டிகட்கு மதிபதி கடவுளுக்குத்தோத்திரம் என்று பொருட்படும். கடவுள் ஒருவரிருக்கிறார். கடவுள் என்றால் எல்லாவற்றையும் படைத்தவர்; காப்பவர்; பரிபாலனம்

பண்ணுகிறவர்; சகலத்தையுங் கடந்தவர்; அகிலாண்டகோடிகளையுந் தமக்குள் எடக்கிக்கொண்டிருக்கிறவர். இவருக்கே சர்வேஸ்வரனென்று பெயர். மனோரஞ்சிதம்! நமது மனோகர உத்தியானமத்தியிலிருக்குந் தடாகத்தைப் பார்த்தாயா?"

மனோரஞ்சிதம் ;— "பார்த்தேன் ஆஜி!"

மதுரநாயகம்பிள்ளை :— "அதிலென்ன விருக்கிறது?"

மனோரஞ்சிதம் :— "அதில் மீன்களும் பாம்புகளுந் தவளைகளும் பற்பல சிறிய ஜீவஜெந்துக்களு மிருக்கின்றன."

மதுரநாயகம்பிள்ளை :— "கடவுள் அக்குளத்துக்குஞ் சமமாயிருக்கிறார். நாமும் மற்றுமுள்ள சகல படைக்கப்பட்ட வஸ்துக்களும் அத்தடாகத்தில் வசிக்கும் நானாவித ஜீவஜெந்துகட்குச் சமமாயிருக்கின்றோம். நமது குளத்திற்கு நாற்பக்கங்களிலும் வரம்புகளிருக்கின்றன. ஆனால் கடவுளுடைய நிர்ணயத்துக்கும் இருத்தலுக்கும் எல்லைகள் கிடையா. ஜலத்தில் மச்சங்கள் நீந்துவதுபோல நாம் அவரிற் ஜீவித்து நடமாடி நிலைபெற்றிருக்கின்றோம்."

மனோரஞ்சிதம் :— "ஆஜி! நானும் விஜயவல்லியும் பாடசாலைக்குப் போகும்போது, என் பள்ளித்தோழி வழியிற் காணும் ஒவ்வொரு கோவிலுக்குங் கையெடுத்துக் கும்பிட்டுவிட்டு, என்னைப் பார்த்து :— 'மனோரஞ்சிதம்! நீயேன் கோவிற்கண்டவிடத்திற் கும்பிடுகிறதில்லை? எல்லையம்மன், மாரியம்மன், செல்லியம்மன், ஐயனார், மதுரைவீரன் முதலான தேவர்களைக் கும்பிட்டால் நல்லது; நமக்கு வியாதி வராது; தலைநோய் கால்நோய் தீர்ந்துபோம். நீயும் என்னைப்போற் செய்" என்பாள்.

நான் :— "விஜயவல்லி! கடவுள் ஒருவர்தானே; பலபேர் தேவாக்களிருக்கலாமா? பெண்பிள்ளைகள் கூடவா தேவர்கள்? சோமனபுரத்தில் மடத்துக்கன்னியாஸ்திரீகள் எனக்கிப்படிச்சொல்லித்தரவில்லையே! 'ஒரே பொரு தேவனைத்தான் கும்பிடவேண்டும். பல தேவர்களை வணங்கினாற் பாவம்' என்று, எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் நான் உன்னைப்போற் கும்பிடமாட்டேன் எனறு பலதடவைகளில் அவளை மறுத்துச்சொல்லியிருக்கிறேன். நான் சோமனபுரத்தில் மடத்தில் வாசித்தபோது, அதிக சிறுமியாயிருந்தேன். நான் ஞானோபதேசங் கேட்டபோது கன்னியாஸ்திரீகள் சொன்னவைகளைச் சரியாய்க் கண்டுபிடிக்கவில்லை. நம்

முடைய கோவில்களிலும் பற்பல படங்களுஞ் சுரூபங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைப் பார்க்கும்போது :— 'சுவாமி யொருவரா? பலபேரா? அந்தச்சுரூபங்களாற் குறிக்கப்பட்டவர்களுங் கடவுளா? அவர்களை யெவ்விதம் வணங்குகிறது? அவர்களைத் தெய்வமென்று சொல்லலாமா?' என்று, அநேகமாய் என்புத்தியிலோடுகின்றது. இப்போது எனக்குக் கொஞ்சம் விபரம் வந்திருக்கிறது. நீங்களும் மற்றவர்களுங் கூடித் தர்க்கம்பண்ணும்போது நான் வெகுவாய்க் கண்டுபிடிக்கிறேன். ஆனதுபற்றி, ஆஜீ! எல்லாமெனக்குத் தெளிவாய்ச் சொல்லித்தாருங்கள்."

மதுரநாயகம்பிள்ளை :— "அப்படியே யாகட்டும் மகளே! ஒவ்வொரு விஷயத்தையும் பற்றும்பற்றாய்ச் சோதிப்போம். உனக்குப்புலப்படாதவைகளை யடுத்தடுத்துக் கேட்டு கிரகித்துக்கொள். என்னை வினவவும் என்னிடத்தில் ஆக்ஷேபிக்கவும் பயப்படாதே. உபந்நியாச காலத்தில் வினவாத பிள்ளை கண்டுபிடிக்காத பிள்ளை. கேள்விகள் கேட்டு ஆக்ஷேபிக்கும் பிள்ளையே புத்திசாலி. ஆதலால் எவ்விஷயத்தையும் நன்றாய்க் கேட்டுணர்ந்துகொள்."

மனோரஞ்சிதம் :— "எனக்கு மெத்த சந்தோஷம். நான் கேட்டால் எங்கே கோபித்துக்கொள்வீர்களோவென்று பயப்பட்டேன். இப்போது எனக்குத் தைரியம் வந்துவிட்டது. சொல்லுங்கள், ஆஜீ! நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன்."

மதுரநாயகம்பிள்ளை :— "நான் சொல்லப்போகும் இம்முதல் உபந்நியாசம் கடவுளின் நிர்ணயத்தின் பேரிலாம். இதன்மட்டிற் பற்பல மேதாவிகளுடைய நிதரிசனங்களையு மெடுத்துக் கூறுவேன். கேள்மகளே! வீடு கட்டுகிறவன் அஸ்திவாரத்தைக் கவனிக்கவேண்டும். அஸ்திவாரமில்லா வீடு நிலைநில்லாது. காற்றடிக்க, மழைபெய்ய, வெள்ளம்வர, வீடுசங்காரமாகும். வீடு நீடித்திருக்கவேண்டுமாயில் ஆழ்ந்த அஸ்திவாரம் போடவேண்டும். சகலத்திற்கும் அஸ்திவாரமு மூலமுங் கடவுளே. இந்த அஸ்திவாரத்தின்மீதே யுன் ஞான வீட்டைக் கட்டவேண்டும். அதைஸ்திரமாய்க் கட்டிக்கொள்ளவேண்டுமாயின் உனக்கு மூலமாகிய கடவுளை அல்லது தலைவனை நீ நன்றாயறியவேண்டும். இருக்கட்டும். உன்னைப் பெற்றவர்களியார்?"

:— "நீங்களும் அம்மாளுந்தான் என்னைப் பெற்றீர்கள்."

:— "எங்களைப் பெற்றவர்களி யார்?"

:— "தாத்தாவும், ஆஜியம்மாளும்."

:— "அவர்களைப் பெற்றவர்களி யார்?"

:— "அவர்களுடைய தாய் தந்தையர்."

:— "மனோரஞ்சிதம்! இவ்வாறே யணியணியாய் மேலேயேறிப்போவோமாயின் கடைசியாய் ஒரு மனிதனை மனுப்பூண்டுக்கு முதல்வனென்று அறிந்துகொள்வோம். இம்முதல் மனிதன் தானே யிருக்கவும் உற்பத்தியாகவும் வரவு மாட்டான். இவன் பலவீ[illegible]தலால் ஓரணுவை முதலாய்ச் சிருஷ்டிக்க வகையறியான். ஆதலால் அநாதிநித்யமாய்த் தன்னில் நிலைபெற்றிருக்குஞ் சர்[illegible]ஞான, சர்வசக்தரான ஓர் வஸ்[illegible]கிறது. ஏனெனில் மனிதனும் ஏனைய சிரு[illegible]டிகளும் உற்பத்தியாகித் தோன்றி, வளர்ந்து, குன்றி, குறைந்து, [illegible]ப்பினும் இன்னும் பற்பல காரணங்களாலு மறைந்தொழிகிற[illegible]தைக் கண்காட்சியாய் நாடோறும் பார்க்கிறோம். இவ்வாறு உற்பத்தியாகி யழிந்துபோம் வஸ்துக்கள் அவசியவஸ்துக்களல்ல. அவசியமல்லாதது தானாய்வராது. வேறோர் அவசிய வஸ்துவி னிடத்திலின்றே அழியும் வஸ்து வரவேண்டும். அவ்வவசிய வஸ்துவே கடவுள். ஆதலால் தேவன் ஒருவரிருக்கிறாரென்பது திண்ணம்."

மனோரஞ்சிதம்:—"ஆம், ஆஜீ! நான் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனாற் கடவுளில்லையென்று சொல்லுகிறவனியார்? எங்கேயாகிலும் அப்படிப் பேசுகிறவனுண்டா?"

மதுரநாயகம்பிள்ளை:—"ஓ மகளே! முக்கியமாய் நமது காலத்தில் மேனாட்டு பிலேச்சர் சிலர் தங்கள் புல்லறிவை நுண்ணறிவாய்ப் பாவித்துக்கொண்டு:—'கடவுளில்லை' யென்கிறார்கள். 'எல்லா மியல்பா யுண்டாய்விடுகின்றது' என்கிறார்கள். தார்வின் என்னும் பெயர்வகித்த ஆங்கிலேய ஜடவாதி யொருவன் ;—'கடவுளில்லை கடவுளென்றால் அர்த்தமென்ன? பயனற்ற வீண் சொல். உலகில் எல்லாம் அபிவிர்த்தியாகிக்கொண்டே வருகிறது. ஒவ்வொரு வஸ்துவும் மாறிமாறி மேன்பாடாகிறது. நாற்காற் ஜீவன்களில் உத்தம விலங்கு குரங்காகிறது, குரங்கு மனிதனாகிவிடுகிறது. ஒன்றையுங்கடவுள் உண்டாக்கவில்லை. கடவுளுமில்லை. சமஸ்தமுந் தற்செயலாயுஞ் சுபாவீகமாயும் உற்பத்தியாகி அபிவிர்த்தியடைந்து அழிந்துபோகிறது." என்றான்.

"இன்னும் பலர் பலவாறாய்த் தெய்வ நிரணயத்தை நிராகரிக்கின்றார்கள். 'வெள்ளம் வருமுன்னே யணைபோட்டுக்கொள்ளவேண்டும்,' இன்னுஞ் சில வருஷமளவும் நீ பாடசாலையில் ஆங்கிலேய பாஷை படிக்கவேண்டியிருக்கின்றது. நீ பெரிய வகுப்பில் வாசிக்கும்போது தர்க்கம், ஞான சாஸ்திரம், வான சாஸ்திரம் முதலிய நூற்களை நீ கற்றறியவேண்டியிருக்கும். மேற்கூறிய நூற்களில் ஸ்பிநோஜா, தார்வின், உலோக்கு, காந்து, எஜேல், வொல்த்தேர் முதலிய அபத்த நாஸ்திகரின் போதனைகள் வரும். தற்காலம் பாடசாலைகளில் சில உபாத்தியாயர்கள் மேற்படி நாஸ்திக படிப்பினைகளை முன்னிலைக்குக் கொண்டுவர முயலுகின்றார்கள். நமது இந்து நாட்டிலும் பாதராயணனுடைய சிஷ்யராகிய வேதாந்திகள் 'உலகமும் அதிலடங்கிய சராசரங்களுமில்லை' யென்கிறார்கள். மேற்படியாருக்கு விரோதிகள் 'பிரபஞ்சமில்லாவிடிற் பின்னு மென்னதானிருக்கிறது? கடவுள்தானிருக்கிறாரோ? இதனை யெதனால் அறிவோம்?' என்று தெய்வ நிரணயத்தையுஞ் சந்தேகத்திற் கொண்டுவந்துவிட்டார்கள். இத்தகைய அநுசித அயுக்த அபத்த போதனைகளெல்லாந் தத்வ விளக்கத்தில்வரும்; பற்பல சம்பாஷணைகளினுஞ் சம்வாதங்களிலும் பலர் நீ நினையாத நேரத்தில் அவைகளை உதகரித்து உன் புத்தியை மயக்கி நீ நாஸ்திகையாய்ப் போகும்படித் தேடுவார்கள்."

மனோரஞ்சிதம்:—"தந்தையே! நாஸ்திகனென்றால் என்ன? பாதராயணனியார்? சராசரங்களென்றால் அர்த்தமென்ன?"

மதுரநாயகம்பிள்ளை:—"நாஸ்திகன் என்னிற் கடவுள், நன்மை, தின்மை, பாவ புண்ணியம், நரக மோக்ஷம், புனருத்தானம் நித்தியஜீவிய முதலியவைகளைத் திரஸ்கரிப்பவன்—இல்லையென்று சாதிப்பவன் நாஸ்திகன். பாதராயணன் ஆறு இந்து சாஸ்திரங்களில் ஒன்றாகிய வேதாந்தத்தை யியற்றியவன். சராசரங்களென்கில் உலகில் நமது பஞ்ச புலன்கட்குப் புலப்படுஞ் சமஸ்த காரியங்களும், புலப்படாத பற்பல வஸ்துக்களுமேயாம்."

மனோரஞ்சிதம்:—"ஆ! மேற்படி மேனாட்டு மூடர்களைப் போல் நம் மிந்துநாட்டிலுஞ் சில மூடர்களிருக்கிறதாகச் சொன்னீர்கள். ஒருக்கால் அந்த அற்ப அறிவாளர்கள் என்னோடு பேச நேரிட்டு:—'அம்மா! தெய்வமில்லை; பாவ புண்ணியமில்லை. எது மில்லை. ஜெபதபம் தான தர்மமெல்லாம் வீண். பிரயாசை வேண்டாம்; முயற்சி வேண்டாம்; இஷ்டம்போல் நட' என்றால், நானென்ன மறுப்புச் சொல்லவேண்டும்?"

மதுரநாயகம்பிள்ளை :— "மகளே! இவ்வகைய புல்லறிவா
ளன் எவனேனும் உன்னிடத்தில் மேற்படி யபத்த போதனையைத்
தோளிற் சுமந்து கிளைநாட்டச் சலஞ்சாதிப்பானாகில் நீ யவன் பித
ற்றலுக்குப் பிரதியாக :— ஐயோ! தர்க்க சிகாமணியே! நான்
பெண்பிள்ளை. தர்க்க நூலறியேன். சம்வாதம்பண்ண என்னால்
மாளாது. ஆயினும் உண்மைக்கு விரோதமாய்ப் பேச உம்மை விடு
வது எனக்கு வாசியல்ல. நீர் 'தெய்வமில்லை' யென்கிறீர். நீர் கட
வுளைக் காணாததால் அல்லது உமது சிற்றறிவால் அவரது தி[illegible]
யத்தை யுய்த்துணரா தியலாமையால் அவரில்லை யென்கத் [illegible]ணித்தீர்.
நானும் நீர் திறந்த வழியே நடக்கிறேன். நான் உமது [illegible]ய் தந்தை
யரைக் கண்டேனோ? இல்லை. நீர்தான் உம் பாட்டன் [illegible]ட்டனைப்
பார்த்தீரோ? இல்லை. ஆதலால் உமக்குப் பாட்டன் பூட்டனு
மில்லை; தாய் தந்தையருமில்லை. அவர்களில்லாவிடத்து நீ ரெங்
கிருந்து வந்தீர்? வானத்தைக் கிழித்துக்கொண்டு குதித்தீர் போ
லும்! இதென்ன விந்தை! நீர் கானக மத்தியில் ஓர் கடிகாரத்தைக்
காண்பீராயின் 'அங்கு அது தானே வந்தது!' என்பீரோ? விநாடி,
நிமிஷம், மணியோட்டத்தைக் காட்டும் முட்கள் கடிகார மத்தியிற்
றானே வந்தமைந்தனவோ? அதனுள்ளிருக்கும் பற்பல சக்கரங்க
ளுஞ் சுவேச்சையாய் அமைந்து தத்தம் ஸ்தானங்களில் வந்து தற்
செயலாய்ப் பூட்டிக்கொண்டனவோ? கடிகாரத்தைக் குவித்து ஒன்
றுக்கும் ஆணிகள், விற்கள், கீழ்மூடி, மேன்மூடிகளுந் தம்மாற்
றானோ? அவ்வடிவிக்குக் கடிகாரந் தானேன் வந்துவிட்டதாமோ?
இல்லையில்லை. இயாத்திரிகன் ஒருவன் கானகத்தைக் கடக்கும்
போது கைச்சாரிக் கடிகாரத்தை நழுவவிட்டான். மேற்படி கடிகா
ரஞ் சுபாவிகமாய் அமைந்துவிட்டதா? அதுவுமில்லை. சந்தேகமற
அதனை யொரு தேற்பரி தன் றன்னறிவின் றுணையால் உருப்படி
செய்தான். இதனை நீர் ஒப்பவேண்டியவரல்லவா?" இதுநிற்க.

"நமது நகரத்திற் சிவகங்கை குளத்தருகிலிருக்குஞ் சித்தி
ரச்சாவடியைப்பாரும். அங்கு அது தன்னால் அமைந்ததுதானோ?
அதனுயிரந் தூண்களும் மாடியுந் தற்செய லமைப்பாமோ? அதனை
யலங்கரிக்கும் பல நூறு பதுமைகளுந் தாமாய்த் தங்களை நிருபித்
துக்கொண்டனவா? அதனைச் சோடிக்குஞ் சித்திர விசித்திரங்க
ளெல்லாந் தங்களைத் தாமாய்ச் சித்திரித்துக்கொண்டனவா? அவை
களிற்கூடும் விவித விசித்திர வர்ணங்களெல்லாந் தற்செயற்சேர்க்

கைதானே? இப்பற்பல வினாக்களில் ஒன்றுக்கேனும் 'ஆம்' என்பீரோ? இல்லை! வெட்டுணையுமில்லை. இல்லையேல், அதனை யோர் சிற்பிகட்டிமுடித்தான், அலங்கரித்தான், சோடித்தான்; அதற்குப் பற்பல பூஷணங்களைப் பூட்டினான். இது உமது உடன்பாடல்லவா? ஆம்! மீண்டும் உமது வீடு நித்திய நியமமா? பரிச்சேதமில்லை. அது சில கொற்றர், தச்சர், கையாட்கள்கூடி யொப்பேற்றிய வேலையன்றோ? நீர் உடுத்தியிருக்கும் உடைகள் தற்செயற்பயனோ? அவை தாமாய்வந்து உம்மீது இறங்கிவிட்டனவோ? அணுத்துணையுமில்லை. அவை கைக்கோளன் கைத்தொழிலன்றோ? அது உமது பணவிரயமன்றோ? உமது விரலிற் செறித்திருக்குங் கணையாழி தற்செயல் உற்பன்னமாமோ? எங்ஙனமாகும்? அது தட்டான் பொன்னினின்று தொழிற்படுத்திய மோதிரமல்லவா? அதனை யுமது பணத்தைக்கொடுத்தல்லவா உமது கையிற் போட்டுக்கொண்டீர்? இவ்வாறே வொவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு காரணமுண்டு. ஐயா வித்தியார்த்தியே! சற்று வெளியில் வாரும். வானத்தை யண்ணார்ந்து பாரும்; அங்கு விளங்கித்துலங்கும் அனந்தங்கோடி நக்ஷத்திரங்களை நோக்கும்; நவக்கிரகங்களைப்பாரும்; சந்திர சூரியாதிகளைப் பாரும்; தூண், உத்தரம், அழியந்தரம், குறுக்குச் சட்டங், கொடிவளை, முகவளைகளில்லா இந்தப் பிரமாண்ட மண்டபத்தைக் கவனியும். சந்திர, சூரிய, நக்ஷத்திராதிகளின் ஓட்டத்தின் கிரமத்தையுற்றுநோக்கும். மாறின்றி தாமதமின்றி, தவக்கமின்றி துரிதமின்றி நாடோறும் ஒருகண்டசீராய் நடக்கின்றன. இதனைத் தற்செயற்பயனென்பீரோ? தற்செயலுக்குக் கிரமமுண்டாமோ? உலகத்தைப் பாரும்; அதில் உயிர் வாழுஞ் ஜீவராசிகளையுந், தாவர வர்க்கங்களையுந், தாதுவர்க்கங்களையும் பாரும். சமுத்திரத்தையும் அதிற் சஞ்சரிக்குஞ் ஜலசரக்கோடிகளையும் பாரும். இவையெல்லாந் தற்செயலின் சாமார்த்தியமோ? வானத்திலும் பூமிமீதும் நாம் சிருஷ்டியிடத்துக் காணும் அணியும், அலங்காரமும், ஒழுங்கும், கிரமமும் ஓர் சர்வஞான, சர்வசக்தி பூஷணரான சிற்பியை நமக்குக் காட்டவில்லையா? காரணமின்றிக் காரியமா? நீரின்றி யூற்றா? நெருப்பின்றிப் பிரகாசமா? வித்தின்றி விருக்ஷமா? 'வித்தில்லாச் சம்பிரதாயம் மேலுமின்று கீழுமின்று' என்ற மூதுரையை மறந்துவிட்டீரோ? நாம் பார்க்கும் பிரபஞ்சம் ஓர் காரணத்தினின்றே காரியமாய்ப் புலப்பட்டது. அக்காரணத்தையே கடவுளென்கிறோம். கடவுளிருக்கிறதென்று நியாயத்தால் நிரணயமாயிற்று. ஆதலாற் றர்க்கத்தில்

நிபுணரான மேதாவியே! கடவுள் ஒருவர் உளரென்று ஒப்பும், ஒப்பிய பின்னர் மீதியான அவருடைய இலக்ஷணங்களையெல்லாம் உய்த்துணர்ந்து அவருக்குப் பணிசெய்யும்' என்று, அப்புல்லறிவாளனுக்குச் சொல்வாய் மகளே! இந்த உபந்நியாசத்தாற் கடவுள் ஒருவர் இருக்கிறாரென்று அறிந்தாயல்லவா, மனோரஞ்சிதம்?"

மனோரஞ்சிதம் :— "ஆம், ஆஞ்ரி! அறிந்தேன். இதற்கு முன்னுந் தேவனிருக்கிறார் என்று தெரியும். ஆனால் அவரிருக்கிறாரென்றறிந்தும், அதை எண்பிக்கத் தெரியாமலிருந்தேன். இப்போதோ? எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொல்வேன். எவனாகிலும்: 'நீ தெய்வத்தைக் கண்டாயா?' என்றால், 'நீர் உமது பாட்டன் முப்பாட்டனாரைக் கண்டீரா?' என்பேன். அவர் :— 'காணவில்லையென்றால், நான் உடனே:—நீர் அவர்களைக் காணாமையால் அவர்களிருந்ததில்லையோ? நீர்பார்க்காவிட்டாலும் அவர்கள் உமக்கு விட்டுப்போன வீடுவாசல், தோட்டம், நிலபுலங்கள், கணக்குப் புத்தகம் அவர்களுடைய கையெழுத்து முதலானவைகளும் அவர்களிருந்தார்களென்று நன்றாய்க் காட்டவில்லையா?' காட்டுகின்றன. அதுபோல நாம் தேவனைப்பார்க்காவிட்டாலும் அவரால் உண்டான உலகத்தைப் பார்த்து அவர் இருக்கிறாரென்று நிச்சயித்துக்கொள்ளலாம் என்பேன்." என,

மதுரநாயகம்பிள்ளை :—"இதுதான் என் கண்மணியே! இரமணியே! இதுதான் நான் சொன்னது. இன்னும் வேறு வகையிலுந் தெய்வ நிரணயத்தை நிரூபிக்கலாம். சொல்லுகிறேன், கேள்: வேதாகமத்தாலுஞ் சமஸ்த ஜனங்களுடைய சம்மதத்தாலும், உடன்பாட்டாலும் எண்பிக்கலாம். உலகாதி முதல் ஆதாம், ஆபேல், நோவை, அபிரகாம், இயாக்கோபு, மோசை முதலிய மகான்களுக்குக் கோடானுகோடி சமயங்களிற் கடவுள் பிரசன்னமானார். மோசையொருநாள் ஓரேபு மலையருகில் ஆடுகளைமேய்த்துக்கொண்டிருக்கும்போது அகஸ்மாத்தாய் ஓர் முட்செடி யற்புதமாய்ப்பசுமை, மாறாமற் பற்றிக்கொண்டெரிய, அக்கணமே:-'மோசை! மோசை!!' என்று சப்தித்தொலிக்க, அவர் முட்செடியை யணுகினார். பின்னுமோர் சப்தம்:-'நீ நிற்குமிடம் பரிசுத்த ஸ்தலம். ஆதலால் உன்பாதரக்ஷைகளைக் கழற்றிப்போடு.' என்று தொனித்தது...... சர்வேஸ்வரனுக்கும் மோசைக்கும் நெடுநேரஞ் சம்பாஷணை நடந்த

பின்னர் ஏபிரேய சாசனார்த்தி ஆண்டவனை நோக்கி :— 'சுவாமி! உமது நாமபதேய மியாது? ........" என்று வினவ,

பராபரன் :— "*Ego sum qui sum* : நாம் ஸ்வயம்பு" என்று தம்மை யவருக்குப் பிரசித்தப்படுத்தினர் ...............

மனோரஞ்சிதம் :— "ஆ்ஞி! சற்று நில்லுங்கள். ஸ்வயம் பென்றால் அர்த்தமென்ன?"

மதுராநாயகம்பிள்ளை :— "ஸ்வயம்பு என்னில் சுயஞ்ஜீவி, தற்ஜீவி; யாராலும் நிர்மிக்கப்படாதவர்; தன்னிலே தானிருக்கிறவர்; தன் வயத்தனானவர் என்று பொருள்படும். மகளே, மேற்கூறிய மோசையின் பஞ்சாகமங்களுந் தீர்க்கதரிசிகளி னாகமங்களும் 'அநாதி நித்யரான கடவுள் ஒருவரிருக்கிறார்' என்று பன்னூறு தடவைகள் கூறுகின்றன. உனக்குத் தக்கவயது வந்த பின்னரும் நீ யாங்கிலேய பாஷையை நன்றாய்க் கற்றுணர்ந்த பின்னரும் மேற்படி பாஷையிற் றிருப்பப்பட்ட வேதாகமத்தை வாசித்து அதை நன்குணர்வாய். ஜகத்தில் வசிக்குஞ் சகல ஜாதி ஜனங்களும் 'கடவுள் ஒருவரிருக்கிறார்' என்று ஒப்புகின்றார்கள். உலகத்தின் ஒவ்வொரு கண்டத்தில் உயிர்வாழும் ஒவ்வொரு இனத்தாரும் ஒவ்வொரு மதஸ்தரும் 'தேவனொருவரிருக்கிறார்.' என்று நிரூபிக்க அவர் பேரால் சிலர் மகத்தான ஆலயங்களையும், வீடுகளையுங் கோவில்களையும், பீடங்களையுங் கட்டி யங்கு அவரை வணங்குகின்றார்கள். பலர் விக்கிரகங்களையும், படிமைகளையும் வைத்துத் தெய்வமென்று கும்பிடுகிறார்கள். வேறநேகர் வெறுங் கருங் கற்களை பூமியில் நட்டு தேவதைகளாகப் பாவிக்கின்றார்கள். இவ்வாறு உலோகாதியந்தமும் நானாவித கல்வியிற் றேர்ந்த நாகரீகர் முதல் வனத்தில் வசிக்கும் இருளர்வரை சகலரும் ஓர் தெய்வமுண்டென்று சொல்லி யேற்றுக்கொண்டு அவரைத் தக்கவிதமாயுந் தகாதவிதமாயுந் தொழுது வருகின்றார்கள். இறுமாப்பும் அகந்தையுங் கொண்ட சிற்சில நாஸ்திகர் தவிர எக்காலத்தும், எவ்விடத்தும், எஜ்ஜாதிஜனங்களும் பிரபஞ்சத்துக்கு மூலமாகிய கடவுள் ஒருவரிருக்கிறார் என்ற சாமான்னிய எண்ணத்தில் ஏகிபவித்திருக்கின்றார்கள். ஆதலால் மகளே, நீயும் அவ்வாறே பெணணிக்கொண்டு அவரை யுத்தம விதமாய்ச் சேவிக்கவேண்டுமாயின் 'கடவுளிருக்கிறார்' என்று நியாயத்தாலும் வேதாகமத்தாலுஞ் சமஸ்தஜன உடன்பாட்டாலுந் தெளிந்து அவரை விசுவாசிக்கவேண்டும். நீ யவரை முற்றிலு மறியவேண்டும்; அவருடைய திவ்ய லக்ஷணங்

களை நன்கு உய்த்துணரவேண்டும். (*Ignoti mulla cupido*) அறியாப் பொருளின்மீது விருப்பமேது? ஆசையேது? பற்றுதலேது? அங்ஙனமே நீ கடவுளை யறியாவிடில் எவ்வாறு அவரை நேசிப்பாய்? வணங்குவாய்? வாழ்த்துவாய்? போற்றுவாய்? புகழ்வாய்? எவனேனும் ஒரு கனியின் குணங் குறிகளை யறியாவிடில் அதனைத் தேடுவானா? ஆசிப்பானா? புஜிப்பானா? இல்லையே! அவ்வாறே நீ கடவுளை யறியாவிடில் அவரை நீ நாடமாட்டாய்; நன்றாகத் தொழமாட்டாய்; நற்பதவியடையமாட்டாய். ஆகையால் மகனே, இந்த வேதாப்பியாச காலத்தில் உன்னால் இயன்ற வரையில் நன்றாய்க் கவனித்துச் சகலத்தையு நுணு நுணுக்கமாய்க் கற்றுக் கொள்." என்று முடித்து,

தம் சகோதரனைப் பார்த்து :— "திருமறைநாயகம்! நமது குழந்தைக்குச் சரித்திர சம்பவங்களேதேனுஞ் சொல்லி அவனுக்குத் தெளிவை யூட்டுவாய்." எனச் சங்கற்பித்து மேன் மாடிக் கேறிப் போய்விட்டார். மதுரநாயகம்பிள்ளை யெழுந்துபோனது எனக்கொருவாறு கிலேசமாயிருந்தது. நான் எனக்குள்ளே :— 'மதுரநாயகம்பிள்ளை யில்லாச் சங்கம் ஆசானில்லாப் பள்ளிக்கூடத்துக்குச் சமம். கற்றறி மாணாக்கர் பற்பலரிருப்பினும் உபாத்தியாயரில்லாவிடிற் பாடசாலை பிரகாசியாது.' என்று குறைவா யோசித்துக் கொண்டிருக்கும்போது, என் மனம் ரஞ்சிக்கப் பின் வருமாறு :—

திருமறைநாயகம்பிள்ளை :— "மனோரஞ்சிதம்! நான் சொல்லப்போகிறதைச் சற்றுக்கவனி. கிரேசியா நாட்டில் அத்தேன் என்று ஓர் நகரமிருக்கிறது. பூர்வம் அதில் சோக்கிராத்து என்று ஓர் சிறந்த ஞானியிருந்தான். அவன் கிறிஸ்துவனல்ல; யூதனல்ல; மகம்மதியனுமல்ல. கிரேக்குமத மேதாவியானவன். நமதிரக்ஷக பெருமான் இயேசு நாயகர் பிறக்க இன்னும் நானூறு வருஷங்களிருக்கும்போது அவன் கிரேசியாதேசத்திற் சஞ்சரித்தான். அவன் தத்துவ பாடசாலைக்கு ஆசாரியனாயிருந்த காலத்திற் றன் மாணாக்கரை நோக்கி :— 'பிள்ளைகாள்! உலகத்தையும் அதிற் றோன்றும் நானாவித ஆச்சரிய காரியங்களையும் பொருட்களையுஞ் சம்பவங்களையும் பாருங்கள். அவைகளிற் றுலங்கும் அற்புத கிரமத்தையும் அணியையும் ஒழுங்கையும் பாருங்கள். இவைகள் சர்வஞானத்தையுஞ் சர்வ சக்தியையும் பூஷணமாகத் தரித்திருக்கும் ஓர் சிருஷ்டி பரிபாலனர் இருக்கிறாரென்று நமக்குப் பிரசங்

கிக்கின்றன." என்று பல்லாண்டு பலவாறாய்ப் போதித்துவந்தான். அவன் தன் சல்லாபங்களிலும் உபந்நியாசங்களிலும் தேவனைக் குறித்துப் பேசும்பொழுது எப்போதும் ஒருமையிற் பேசுவது வழக்கம். அதனால் தேவர்களுக்குச் செலுத்தவேண்டிய உபசார முறையிற் றப்பிப்போனானென்றும் பால்யரை யபத்த போதனைகளாற் கெடுக்கிறானென்றும் நீதியாசனசாலையிற் குற்றஞ்சாட்டப் பெற்று தான் அபராதி யல்லவென்று பலவாறு எண்பித்தும் பயன் பெறாமற்போனான்.

சொக்கிராத்து (*Socrates*) மாணதண்டனை விதிக்கப்பெற்று:—"ஓ! அத்தேனியரே! முப்பது வருடகாலமாய் உங்கள் சுகத்தையும் எனது மாணாக்கர் க்ஷேமத்தையுந் தேடினேனேயல்லாது வேறே தொன்றுஞ் செய்தேனில்லை. இதற்காகவேண்டி தெய்வமே யென்னைத் தெரிந்தெடுத்துக்கொண்டது. ஆதலால் உங்கள் நீதி நடுவைவிட அவரது நடுவை நன்குமதிக்கிறேன்." என்று கூவி யார்ப்பரித்து பலாத்காரமாய் அலரிவேரைக் குடித்து மரித்தான்.

உரோமையாரில் பெருங் கௌரவமும் பிரக்கியாதியு மடைந்த சிசெரோன், (*Cicero*) கடவுளின் நிரணயத்தைப்பற்றி யெழுதும் போது:—"தேவனில்லை யென்பவ னியார்? உலகில் உய்து வாழுஞ் ஜீவகோடிகளையும் ஸ்தாவர வர்க்கங்களையுந் தாதுவர்க்கங்களையு மாராயுமிடத்து நமக்கென்ன புலப்படுகின்றது? மிதமில்லா ஞான சொரூபியாகிய ஓர் வஸ்துவின் கரங்களின் தொழிலென்றே நமக்குத் திண்ணமாகின்றது. சிறிய மானிட வுலகத்தை யுசாவுவோம்: ஆ! மனிதனிடத்து என்னகௌரவம்? என்னமாட்சி? என்ன அணி யலங்காரம்! ஒப்பில்லா வமைப்பு! அவனது தேகத்தின் நானாவித அவயவங்களின் சிங்காரத் தோரணியைப் பார், அவனது கண்கள் கொத்தளத்தின்மீது இடைவிடாது ஒன்றனைக் கண்காணித்துக் காவல் காக்குந் தலையாரிகளை யொக்கும், அவை தங் கண்காணிப்புக்கு யாதும் மறைந்தொழியாவண்ணஞ் சிரசின் உன்னத ஸ்தலத்தி லமைக்கப்பட் டிருக்கின்றன. மேன்மேலும் ஆகாயத்தில் எகிறி யெகிறிப் பறந்தோடுஞ் சப்தங்களைக் கேட்கவேண்டி செவிகள் சென்னியின் மேற்பாகங்களிலிருக்கின்றன. நாசி நாம் புசிக்கும்போசனங்களையும் அருந்தும் பானாதிகளையு முகர்ந்து 'நன்று' 'தீது' என்று சொல்லும் வண்ணம் வாயினருகிற் சற்று மேலமைந்திருக்கிறது. நாவு உருசிபார்க்க வாயின் மத்தியில் நேர்ந்திருக்கின்றது. பரிசனஞ் சகல இன்ப துன்பங்களை யநுபவிக்கும் பொருட்டு பாதாதி

கேசம் வரையிற் பரவியிருக்கின்றது. இந்த ஒப்பில்லா வமைப்பு தற்செயற் பலனோ? இல்லை யில்லை. சர்வசக்த கடவுளது சர்வஞானத்தின் பயனல்லவா!'

மேற்படி பிரபந்தத்தின் வேறோரிடத்தில் :— "நீ யோர் வீட்டைப் பரிசோதிக்குங்கால் அது எலிகளின் வேலை யென்பாயா? அல்லது சிறிப்பிள்ளைகளின் விளையாட்டென்பாயா? இந்நினைவு உனக்குக் கனவிலும் வராது. அப்படியிருக்க, வானத்திலும் பூமியிலும் மகாசமுத்திரங்களிலும் நீ பார்க்குங் கோடானுகோடி யற்புதங்களும், அவைகளிற் றுலங்கும் மகத்தவ்யங்களும், விவித விசித்திரங்களும், ஆணி யலங்காரங்களும், கிரமங்களுந் தற்செய லுற்பத்தியென்பாயோ? தாமேவந்தனவென்று நினைப்பாயோ? ஆம் என்று எவனேனுந் துணியும் பக்ஷத்தில் அவன் என்னெதிரில் வரட்டும். நான் அவனை நோக்கி;— 'மித்திரா! நாம் பார்க்கும் பற்பல காரியங்களுந் தற்செயல் வேலை யென்கிறாயா? நானுஞ் சற்று உன்னோடு ஒப்புகிறேன். நான் உன்னை யொருகேள்வி கேட்கிறேன்: அதற்குப் பதிற்சொல். அநேகாநேக அக்ஷரங்களைச் செய்து பற்பல விடங்களில் இறைத்துவிடுவோம். அவை யொருங்காய் ஒன்றுகூடி வித்வான் என்னியூசுடைய வருடாந்திர சரிதை சம்பவங்களாய்த் திரட்டிக்கொள்ளுமோ? 'இல்லை!' இல்லையேல், உலகமும் உலகிலடங்கிய சராசரங்களும் எங்ஙனந் தற்செயலால் அமையும்?' என்பேன்" என்றான்,

மேற்கூறிய பிரசங்க சிரோமணி வேறோர் சமயத்தில்:— "இயாதாமொருவன் பிறப்பு முதற் பூமியின் கீழ் ஓர்சுரங்க அரண்மனையிற் ஜீவித்துத் திடீரென வெளிப்படுவானாயின் வானமண்டலங்கள், பூமி, சராசரங்கள், சமுத்திரம், இராப் பகல், இத்தியாதிகளைப் பார்த்து உடனே கடவுள் ஒருவருண்டென்று நினைப்பான்." என்று நியாயங்கூறினான்.

1721-ம் ஆண்டில் தன்மார்க்கு தேசத்தார் சுவிசேஷ பிரசங்கிகளைக் குரோவென்லாந்து நாட்டுக்கு அனுப்பி மேற்படி நாட்டு ஜனங்களுக்கு ஞானஸ்நானங் கொடுத்தார்கள். ஓர் நாள் ஒரு தன்மார்க்கன் ஒருசங்கத்திற் கூடியிருந்த சில குரோவென்லாந்தர்கட்கு அவர்களுடைய பழயபரிதாப நிலைமையைக் குறித்துப் பேசிக்கொண்டிருக்கும்போது சங்கத்தினின்று ஒருவனெழுந்து :— "ஐயா! போதக சிகாமணியே! சிறிது காலத்திற்கு முன் வறிஞரும் அறிவி

னருமா யிருந்தோ மென்பது மெய். உமது போதனைகளை நாங்கள் கேட்டறியா முன்னர் வேத விஷயத்திலும் இயேசுநாயகர் விஷயத்திலும் ஏது மறியோம். உமது வரவுக்கு முன் யார் எங்கட்கு ஏதேனுஞ் சொல்லியிருக்கக் கூடும்? யாருமில்லை. அப்படி யிருந்த போதிலும் கடவுளுண்டென்கிற எண்ணம் எங்களில் யாருக்கேனும் வரவில்லை யென்று நீர் கொஞ்சமேனும் நினைக்கவேண்டாம். நான் அடிக்கடி யெண்ணில்:—"ஓரரண்மனையும் அதிற்றுலங்கு நானுவித சித்திர விசித்திரங்களுந் தாமாய் வந்து அமைந்தனவா? இல்லை. சிற்பநூலிற் பயின்று தேர்ந்த ஓர் சிற்பியே அதனைக் கட்டியிருக்க வேண்டும். இதனைக் கண்டுபிடியாதவன் ஏதுங் கண்டுபிடியான். உலகிற் றுலங்கும் மூதற்றாத்து அரண்மனையைக் கட்டுவதைக்காட்டிலும் ஒறு சிறிய சிட்டைச் சிருஷ்டிப்பது மட்டில்லாக் கஷ்டம். எவனும் அச்சிறிய குருவியை உண்டமைக்க வறியான். மனிதன் சகல ஜீவஜெந்துக்களைக்காட்டிலு மின்னும் அதிசிரேஷ்டன். எவன் மனிதனை நிர்மித்தான்? தாய் தந்தையரிடத்தி னின்று வருகிறான். இவர்கள் தங்கள் தாய்தந்தையரிடத்தினின்றுவருகிறார்கள். ஆனால் முதன் முதல் மனிதர்கள் எங்கிருந்து வந்தார்கள்? பூமியினின்று புறப்பட்டார்களென்று சொல்லலாம். ஆனாற் றற்போது பூமியேன் வேறு மனிதர்களைப் பிறப்பிக்கிறதில்லை? வானம், பூமி, சமுத்திரஞ், சந்திர, சூரிய, நக்ஷத்திராதிகளும் எவ்வாறு நிர்மிப்படைந்தன? இவைகளை யெல்லாம் ஒருவர் சிருஷ்டித்திருக்கவேண்டும். சந்தேகமற சர்வ ஞானமுஞ், சர்வ சக்தியும், சர்வ பாண்டித்தியமும் அவருக்குச் சொந்தமாயிருக்கவேண்டும். இதனோடுகூட சர்வ சற்குண வள்ளலா யிருக்கவேண்டும். ஏன்? அவர் உண்டாக்கின சமஸ்தமும் நமக்கு எவ்வளவோ பிரயோஜனமா யிருக்கின்றன! ஐயா! பிரசங்கியே! நீர் தூர தேசத்தினின்று இங்கு வரும் வெகு காலத்துக்கு முன்னமே யிந்த எண்ணங்கள் என் புத்தியில் இரவும் பகலும் ஊடாடிக்கொண்டிருந்தனவே! நீர் ஜகத்தின் மகா தேவனை எங்களுக்கு அறிவிக்கும் நெடுநாளைக்கு முன்னரே நாங்களும் அவரை அறிந்துகொண்டிருக்கிறோம்" என்று முடித்து உட்கார்ந்தான்.

தன்மார்க்கன் இதனைக்கேட்டு பிரமைகொண்டு திகைத்து நின்றதாய்த் தன்னினத்தாருக்குச் சொல்ல, அவர்களில் ஒருவனாகிய கிராஞ்ஜ் குரோவென்லாந்து சரித்திரத்தில் இதனை வரைந்து வைத்தான்.' என,

நான்:— "அத்தான், இவ்வாறு கானகத்து இருளர் முதலாய்க் கடவுளது நிர்ணயத்தின்மீது ஐயமுறாது அதனை யேற்றுக்கொள்ளும்போது மேனாட்டுக் கற்றறி மூடர்களேன் தெய்வமில்லையென்று பிதற்றுகின்றார்கள்?"

திருமறைநாயகம்பிள்ளை :— "எனது தமயனார் சொன்னதுபோல் அகந்தையினாலும் இறுமாப்பினாலும் அங்ஙனம் கசடத்தன்மையாய் ஜலஞ்சாதிக்கின்றார்கள். ஆனாலும் பேர்போன சோதிடரான கேர்ஷர் தமது சிநேகனான ஓர் நாஸ்திகனை சமயோசிதமாய் வாயடைத்தது போல் நாமும் நேரம் நேரும்போது நாஸ்திகர் வாயிற் பூட்டுப்போடவேண்டும்." என,

மனோரஞ்ஜிதம் :— "சின்னாநி! கேர்ஷர் எப்படி தன் மித்திரன் வாயடைத்தார்? நானுஞ் சமயம் வரும்போது எந்த நாஸ்திகனானாலும் ஸ்வாமியில்லை யென்று பேச வாய்திறந்தால் அவன் வாயிற் கந்தங்குடி யிரட்டைப்பூட்டுப் போடுகிறேன். ஆகையால் எனக்கு அதை நன்றாய்த், தெளிவாய்ச் சொல்லுங்கள்." என,

திருமறைநாயகம் பிள்ளை :— "கேள், மகளே! சொல்லுகிறேன். ஜெர்மானியா தேசத்தில் அத்தனாஸ் கேர்ஷர் என்று ஓர் இயேசு சபைக் குருவிருந்தார். அவர் மகா மேதாவி. தர்க்கம், தத்வம், கணிதம், பூமிசாஸ்திரஞ், சோதிட முதலிய நூற்களிற் சிறந்த நிபுணர். நறுமணமும் இரசமும் பொதிந்த புஷ்பத்தைத் தேனீக்கள் நாடுவதுபோல அவருடைய பாண்டித்திய ரசத்தை ரசிக்கப் பண்டிதர் அநேகர் அவரைத்தேடி வருவார்கள். அவர்களில் ஒருவன் தனக்கு நாஸ்திகப் பட்டங் கட்டிக்கொண்டான். அவன் சோதிடரிடம் வரும்போதெல்லாந் தெய்வமில்லை என்பான். சோதிடருக்கு அதைக் கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போயிற்று. நாஸ்திகன் வாயடைக்கவேண்டி யோர் சூழ்ச்சி செய்தார். என்ன சூழ்ச்சி? ஓர் நேர்த்தியான பூகோளத்தைச் செய்து தம தறையின் ஓர் மூலையிற் பக்குவமா யதனை வைத்துவிட்டு தந்நேசன் வருகைக்குக் காத்திருந்தார்.

நாஸ்திகன் அறையிற் பிரவேசித்த வளவில்:— "ஓ! எவ்வளவு சிறப்பான பூகோளம்! இதனைச் செய்தவ னியார்? அது யாருக்குச் சொந்தம்? இது உம்முடையதா? எங்கே யிதனைக் கொண்டீர்?" என,

ஜோதிடர்:—"யாரும் இதனைச் செய்யவில்லை, இது எவனுக்குஞ் சொந்தமன்று. இங்கு அது தற்செயலாய் வந்திருக்க வேண்டும்." என,

நாஸ்திகன்:—"நீர் சந்தேகமறப் பரிகசிக்கின்றீர்."

:—"பரிகாசமென்ன? விளையாட்டென்ன? அது தற்செயலா யங்கிருக்கிறது."

:—"இவ்வாறு பேசுவது உம்மைப்போலொத்த சான்றோருக் கடுக்குமா? சிறு பிள்ளைகளைப்போல்............"

:—"என்ன சிறுபிள்ளைகளைப்போல்? நிதானியும். பதற வேண்டாம். இச்சிறிய பூகோளந் தற்செயலாய் வந்ததென்று சொல்வது உமக்குப் பைத்தியம்போற் றோன்றுகிறது. ஆனால் வான மண்டலங்களுஞ், சந்திர சூரியர்களும், நக்ஷத்திர கோடிகளும், மற்றுள்ள கிரகங்களுந் தற்செயலாய் இருக்கின்றனவென்று எவ்விதஞ் சொல்லத் துணிந்தீர்?" என்று சோதிடர் நெருக்க நாஸ்திகன் திகைத்து வாயடைத்துத் தியங்கி பதிற்சொல்லச் சாத்தியப்படாமற் சிலைபோல் நின்றுவிட்டான். என,

மனோரஞ்சிதம்:—"சின்னைி! நல்ல சரித்திரஞ் சொன்னீர்கள். இனி எந்த நாஸ்திகனானாலுஞ் சரி யென்னிடத்தில் வாய் கொடுத்துத் தப்பித்துப் போகான்." என,

திருமறைநாயகம்பிள்ளை:—"அத்தகைய நாஸ்திகன் உன்னைப்பார்த்து: 'அம்மா! நங்கை மனோன்மணியே! நீ 'தேவனிருக்கிறார்; இருக்கிறார்' என்கிறாயே, நீ யெதனால் அவரிருக்கிறார்.' என்று நிரூபிக்கிறாய்' என்றால் என்ன சொல்வாய்?" என,

மனோரஞ்சிதம்:—"ஆஞ் சொன்ன பற்பல நியாயங்களையும் நீங்கள் எடுத்துக்காட்டிய சரித்திர உதாரணங்களையும் அவனுக்குச் சொல்வேன். இன்னும் அவன் ஒப்பாவிட்டால், நான் எழுந்து அவன் கையைப் பிடித்து போராற்று மணற்கரைக்கு அழைத்துப் போய்: ஐயா! இந்த மணற்பரப்பில் அங்கங்கு பள்ளம் பள்ளமாய்க் காணப்படுகின்றனவே! அவையென்ன?" என்பேன்.

அவன்:—"குழந்தாய்: இது மனிதன் அடி. அது மாட்டின் அடி. அவை சிறுபிள்ளைகளின் காற் சுவடுகள், அது நாய் அடி. இது பக்ஷியடி." என்பான்.

நான் உடனே :— "ஐயா! நீர் அடிகளைப்பார்த்து மனிதர், ஆடு, மாடு, பிள்ளைகள், நாய், பக்ஷி முதலியவைகள் ஆற்றங்கரை மணற்பரப்பிற் சஞ்சரித்ததாய் ஊகிக்கின்றீர். அதுபோலவே நானும் உலகத்தையும் அதிலடங்கிய சகல காரியங்களையும் பார்த்து அவைகளைப் படைத்த கடவுள் ஒருவர் இருக்கிறாரென்று ஊகித்து, எனக்குத் தெரிந்த சில நியாயங்களாற் சிருஷ்டிகர் ஒருவர் இருக்கிறாரென்று ரூபிக்கிறேன்" என்பேன் என,

அங்கு சங்கத்திற் கூடியிருந்த எல்லோரும் ஒருவாய்ப்பட: "சுபம்! சுபம்!! ஓ! புத்திசாலி, புத்திசாலி!! வயதிற் சிறியவளாயினும் புத்தியிற் பெரியவளென்று மதுரநாயகம்பிள்ளையின் மூன்றடுக்கு மெத்தை ஒலித்துச் சிலையோடக் கைதட்டி கோஷித்து முழங்கினார்கள். முழங்கவே, மெத்தைமீதிருந்த மதுரநாயகம்பிள்ளை கீழே இறங்கிவந்து நடந்த சம்பவத்தை யறிந்து வெகுவாய்ச் சந்தோஷித்துச் சங்கத்தைக் கலைத்துவிட்டார். ஒவ்வொருவருந் தத்தம் இல்லிடம்போய்ச் சேர்ந்தார்கள்."

நானும் என் வீட்டுக்குப் போகும்போது:— "இச்சிறு நங்கைக்கிருக்கும் புத்தி யெனக்குண்டா? இதென்ன காலபலனா? கருவமைப்பா? கடவுளின் நன்கொடையா? என்னவென்பேன்? அறியேன்! அறியேன்!! இக்கன்னிகா சிரோமணி மானிட ஜீவர்கட்குள் தோன்றிய மகா அற்புதம்! அற்புதம்!!" என்று சொல்லிக்கொண்டு வெளியிற்போனேன்.

---

## 11-ம் அத்தியாயம்.

குணமணியம்மாள் மனோரஞ்சிதத்துக்கு மனுஷ சஞ்சாரத்தின்பேரில் இதம் போதிக்கிறாள். குணமணி-ஒரு செந்தமிழ் தேசிகப்பெண். மானிட தேக நிதரிசனம். பெரியோர் சிறியோரோடு ஒத்து வாழவேண்டும். பெரியோர் சிறியோருக்கு நன்மை செய்யவேண்டும். சரித்திர உதாரணங்கள் மனோரஞ்சிதம்-ஞாபக சிரோமணி.

மறுநாட் காலை எட்டு மணிக்கு மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப் போனேன், அங்கு அவர் ஏற்கெனவே தம் புத்திரிக்கு உபந்நியசித்துக்கொண்டிருந்தார்.

நான் சற்று கலக்கமுற்று உபதேசத்தை முற்றிலுங் கேட்க எனக்குப் பிராப்தமில்லாமற் போயிற்றே யென்ற கிலேசத்தோடு சங்கத்தில் நுழையும்போது,

மதுரநாயகம்பிள்ளை :—"மகளே! நாலுந் திருமறைநாயகமூங் கடைசி மாடியிற் காற்றோட்டமா யுலாவிக்கொண்டிருக்குங்கால் நடுத்தட்டில் அபிராமியுங் குணமணியும் நீயும் பத்து மணி வரை யிற் அப்பாஷித்துக்கொண்டிருந்தீர்களல்லவா? என்ன சல்லாப நடந்தது? நல்ல விஷயங்களிற் காலங்கழித்தீர்களா? அல்லது ஒவைக் குதவா வீண்பேச்சுகளைப் பேசினீர்களா? அபிராமி வியர்த்தமாய்க் காலத்தைக் கொல்லத்துணியாள். ஏதேனும் நல்ல விஷயங்களைத் தான் எடுத்துரைத்திருப்பாள். குணமணி யென்ன சொன்னாள்? அவள் புத்திசாலி யென்பதிற் றடையில்லை. ஆனாற் கொஞ்சஞ் சுயபக்ஷமுமுண்டு. இது நிற்கட்டும், இருவரும் உனக்கு என்ன சொல்லிவைத்தார்கள்?" என,

மனோரஞ்சிதம் :—"ஆஞ்! அம்மாள் தெய்வபக்தியின்பேரி லும் வீட்டுப்பணிவிடைகள் மட்டிலும் ஒருமணிநேரம் பேசினார்கள். சின்னம்மாள் மற்ற மனுஷரோடு சஞ்சாரம்பண்ணவேண்டிய வகை யைப் படிப்பித்தார்கள்." என,

மதுரநாயகம்பிள்ளை :—"உனக்கு ஏதேனுந் தெரியுமா? அவர்கள் சொன்னவைகளைக் கண்டுபிடித்தாயா? என்ன சொன் னார்கள்?"

மனோரஞ்சிதம் :—"சற்றேறக்குறைய எல்லாந்தெரியும், அம்மாள் சொன்ன காரியங்களை மறக்கவில்லை. எனக்கு நன்றாய்த் தெரியும். சின்னம்மாள் சொன்ன புத்திமதிகளிற் படிக்குப் பாதியா கிலுந் தெரியும். அவர்கள் துவக்கத்தில் ஓர் வெண்பாப் பாடி அதி னின்று இவை பிரித்துப் பற்பல யோசனைகளைச் சொன்னார்கள். அந்த வெண்பாவை மறந்துவிட்டேன். 'என்' என்று துவக்கிக் 'கண்' என்று முடித்தார்கள்."

மதுரநாயகம்பிள்ளை :—"குணமணி! உன்னை யெனக்குத் தெரி யுமே. தொல்காப்பியம் நன்னூல், தொன்னூல், முதலிய இலக்கண ங்களைக் கரைத்துக் குடித்திருக்கிறாயே. பவணந்தி முனிவருக்குப் பாடஞ் சொல்லி வைப்பாயே! சலாக்கியக்காரி! உன் புத்தி சாமர் த்தியத்தைக் காட்டிவிட்டாய்! பத்து வயது குழந்தைக்குத் தக்க பாஷை பேசவேண்டுமேயல்லாது பஞ்சதந்திரக் கதையைப் பின் செல்லத் தகாது. உன்னை, வீணுக்கா சந்திரசேகரப்பிள்ளை நிமி ஷக் கவி குணமணியென்றார்? இராத்திரி என்ன கவி பாடினாய்?"

என் தந்தையர், மதுரநாயகம்பிள்ளையை நோக்கி:—"ஓய், மாப்பிள்ளை! எனது மகள் குணமணி சபை யலங்காரி. அவளில்லாச் சங்கம் விளக்கில்லா வீட்டை யொக்கும். ஆதலால் நீங்கள் அவளுக்கு எவ்விடத்திலும் பேசவும் பாடவுந் தடைசெய்ய வேண்டாம்."

மதுரநாயகம்பிள்ளை:—"இல்லை அத்தான்! நான் என்ன தடைசெய்கிறேன்? பிள்ளைகட்கேற்ற தமிழ்ப் பேசச் சொல்லுகிறேன். பாடவேண்டாமென்று நான் இரேணுவேனுஞ் சொல்லுகிறேனில்லை! சமயோசிதமாய்ச் சிறிய சூத்திரங்களிற் பிள்ளைகட்கு உபதேசஞ் சற்றுக்கொடுத்தால் வெகு நலம்."

குணமணியம்மாள்:—"அத்தான்! மன்னிக்கவேண்டும். இராத்திரி நான் செந்தமிழும் பேசவில்லை; கொடுந் தமிழும் பேசவில்லை. மத்திய தமிழ்தான் பேசினேன். இனி யின்னும் தொனியைத் தணித்துவிடுகிறேன். கவி விஷயத்திற், பாடச் சொன்னாற் பாடுகிறேன்; வேண்டாமெனில் முற்றிலும் நிறுத்தி விடுகிறேன். பிள்ளைகள் புத்தியிற் சுலபமாய்ப் பொருட்களை நிறுத்தக் கருதி முக்கிய அம்சங்களைப் பாட்டில் எடுத்துச் சொன்னேன்."

மதுரநாயகம்பிள்ளை:—"அதுவே யுக்தம். காலோசிதமாய் நீ எப்போதும் பாடு. உனக்குத் தடைசெய்வா ரியாருமில்லை. நீ இராத்திரி பாடிய வெண்பாவைச் சொல் பார்ப்போம்." என,

குணமணியம்மாள் சற்று முன்னும் பின்னும் யாலோசித்துக் கொண்டிருந்தாள். அப்போது என் தந்தையர்:—"மகளே! நீ பயப்படாதே. எல்லோரும் உன் பாடலால் மகிழ்ச்சி யடைய வேண்டியிருப்பதால் நீ கலக்கமின்றிப் பாடு."

குணமணியம்மாள் மனந்தேர்ந்து பின்வருமாறு:—

"எண்சாணுந் தேகமதிற் பிரதானஞ் சென்னி
கண்ணைப் பிரதானஞ் சென்னிக்குக்—கண்டோமே
கண்ணிருக்கி லென்னைக் காக் கால்களில்லையேன்
மண்ணுக்குதவுமா கண்?" என்று ஓர் நேரிசை வெண்பாவைப் பாடி நிறுத்தினாள்.

அப்போது திருமறைநாயகம்பிள்ளை:—"எல்லாப் பாக்களிலும் வெண்பா மிகக் கஷ்டம். வெண்பாக்களிலும் நேரிசை வெண்பா இன்னுமதிக கஷ்டம். நீ நாலு வரிகளை "யெண், கண்,

பெண்,' என்று உனக்கேற்றவாறு இசைத்துவிட்டாய். இது வெண்பாவா? யார் கண்டது? ஆலையில்லா வூருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை! 'பொட்டைக் கண்ணன் தேயத்தில் ஒற்றைக் கண்ணன் இராஜா!' புலவரில்லாச் சங்கத்திற் குணமணி செந்தமிழ்த் தேசிகை; க[illegible]றந்த கவிச்சிரோமணி! நீ நாலடியார், நன்னூல், தொன்னூல், [illegible]ன்னும் என்னூற்களையும் வாசித்து விட்டமையால், நீ கவி....." என,

ச[illegible]திரசேகரம்பிள்ளை:—"நீங்கள் எல்லோரும் என் மகளைப் பரிகசி[illegible]க்க வேற்படுகிறீர்கள். இதுசரியன்று. மேற்படி வெண்பாவில் எ[illegible]து குறை கண்டுவிட்டீர்கள்! கட்டின வீட்டுக்கு வித்தாரஞ் சொல்வ[illegible]து க[illegible]ஷ்டமல்ல. சொல்வது சுலபம். செய்வது கஷ்டம். இனி [illegible]ன் குமாரத்தி குணமணியை யாரும் வீணில் உபாதிக்க வேண்ட[illegible]ம். அவள் பேசுவதற்குச் சர்வ சுவாதீனமுங் கொடாவிடில் எனக்கு இங்குவர இஷ்டமில்லை." என்று கரிப்பாய்ப் பேச,

மதுரநாயகம்பிள்ளை :— "அத்தான்! நீங்கள் வருத்தப்படாதீர்கள். திருமறைநாயகந் தன் மச்சிணைத் தமாஷாய்ப் பரிகாசம் பண்ணினனே யல்லாது அவள்மீது துரபிமானங்கொண்டவனல்ல. காலப்போக்குச் சங்கத்திற் பலர் பலவாறுய்ப் பேசினுற்றான் சம்பாஷணை யுருசிக்கும்." என்று அவருக்குச் சமாசங்கூறித் தன் மகளை யழைத்து :— "மனோரஞ்சிதம்! குணமணி இராத்திரியென்ன சொன்னள்? உனக்குத் தெரிந்தமட்டும் அவள் உனக்குக் கற்பித்தவைகளை யிரட்டித்துச் சொல்." என,

மனோரஞ்சிதம் ;— "ஆஞ்! என் சிறிய தாயார் மேலே சொன்ன வெண்பாவைப் பாடி, நமக்கு எட்டுச் சாண் உடம்பிருக்கிறது. அதிற் றலை முக்கியம். தலையிற் கண்களே பிரதானம். இதை நா மறிவோம். கண்கள்மட்டும் இருந்தால் நமக்கென்ன பிரயோஜனம்? கை, கால் முதலிய மற்ற உறுப்புகளில்லாவிட்டாற் கண்கள் மண்ணுக்கு முதலாய் உபயோகப்படா.' என்று அர்த்தஞ் சொல்லிவிட்டு, என்னை நோக்கி :—' மகளே! நீ எழுந்து சற்று நில். உன்னைச் சில கேள்விகள் கேட்கப்போகிறேன். அவை கட்குப் பதிற்சொல். நீ சரியாய்ச் சொல்லும் பக்ஷத்தில் உனக்கு நேர்த்தியான ஜெப புத்தகம் வாங்கித் தருவேன்.' என்று சொன்ன பின்னர் :— "நீ யார்?" என்றார்கள்.

நான் :— "ஓர் சிறு பெண்." என்றேன்.

அவர்கள் :— "உன் சரீரத்திலுள்ள சகல அவயங்களையு மொன்றொன்றாய்க் குறிப்பிட்டுச் சொல்." என்றார்கள்.

நான் :— "என் தேகத்தில் தலை, கைகள், வயிறு, கால்களு மிருக்கின்றன. தலையில் வாய், பற்கள், நாக்கு, நாசி, செவி, கண்களு மிருக்கின்றன. கைகளிற் புஜம், முழங்கை, முன்கை, மணிக்கட்டு, உள்ளங்கை, பெருவிரல், ஆட்காட்டி, பாம்புவிரல், மோதிர விரல் களுமிருக்கின்றன. கால்களிற் றொடை, முழங்கால், முன்னங்கால், கணுக்கால், விரல்களுமிருக்கின்றன. முண்டத்தில் முதுகு, நெஞ்சு, விலா, அடிவயிறு. வயிற்றிற் குடர், குண்டி, ஈரல், மாங்காய்க் குலை முதலியவைகளுமிருக்கின்றன." என,

என் சிறிய தாயார் :— "மனோரஞ்சிதம்! சரியாய்ச் சொன்னாய். ஆனால் இந்த அவயவங்களெல்லாஞ் சரிதானா? இவைகளிற் பெரிது சிறிதில்லையா? மேன்மை தாழ்மையில்லையா? எக்குத் தக்கில்லையா?" என,

நான் :— "சின்னம்மா! விரல்களை விடக் கெண்டைக் கை பெரிது. விரல்களிலும் பெரிது, சிறிதிருக்கிறது; நெட்டை குட்டையிருக்கிறது. காற்களை விட கைகள் சிறந்தவைகள். குடலை விட ஈரல், இருதயம், குலை மேன்பாடல்லவா? மற்ற உறுப்புகளைக் காட்டிலுந் தலை மேல். செவி, வாய், மூக்கை விட நேத்திரஞ் சிறந்தது. இப்படி நமது சரீரத்தில் எக்குந் தக்கும், ஈடுஞ் சோடும், மேன்மையுந் தாழ்மையுந்தானிருக்கின்றன." என்றேன். அவர்களுடனே யென்னை வாரியெடுத்து முகத்தில் முத்தமிட்டு :— "ஓ! என் கண்மணியே, நீ நன்றாய்ச் சொன்னாய். இதனை மறக்காதே. எக்குத், தக்கு, பெருமை, சிறுமை, மேன்மை, தாழ்மை, அழகு, அவலக்ஷணம், வலுமை, பிளக்கம் முதலிய குணங்களுங் குறைகளுங் கூடியதே மானிடதேகம். சர்வஞான சொரூபியாகிய சர்வேசன் இதனைச் சரியாய் அமைத்தார். இதனைச் சரியாய்க் கண்டுபிடி, மகளே! தலை மற்ற உறுப்புகளை நிந்திக்கிறதில்லை. வலது கை இடது கையை யலக்ஷியம் பண்ணுகிறதில்லை. காற்களை முண்டம் அவமதிக்கிறதில்லை. துஸ்மாலங்களைச் சுமக்குங் குடலை ஈரலும் இருதயமுங் குறைகூறுகிறதில்லை. சிரசில் எரிந்து பிரகாசிக்குங் கண்களும் மற்ற மற்ற அவயவங்களை தூஷிக்கிறதுமில்லை; துவேஷிக்கிறதுமில்லை. இதற்கு விரோதமாய்க் காலில் ஓர் முட்பட்டதா? உடனே சர்வாங்கமுங் குலுங்க, முதுகு வளைய, கண்கள் தேட, கைகள் அதனைக்

களைய முயலுகின்றன. கஸ்மாலப் பையில் வலிகண்டதோ? தக்ஷணமே கால்கள் நடந்தோட, கண்கள் வைத்தியனைத் தேட, கரங்கள் மருந்தை வாங்க, வா யதைப் பெற்றுக்கொள்ள, பற்கள் மெல்ல தொண்டை யதனை யுள்ளிறக்க, துக்கத்தையடைந்த குடல் சுகத்தையடைகிறது. தேகம் முழுதும் பழைய அமைதியைப் பெறுகிறது. நமது அங்கத்தின் பற்பல உறுப்புகளில் இலங்கும் அந்யோந்யமும், அக்கறையும், ஒற்றுமையும், இன்னிசையும் எத்தகைமையதென பார்த்தாயா, மனோரஞ்சிதம்?" என,

நான் :— "ஆம், சின்னம்மா! பார்த்தேன். கடவுள் மிக்க பெரியவர். அவர் செய்ததெல்லாந் திருத்தமாய்ச் செய்தார். சகலத்தையும் இனமாயும் இதமாயும் படைத்தார்." என,

அவர்கள் :— "மகனே! மானிடதேகம் மனுஷ சஞ்சாரத்தின் பிரமாணிக்கப் படம். ஆம்; நீ சொன்னதுபோல எல்லாவற்றையுந் திருந்தச்செய்தார். அவர் சர்வ ஞானமுள்ளவராகையால் உலக விர்த்திக்காகவேண்டி மனுக்களிற் படிப்படியாய்ச் சிலரை அரசர், அமைச்சர், பிரதானிகள், பிரபுக்களாகவும் பலரைப் பிரஜைகளாகவும் வேறு சிலரைப் படியாள், சேவகர், ஊழியராகவும் இன்னுஞ் சிலரை தோட்டித் தொண்டராகவும் அமைத்திருக்கிறார்." என்றார்கள்.

நான் உடனே :— "அம்மா! அது அநியாயமல்லவா? சுவாமி நீதியுள்ளவரென்று சொல்லுகிறோமே ஆனால் நீதி யெங்கே யிருக்கிறது?" என,

அவர்கள் :— "மகனே! கடவுளின் நீதியைப்பற்றி யுனக்கு யாரேனும் உபந்யாசிக்குங் காலத்தில் நீயிவ்வாறு ஆக்ஷேபிப்பாய். தற்காலம் மானிட தேகத்தைக் கவனி. அதில் எக்குத், தக்கு, மேன்மை, தாழ்மை யில்லாவிடில் அது பரிவர்த்திக்காது. அது போல் மனுமக்களில் எஜமானும் ஊழியனுமில்லாவிடில் உலகந் தழைத்தோங்காது. மனிதர் ஒருவர்மட்டில் ஒருவர் நடந்துகொள்ளவேண்டிய இரீதி, ஒழுக்கம், ஆச்சாரங்களைக் காட்டவேண்டியே, மானிடதேக உபமானத்தை யுனக்கு நிதரிசனமாய்க் கொண்டுவந்தேன். நீ யதனை யுற்று நோக்கு. அதனைப் பின்செல், நீ சுவர்க்கநாத பிரபுக்களின் வம்சத்திலுதித்த இராஜ செல்வி. ஆயினுங் கர்வங்கொள்ளாதே. பிறர் முன் பராமுகமாய் நில்லாதே. யாரையு நிந்திக்காதே. எண்சாணுடம்பிற்குச் சிரசே பிரதானமென்றார்கள்

மேதாவிகள். அதிற் பிரகாசிக்குங் கண்கள் மற்ற உறுப்புகளுக்காக வேலைசெய்கின்றன; பார்க்கின்றன; தேடுகின்றன; காட்டுகின்றன. இவ்வாறே நீ இராஜதேசிகையா யிருப்பினும் ஏழை ஜனங்களுடைய சுகத்திற்காகவும் நன்மைக்காகவு மிருக்கிறாய். நீ யாரையும் இழிவாயெண்ணாதே; அவமதிக்காதே; புறங்கூறாதே. மன்னுயிர்களை யுன்னுயிர்போ லெண்ணு. நீ யின்னுஞ் சிறுமி. நீ பெரியோரோடு தற்போது சமமாய்ச் சஞ்சரிக்காவிடினும் உன்போன்ற பிள்ளைகளோடு சஞ்சரிக்கிறாய். அவர்கள் இழிகுலத்தோராயினும் எப்போதும் அவர்களைச் சன்மானிக்கவேண்டும். கஷ்டங்களைச் சுமந்த குடவிடத்தும் இதயம் மதிப்போடில்லையா? உன் பள்ளித் தோழிகளைப்பார். அவர்கள் ஜாதியில் தாழத்தாழ அவர்களை மேன்பாடாயெண்ணுவது உனக்குப் பெருஞ் சலாக்கியம். இருபாதங்களும் உடலுக்கு மிக்க அவசியம். இடதுகரமும் வலது காத்துக்கு இணைபிரியாத் துணை. எவ்வாறு ஒருவன் தனது கால்களும் இடது கையுமின்றி யேதுஞ் சரியாய்ச் செய்யவறியானோ அவ்வாறேபிரபுக்கள், பெரியோர், தனவான்களுந் தோட்டித் தொண்டர் முதலிய ஏழைகளின்றித் தங்கள் காரியாகாரியங்களைச் சரிவர நிறைவேற்றிக்கொள்ளார்கள். ஆதலால் மேன்மக்கள் எப்பொழுதும் இழிகுலத்தோரையும் எளியோரையும் அபிமானிக்கவேண்டும். இது பெரியோருக்குஞ் சிறியோருக்கும் பொது விதி. மானிட சஞ்சாரத்திற் பெரியோர் இக்கடமைகளைச் சுமந்ததுபோலச் சிறியோருஞ் சுமந்துகொண்டிருக்கிறார்கள்.

உன் பேர் மனோரஞ்சிதம். அது பொய்யாகத் தகாது. உன் நாமகரணம் பிறருக்கு இரஞ்சிப்பா யிருப்பது போதாது. உன் நடை, நயம், வாக்கு, கிரியை, பிரவர்த்தனங்கள், ஆச்சாரம், ஒழுக்கமுதலானவைகளும் எல்லோரையும் இரம்மிக்கச்செய்யவேண்டும். நல்ல ரசம் பொதிந்த புஷ்பமாயிரு. அங்கு கணக்கற்ற தேனீக்கள் பறந்தோடிவரும். ஒரு துளித் தேனால் ஒரு கூடை யீக்களைப் பிடிக்கலாம், ஒரு சாடிக் காடியை நாடிவருவது எது? உன் பள்ளித்தோழி இராஜமணியைப் பார். ஓ! என்ன சற்புத்திரி! என்ன குண அழகி! அவளிடத்திற் கூடாப் பிள்ளைகளுண்டா? இல்லை. ஏன் அவளைத்தேடி நாடுகின்றார்கள்? அவளது குணாலங்காரத்துக்கும் மனோவலங்காரத்துக்கு மல்லவா? வாய்மையும் வாஞ்சையும் வாச்சல்யமும் வாசனையும் எங்குண்டோ அங்கு எப்போதும் பெருங் கூட்டமுண்டு. நீ யெப்போதும் மெய்யைப் பேசு; யாரிடத்

திலும் வாஞ்சை பாராட்டு; சுபாஷிதங்களைச் சொல்; தயை, சாந்தி, பராமரிப்பு, அரவணைப்பு, அன்பு, இரக்கம், சகிப்பு இத்தியாதி புண்ய வாசனை வீசப்பெற்றிரு. அப்போது உனது தோழிமார்கள் உன்னை யிடைவிடாது சுற்றிக்கொண்டே திரிவார்கள். இதுவே பலர்கட்கு நன்மை செய்யும் வழி. மேற்கூறிய சற்குணங்களைப் படைத்திருப்பாயாகில் எத்தனையோ பேர்கட்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்வாய்! சர்வாங்கத்துக்கும் நன்மை செய்யும்பொருட்டே நேத்திரங்கள் சிரசின் மேற்பாகத்தில் அமைந்திருக்கின்றன. நீ சிறியோருக்கும், வறிஞருக்கும், ஏழைகளுக்கும், அநாத பிள்ளைகட்கும் நன்மைசெய்யும் வண்ணமே இராஜவம்சத்தில் உதித்தாய். நன்மைசெய்வதே மேன்மக்கட் கழகு. நீ இன்று தொட்டு மகளே, ஒருநாளேனும் உன் தோழிகட்கு உபகாரஞ் செய்யாமலிராதே. உரோமையர் சக்கரவர்த்தியாகிய தீத்துஸ் இராயனைப்போல் நட" என,

நான்:—"அம்மா தீத்துஸ் இராயன் என்ன செய்தான்? அதனை யறிய விரும்புகிறேன்: சொல்லுங்கள்" என,

அவர்கள்:—"இதோ சொல்லுகிறேன்: தீத்துஸ் வெஸ்பாசிய விராயனுடைய குமாரன். அவன் தன் பிரஜைகளுக்குச் செய்த கணக்கற்ற உபகாரங்கள் நிமித்தஞ் ஜன சுகக்ஷேம சேகரனென்று காரணப்பெயர் வகித்தான். ஆங்கிலேயர், கல்லியர், ஜெர்மானியர், உரோமையர்கட்கும் மிதமில்லா நன்மைகளைச் செய்து வந்தானென்று உரோமைய சரித்திரங் கூறுகின்றது. அவனுடைய நாளிற் கோளர், குச்சித்திதர், சதிகாரருந் தலையெடுக்காமல் மறைந்தொழிந்தார்கள். தினமானுஞ் ஜனங்களுக்கு ஏதேனு நன்மைசெய்தாலன்றி யிளைப்பாறான். ஒரோர் சமயத்தில் அஸ்தமான காலத்தில் வெகு கிலேசத்தோடு சலித்து "உஸ்! அப்பா! என்ன செய்வேன்? இன்று காலையில் தக்க முயற்சி யெடுக்காமல் விட்டுவிட்டேன். போயிற்று! போயிற்று!" என்று, அலுத்து உட்காருவான்.

அப்போது அவனுடைய மித்திரருஞ் சாமாஜிகளும் பதைபதைத்து வாய்குளறி:—"மகாப்பிரபோ! தங்களுக்கென்ன? ஏதேனுஞ் க்ஷேமக் குறைவோ? சொல்லுங்கள்: சுகக்குறைவாகில் பரிகரிக்க முயல்வோம்" என்று அவனைச் சுற்றிசுற்றி யோடிவந்து உபசரிப்பார்கள்.

தீத்தூஸ் :—"ஆ! சிநேகர்களே! என் நாள் வியர்த்தமாய்ப் போயொழிந்தது! இன்று தினம் பிறருக்கு எவ்வித உபகாரமுஞ் செய்யாமற் போனேனே! என் நாள் வீணாய்ப்போயிற்றே! போயிற்றே! போன நாள் திரும்பி வருமா!" என்று அங்கலாய்ப்பான்.

அவனைப்போலவே நீயும் நினைக்கவேண்டும். நீ சிறுமியாயிருந்தபோதிலும் ஒரு நாளையும் வீணாய்ப்போக்கத் தகாது. உன் சிறு தோழிகளுக்கும் ஏழைகளுக்கும் பலபல நன்மைகளைச் செய்யலாம். உன் தாய் தந்தையரைப்போலப் பெரிதான சகாயங்களைச் செய்யாவிடினும் உன்னாற்றலுக்கு ஏற்ற சிற்சில சின்ன நன்மைகளைச் செய்யலாம். உன் பிதாமாதாக்கள் உனக்குக் கொடுக்கும் பணங் காசுகளை பிச்சைக்காரருக்குக் கொடுக்கலாம். உன் கையிலகப்படுந் தின்பண்டங்களை யுன் சிறு தோழிகளுக்குக் கொண்டுபோய்க் கொடுத்தால் மெத்த நல்லது. யாருக்கும் ஏது மீயாத பிள்ளைகளைப்போ லிராதே. உன்னைப்போலவே யுன் தோழிகளை நேசி. இதுவே எல்லோரோடும் ஒத்துவாழ நல்ல வழி.

மானிட தேகத்தில் விளங்கித் துலங்கும் இன்னிசை ஒற்றுமை, அக்கறையையு மறந்துபோகவேண்டாம். அதிலுள்ள நானாவித உறுப்புகளும் எவ்வளவோ அந்யோந்யமாய் ஒத்து வாழுகின்றன. இவ்வாறே மனிதர்களும் ஒத்து வாழவேண்டும். பெரியோர் சிறியோருக்குஞ், சிறியோர் பெரியோருக்குஞ் சகாயஞ் செய்யவேண்டும். சரீரத்திற் குறையான வுறுப்புகளை மேன்பாடான வுறுப்புகள் சகிப்பதுபோல மனிதரிலும் புத்திசாலிகள் புத்தியீனரைச் சகிக்கவேண்டும். சகிப்பில்லாவிடிற் சகல வித அலங்கோலைகளும் வந்து சம்பவிக்கும். உனக்கும் உன் தோழிகளின் குறைகளைச் சகிக்குங் குணமிருக்கவேண்டும்.

சிறுபோதே மிக்க நல்ல பழக்கத்தை யேற்படுத்திக்கொள்ள வேண்டும். இளந்தையில் வளையாக்கொம்பு முதுமையில் வளையாது. எது இளசிற் கோணிற்றோ அது முதுமையிலுங் கோணலே. கோணல் நிமிரவேண்டுமாகில் அதை இளசிலேயே நிமிர்த்தவேண்டும். புண்யத்தைப் போதிக்கவேண்டுமானாலுங் குறைகளைப் பரிகரிக்க வேண்டுமானாலும் இளம் வயசே யதற்குத் தக்கது. இளம் வயசு இளகிய மெழுகுக்குச் சமம். அது பதமாயிருக்கும்போது எவ்வித உருபங்களையும் அதிற் பதிப்பிக்கலாம். அது இறுகிவிட்டதால் உருபங்கள் படியா. மகளே! உன் வயசே புண்யங்களைப் படி

மிக்கவுங் குறைகளைப் பரிகரிக்கவுந் தக்க சமயம். உன் தாய் தந்தையரும் நானும் என்னத்தானும் உனக்குச் சொல்லுகிறவைகளை நன்றாய்க் கவனித்து நல்லொழுக்கத்தைச் சாங்கோபாங்கமாய்க் கற்றுக்கொள்." என்று எனக்குப் போதித்தார்கள், ஆஞ்! சின்னாச்சி யிவ்வளவுதான் ஏறக்குறையச் சொன்னார்களென்று நினைக்கிறேன்."

இவ்வாறு மனோரஞ்ஜிதந் தன் சிறிய தாயார் தனக்குச் சொன்ன இதபோதங்களைத் திருப்பிச் சொல்லும்போது அபிராமியம்மாள் வாயில் வைத்த கையை யெடுக்காமலும் இமை கொட்டாமலும் பிரமை பிடித்தாற் போல் தன் குமாரத்தியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

மனோரஞ்ஜிதஞ் சொல்லி முடித்தவுடனே, குணமணி யம்மாள் மதுரநாயகம் பிள்ளையை நோக்கி:—" இது பெரும் புதுமை! பேராச்சரியம்! இனி மனோரஞ்ஜிதம், உரோமையருடைய சக்கரவர்த்தி அதிரியான் ஒரு புலவனுக்குச் சொன்னது போல் எனக்குஞ் சொல்லலாமே! என்ன சொல்வேன்? நான் சொன்னவைகளில் முக்காலே மூன்று வீசம் திருப்பிச் சொல்லிவிட்டாள். நான் எடுத்துரைத்த சுலோகச் சொற்களை யொன்றையேனும் விட்டவளல்ல! இன்னும் என்ன சொல்வேன்! என் தொனி நயனங்களை முதலாய்ப் பாவித்துச்சொல்லிவிட்டாள்" என,

மதுரநாயகம் பிள்ளை:—"அதிருக்கட்டும் பிற்பாடு அதனைப் பற்றி பேசுவோம். அதிரியான் சக்கரவர்த்தி புலவனுக் கென்ன சொன்னான்? என,

குணமணியம்மாள்:—"நீங்கள் சுவேத்தோன், புளுத்தார்க்கு, தசித்து, பிளின் முதலிய சரிதையார்த்திகளின் பிரபந்தங்களை வாசித்த தில்லையோ? உங்களுக்குத் தெரியாத சரித்திரமா? ஆயினுங் கேளுங்கள், சொல்லுகிறேன்: ஓர் நாள் ஒரு உரோமைய வித்வான் ஐந்நூறு அருமையான பாடல்களைப்பாடி யவைகளை யொரு பிடிகையில் எழுதி யெடுத்துக்கொண்டு இராயன் அரண்மனைக்குப் போய் சக்கிரவர்த்தியின் பேட்டி தனக்குக் கிடைக்குமாறு மன்றாடினான். அவன் ஆசைக் கிசைவாக பேட்டி கிடைத்தது.

கவிராயன் இராஜோலக்கத்தில் நுழைந்து அரசனுக்கு நமஸ்காரஞ் சமர்ப்பித்து நிற்க,

இராயன் :—"நீ யார்? எங்கே வந்தாய்? நீ வந்த விஷயத்தைச் சொல்." என,

புலவன் :—"சில பாடல்களை யியற்றி யிருக்கிறேன். அவைகளை யிராஜ சமுகத்திற் பாடி யேதேனும் பரிசு பெற்றுக்கொண்டு போகலாமென்று வந்தேன்." என,

——: "பாடு; பார்ப்போம்" என்றான் அரசன்.

கவிஞன் தனது ஐந்நூறு பாட்டுகளையும் வரிசையாய்ப் பாடி முடித்தான்.

முடிக்கவே, சக்கரவர்த்தி புலவனைச் சற்று விறைக்க விறைக்கப் பார்த்துப் பற்களை நறநற வென்று கடித்து :—"நீ என்ன செய்தாய்? என்னை மோசம்பண்ணவந்தாய். நான் ஒருக்கால் பாடிய பாடல்களை நீ சேர்த்தெடுத்துக் கொண்டு வந்து என்னிடம் பாடிப் பரிசு பெற்றுக்கொண்டு போகலாம் என்று வந்தாய்! எனப் பயமுறுத்த,

கவிஞன் :—"மகாப் பிரபூ! தேவரீருடைய சமுகத்தில் எவனேனும் மோசம்பண்ண வேற்படுவானா? பண்ணுவானாயின் அவன் தலை போய்விடாதா? எட்டுணையுந் தேவரீரை மோசம்போக்க நான் வந்தவனல்ல. நான் நெடுநாள் கஷ்டப்பட்டு மேற்படி பாக்களைப் பாடினேன். இன்றைக்குப் பல நாள் சிரமத்துக்கு ஒரு நாள் சுகங் கிடைக்குமென்று சமுகத்தை யண்டிவந்தேன்." என்று பரிதவிக்க,

அரசன் :—"நீ யின்னம் என்னை நம்பவில்லையா? என்னை நீ பரிகசிக்கிறாயா? இதோ...! இந்தப் பாடல்கள் உனக்குச் சொந்தமா? எனக்குச் சொந்தமா? என்று பார்; நன்றாய்க் கவனி." என்று சொல்லி ஐந்தூறு பாட்டுகளையும் குறையறப் பாடி முடித்தான்.

கவிராயன் சற்றுத் திகைத்து நின்று :—"இனி யென்ன செய்வேன்? என்னை யிரக்ஷித்தாலுஞ் சரி, சிக்ஷித்தாலுஞ் சரி. எதைச் செய்தாலுந் தேவரீருடைய சித்தமே சித்தம்." என்று வெருண்டு மருண்டு நின்றான்.

கஷ்ட மறிந்த சக்கரவர்த்தி கவிஞனுக்குத் தக்க பரிசளித்துப் போகச் சொன்னான்.

இந்த இராயனைப் போலவே மனோரஞ்சிதம் பேசினாலும் பேசலாமே. என் வார்த்தைகள், வாக்கு, நயனங்கள், தொனி முத

லானவைகளையுங் கண்டுபசவித்தாள். அவளுடைய புத்தி கூர்மை
யான புத்தி. அவளுடைய ஞாபகம் அதிலுஞ் சிறந்தது. மனோ
ரஞ்சிதங் காலத்தோடும் வயசோடுஞ் சேசார், சர்மிதாஸ், செனே
க்கு, கோராசான் முதலிய ஞாபக சிரோமணிகளை வெல்லுவாள்
போலும்!"

திருமறைநாயகம் பிள்ளை:—"ஆமாம்! உனக்குத் தெரிந்தவெ
ல்லாஞ் திறந்துவிடாவிடில் வயிறு வெடித்துப் போகாதா? சொல்!
சொல்! ஐயோ! மறந்துவிட்டேன் சந்திரசேகர அத்தான்!
மன்னியுங்கள். இனி குணமணி சோலிக்கு நான் வரவில்லை." என,

சந்திரசேகரம் பிள்ளை:—"என் மகள் மீது ஏதேனுங் குறை
கூறுவிடில் மாப்பிள்ளைக்குத் தூக்கமே வராது. அது போகட்டும்
மகளே! நீ மேற்கூறிய ஞாபக சிரோமணிக ளியார்? அவர்கட்கு
ஞாபக சிரோமணிகளென்று பெயர் கொடுக்கக் காரணமென்ன?
ஒவ்வொருவர் விஷயத்திலும் ஏதேனுஞ் சுருக்கமாய்ச் சொல்:
பார்ப்போம்."

குணமணியம்மாள்:—"சேசார் உரோமையாரில் மிகவும்
பேர்போனவனென்று உங்களுக்கு நன்றாய்த் தெரியும். அவன் ஒப்
பற்ற பெரிய சேனாதிபதி. கணக்கற்ற நாடு நகரங்களைக் கட்டி
யாண்டவன். சாஸ்திர சம்பிரதாயங்களிற் சிறந்த மேதாவி. அவ
னுடைய பிரபந்தங்களை வாசிப்போமாகில் அவனுடைய கல்லூரித்
தனம் உள்ளங்கை நெல்லிக் கனிபோற் றுலங்கும். அவனுடைய
ஞாபகமோ? பேரற்புதம். அவன் பிறர் தனக்குச் செய்த
அவமானங்களை மறப்பானே யல்லாது வேறெதையு மறக்கான்.
அவன் பெரிய சேனாதிபதி யாதலால் நாடோறும் பல விடங்
களிற் பலருக்குப் பல கடிதங்கள் எழுதவேண்டியிருக்கும். அப்
போது தன்னெதிரில் நாலு சம்பிரதிகளை வைத்துக்கொண்டு நால்
வருக்கும் நான்கு வித விபரீத விஷயங்களைச் சொல்லி யெழுதும்
படி சங்கற்பித்து, அவர்கட்குச் சொல்லிக்கொண்டே தானும் ஓர்
கடிதத்தை யெழுதுவான். இவ்வாறு நாலு விஷயங்களை நால்வருக்
குச் சொன்னபோதிலும் எவ்விஷயத்திலுந் தவறிப்போகான். ஒரு
உபாத்தியாயர் ஒரு முறை சொன்னதை மறந்து மாணாக்களை நோ
க்கி;— என்ன சொன்னேன்? ஞாபகப் பிசகா யிருக்கிறது.
கடைசி வார்த்தையை யிரட்டித்துச் சொல்." என்கிறார். ஆனாற்

சேசார் என்னவிதமாய் நானு விஷயங்களை நால்வருக்குச் சொன்னான்? என்பதைக் கண்டுபிடிப்பது மிக்க கஷ்டமே.

சரிதையார்த்தியாகிய பிளீன் காலத்திற் கர்மிதாஸ் என்று ஒரு உரோமையா னிருந்தான். பிளீன் அவனுடைய இயாபகம் ஒப்பில்லாத தென்கிறான்: "கர்மிதாஸ் ஒரு தடவை வாசித்தவைகளை யொருபோதும் மறக்கவே மறக்கான். அவன் ஒரு பெரிதான பிரபந்தத்தைக் கையிலெடுத்து ஆதி தொட்டு அந்தம் வரையிற் கடகட வென்று நிறுத்தாமல் வாசித்துப், புஸ்தகத்தை மடக்கி மேசைமீது வைத்துவிட்டுத், திரும்ப ஆதியோடந்தமாய்ச் சொற் றவறின்றி அக்ஷரப் பிசகின்றிக் கண்ணை மூடிக்கொண்டு பிரபந்த முழுவதையும் பாராயணம் பண்ணிவிடுவான்." என்று மேற்கூறிய சரித்திர வாசிரியன் சொல்லுகிறான். தானே யவ்விஷயத்தைப் பரிக்ஷித்ததாயும் எழுதிவைத்திருக்கிறான்.

செனேக்கென்னும் மேதாவி கர்மிதாசுக் கிளைத்தவனல்ல. அவன் சிறந்த சாஸ்திரியாதலால் அவனுக்கு அநேகாநேக மாணாக்கரிருந்தார்கள். ஓர் சமயத்தில் இரண்டாயிர மாணாக்கர் கூடி தலைக்கோர் கவிதை யியற்றிக்கொண்டு தங்கள் உபாத்தியாயரிடஞ் சென்று அவன் முன்னிலையில் ஒவ்வொருவனுந் தத்தம் பாட்டைப் பாடி முடித்தார்கள். பாடினவர்கள் எத்தனை பேர்? இரண்டாயிரம் பேர். பாடல்க ளெத்தனை? இரண்டாயிரம்! செனேக்கு இவ்விரண்டாயிரம் பாட்டுகளையும் இரட்டித்துச் சொன்னான். இன்னும் யென்ன சொல்வேன்? ஒவ்வொரு பாட்டையும் கடைசி வார்த்தையால் ஆரம்பித்து முதல்வார்த்தையால் முடித்தான். எத்தனை பாட்டுகளை? இரண்டாயிரம்பாட்டுகளையும் அவ்வாறே துவக்கி முடித்தான்!

ஓர் கொர்சான் செனேக்கை வெல்லுவான் போலும்! இந்த வாலிபன் பதுவை நகரத்திற் சட்டத்தை கற்றுக்கொண்டபோது அந்தோனி மூரேத்து என்பவர் அவனுடைய ஞாபகத்தை மெத்த வியந்து பேசுகிறார். முப்பதினாயிரம் நாமகரணங்கள் அடங்கிய ஒரு இடாப்பை யொரு தடவை வாசித்துவிட்டுப் பிற்பாடு அந்தப் பெயர்களைத் தாமசமின்றித் தடுமாற்றமின்றி படபடவெனப் பாராமற் சொல்லிப்போனதாய் மேற்படி மூரேத்து நிச்சயிக்கிறார். இத்தகைய ஞாபக சக்தி நமது மனோரஞ்சிதத்துக்குஞ் சற்றேறக் குறைய விருக்கிறதாக பயமின்றி நிச்சயிப்பேன். அவள் காதாற்

கேட்டவைகளை யவ்வளவு நுட்பதிட்பமாய்ச் சொல்வாளாகில் அவள் சற்று கவனமாய் ஏதேனும் ஒரு புஸ்தகத்தை வாசிக்கும் பக்ஷத்தில் இன்னும் எவ்வளவோ திட்டமாய்க் காரியங்களைச் சொல்வாள்! அவள் காலத்தோடு மகா ஞாபக தேசிகையா யிருப்பாள் என்பது திண்ணம்.........அவளுடைய புத்தியோ இணையில்லா ......என,

மதுரநாயகம் பிள்ளை :—“ குணமணி: உனக்கு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். இறந்துபோனவர்களை மிதமாய் புகழ வேண்டும். உயிரோடு இருக்கிறவர்கள் மட்டில் எதிரில் ஏதுஞ் சொல்லத் தகாது; என்றேன். அதனை மறந்துவிட்டாய்.” என்று

மனோரஞ்ஜிதத்தின் புத்தி தீக்ஷண்யத்தைப் புகழ விடாமற் குணமணியைத் தடுத்துவிட்டு :—“ மனோரஞ்ஜிதம்! இராத்திரி அபிராமி யுனக்கென்ன சொன்னாள்? அதனைச் சொல்: பார்ப்போம். அபிராமி யுனக்குப் போதித்த புத்திமதிகளை நானுங் கேட்பேனாகில் எனக்கும் மெத்த பிரயோஜனமாயிருக்கும். அவள் குணமணியைப்போ லல்ல, பெருமை சம்பிரதாயம் அவளிடத்திற் கிடையாது. பொருளலங்காரத்தைப் பார்ப்பாளே யல்லாது பேச்சலங்காரத்தைத் தேடாள். அவள் படிப்பினையில் அர்த்த சம்பிரமம் இருக்குமே தவிர வார்த்தை சம்பிரம மிராது. அவளுடைய சல்லாப சம்பாஷணைகள் எனக்குந் தெவிட்டாத் தேன்; சலியா வமிர்தம்; படிப்பினைகள் புஷ்டிகர......என,

அபிராமியம்மாள் :—“ அத்தான்! மன்னிக்கவேண்டும். அடியாளுடைய வார்த்தைகளை யநுசித வார்த்தைகளாக எடுத்துக் கொள்ளவேண்டாம். யாருக் கென்கிலுஞ் சரி தன் முதுகு தனக்குத் தெரியாது. சற்று முன்னமே குணமணியின் புகழ்ச்சிகளைக் கண்டித்த நாவே யென்னைப் புகழ்கின்றது. ஏதுமறியாப் பேதைப் பெண்ணை யம்பலத்திற் கிழுக்காதேயுங்கள். எனக் கென்ன தெரியும்? நான் என்னத்தைச் செய்தேன்? ஏது மில்லையே! அப்படியிருக்க ஏனென்னை வானமண்டலம் வரையிற் றூக்குகின்றீர்கள்? இனி யென்னைப்பற்றி யெவ்விடத்திலும் ஏதுஞ் சொல்லவேண்டாம்.” என்று வெகு தாழ்மையோடு அவரை வேண்டினார்கள்.

அப்போது மதுரநாயகம பிள்ளை :—“ என் சங்கற்பத்துக்கு விரோதமாய் உன்னைப் புகழ்ந்தது என் பேரிற் றப்பு. என்னை மன்னி.” என்று சொல்லிவிட்டு தமது குமாரத்தியை நோக்கி:—

"நேற்றைய விராத்திரி அபிராமி போதித்த போதனை யென்ன? பிறர் பிரயோஜனத்துக்காக வேண்டி யதனைச் சொல்," என,

"மனோரஞ்சிதம் :—" ஆஞீ! அம்மாள் எவ்வளவோ புத்தி மதிகளைச் சொன்னார்கள்! அவைகளை எல்லாஞ் சொல்லவேண்டு மாகில்...என,

மதுரநாயகம் பிள்ளை :— "அவள் நாளடைவில் உனக்குச் சொன்ன இதபோதங்களை யெல்லாம் நான் உன்னைக் கேட்கிற தில்லை. அவள் உனக்கும் வேலைக்காரருக்கும் போதிக்கும்போது பல தடவைகளிற் கேட்டிருக்கின்றேன். நீ யவைகளைச் சொல்ல வேண்டுவதில்லை. போன விராத்திரி நடந்தவைகளைச் சொல்: போதும்." என,

எனது தாயாராகிய சிவகாமி அம்மாள் :—" தம்பி! மதுர நாயகம்! நீங்கள் மாத்திரம் கேட்டுவிட்டாற் போதுமா? என் மகள் அபிராமியின் வாக்குத் தெவிட்டாத தேனென்றீர்களே. நாங்களு மதைக் கொஞ்சம் ருசிபார்த்த லாகாதோ? நமது சிறு நங்கை மனோரஞ்ஜிதந் தனது மாதா தன்னை வளர்த்த அருமை பெருமை யை ஆதி யோடு அந்தமாய்ச் சொல்வா ளாகில் எனக்கும் எனது பர்த்தாவுக்கும் என் பிள்ளைகளுக்கும் விசேஷமாய்ச் சுந்தரத்துக் கும் எவ்வளவோ மன மகிழ்ச்சி யுண்டாகும்! எவ்வளவோ பிர யோஜனம் பிறக்கும்! எனக்கு நாற்பது பிராயமாகிவிட்டது. இனி மேலாகிலும் என் பிள்ளைகளை நன்றாய் வளர்க்கும் வித்தையை அபி ராமியிடத்திற் கற்றுக்கொள்வேனே. ஆதலால் மனோரஞ்ஜிதம் எல்லாம் ஆதியோடந்தமாய்ச் சொல்லட்டும். அதுவே யெனது கோரிக்கை." என,

மதுரநாயகம் பிள்ளை :—" மனோரஞ்ஜிதம்! உனது அத்தை யம்மாள் அவ்வளவு வருந்திக் கேட்கின்றமையால் உன் பிறப்பு முதல் உனக்குத் தெரிந்தவைகளெல்லாஞ் சொல்." என,

மனோரஞ்ஜிதம் :—" ஆஞீ! சரியாய்ச் சொல்ல வேண்டுமா னால் எத்தனையோ நாட்கள் பிடிக்குமே! இன்றைக்கு நாளைக்குள் முடியுமா? எனது மூன்றாம் நாலாம் பிராயந் துவக்கி அம்மாள் எனக்குப் புத்தி சொல்லாத நாளில்லையே. நீங்கள் வைகுரி கண்டு, படுத்த படுக்கையாயிருக்கும் போது மாத்திரங் கொஞ்ச நாள் விட்டுவிட்டார்கள்." என,

மதுரநாயகம் பிள்ளை:—“தற்போது எல்லாஞ் சொல்ல நேரங் கிடையாது. சுருக்கமாய் முக்கியமான காரியங்களை மாத்திரஞ் சொல். வாரக் கணக்கு, மாசக் கணக்கிற் காரியாம்சங்களை வைத் துக்கொள்ளாதே. இன்றைக்கும் நாளைக்கும் உனக்குக் கெடு கொடுக்கிறேன். இதற்குள்ளாக எல்லாஞ் சொல்லி முடித்துவிடு.” என,

மனோரஞ்ஜிதம்:—“ஆஞ்! அப்படியே சொல்லி முடிக்கிறேன்.” என்று பின்வருமாறு என் தாயாரைநோக்கி:—“அத்தை யம்மா! நீங்கள் பெரியவர்கள். நான் ஓர் சிறுபிள்ளை. என்னைச் சட்டைபண்ணி யிவ்வளவு வருந்திக் கேட்டபடியால் எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன். எனக்கு இப்போது பத்துப் பிராயம் முடியப் போகிறது.

---

## 12-ம் அத்தியாயம்.

*மனோரஞ்சிதந் தன்றாயார் தன்னைக் குழந்தைப் பருவத்தில் வளர்த்த வருமையைச் சொல்லுகிறாள். தேவ சிநேகத்தின்பேரில்-ஒரு சிறந்த உபந்நியாசம். கார்லு பொறோமை யதற்கு நல்ல வழிகாட்டி. மனோரஞ்சிதம் அவளைப் பின்சொல்ல முயலுகிறாள்,*

“நான் பிறந்து எட்டு ஒன்பதா மாதத்தில் நடக்க ஆரம்பித்தேன். அப்போது அம்மா! ஆஞ் என்கிற வார்த்தைகளைச் சொல்லத் துவக்கினேன். எனது தாயார் என்னைத் தங்கள் மடியிலுட்கார வைத்துக்கொண்டு என்னை யடிக்கடி குலாவி முத்தமிட்டு:—“இயேசு! மரியே! என்று சொல்.” என்பார்கள். நான் எனக்கு ஒன்றரைப் பிராயம் நடக்கிற வரையில்:—“யேயு! மயியே!” என்று கொச்சையாய்ச் சொல்லிக்கொண்டிருந்தேன். அதற்குப் பிற்பாடு திருத்தமாய்:—“இயேசு! மரியே! இயேசு! மரியே!” என்று சொல்லிக்கொண்டிருந்தேன். இப்போது எப்படி யொரு நாளொன்றுக்கு ஆயிரத்தைந்நூறு விசை:—“இயேசு! மரியே! என்று சொல்லி யுச்சரிக்கிறேனோ அப்படியே நான் குழந்தையா யிருக்கும்போதும் எங்கும்:—“இயேசு! மரியே! இயேசு! மரியே! என்று சொல்லிக்கொண்டே திரிவேன். என் விளையாட்டுத் தோழிகளும் என்னைப்போலவே சொல்லத் தொடங்கினார்கள்,

நான் அநேக வார்த்தைகளைச் சொல்லக் கற்றுக்கொண்ட பின்பு எனது தாயார்:—“அம்மணி! “இயேசு! மரியே! சூசை!

யுங்களை நம்பினேன். என்னைக் கைவிடாதேயுங்கள். என் பாது காவலியான ஸ்ரீமதி சுத்தரினுளே! எனக்காக மன்றாடும். எனது காவல் தேவதூதரே பெண்ணைப் பராமரித்துக் காத்தருளும். நான் உங்கள் பிள்ளை. என்னை யாதரியுங்கள்." என்று அடுத்தடுத்துச் சொல்ல நானும் அப்படியே அடிக்கடி சொல்வேன்.

எனக்கு நாலு பிராயம் நடக்கும்போது சிலுவை வரையவும் முழங்காலி லிருக்கவுங் கைகளைச் சேர்த்துக் கும்பிடவுந் தரையில் விழுந்து வணங்கவும் மூன்று விசை பூமியை முத்தமிடவுங் கற்றுக் கொடுத்தார்கள். அவ்விதமாகவே நானது வரையிற் செய்துகொண் டுவருகிறேன். அவர்கள் வீட்டிலும் வழியிலுங் கோவிலிலும் மென்னென்ன செய்கிறார்களோ அவைகளை யெல்லாம் நானுஞ் செய்கிறேன்.

எனக்கு ஐந்து வயசு நடக்கும்போது கர்த்தர் ஜெப மும், தேவ தூத மங்களமும், அப்போஸ்தலர்களுடைய பன்னிர ண்டு விசுவாசப் பிரமாணங்களையும் எனக்கு நன்றாய்ச் சொல்லிக் கொடுத்துவிட்டார்கள். அப்போது துவக்கி யிந்நாள் வரையில் காலையில் பத்துவிசை, பன்னிரண்டு மணிக்குப் பத்துவிசை, சாயந் திரம் பத்து விசை யிந்த மந்திரங்களைச் சொல்வது எனக்கு மறவாத வழக்கம். அம்மாள் ஜெபம் பண்ணும்போது நானுங் கூட ஜெபம் பண்ணுவேன். அவர்கள் முழங்காலி லிருந்தால் நானும் முழங் காலிலிருப்பேன். அவர்கள் விழுந்து கும்பிட்டால் நானும் விழு ந்து கும்பிடுவேன். அவர்கள் கோவிலுக்குப் போகும்போது எப் போதுந் தவருமல் ஜெபமாலை யெடுத்து ஜெபம் வேண்டிக்கொ ண்டே போவார்கள். நானும் அவர்களைப் போலவே எனது சிறிய ஜெபமாலையை வைத்துக்கொண்டு கோவிற் போகும் வரையிற் கர் த்தர் ஜெபத்தையுந் தேவதூத மங்களத்தையும் மடக்கி மடக்கிச் சொல்வேன், நான் கோவிற்போய்ச் சேரு முன்னே யொரு ஜெப மாலை முடியும்.

நானும் அம்மாளும் எப்பொழுதும் பூசை காணும்போது முழங்காலி லிருந்தே காண்போம். பூஜைமுடிந்த பிற்பாடுமாத்திரம் நானும் அம்மாளுந் தாழ வுட்காருவோம். பூஜைக்குப் பிற்பாடு அரை மணி நேரம் பல ஜெபங்களைச் செய்வார்கள். அவர்கள் எதைச்செய்வார்களோ அதையே நானுஞ் செய்வேன். கோவிலை விட்டுத் திரும்பி வரும்போது ஜெபம் பண்ணிக்கொண்டே வரு

வோம். வழியில் யாரிடத்திலும் பேசார்கள். அப்படியே நானும் பேசக்கூடாதென்று கண்டிப்பாய் எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் எனக்குக் கற்றுக்கொடுத்த வழக்கத்தை யின்னும் விடாமல் அனுசரித்துவருகிறேன்.

ஆஞி யென்னை ஐந்து வயசிலேயே பள்ளிக்கூடத்தில் வைத்தபடியால் ஆறுமாசத்துக்குள்ளாக எந்தப் புஸ்தகத்தையுந் தாராளமாய் வாசிக்கக் கற்றுக்கொண்டேன். அனைதைப்பற்றி நான் பள்ளிக்கூடத்தைவிட்டுத் திரும்பிவந்து கொஞ்சநேரம் இளைப்பாறின பின்பு அம்மாள் என் கையில் ஒரு புஸ்தகத்தைக் கொடுத்து வாசிக்கச்சொல்வார்கள். அந்தப் புஸ்தகத்திற் சொல்லியிருக்கிறபிரகாரம் என்னை நடக்கச் சொல்வார்கள். ஒவ்வோர் புண்ணியத்துக்கும் உதாரணமாக சின்ன சின்ன சரித்திரங்களைச் சொல்லி யந்தப் புண்யங்களை யனுசரிக்கத் தூண்டுவார்கள். முதலில் அவர்களே யப்படிச் செய்து வழிகாட்டுவார்கள். பிற்பாடு நானும் அப்படியே செய்வேன்.

எனக்காறு பிராயம் நடக்கும்போதெல்லாம் ஐந்து மந்திரங்களும் ஞானோபதேசச் சுருக்கமுந் தாராளமாய்க் கற்றுக்கொண்டேன். அம்மாள் அவைகளைப் பிழையில்லாமலுந் திருத்தமாயுஞ் சொல்லிக் கொடுத்துவிட்டார்கள். ஆனால் இப்போது அர்த்தங் கண்டுபிடிக்கிறதுபோல் அப்போது நான் கண்டுபிடிக்கவில்லை.

எனது ஆறும் பிராயந்தொட்டு இன்றையவரைக்கும் எங்கள் வீட்டில் நானும் ஆஞியும் அம்மாளும் வேலைக்காரருங் காலையிலும் மாலையிலும் ஜெபம் பணணும்போது நானே யெப்போதுஞ் ஜெபங்களைப் படிப்பேன்.

இராச் செபம் முகிந்தவுடனே சாப்பாட்டறைக்குப் போய்ப் பந்தியமர்ந்து சாப்பிடுவோம். பிற்பாடு ஒன்பதுமணி வரையில் ஆஞியும் அம்மாளும் நானும் பேசிக்கொண்டிருப்போம். அப்போது ஆஞியாவது அம்மாளாவது அநேக அநேகம் புத்திமதிகளைச் சொல்வார்கள்.

அநேக வகை தர்மங்களைப் படிப்பித்தாலும் விசேஷமாய் தேவன்மட்டில் மெய்யான நேசமுந், தாய் தந்தையர்மட்டில் மெய்யான பக்ஷமும பிறர்மட்டிற் சகோதர சிநேகமுங் காட்டவேண்டுமென்று அடிக்கடிச் சொல்லுவார்கள்.

ஒரோர் நாளில் நானும் அம்மாளும் இராக்காலங்களிற் காற்றோட்டமதுப் மேன்மாடியில் உலாவிக்கொண்டிருக்கும்போது என் தாயார்—"மனோரஞ்ஜிதம்! வானமண்டலங்களைப் பார்த்தாயா? எல்லை வரம்பில்லாத பிரமாண்டமான இந்த மண்டபத்தைப் பார், அந்த மண்டபத்தின் கீழே பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களைப் பார், சுடர்விட்டெரியுங் கிரகங்களைப்பார். ஓ! எவ்வளவு அலங்காரமாயிருக்கிறது! எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது! இவ்வளவு அழகான காரியங்களை யுண்டாக்கினவர் இன்னும் எவ்வளவோ மகிமையுஞ் சோபனமும் அலங்காரமு முள்ளவரா யிருக்கவேண்டும்! மகளே சந்திர, நக்ஷத்திரங்களை யிராக்காலச் சிறப்புக்காகவும் நம்முடைய பிரயோஜனத்துக்காகவும் படைத்தார். ஒவ்வொரு நக்ஷத்திரமும் நாம் வசிக்கும் பூமியைவிட அநேகாயிர மடங்கு பெரிது; அத்தனை கோடாநுகோடி நக்ஷத்திரங்களையுந் தமது சுண்டுவிரலால் தாங்கிக்கொண்டிருக்கிறார்! ஓ! எவ்வளவு பெரியவர்! எவ்வளவு வல்லமை யுள்ளவர்!

இந்தப் பூமியைப் பார். அது எவ்வளவு விஸ்தீரணமுள்ளது. அதிலிருக்கும் பெரிதான மலைகளைப் பார். பெருங் காடுகளைப்பார். அங்கு வசிக்கும் நானாவித ஜீவஜெந்துக்களைப் பார். எத்தனையோ அலங்காரமான ஜீவகோடிகள்! பூமியில் வாழுஞ் ஜீவராசிகளுக்கெல்லாம் படியளக்கிறது யார்? சர்வ வல்லமையுள்ள ஆண்டவரல்லவா? ஆ மனோரஞ்சிதம்! சுவாமி எவ்வளவு நல்லவர்! எவ்வளவு இரக்கமுள்ளவர்! எவ்வளவு கருணையுள்ளவர். அத்தனை கோடி ஜீவஜெந்துக்களுக்குஞ் சாப்பாடு போடுகிறவர் எவ்வளவோ தயையுள்ளவர்!

சமுத்திரத்தைப் பார். அதிலும் எத்தனையோ கோடாகோடி மச்சங்களையும் மற்ற மற்ற ஜீவராசிகளையும் பார். அவைகளுக்குஞ் சாப்பாடு போடுகிறார்.

இந்தப் பூலோகமெங்கும் குடியேறியிருக்கும் மனுஷரைப் பார். அவர்களில் ஒவ்வொருவனையும் எவ்வளவு சாமர்த்தியமாயுண்டாக்கியிருக்கிறார்! ஒவ்வொருவனுடைய முகத்தை யுற்றுநோக்கு. ஒவ்வொரு முகமும் வெவ்வேறாயிருக்கிறதே! மனிதனுடைய சரீரம் எவ்வளவு நேர்த்தியாகப் படைக்கப்பட்டிருக்கிறது! சுவாமியுடைய ஞானம் எவ்வளவு பெரிய ஞானம்!

ஆ! மகளே! கடவுள் எவ்வளவு நல்லவர்! மனிதர் எவ்வளவு கெட்டவர்கள்! அவர்கள் கட்டிக்கொள்ளும் பாவங்களுக்குக், கணக்குண்டா? தேவன் உபகாரஞ் செய்யச் செய்ய மனிதர் அப காரமே செய்கிறார்கள்! ஒரு நாளொன்றுக்கு நடக்குங் கொலை களவு துர் நடத்தைகளுக்கும் எண்ணிக்கை யுண்டா? இல்லை; அப் படியிருந்தாலும் ஆண்டவர் தமது சந்திர சூரியரை யவர்கள் பேரிற் பிரகாசிக்கச் செய்கிறார். மழையை வருஷிக்கிறார். காற்று குளிர் வேனில் முதலானவைகளையுந் தருணம் பார்த்து அனுப்பு கிறார். மகளே! சுவாமி யெவ்வளவு நல்லவர். நாம் அவருடைய நன்மைத் தனத்தைக் கண்டு நடக்கிறோமா?

மனோரஞ்ஜிதம்! சருவேசுரன் நம்மை யுண்டாக்கினார். நாடோறும் நம்மைத் தமது நன்மைகளாலுங் கொடைகளாலும் நிரப்புகிறார். நமது ஜீவனைக் காப்பாற்றுகிறார். நமது துரோகங் களால் நாம் பாவிகளாய்ப் போக, பசாசு நம்மை யடிமைகளாக்கிக் கொள்ள, அவரே பூமியி லிறங்கிவந்து நம்மைப்போல் மனிதனாய்ப் பிறந்து தமது இரத்தத்தைச் சிந்தி நமக்குத் தம துயிரைப் பலி யாகக் கொடுத்து நம்மை யிரக்ஷித்துத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டார். கடைசியாய் நமக்கு மோக்ஷ முடியையுங் கொடுக்கத் தயாராயிருக்கிறார்.

இவ்வளவு நல்ல சுவாமிக்கு நா மென்ன பிரதி நன்றி காட் டப் போகிறோம், நம்மால் என்ன ஆகும்? நம்மை யென்ன கேட் கிறார்? நமது பூணார பொக்கிஷங்களைக் கேட்கிறாரா? பொன்னை, வெள்ளியைக் கேட்கிறாரா? இல்லை. பின்னை யென்னத்தைக் கேட்கிறார்? ஒரே யொரு காரியத்தைக் கேட்கிறார்" என,

நான் :— "அம்மா! அது என்ன காரியம்? எனக்குத் தெரிய வில்லையே அதை யெனக்குச் சொல்லுங்கள்" என,

எனது தாயார்.— "மகளே! சுவாமி யுன்னிருதயத்தைக் கேட்கிறார்" என,

நான் :— "அம்மா! சுவாமிக்கு என்னிருதயத்தை யெப்படிக் கொடுப்பேன்! அது வயிற்றி லிருக்கிறதே, அதை யெடுத்தால் நான் செத்துப் போவேன்" என,

அவர்கள் :— "என் கண்ணே! இருதய மென்றால் உன் நெஞ்சி லிருக்கும் மாங்காயல்ல. அதினின்று புறப்பட்டு வரும் பக்ஷத்தையே சுவாமி கேட்கிறார்" என,

நான் :— "அம்மா! என்ன விதமாய் என் பக்ஷத்தை யாண்டவருக்குக் காட்டுகிற தென்று எனக்குத் தெரியவில்லையே. அவரை யெப்படி நேசிக்கிறது? சொல்லுங்கள்" என,

அவர்கள் :— "ஆனியைக் கட்டி முத்த மிடுகிறாயா? என்னைக்கட்டி முத்த மிடுகிறாயா? உனது தங்கை இரவாமணியைக் கட்டி முத்த மிடுகிறாயா? உனது தம்பி அமிர்தவாசகனைக் கட்டி முத்த மிடுகிறாயா? இன்னும் மற்ற தம்பி தங்கையரைக் கட்டி முத்த மிடுகிறாயா?" என,

நான் :— "ஆம், அம்மா! கட்டி முத்த மிடுகிறேன். ஒரு நாளைக்கு எத்தனையோ விசை யப்படிச் செய்கிறேன்," என,

அவர்கள் ;— "ஏனப்படிச் செய்கிறாய்? ஓர் காரணம் வேண்டுமே. என்ன முகாந்திரம்?" என,

நான் :— "எனக்குத் தெரியவில்லை, அம்மா! என் நெஞ்சில் என்னமோ ஒரு மாதிரியா யிருக்கிறது. அப்போது என்னாற் சும்மா விருக்க முடியவில்லை. கட்டாயம் அவர்களைக் கட்டி முத்த மிட்டால் தான் என் மனது அமரிக்கையா யிருக்கிறது' என,

அவர்கள் :— "என் கண் மணியே! அது தான் நேசம்; அது தான் பக்ஷம்; அது தான் அன்பு. இவைகள் நம்முடைய இருதயத்தி னின்று புறப்பட்டு வருகின்றன. இந்தப் பக்ஷத்தையும் அன்பையுந்தான் சுவாமி கேட்கிறார்" என,

நான் :— "ஆம் அம்மா! நீங்கள் சொல்லுவது சரிதான். ஆனியும் நீங்களும் என் சகோதரரும் என் கண் முன்பாக விருக்கிறீர்கள்; உங்களை நான் கட்டி முத்த மிடுகிறேன். உங்களை நினைக்கிறேன். உங்கள் மேலே யாசை தாகமா யிருக்கிறேன், உங்களிஷ்டப்படி நடக்கிறேன். நீங்க ளிட்ட வேலையைச் செய்கிறேன். நீங்கள் எதைச் செய்யச் சொன்னாலுஞ் செய்கிறேன். அதனால் என் னிருதயத்தை யுங்களுக்குக் கொடுக்கிறேனென்று தெரிகிறது. ஆனால் சுவாமி யென்னெதிரி லில்லையே. என்னமாய் அம்மா! என் னிருதயத்தை யவருக்குக் கொடுப்பேன்? அரூபியா யிருக்கிறாரே.

ஆஞ்ரியைப்போல் சரீரத்தோடு என் கிட்டே வந்தால்! ஓ! எத்தனை விசை யவரைக் கட்டி முத்தமிடுவேன். சுவாமி! நான் உங்கள் பிள்ளை. என் நெஞ்சைப் பாருங்கள். அதற்குள்ளே என்னிருதயம் பதைக்கிறது. அதை யுங்களுக்குக் கொடுக்கிறேன். அதை யெடுத்துக்கொள்ளுங்கள். சுவாமி! ஆஞ்ரி, அம்மாள் இவர்கள் மேலே ஆசையாயிருக்கிறதுபோலே யுங்கள் மேலேயும் பக்ஷமாயிருக்கிறேனே. அவர்களுக்குக் கீழ்படிகிறதுபோல் உங்களுக்குங் கீழ்ப்படிவேனே! நீங்கள் எதைச் சொன்னாலுஞ் செய்வேனே! ஆனால் நீங்கள் என்னெதிரிலில்லையே" என்று கஸ்திப்பட,

எனது தாயார்:—"நீ யங்கலாய்க்காதே மகளே! இதுவே சுவாமியை நேசிக்கிற வகை. இதுதான் மெய்யான நேசம். இப்படியே நாடோறுஞ் செய்வாயானாற் சருவேசுரன் உன்பேரில் நிரம்ப பக்ஷமாயிருப்பார். நீ வாஸ்தவமாய் உன்னிருதயத்தை யவருக்குக் கொடுத்துவிட்டாய். இதுவே அநுதினமுஞ் செய்யவேண்டிய முக்கிய ஜெபம். இந்த மாதிரியே பள்ளிக்கூடத்திலும் வீட்டிலும் வழியிலும் மற்ற விடங்களிலுங் கோவிலிலும் வேண்டிக்கொள். இதுவே மெய்யான சிநேகம். இதற்குத் தேவ சிநேகம் என்று பெயர். இதற் குதாரணமாக ஒரு சிறிய சரித்திரஞ் சொல்லுகிறேன் கேள்" என்று எனக்கு தைரியஞ் சொல்லி.—"மகளே, இத்தாலியா தேசத்தில் உலோம்பார்தியா மாகாணத்தில் அரோனா நகரத்தில் வங்கிஷபதிகளான தாய் தந்தையரிடத்திற் கார்லு என்னும் ஒரு சிறுவன் பிறந்தான். (பிற்பாடு மிலான் நகரத்து அதிமேற்றிராணியார்) அவன் சிறுவயதிற் கடவுளுக்குந் தன் தாய் தந்தையருக்கும் மற்ற ஜனங்களுக்கும் வெகு பிரியமாய் நடந்தவன். அவனுடைய பால ஜீவியும் மகா விநோதமானது. அவனுடைய பிதா மாதாக்கள் அவனை வெகு கவனத்தோடு வளர்த்தார்கள். இளமையிலேயே யவனுக்குத் தேவ சிநேகத்தையும் பிற சிநேகத்தையும் நன்றாய்ப் போதித்து விட்டார்கள். அதினால் அவன் ஐந்தாறு பிராயத்திலேயே கடவுளை நன்றாய் நேசிக்க ஆரம்பித்துத் தன் முழு இருதயத்தையும் அவருக்குக் கொடுத்துவிட்டான், அவன் மெத்த சிறு பையனா யிருந்தாலும் நாடோறும் ஆண்டவரை வெகு அருமையாய் நேசிப்பான்,"

"அவன் விடியற்காலங் கட்டிலைவிட் டெழுந்திருக்கும் போது:— 'சுவாமி! இந்த விராத்திரி யென்பேரில் இரக்கம்

வைத்து என்னைக் காப்பாற்றினீர்! அதற்குப் பதிலாக என் எண்ணங்களையுங் கிரியைகளையு முமக்கு வசிகரம் பண்ணுகிறேன்' என்பான்."

"காலையில் சாப்பிடும் போது :—'தேவனே! நாடோறும் இந்த ஆகாரத்தை யெனக்குக் கொடுக்கிறீரே, அதற் கீடாக என்னிருதயத்தை யுமக்குக் கொடுக்கிறேன். அதை யேற்றுக்கொள்ளுஞ் சுவாமீ!' என்பான்."

"படிக்கத் துவக்கு முன்னே :—'என் சர்வேசுரா! நான் நன்றாய்ப் படித்து கிரஸ்தனாயும் புண்யவானாயும் இருக்கவேண்டுமென்பது உமது சித்தம். ஆதலால் நான் படிக்கிறேன்' என்பான்."

'அவன் மத்தியான சாப்பாடு சாப்பிடும்போது :—'ஆண்டவரே! நல்ல காரியங்க ளெல்லாம் உம்மிடத்தி னின்று வருகின்றன. நீர் சகல தந்தையரினும் உத்தம தந்தை. நீர் கொடுத்த இந்த அன்னத்தை நன்றியறிந்த மனத்தோடும் மட்டோடுஞ் சாப்பிடுகிறேன். நான் பெரியவனான பிற்பாடு என்னுடைய பந்தியில் ஏழைகளை நல்ல மனத்தோடு ஏற்றுக்கொள்வேன். ஏன்? அவர்கள் உம்முடைய பிள்ளைகளாதலால் நான் அவர்களை யேற்றுக்கொள்வேன்' என்பான்,"

"சில பிள்ளைகள் ஏதேனும் பொல்லாங்கு செய்யும் போது அவனுடைய பிரலாபத்தையுங் கண்ணீரையும் யார் கண்ணுற்பார்க்கக் கூடும்? அவன் தனது தோழர்களுடைய கெட்டத்தனத்தைப் பார்த்து :—'ஆ! சுவாமி! ஆண்டவரே! இப்பேர்ப்பட்ட ஆபத்தில் என்னைத் தற்காத்து நன்மையில் நிலை நிறுத்தா விட்டால் நான் எங்கே யிருப்பேன்? பாவ பாதாளத்தில் விழுந்திருப்பேன்! அந்த நிர்ப்பாக்கிய பையனை விட இன்னும் பெரும்பாவியா யிருப்பேன்!' என்று பரிதவிப்பான்."

"அவன் பக்திமான்களான சில நல்ல பிள்ளைகளைக் காணும் போது மனம் பூரித்து :—'என்னாண்டவரே! இன்னும் பூலோகத்தில் என்னைவிட நல்ல பிள்ளைக ளிருக்கிறார்கள். அதற்காக உமக்குத் தோத்திரம். நான் அவர்களை விட புண்யவானாகப் பிரயாசப்படுவேன்' என்பான்."

"பொழுது சாய்ந்து சூரியனடங்குவதைப் பார்த்து:— 'சுவாமி! என் ஜீவியமும் இப்படித்தான் மறைந்து போகும்! இன்றைக்கோ? நாளைக்கோ? என்றைக்கோ! அறியேன். இந்த நிர்ப்பாக்கிய ஜீவிய முடிந்த வுடனே யெனக் கோர் உத்தம நித்திய ஜீவியத்தைக் கொடுப்பீர். அதற்காக, ஆண்டவரே! இன்றைக்கே நன்றாய்த் துவக்கப்போகிறேன். உத்தமனாய் ஜீவிப்பேன், புண்ய கிரியைகளைச் செய்வேன். எனது பூலோக ஜீவியத்தின் சாயந்தி ரத்துக்காக வேண்டி மரணத்துக்கு அமரிக்கையான ஓர் புண்ய கட்டிலைத் தயார்செய்துகொள்ளப் போகிறேன்' என்பான்."

"அவன் இராக்காலத்திற படுக்கப்போகும்போது:—'சுவாமி! இந்த இராவை யெனது இளைப்பாறிக்காகக் கொடுத்தீரே உமக் குத் தோத்திரம்! எனது ஆத்மாவை யுமது கரங்களில் ஒப்புக்கொ டுக்கிறேன். என் ஜீவியமும் மரணமும் உமது கையில்.' என்று படுத்துத் தூங்குவான்."

"அவன் விடியற்காலம் எழுந்திருக்கும் போது:— 'என் சர்வேசுரா! என் சர்வேசுரா! உம்மை நோக்கி யெழுந்திருக் கிறேன்' என்று,"

"இவ்வாறு இரவும் பகலுங் கடவுளோடு ஐக்கியப்பட்டு ஜீவிப் பான். எந்நேரமும் எவ்விடத்திலும் தேவனுடைய நினைப்பே அவனுடைய மனத்திலும் புத்தியிலும் ஓயாது ஊசலாடிக்கொண் டிருக்கும். இதுவே மகளே மெய்யான தேவ சிநேகம். நான் முன் சொன்ன கார்லைப் போல எவன் செய்வானோ அவன் உத்தம புண்யவான். இந்தப் புண்யத்துக்கு மிஞ்சின புண்யங் கிடையாது" என்று சொல்லி முடித்தார்கள்.

அத்தை யம்மா! அப்போது எனக்கிருந்த பூரிப்பு எவ்வள வென்று சொல்லி முடியுமா? என் தாயாரை நோக்கி:— "அம்மா! சுவாமி யிவ்வளவு நல்லவரா? இப்படி இராவும் பகலும் அவரை நினைத்துக்கொண்டு கார்லு என்பவனைப் போலப் பாவத் தைச் செய்யாம லிருந்தாற் போதுமா? நான் கூட கார்லைப்போலக் கடவுளை யெப்போதும் நினைத்துக்கொண்டே நல்ல பிள்ளையா யிரு ப்பேன். என்னிருதயத்தை யெப்போதும் ஆண்டவருக்கு ஒப்புக் கொடுப்பேன்" என,

எனது தாயார் :— "மகளே நீயெல்லாம் நன்றாய்க் கண்டு பிடித்தாய். நீ கார்லைப் போலவே நட. கார்லு பெரிய புண்ய வான். நீ யவனைப் போலப் புண்யவதி யாகவேண்டும். ஆனதைப் பற்றி யுனது தகப்பனாரும் நானுஞ் சொல்லுங் காரியங்களை நன்றாய்க் கவனி. நான் உனக்கு இப்போது சொல்லப் போகிறதை யொருநாளும் மறக்கவே மறக்காதே."

"நீ நாடோறுங் காலையிற் கட்டிலைவிட்டு எழுந்திருக்கும் போது :—'என் சர்வேசுரா! என் சர்வேசுரா! இதோ உம்மை நோக்கி விழிக்கிறேன். என் ஆத்மா உமது பேரிற் றாகமாயிருக்கிறது' என்று சொல்,"

"அதன் பின் :—'இயேசு! மரியே! சூசை! உங்களடைக் கலத்தில் விழித்தேன். பிற்பாடு:— இணை பிரியாப் பரிசுத்த திரித்துவத்துக்கு ஸ்துதி; என்னை யுண்டாகின பிதாவுக்கு நமஸ்காரம்; என்னை யிரக்ஷித்த சுதனுக்கு நமஸ்காரம்; என்னை யர்ச்சித்த ஸ்பிரித்து சாந்துவுக்கு நமஸ்காரம்.' என்று,"

"கட்டிலை விட்டெழுந்து நின்றுகொண்டு :—'கன்னி மரியே! நீரும் உமது கருணை நிறைந்த குமாரனும் என்னை யாசீர்வதியுங்கள்' என்று உடுத்திக்கொள்."

"உடுத்திக்கொண்ட பிற்பாடு முழந்தாட்படியிட்டு பூமியை மூன்று தடவை முத்த மிட்டுச் சாஷ்டாங்கமாய் விழுந்து:— நமது தேவனுக்கு ஸ்துதியும் பிரக்யாதியும் ஞானமும் நன்றியறிந்த ஸ்தோத்திரமும் நமஸ்காரமும் பராக்கிரமமுஞ் சதா சங்கயுகங்களா யுண்டாகக் கடவது என்று மூன்று தடவை வேண்டிக்கொண்டு, எழுந்து தந்த சுத்தி செய்து கை கால் முகங் கழுவிக்கொண்டு, காலை ஜெபம் செய்து அரை மணிநேரஞ் சுவாமி பேரில் உன் சிந்தை வாக்கு முதலானவைகளைச் செலுத்தி, யவருக்கு உன்னிருதயத்தையும் பக்ஷத்தையு மொப்பித்து தியானத்தை முடித்துக் கோவிலுக்குப் போய்ப் பூஜை கண்டு வீட்டுக்குத் திரும்பி வரவேண்டும்."

"சாப்பிட்டபின்னர் பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டும் பாடசாலைக்குப் போகும்போது உன் ஜேஷ்டிமார்களுக்கு எப்போதும் நன்மாதிரி காட்ட வேண்டும். அவர்களோடு அதிரப் பதராப் பேசலாகாது. நீ யாரிடத்திற் பேசினாலும் எப்போதுஞ் சாதுகு

ணம் உனக்குத் துணையும் வழிகாட்டியுமா யிருக்கவேண்டும். ஆரியக் கூத்தாடினுங் காரியத்தின் மேற் கண்ணாயிருக்க வேண்டும். நீ யெங்கே போன போதிலும், எங்கே யிருந்தபோதிலும், யாரோடு சம்பாஷித்தபோதிலும், என்னத்தைச் செய்த போதிலும் நமது திவ்ய இரக்ஷகராகிய இயேசு நாயகர் உன்னிருதய, மனோ, வாக்கு புத்தியிலும் எந்நேரமுங் குடிகொண்டிருக்கவேண்டும். நீ சாப்பிட்டாலும், வாசித்தாலும் இன்னும் எதைச் செய்தபோதிலும் இயேசு வென்னு நாமகரணம் இடைவிடாது உன் நாவிற் சப்தித் தொலிக்கக் கடவது. உன் கனவிலும் நமது மதுர இயேசு வர வேண்டும். நீ விழித்தெழுந்திருக்கும்போது உன் முதல் வார்த்தை நமது திவ்ய இயேசுவா யிருக்கட்டும்! வாயில் இடைவிடாது உமிழ் நீர் ஊறுவது போல வுன் நாவில் எந்நேரமும் இயேசு வென்னு நாமகரணம் ஊறிக்கொண்டே யிருக்கட்டும்" என்று அடிக்கடி யெனக்குச் சொல்லிக்கொண்டு வருவார்கள்.

---

## 13-ம் அத்தியாயம்.

மனோரஞ்சிதத்தின் பாலசிக்ஷை, தாய்மார்கள் தங்கள் பிள்ளைகளை நடத்தவேண்டிய முறை. தேகபயிற்சி யவசியம். குணமணியம்மாள் ஒரு வீராங்கனை. தேகஞ் சுகமடைய வேண்டுமாகில் வேலை செய்யவேண்டும். எந்த வேலையையும் நிசிதமா யெண்ணலொண்ணாது. வேலை செய்ய வேண்டுமென்று மாகாத்மாக்கள் நமக்கு நல்வழி காட்டுகின்றார்கள்.

எனக்கு ஏழு பிராயஞ் சரியாய் முடிகிறதற்கு முந்தியே நல்ல புத்தி விவரம் வந்துவிட்டது. என் னேழாம் பிராயமுதல் என் தாயாரைப் போலவே யெல்லாக் காரியங்களிலும் நடக்கத் துவக்கினேன். அவர்கள் எதைச் செய்வார்களோ அதை நான் செய்யாவிட்டால் என் மனசு அமரிக்கையா யிராது; எனக்குத் தூக்கமும் வராது.

அவர்கள் ஒரு நாளாகட்டும் ஐந்து நிமிஷ நேர முதலாய்ச் சும்மா விரார்கள். மழை பெய்தாலும் வெய்ய லடித்தாலும் நாடோறும் இரண்டு தடவை கோவிலுக்குப் போவார்கள். அது போக ஒரு நாளுந் தவறாமல் வீட்டில் உலக இரக்ஷகர் சுரூபத்தின் முன் பாகப் பல தடவைகளில் ஜெபம் பண்ணுவார்கள். பிற்பாடு வேத

புஸ்தகத்தை யெடுத்து அரை மணி நேரந் திருவாசகம் படிப்பார்கள். கால் மணிநேரந் தையல் தைப்பார்கள். எனக்கும் எனது தோழிகளுக்கும் எனது தங்கை இரவாமணிக்குந் தையற் கற்றுக் கொடுப்பார்கள்.

பின்பு சமயல் வீட்டுக்குப் போவார்கள். அங்கு வேலைக்காரிகளுக்குப் பதார்த்தப் பாகங்களைக் கற்றுக் கொடுப்பார்கள். எப்போதும் அம்மாள் தான் குழம்பு கூட்டுவார்கள். விருந்தாடிகள் ஜாஸ்தியாய் வந்திருக்கும் போது வேலைக்காரிகள் கஷ்டப்படுவதை யெனது தாயார் பார்த்துக்கொண்டிருக்கமாட்டார்கள். மிளகாய் கொத்துமல்லி முதலிய மசாலைகளையும் அரைப்பார்கள், அடுப்பெரிப்பார்கள். சாப்பாட்டு வேளை வந்தவுடனே யவர்களே யெல்லோருக்கும் சாதம் கறிகளைப் பரிமாறுவார்கள். வேலைக்காரிகளுக்குஞ் சாப்பாடு போட்டுக் கடைசியாய்த் தாங்கள் சாப்பிடுவார்கள். ஒவ்வொரு நாளும் மூன்று வேளையும் இப்படியே செய்வார்கள்,

எட்டு நாளைக்கு ஒரு தடவை நெல்லு குத்துகிற அறைக்கு நானும் என் தாயாரும் போகிறது வழக்கம். அங்குபோனாற் சும்மா திரும்பி வருகிற தில்லை. அம்மாள் ஒரு உலக்கையை யெடுத்துக் கொள்வார்கள். நானும் ஓர் சிறிய வுலக்கையை யெடுத்துக்கொள்வேன். கைகளிற் கொப்பளங்கள் தோப்பளிக்க, உடம் பெல்லாம் வியர்வை வியர்த்து ஜலந்தாரை தாரையா யோட, கைகள் அயர்ந்து உடம்பு களைத்துப் போகுமட்டும் நெல்லுக் குத்துவோம். வேலைக்காரிகள் எங்களைத் தடுக்க என்ன பிரயாசப் பட்டபோதிலும் அரைமணி நேரந் துவக்கின வேலையைச் செய்து முடித்துத்தான் வருவோம். என,

சிவகாமி யம்மாள் :— " அம்மா! மகளே! அபிராமி! மனோரஞ்ஜிதஞ் சொன்னவைகள் மெய்தானோ? நீ வங்கிஷபதியின் மகள்; வங்கிஷபதிகளுடைய உடன் பிறப்பு; கண்ணியஸ்தரின் சம்சாரம். மதுரநாயகம் பிள்ளையின் பெண்டாகிய அபிராமியும் இவ்வகையான நீசித வேலைகளையுஞ் செய்யவா? ஆ! இராமா! இராமா! இது அடுக்குமா? மகளே! உனக்கென்ன குறைவிருக்கிறது? பணக் குறைவா? ஆள் மாகாணக் குறைவா? அதிகாரக் குறைவா? உனக் கென்ன இல்லை? நீ " வா " வென்றால் வருவார் பலர் " போ " வென்றால் ஓடுவார் பலர். " செய் " யென்றால், நூறு பேர் " நான் நீ " யென்று எடுத்துக் கொள்வார்.

களே. அப்படியிருக்க நீ யப்பெயர்ப்பட்ட நீச வேலைகளை யொரு அடிமையைப் போல் செய்யலாமா? எழுநூற்றைம்பது ரூபாய்ச் சம்பளம் வாங்கும் ஒரு நியாயாதிபதியின் பெண்மணி நெல்லு குத்து கிறாள் என்று கேள்விப்பட்டால் உலக மென்ன சொல்லும்? இப்படிச் செய்ய உனக் கென்ன சங்கற்பம் வந்துவிட்டது?" ஐயோ! அபிராமி வேலை செய்கிறாள்! என்று நான் கேள்விப்படும் போது எனக்குச் சங்கோசமாயிருக்கிறதே! நீ நாளும் பின்னும் அப்படிச் செய்யவேண்டாம். மதிப்புக் கெட்டுப்போகுமே! நமது கவர்ணை யையும் நாமே குலைத்துக்கொள்ளலாமா? என,"

அபிராமி யம்மாள் :—"சின்னம்மா! இந்த வேலைகளை மாத்திரமா? இன்னும் எவ்வளவோ வேலைகளைச் செய்கிறேன். நான் ஏழைகளைச் சந்திக்கும் போது அவர்கள் வீட்டிலும் நோயாளிகள் மடத்திலும் நான் செய்யும் ஊழியங்களை நீங்கள் பார்ப்பீர்களானால் என்ன சொல்ல மாட்டீர்கள்? யாரேனும் சரி; எவ்வேலையைச் செய்த போதிலுங் குறை யென்ன? நான் பணிப்பெண்களோடு வீட்டுப்பணிகளைச் செய்வதனாலும், நெல்லு குத்துவதனாலும் இன்னும் எதைச் செய்வதனாலும் என் பெருமையும் கவர்ணையும் போய் விடுமா? ஒரு போது மில்லை. அம்மா! நான் நாடோறும் வேலை செய்யப் பல முகாந்திரங்களுண்டு.

மூந்த, வேலை செய்வது எந்தச் சிருஷ்டிக்கு மியல்பு. ஜீவராசிகளில் அவயவங்களைப் படைத்த ஒவ்வொரு ஜெந்துவும் வேலை செய்வதே விசேஷம். நானாவித விலங்குகளையும் பாருங்கள். மிருகேந்திரனான சிங்க முதல் மண்ணில் உதிக்குங் கடைசி அணுப் பூச்சி வரையில் எல்லாம் இடைவிடா முயற்சியினாலேயே ஜீவிக்கின்றன. மிருக இராஜா வாகிய சிங்க மேனும் பிரயாசை யின்றிச் சாப்பிடுகின்றதா? இல்லை, அதுவு நேர மறிந்து இரை தேடிப் பிழைக்கின்றது. அப்படி யிருக்க மனிதரிற் பெரும்பாலர் கஷ்டப்பட்டு வேலைசெய்து உயிர்வாழ, வேறு சிலர் வேலையின்றி வீணராய் ஜீவிப்பானேன்? எதுக்காக சுவாமி நமக்கு அவயங்களைக் கொடுத்தார்? எதுக்காகக் கரங்களைக் கொடுத்தார்? கண்களைக் கொடுத்தார்? செவிகளைக் கொடுத்தார்? வாய் நாசிகளைக்கொடுத்தார்? கால்களைக் கொடுத்தார்? உடலை முழுதுங் கொடுத்தார்? நாம் அவைகளைக் கிரமமாய் உபயோகிக்கும்படி கொடுத்தார். கண்கள் பார்க்கின்றன; செவிகள் கேட்கின்றன; நாசியின் இரந்தரங்கள் சுவாசிக்கின்றன;

வாய் பேசுகின்றது; கால்கள் நடக்கின்றன. அப்படி யிருக்கக் கைகளேன் வேலைசெய்யத் தகாது? உடம்பேன் கஷ்டப்படக்கூடாது? மானிடதேகத்திற் சில வுறுப்புகள் வேலை செய்ய, மற்றவைகள் சோம்பேறிகளா யிருக்கலாமா? அது தகாதே! நம்மைச் சுற்றிக் கொண்டிருக்கும் ஏழைகளும் வறிஞருங் கூலியாட்களும் வேலை செய்ய தனவான்களாகிய நாம் சும்மா விருப்பது வாசியா? சுவாமி தன் சம்பத்துக்களிற் பலருக்குக் குறைபண்ணின போதிலும் அவயவுங்களில் யாருக்குங் குறைசெய்ய வில்லையே. ஏழைகளுக்கும் தனவான்களுக்கும் ஒரு கண்ட சீராய் எல்லா உறுப்புகளையுஞ் சரியாய்க் கொடுத்திருக்கிறார். ஆதலால் ஏழைகளைப் போலவே ஸ்ரீமான்களும் வேலை செய்ய வேண்டும். ஆதலால் நான் தனவதியாயிருந்த போதிலுஞ் சிருஷ்டி யென்கிற முறையில் வேலைசெய்யக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனது கொண்டு எவ்வளவு இழிந்த வேலைகளைச் செய்தபோதிலும் எனது வம்சப் பெருமையுங் குறையாது; கவர்ணதையும் போகாது.

இரண்டாவது ஒவ்வொருவனுந் தன் சொந்த பிரயோஜனத்தை முன்னிட்டுத் தன் சரீர சுகத்தைப்பற்றி வேலை செய்யவேண்டும். மனிதருக் கிருக்கிறது, எண் சாணுடம்பு. இந்த எட்டுச்சாணுடம்பில் எத்தனை மூட்டுகள்! எத்தனை நரம்புகள்! எத்தனை யிரத்தத் தாரைகள்! எத்தனை சரீர பின்னங்கள்! மூட்டுகள் மடங்கி நிமிரவேண்டுமா? கண்டிப்பாய் வேலை செய்யவேண்டும். நரம்புகள் தளர வேண்டுமா? கஷ்டப்பட வேண்டும். இருதயத்தி னின்று இரத்தம் புறப்பட்டுத் தாரைகள் வழியோடித் திரும்பத் தன்னிடம் வந்து சேரவேண்டுமாகில் நடக்கவேண்டும்; அசைய வேண்டும்; நானா வித வேலைகள் செய்ய வேண்டும். சரீரத்தி லிருக்கும் மாம்சம், நிணம் முதலியவைகள் கெடாம லிருக்க வேண்டுமா? கஷ்ட வேலைகளைச் செய்ய வேண்டும். நாம் கண்டிப்பாய் வேலை செய்யும் போது மயிர்க்கால் வழியாய் அர் நீரெல்லாம் வியர்வை மயமாய் வெளிப்பட்டுப் போகிறது. நீர் வெளிப்படவே இரத்தஞ் சுயமாகிறது. சுத்தியான இரத்தம் உடலாதி யந்தமுந் தடையின்றி யோடிப்பாய்கிறது. பாயவே, சரீர முழுவதுஞ் சுகத்தை யடைகிறது. அப்போது கால்நோ யில்லை. தலைநோ யில்லை. வயிற்றுநோ யில்லை. கண்ணோய், காதுநோய், மார்புநோய், எந்த நோயுங் கிடையாது. அப்போது சகல அவயவங்களும் ஒப்பிட்டாற்போலத் தத்தம் வேலையைப் பகற் காலத்தில் செய்கின்றன. இராக்

காலத்தில் ஒற்றுமையின் பேரில் எல்லாம் ஒருங்கே விளைப்பாறு கின்றன. இத்தகைய சரீரத்திற் புண், அசடு, கசடு, யாதொன்றுங் கிடையாது. இந்தச் சொக்கச் சரீரம் எப்படியிருக்கும்? பெருத்துப் பருத்து அளவை மிஞ்சிய பூதம்போ லிருக்குமா? அல்லது பார்க்கச் சகிக்காத எலும்புந் தோலுமான தேவாங்கை யொக்குமா? இல்லை யில்லை. கண்கள் நிறைந்த சுத்தவடிவமா யிருக்கும். இத்தகைய சரீரத்தைக் கண்ட சாவு நோவும் புலியைக் கண்ட பூனையாம். இந்தச் சரீரத்தில் சகல வித சுந்தர சோபனங் களுங் குடிகொண்டிருக்கும். இதனால் தனக்கும் பிறருக்கும் எவ்வளவோ பிரயோஜனம்! இப்பேர்ப்பட்ட நல்ல சடலம் படைத்தவனை யாருந் தேடுவார்கள். இவன் எல்லோருக்கும் பிரயோசனப்படுவான். இவன் சன்னியாசம் பண்ணுவானானால்? சுவாமிக்கும் தனக்கும் பிறருக்கும் நன்றாயுழைப்பான். கல்யாணம் பண்ணுவானானால்? காலங் கிரமந் தப்பிப்போனாலும் போகலாம், அவனுக்குப் புத்திர சந்தானந் தப்பவே தப்பாது. அவன் வீடு நிறைய பிள்ளைகளிருப்பார்கள். அவர்களை நன்றாய்ப் பராமரிப்பான்; நல்ல தகப்பனாயிருப்பான். தன் ஜீவியகாலத்தில் அநேக பெரிதான காரியங்களைச் செய்வான், சொக்கச் சரீரத்தால் வருஞ் சுக செல்வங்களைச் சொல்லவேண்டுமானால் நாளாகும்; வாரமாகும்; மாசங்களாகும் வருஷமாகும்...என்னையும் எனது அத்தான்மார்களையும் எனது தங்கை குணமணியையும் பாருங்கள்! எனிவ்வளவு கட்டுவரிசையா யிருக்கின்றோம்? எங்கள் தாய் தந்தையர் எங்களுக்குச் செய்வித்த இடைவிடாத சரீரப் பயிற்சி முயற்சிகளினா லிப்படி யிருக்கின்றோம். எங்கள் சரீரத்தின் மீது பீரங்கி போட்டடித்தாலும் விழுவோமா? நான் பெண்பிள்ளைதான். ஆயினும் இரண்டு மூன்று ஆண்பிள்ளைகள் கூடினாலும் என்னை நின்ற விடத்தைவிட்டுப் பெயர்க்க மாட்டார்கள். எனது தங்கை இராஜகுணமணி யிரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் ஆறு பேர் திருடர்களைக் கையை மடித்துக் கொண்டு குத்திக் கீழே தள்ளிவிட்டாள். எனது தந்தையர் அவளுக்குச் சிறுவந்தொட்டுச் செய்து வைத்த பயிற்சி பலனில்லாவிடில் அந்த ஆபத்து நேரத்தில் தப்பிப் பிழைத் திருப்பாளா? ஆதலால்......என,

சந்திரசேகரம்பிள்ளை :— "மகளே! சற்று உனது உபந்நியாசத்தை நிறுத்தி யெனது அருமை புத்திரி குணமணியின் வீரச் செய்கையைச் சொல்," என,

அபிராமியம்மாள் :— "எனது தந்தையருஞ் சகோதரருஞ் சோமனபுரத்தில் தாசில்தாரா யிருக்கும் என் மூத்த தமயனார் வீட்டுக்குப் போயிருந்தார்கள். அப்போது எனது தாயாரும் என் றங்கை குணமணியுஞ் சில வேலைக்காரரும் வீட்டி லிருந்தார்கள். அத்தருவாயில் திருடர்கள் வந்து வீட்டிற் பிரவேசித்து குணமணி யறையில் நுழைந்து ஓர் இருப்புப் பெட்டியைத் தூக்க முயன்று ஏதோ சந்தடி செய்துவிட்டார்கள். உடனே எனது தங்கை விழித்துக்கொண்டாள்" என்று சொல்லித் தன் பிறப்பை நோக்கி:— "குணமணி! நீ மேற்கூறிய சம்பவத்தில் அகப்பட்டவ ளாதலால் என்னைவிடத் தெளிவாய்ச் சொல்வாய். ஆனதைப்பற்றி நீயே சொல்." என,

குணமணியம்மாள் :— "திருடர் நகை, நாணயம், ரொக்க முதலியவை யிருந்த ஓர் இருப்புப் பெட்டியைத் தூக்கித் தாளாமற் கீழே விட்டார்கள். விடவே யொரு சத்த முண்டாயிற்று. நான் திடுக்கிட்டு வாரிச் சுருட்டி யெழுந்து ஒரு நொடியில் உடுத்திக் கொண்டு விளக்குக் கொளுத்தினேன். வெளிச்சத்தைக் கண்ட கள்ளரில் இருவர் ஓடிவந்து என்னைப் பலமாய்ப் பிடித்துக்கொண்டு என் வயிரக் கம்மல்களைக் கழற்ற என் காதுகளைத் தடவினார்கள். நான் சடுதியிற் சாவதானமாய்க் கையை மடித்துக்கொண்டு என் சத்துவ மெல்லாங் கூட்டி யொவ்வொருவன் பொட்டில் ஒவ்வொரு குத்துக் குத்தினேன். தக்ஷணமே யிருவரும் :— "அடே! யப்பா! போனேன்" என்று கீழே விழுந்து உதைத்துக்கொண்டார்கள்.

மூலை முடக்குகளில் எதை யேதையோ தேடிக்கொண்டிருந்த இன்னும் இருவர் ஓடிவந்து என்னைப் பிடிக்கத் தேடிக் கைகளை நீட்டினார்கள். நான் இடது கையால் அவைகளைத் தட்டிவிட்டு மடித்த வலது கையால் ஒருவன் மூக்காந்தண்டிற் குத்தினேன். அவன் கர கர வென்று சுற்றிக் கீழே விழுந்து மூக்காலும் வாயாலும் இரத்தந் தள்ள விலுக்கு விலுக்கென்று உதைத்துக்கொண்டான். மற்றையவனை விலாவிற் குத்தினேன் அவனுங் கீழே விழுந்து பதைத்துத் துடித்தான். உடனே கதவை விரைவாய்த் தள்ளினேன். தாட்பாள் தானே போட்டுக்கொண்டது. அதைத் திறவுகோலின்றித் திறக்க முடியாது. நால்வர் உதைத்துக்கொண்டு தரையிற் கிடக்கக்கண்ட மீதி யிருவரும் பயந்து கெடிதாக்கித் துரிதமாயோடி யோடிக் கதவை யசைத்துப் பார்த்தார்கள். அதனைத் திறக்

கத் திசைபறியாமற் கீழே குனிந்து கதவை மூட்டிக் தூக்கினார்கள். நான் தாமதமின்றிப் பின்னால் ஓடி யொருவன் புட்டத்தில் உதைத்தேன் அவன் "அம்மம்" என்று தலையை நட்டுக்கொண்டான். கடைசியானை யெட்டித் தொண்டையைப் பிடித்து நெரித்தேன். அவன் கண்களிரண்டும் பிதுங்கிப் போக :— "உயிர் பிச்சை கொடுந் தாயே!" என்று பற்களைக் காட்டிக் கெஞ்சினான்.

அதற்குள்ளாக எனது தாயாரும் வேலைக்காரரும் எழுந்தோடிவந்து கதவைத் தட்டினார்கள். நான் கள்ளனை யுள்ளே விட்டு வெளியில்வந்து கதவைச் சார்த்திவிட்டு நடந்த சங்கதியைச்சொல்ல தக்ஷணமே எங்கள் ஊழியர் வெளியி லோடி இடாணுதார்களுக் கறிவித்தார்கள்.

இவர்கள் வந்து கதவைத் திறந்து சோதிக்குங்கால் அடிபட்டுக் கீழே விழுந்த ஐந்துபேரில் உயிர் நிலையில் உதையுண்டவன் மாத்திரம் எழுந்திருக்க முடியாமல் விழுந்த விடத்திலே திணறிக் கொண்டு கிடந்தான். மற்றைய நால்வரும் சற்றேறக்குறைய நல்ல சுவாதீனத்தோடு உட்கார்ந்திருந்தார்கள்,

உளவனில்லாமற் கள்ளன் வாரான். கடைசியாய் என் கையிற் பிடிபட்டவன் எனது அத்தான் மதுரநாயகம்பிள்ளையின் சாரதி. மனோரஞ்ஜிதம் ஒருநாள் ஸ்நானம்பண்ண வேண்டித் தன் தோடுகளைக் கழற்றி யொரு மாடத்தில் வைத்துவிட்டுக் குளிக்கையில் மேற்படி நகைகளைத் திருடினவன். அத்தால் விசாரிக்கப்பட்டு ஆறுமாதந் தண்டனையடைந்தவன்! புட்டத்தில் உதையுண்டவன் எங்கள் பழைய வேலைக்காரன், அவனுடைய கையூரல் நிமித்தம் எனது தந்தையர் அவனைத் துரத்திவிட்டார்கள். எங்கள் வீட்டு அந்தரங்கங்களை யறிந்த இவ்விருவரும் நாலு அயலாரை யழைத்துக்கொண்டு எங்கள் கிரகத்திற் கொள்ளையடிக்க வந்தார்கள். ஆனால் கடவுள் எனக்குச் சார்பாயும் அவர்களுக்கு மாறாயு நின்று விட்டார்.

அவர்கள் ஐவரையும் உரோகசாலையிற் கொண்டுபோய்ப் போட்டார்கள், அவர்களுக்குச் சொஸ்தமானபின்பு எனது அத்தான் ஐந்துபேரை நாலரை, நாலரை வருஷமும், ஒருவனைமட்டும் ஏழு வருஷமுந் தண்டித்துவிட்டார்கள். இதுதான் சின்னாநீ! நடந்த விஷயம் என,

சந்திரசேகரம் பிள்ளை:—"மகளே! உன் விஷயங்களைக் கேட்கக் கேட்க எனக்கு வியப்பாயிருக்கின்றது! இத்தகைய தைரிய சௌரியமும் பலமும் உனக்கெங்கேயிருந்து வந்தன? நீ யிரண்டு வருஷங்களுக்குமுன் பதினெட்டு வயசுப் பெண். ஆறுபேரை யடித்துவிழத் தள்ளுவது சாத்தியமா? நம்பலாமா? கேழ்வரகில் நெய் யொழுகுகிறது என்பாரேல் கேட்பாருக்கு மதி யெங்கே போயிற்று? எனப் பலர் சொல்வார்களே. எல்லோரும் உன் சொற்களை நம்பும்வண்ணஞ் சரியான ஞாயஞ் சொல்" என,

குணமணியம்மாள்:—"ஆஹ்! சரியான ஞாயம் எனது புஜபலமே எனது இளமைமுதல் நான் செய்துவரும் தேகப்பயிற்சி முயற்சிகளே யிதற்குத் தக்க முகாந்தரம். எனது தந்தையார் ஸ்வாமி சவுந்தரநாயகம் பிள்ளையை யறிவீர்களா? அவருடைய குணாதிசய விஷயத்தில் ஏதுங் கேள்விப்பட்டதில்லையா?" என,

சந்திரசேகரம் பிள்ளை:—"அம்மா! பற்பல விஷயங்களைக் கேள்விப்பட்டேன். நான் கேள்விப்பட்ட வண்ணம் பேசுவேனாகில் இங்கிருக்கும் பலருக்கு ஆபாசமுண்டாகும்" என,

குணமணியம்மாள்:—"எனது தகப்பனார் தமது பிள்ளைகளை வெகு கண்டிப்பாய் நடத்தினார் என்றும் நிர்தாக்ஷண்ய தந்தையரென்றும் பிள்ளைகள் மட்டில் நேசபாச மற்றவரென்றுஞ் சொன்னார்களாக்கும்" என,

சந்திரசேகரம் பிள்ளை:—"ஆம் அம்மா! அது தான், தமது பிள்ளைகளை அடிமைகளைப்போல் கொடுமையாய் நடத்தினாரென்றுங் கேள்விப்பட்டேன்" என,

குணமணியம்மாள்:—"ஆஹ்! நீங்கள் சொன்னவைகளை "ஆம்" என்றும் ஒப்புவேன்; "அல்ல" வென்றும் மறுப்பேன். எனது தந்தையரைப்போலக் கண்டிப்பான தகப்பனைக் காண்பதுங் கஷ்டம், அவரைப்போல அன்புள்ள பிதாவைப் பார்ப்பதும் போருமை. அவர் புத்திசாலிகளுக்குஞ் சிரவணருக்கும் மகா சாதுவான செம்மறிப்புருவை. மந்த புத்திகளுக்கும் அநமைதிகளுக்குங் கொடும்புலி. புலி யென்றேன்; எப்போதும் புலியல்ல. சமயோசிதமாய் அப்படி நடப்பார். தமது பிள்ளைகள் மட்டில் அவ்வாறு நடப்பார்,"

ஊர்வாயை மூட வுலைமூடி யுண்டா? நாம் 'அதோ வூர்' என்றால் அது பாழென்பார்கள். எனது ஒப்பு வுவமை யில்லா

அருமைத் தந்தையர் தமது பிள்ளைகள் நன்மைக்காக நடத்திய மேன்பாடசாலையைக் கொடுமை சாலையாய் எண்ணிவிட்டார்கள். என ஒருவாறு கரிப்பாய்ப் பேச,

சந்திரசேகரம் பிள்ளை :— "அம்மா மகளே! நீ கிலேசப் படாதே. உனது தந்தையர் விஷயத்தில் அவரைப் போன்ற நல்ல வள்ள வில்லை அவரை யார் குறைவா யெண்ணினார்கள்? யாரு மில்லையே. அவர் தமது பிள்ளைகள் மட்டில் மாத்திரங் கண்டிப் புடையவ ரென்று தானே சொன்னேன்? வேறென்ன சொன்னேன்? அப்படி யிருக்க நீ யேன் பல பல எண்ணங்களுக் கிடங் கொடுக்கிறாய்? என,

குணமணியம்மாள் :— "ஆறி! எனக்குக் கிலேசமுமில்லை, வீணெண்ணங்களு மில்லை. எனது தந்தையருடைய இடைவிடா முயற்சியினாலேயே நானும் எனது உடன் பிறப்புக்களும் இவ்வாறு மேன்மை யடைந்து சுகம் பெற்றிருக்கிறோம்." என,

சந்திரசேகரம் பிள்ளை :— "இதனை யறியத்தான் நான் அவ்வாறு பேசினேன். உனது தகப்பனார் உன்னையும் உனது சகோதரரையு நடத்திய வகையை அறிய விரும்புகிறேன். அதனை எங்களுக்குச் சற்று விரிவாய்ச் சொல்." என,

குணமணியம்மாள் :— "எனது தந்தையர் எனக்காகவும் எனது சகோதரருக்காகவும் பட்ட பிரயாசை பொருவன் மதிப்பில் உறாது. நன்னெறி விஷயத்திலுங் கல்வி விஷயத்திலும் அவர் எங்களுக்குச் சிறந்த உபாத்தியாயர். இங்கு கல்வியைப் பற்றியும் நன்னெறியைப் பற்றியுஞ் சல்லாபம் நிகழ வில்லை. சரீர க்ஷேமத் தைப்பற்றி சம்பாஷிக்கின்றோம். எங்கள் சரீர விஷயமாய் எங்கள் தந்தையர் எடுத்துக்கொண்ட சிரத்தையையுஞ் சிரமத்தையுஞ் சற்றுக் கவனிப்போம்."

எங்கள் நல்ல தந்தையர் இறந்து கொஞ்ச நாளாயிற்று. அவர் உயிரோடு இருக்குங்கால் தமது புத்திர பௌத்திரருக்கு ஒருநாளேனுஞ் சரீரப்பயிற்சி செய்துவைக்காமலிரார். நானும் எனது தமக்கைமார்களும் எனது தமையன்மார்களும் பள்ளிக்கூடத்தை விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்தவுடனே ஆறி எங்களை எங்கள் மாந்தோப்புக்கு அழைத்துப்போய் ஒருமணி நேரம் விளையாடும்படிச் சங்கற்பித்து நாங்கள் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டிருப்

பார்கள். என் சகோதரர் பந்து, நெடுங்கரந் தண்ணீர்க்கா முதலிய விளையாட்டுகளை யொரு மணி நேரம் வெகு உற்சாகத்தோடு விளையாடி நிறுத்துவார்கள். நானும் எனது சகோதரிகளும் பறந்து பறந்து கும்மி யடிப்போம். அல்லது வியர்த்துக் களைக்கிற வரையில் நொண்டி யடிப்போம். எங்களுக்கு வியர்வை தாரை தாரையாய் ஓடும்பொது எனது தந்தையர் விளையாட்டை நிறுத்தி யுடனே யெங்களை வீட்டுக்கு அழைத்து வந்து நாங்கள் ஆடைகளை மாற்றிக் கொள்ளும்படி செய்வார்கள். ஒவ்வோர் தினத்திற் பூஞ் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவோம். சில சமயங்களில் அரை மணி நேரம் நெல் குத்துவோம். அப்போதும் வெகுவாய் களைத்துப்போவோம்.

எனது தாயார் வீட்டு வேலைகளையு நன்றாய்க் கற்பித்து வைத்தார்கள். எனக்கும் என் சகோதரிகளுக்கும் ஒரு வேலை தெரியும் ஒரு வேலை தெரியாது என்பதல்ல. எவ்வித காய் கறிகளையும் பக்குவம் பண்ணுவோம். வேலைக்காரிகள் இருப்பது தருவுக்குத் தான். அவர்கள் ஒரு மடங்கு செய்தால் நாங்கள் மும்மடங்கு செய்வோம். யாரேனும் விருந்தாடிகள் வந்தால் நானும் எனது தமக்கையர்களும் பணிப் பெண்களைப் போல் வேலை செய்வதைக் கண்டு ஆச்சரியப்படுவார்கள். அப்போது என் பிதா மாதாக்கள் அவர்களுடைய கேள்விகளுக்குத் தக்க மறுமொழிகள் சொல்வார்கள்.

நாங்கள் வயதில் வளர வளர ஆடு விளையாட்டை நிறுத்திவிட்டார்கள். அதற்குப் பதிலாகச் சாயந்தரஞ் சாயந்தரம் உலாத்த எங்களை யழைத்துப் போவார்கள். சாயரட்சை ஐந்து மணிக்கெல்லாம் இரண்டு குதிரை வண்டிகள் பூட்டி எங்கள் வாசற்படியில் வந்துநிற்கும். நாங்கள் பாடசாலையினின்று வந்த கையோடு பெண்பிள்ளைகள் ஒரு வண்டியிலும் ஆண்பிள்ளைகள் ஒரு வண்டியிலும் ஏறிக்கொள்வோம். ஊரைத் தாண்டின வுடனே வண்டிகளை நிறுத்திவிட்டுக் கீழே யிறங்கி யிரண்டு மூன்று கல் தூரம் மா வேகம் மனோவேகமாய்ப் போய்த் திரும்பிவந்து வியர்வையைத் துடைத்து வேறு ஆடைகளை யணிந்துகொண்டு வண்டியி லேறிக்கொள்வோம். ஏழே கால் அல்லது ஏழரைமணிக்கு வீடுவந்து சேர்ந்து பசியோடும் ஆவலோடுஞ் சாப்பிடுவோம். பிற்பாடு நல்ல விஷயங்களிற் சற்று காலங்கழித்து நித்திரைசெய்யப் போவோம். ஓ! என்ன சுகமான தூக்கம்! இம்மாதிரியாய் எப்போதுந் தவறாமற் செய்து

கொண்டே வருவோம். இந்த அநுதின சரீரப் பயிற்சிகளை ஞாய
மின்றி யொரு நாளும் நாங்கள் விட்டவர்க ளல்ல. நாங்கள் விட
நினைத்தாலும் ஆஜி யொரு நாளும் எங்களைச் சும்மா விட்டவர்க
ளல்ல! ஓ! என்ன நல்ல தகப்பன்! அவர்களுடைய இடை விடா
முயற்சியினாற்றான் நாங்கள் இவ்வளவு சுகமா யிருக்கிறோம். எங்
கள் தாய் தந்தையர் எப்படி நடத்தினார்களோ அப்படியே எங்கள்
மாமாவும் அத்தையுந் தங்கள் பிள்ளைகளை நடத்தினார்கள். இதனா
லேயே எங்க ளிரு குடும்பங்களிலும் எல்லாருங் குறைவற்ற க்ஷே
மத்தோடிருக்கிறோம். எங்களில் உரோகிகள் கிடையார்கள். சின்
னாஜி! என்னைப்பாருங்கள்! நான் எவ்வளவு கட்டுவரிசையா யிருக்
கிறேன். எனது ஆச்சியைப் பாருங்கள். என்ன பலிஷ்ட சரீரம்!
அதனை நோயணுகுமா? என்னத்தினால் இந்த உடல் இவ்வளவு
நேர்மையாய்த் திரண்டது? இடைவிடா முயற்சியினால். "முயற்சி
யுடையார் இகழ்ச்சி யடையார்". நானும் என் றமக்கை அபிராமி
யம்மாளுந் தலை வலித்தது கால் வலித்தது என்று ஒரு நாளும்
படுத் தறியோம். ஏன்? சிறுவ முதல் இந்நாள் வரையில் எங்கள்
உடம்பிலுள்ள அசடுகளை ஓயாப் பயிற்சியாற் களைந்துகொண்டே
வந்தோம். அதனால் நோயை யொழித்தோம்; க்ஷேமமாயிருக்கி
றோம். நாங்கள் பிறருக்குப் பாரமல்ல. எங்களுக்குச் சகல சம்பத்
துக்களுஞ் சம்பிரமமா யிருப்பினும் நாங்கள் இராஜ செல்விகளாயி
னும் எவ் வேலையும் இழிவா யெண்ணாமற் செய்து வந்தமையால்
இப்போது க்ஷேமத்தை யடைந்திருக்கிறோம்.

நமது அடுத்த வீட்டுச் சுந்தரம்மாளைப் பாருங்கள். எவ்வாறு
இருக்கிறாள்? ஓதி பெருத்துத் தூணாமோ? அவளை வண்டி
யிழுக்காது! சிவிகையில் ஏறுவாளாகில் போயிகளுக்கு நாக்குவாங்
கிப்போம்! அப்படி யிருந்து பிரயோசனமென்ன? அவள் புருஷ
னுக்குப் பெருஞ் சுமை. தாய் தந்தையருக்கு அதிலுஞ் சுமை;
அவளுக் கெந்நேரமுங் கால் நோய்; தலை நோய்; வயிற்று நோய்;
கை கால் அசதி; பல வீனம்; பல்நோய்; எல்லா / நோயும். அவள்
படுத்த படுக்கையே! ஆ! மரியாயி மகனே! அவளுக்குப் பிள்ளை
யென்பது கனவில் முதலா யில்லை. அவளால் என்ன வுபயோகம்?
பெற்ற தாய் தந்தையருக்கு வந்த சுக மென்ன? புருஷனுக்குக்
கிடைத்த சுக மென்ன? தனக்குத் தான் என்ன மண்ணாங்கட்டி
சுகம்? எனிப்படி? சரீரப்பயிற்சி யில்லாமையால், வேலையை

யலக்ஷியம் பண்ணினதால், சிருஷ்டி கர்த்தாவின் சங்கற்பத்துக்கும் கோரிக்கைக்கும் பொதுச் சட்டத்திற்கும் விரோதமாய் நடந்தமையாற் பரிகரிக்க வொண்ணாக் கேடுகள் வந்து சம்பவித்தன.

அவளுடைய ஓரகத்தி அன்னமணியைப் பாருங்கள். இவள் கொஞ்சகாலம் ஒழுங்காய் நடந்தவள். துவக்கத்தில் நடையுமுடையுமாயிருந்தாள். அதனால் ஆண்டவர் ஏதோ சில புத்திர பிட்சைகளைக் கொடுத்துவிட்டார். வரவர குந்த ஆரம்பித்தாள். வைரத்தில் நரை பாய்ந்துவிட்டது! அன்னமணியின் நல்ல சரீரத்திற் சோம்பு என்கிற நரைவிழத் துவக்கிவிட்டது! பொழுது முப்பதுங் குந்தினவள் குந்தினவளே! சந்திக்கரைப் பிள்ளையாரே! போட்ட பாயைச் சுருட்ட அவளுக்கு மனசுங் கிடையாது; சக்தியுங் கிடையாது. உடல் உக்கி மக்கி மண்ணாய்ப் போயிற்று; உப்பி யுரலாயிற்று; தொம்பையாயிற்று; தூக்கிவிடத் தொண்ணூறுபேர் வேண்டுவதாயிற்று! அம்மாள் பாயிலேயே! ஐயா அடுப்பங்கரையிலேயே! ஏனிவ்வாறு? தேகப்பயிற்சி யில்லாமையால். இவ்வாறின்றி தான் தனக்குந் தன்னைச்சுற்றி யிருப்பவர்களுக்குஞ் சுகத்தை மூட்ட வேண்டுமாகில் வேலை செய்யவேண்டும். எவ்வித வேலைகளையும் இகழலாகாது. வண்ணான், அம்பட்டன் தொழில்களையு நிந்திக்கலாகாது. அவர்களில்லாவிடில் நாம் என்னசெய்வோம்? நாமே யவைகளைச் செய்துகொள்வோம். நாம் செய்யக்கூடிய வேலை யெவ்வாறு நிசிதமாகும்? ஒருபோதுமில்லையே! அப்படியிருக்க நாம் எந்த வேலையைச் செய்தாலுமென்ன? ஆதலால் நாம் எவ்வேலையுஞ் செய்வது வாசி, ஆதலால்:—"ஆ! என்ன ஐயா! இப்படிப் பேசுகிறீர்கள்? எங்கள் குடும்பத்தில் வேலை செய்கிறது வழக்கமில்லை" என்பது பெருந் தப்பு, ஆதலால் இந்த மூட சித்தாந்தத்தை யாரேனு முன்னுக்குக் கொண்டு வருவார்களா? அவர்கள்வீட்டில் நோய் இடைவிடாது குடிகொண்டிருக்கும்; புத்திரசந்தானம் ஒழிந்துபோம்; குல நாசத்துக்கு வழியாம். ஆனதுகொண்டு எப்போதுந் தேகப்பயிற்சி செய்யுங்கள். நான் அறுவரை வென்றதற்கும், க்ஷேமத்தோடிருந்து உங்கள் நடுவில் உல்லாசமாய்ப் பேசுவதற்கும் எனது இடைவிடா தேகப்பயிற்சியே காரணம். சுகத்தையடையவும் மற்றவர்களுக்குச் சுகத்தைத் தரவுமே யெனது ஆச்சியும் மனோரஞ்சிதமும் எவ்வித வேலையுஞ் செய்கின்றார்கள். ஆகையால் சின்னஞ்சீ! நீங்கள் ஆச்சரியப்படவேண்டாம்; நீங்களும் இவ்

வாறு செய்வீர்களாகில் நல்ல சுகத்தை யடைவீர்கள். உங்களுக்
கும் பிறருக்கும் பிரயோஜனப்படுவீர்கள். நெடுநாள் நீடித்து வாழ்
வீர்கள். தேகப்பயிற்சி செய்யு நலங்கள் கொஞ்சமல்ல. ஆனால்......
என,

மதுரநாயகம் பிள்ளை:—"குணமணி! நிறுத்து. போதும். இனி
யெப்போதும் இவ்வாறே சாதாரணத் தமிழ் பேசு" என,

சந்திரசேகரம் பிள்ளை:—"அம்மா: அபிராமி! நீ யாரம்பித்த
உபந்யாசத்தை முடி" என,

அபிராமியம்மாள் :—" ஆஹா! மூன்றுவது நாம் எப்போதும்
மேன்மக்களைப் பின்செல்ல வேண்டும். பெரியோர் நல்வழி நடப்
பாரேல் நாம் அவர்களுடைய சுவடுகளைப் பின்பற்றுவது வாசி.
நாம் மகான்களுடைய சரித்திரங்களை வாசிக்கும்போது மகா வியப்
பை யடைகிறோம். பற்பல சிறந்த வங்கிஷபதிகளும், இராஜ செல்
விகளும், இராஜதேவிகளும் நானாவித வேலைகளையுஞ் செய்தார்கள்.
அவர்கள் எத்தொழிலையும் இகழ்ந்தவர்களல்ல."

ப்ரஷியா, ஜெர்மானியா, இத்தாலியா முதலிய மகத்தான
இராஜ்யங்களைக் கட்டி யாண்ட ஷார்லுமான் என்னுஞ் சக்கரவர்த்
தியை நீங்கள் நன்றாய் அறிவீர்கள். அவரது பெண்டீரும் பெண்
மக்களும் படிக்கு நேரம் வாசிக்கு நேரஞ் ஜெபிக்கு நேரங் கோவி
லுக்குப் போகு நேரம் போக மீதி நேரத்தை வீணிற் கழிக்கார்கள்.
அவர்கள் நாடோறுங் கொட்டை நூற்பார்கள்; பாவோடுவார்கள்;
தறிப் பூட்டி நெய்வார்கள் ; கச்சைகள் பின்னுவார்கள் ; நேர்த்தி
யான பீதாம்பரங்களைத் தொடுப்பார்கள்; மேற்சோடுகளைப்பின்னப்
பார்கள். இன்னும் எண்ணிலடங்கா வேலைகளைச் செய்வார்கள்—
அந்த மகா சக்கரவர்த்தி தமது பெண்டீர் பிள்ளைகள் நெய்த
உடைகளை யல்லாது வேறெதையுந் தரித்துக்கொள்ளார். கேட்டீர்
களா? தந்தையே! உலகத்தை யாளும் அரசருக்கும், அவர்களு
டைய தேவிகளுக்கும், புத்திரிகளுக்கும் என்ன குறை யிருக்கிறது?
பணக்குறையா ? ஆட்குறையா ? அடிமைக்குறையா ? ஜனக்கு
றையா ? பின்னும் என்ன குறை? ஒரு குறையுமில்லை. அவ்வாறா
யினும் ஏனப்படிச் செய்தார்கள்? அந்த இராஜ புத்திரிகள் சிருஷ்
டியின் தன்மையையும் வேலையின் பெருமையையும் அதனால் தங்க
ளுக்கு வருஞ் சுகத்தையுஞ் சரிவரக் கண்டுணர்ந்தமையால் அவ்
வாறு செய்தார்கள். ஆனால் கைத்தொழிலை யலக்ஷியம் பண்ணும்
நமது இந்த நாட்டார் என்ன சொல்வார்கள்? ஓ! நெசவு கைக்கோ

ளனின் கிசித தொழிலாயிற்றே! இராஜ செல்விகள் அத்தொழிலை
யெவ்வாறு செய்தார்கள் ? எப்படி செய்யக்கூடும் ? வெட்கம் !
பேரவமானம் ! என்பார்கள். இந் நெருக்கிடைப் புத்தியினாலேயே
நமது இந்தியர் மேனாட்டாரிடம் எல்லா விஷயங்களிலும் பிட்
சை வாங்குகின்றார்கள் ! கடைசியாய் அவர்களுக்கு அடிமைக
ளானார்கள்.

இன்னும் அனேக பிரபுக்களுடைய பெண்மணி பிள்ளைகளும்
இவ்வாறே பரிவர்த்தித்தார்கள். எனது உபந்நியாசத்திற்கு இன்
னும் உப பலம் வேண்டுமாகில் கோடாது கோடி யுதாரணங்களைக்
கொண்டுவரலாம். ஒங்காரியாவின் சக்கரவர்த்தியாகிய அந்திரேயா
வின் செல்வப் புதல்வி ஸ்ரீமதி எலிசாவை திதரிசனமா யெடுத்துக்
கொள்ளலாம். ஸ்ரீமதி மத்தில்தா, குளோத்தில்தா, குனேகோந்தா
முதலிய இராஜ பத்தினிகளை யெடுத்துக்கொள்ளலாம். கைத்தொ
ழில், வீட்டுப்பணி, உடல் உழைப்பு முதலானவைகளில் நமக்கு
முன்னோடிகளாய் நின்ற இராஜவல்லவர்கள் எத்தனையோபேர் !
எல்லாவற்றையுஞ் சொல்லவேண்டுமாகில் எனது உபந்நியாசம்
பெரும் பிரபந்தமாய் முடியும். இதனை நிறுத்தி யின்னும் கொஞ்ச
மேலேறுவோம்.

சற்றுநேரம் நமது புத்திவிமானத்திலேறி ஆகாசமார்க்கமாய்ப்
பிரயாணஞ்செய்து நசரேத்தூரில் இறங்குவோம். அதோ அங்கி
ருக்கும் அந்தச் சிறு வீட்டில் நுழைவோம்" என,

மதுரநாயகம் பிள்ளை :—"நுழைந்துவிட்டோம் ; அபிராமி !
என்ன ஆச்சரியம்! அப்பையன் யார்? அப்பிராட்டியார் யார்? அப்
பெருமான் யார்? அவர்கள் முகத்தினின்று ஒளிரும் பிரகாசம்
என் கண்களைப் பறிக்கின்றனவே! பையன் சிறுவனாயினும் அவனு
டைய தேகமாட்சியும் உருபலாவண்ணியமும் என் மதிப்பிலடங்க
வில்லையே! அவனது கண்களின் மெல்லிய நயனம் என்னிருதயத்
தை ஊடுருவிப் பாய்ந்துவிட்டது ! என் மனத்தை யவன் வசியமாக்
கிக்கொண்டான். அவன் முகத்தில் வடிந்தோடுஞ் சுந்தர சோப
னத்தைக் கண்டு மயங்கித் தியங்கிச் சொக்கிச் சோபித்து நிற்கின்
றேன். ஆயினும் என்னை யிவ்வாறு தடுமாறச்செய்யும் அச்சிறுவன்
என்ன [illegible]இருக்கின்றான் ? பழைய உடைகளைத் தரித்துக்
கொண்டு இரம்பம்பிடித்து மரத்துண்டுகளை யறுக்கிறான் ! அந்த
மட்டில்லாமாட்சி, தாட்சியின் விபரீதம் எனக்கு விளங்கவில்லையே !

கண்களைக் கொள்ளை கொள்ளுஞ் சுத்த வடிவமாகிற அவ்வம்மனை யென்ன வென்பேன்? முன்னொருக்கால் ஸ்ரீமத் தியோனிஸியர் சொன்னதுபோல் நானுஞ் சொல்வேன். நான் அநுஷ்டிக்குங் கத்தோலிக்குச் சத்திய மறைக்கும் அதன் போதனைகளுக்கும் விசுவாசத்திற்கும் விரோதமாகாவிடில் அத்திவ்ய பிராட்டியாரைத் தெய்வம் என்பேன். அவளது சரணாரவிந்தங்களிற் சத கோடி விசை சாஷ்டாங்கம் சமர்ப்பிப்பேன். அவளது திவ்ய முகாரவிந்தத்தினின்று வடிந்தோடும் அழகை வர்ணிக்க எனக்கு வாக்குண்டா? வகையுண்டா? வல்லமை யுண்டா? ஓ! சொல்ல வொண்ணாச் சவுந்தரியமே! கருத வொண்ணா மாட்சிமே! உமது மகன் தேவனாகில் நீரேன் தேவியா யிருக்கத் தகாது? அபிராமி! நமது இரக்ஷக பெருமானின் அன்னையாகிய அந்த அம்மனின் பெருமை யெவ்வளவாயினும் அவள் என் பஞ்சை நூற்கிறாள்? என் வீட்டுப் பணிவிடைகளைச் செய்கிறாள்? அவளிடத்தி லேன் இந்த ஏழைக்கோலம்? அவள் இராஜ செல்வி யல்லவா? தாவீது ராஜனின் வம்சமல்லவா? அப்படி யிருக்க, ஏனிப்படி.....? என,

அபிராமியம்மாள்:— "அத்தான்! உங்களுக்கு அநேகாநேக வந்தனங்கள்! எனது வாய்வளக் குறைவையும், வாக்குவளக் குறைவையுங் கண்டல்லவா நீங்கள் எனக்குச் சகாயவாய் வந்தீர்கள்? நமது இரக்ஷகர் பேரிலும் நமது தாயாகிய மரியம்மன் பேரிலும் இவ்வளவு சாதுரியமாய்ப் பேச என்னா லாகுமோ? ஆகாதே! இதனாலேயே சுவாமி யகஸ்மாத்தாய் நீங்கள் நினையாத நேரத்தில் எனது வாக்கை வாங்கி யுங்கள் வாயிற் புகட்டிவிட்டார். இதற்காக வேண்டி யுங்களுக்கு நன்றியறிந்திருக்கிறேன்.

இது நிற்க நமது இயேசு பெருமானும் மரியம்மனும் வேலை செய்தார்கள் என்றீர்கள். அவர்களைப் போலவே மானிட ஜென்மமெடுத்த நாமும் வேலை செய்ய வேண்டும் என்பதே யெனது தாற்பரியம்; என் முக்கிய நோக்கம். திரி லோகங்களைத் தாங்கிக்கொண்டிருக்குஞ் சர்வ சக்தியுள்ள தேவ குமாரன் வேலை செய்வாராகில், அவரது மாதாவாகிய மரியம்மன் சகலவித பணிவிடைகளையுஞ் செய்வாளாகில் நாம் எந்த வேலைகளைச் செய்தாலு மென்ன? நாம் தோட்டித் தொழிலைப் புரிந்தாலுங் குறை வருமா? நாம் நாசவலுக்குச் சகாயமாய் நின்றாலும் இழிவு நேருமா? இல்லை யில்லை, சகலவித சௌக்கியப் பெருமைகளைப் பூஷணமாகப் பூண்ட கடவுளே

நமக்கு முன்னோடியாய் நிற்கும்போது நாம் அவளை யடி யடியாய்ப்
பின் செல்வது வாசி. ஆதலால் தந்தையே! நானும் மனோரஞ்ஜித
மும் நெல்லு குத்தினது இழிவல்ல. வீட்டுப் பணிகளைச் செய்த
தாங் குறையல்ல. நோயாளிகள் மடத்திற்குப் போய் அவர்களைச்
சந்தித்து அவர்கள் கால்களைக் கழுவி முத்த மிடுவதுந் தாழ்வல்ல.
இன்னு மெதைச் செய்தாலுங் குற்ற மல்ல. ஆதலாற் சிவகாமி
சின்னம்மா!—“ஆ! எங்கள் குடும்பத்தில் வேலை செய்வது வழ
க்க மில்லை.” என்று சொல்லும் எனது தமக்கை (எல்லோரும்)
யோர் பதர். வேலையை யிழிவா யெண்ணுஞ் சகோதரியோர் பதர்.
வங்கிஷபதிகள் வேலை செய்யக் கண்டு இடறற்படுஞ் சகோதரி
யொரு மதியீனர். மேன்மக்கள் வேலை செய்யப் பார்த்து நாணும்
பெண் ஒரு கசடி. எந்தொழிலையும் அலக்ஷியம்பண்ணு மங்கை
யோ ரசடி.”

வேலை செய்வதோவெனில் இடைவிடாது கிரியா சொரூபியா
யிருக்குங் கடவுளைக்கண்டு பாவித்தாற் போலாகும். தேவன் ஒரு
நாளும் வேலை யின்றி யில்லை. அவர் நாடோறும் வேலைசெயது
கொண்டே யிருக்கிறார். ஆதலால் நாமும் நாடோறும் வேலை செய்
வது கடமை. ஆதலால் நாடோறும் இன்னும் அதிக மதிகமாய்
வேலை செய்வது கடமை. ஆதலால் தினந்தோறும் மனோரஞ்ஜிதத்
திற்கு இன்னும் அதிக மதிகமாய் வேலை கற்பிப்பேன். இதனால்
அவள் தனக்கும் பிறருக்கும் இகத்திலும் பரத்திலுஞ் சுகத்தை
வருத்துவாள்.” என்று சொல்லி முடித்தார்கள்.

அப்போது எனது தந்தையார் எனது மாதாவை நோக்கி:—
“சிவகாமி, அபிராமியின் உபந்நியாசத்தைக் கேட்டையா? நீ யதற்
கென்ன சொல்லுகிறாய்? நீ யதனை மறுக்க அல்லது ஆக்ஷேபிக்க
நினைக்கிறையா?” என,

சிவகாமியம்மாள்:—“அபிராமி யெடுத் துரைத்துவிட்ட
நியாயங்களுக்குப் பிரதி நியாயங்களுண்டா? இல்லை அவைகளை
மறுக்க வெற்படுவேனாகில் அவலப் பெண்ணாவேன். அதற்கு விரோ
தமாய் இனி நாடோறும் அவளைக் கண்டுபாவிப்பதே யென் றாற்
பரியம்.” என்று,

அவருக்கு விடையளித்து மனோரஞ்ஜிதத்தை நோக்கி:—
“அம்மா! உன் றாயார் உன்னை வளர்த்துவரும் வகையைத் தொட
ர்ந்து சொல்.” என,

மனோரஞ்சிதம்:— "தினந்தோறுங் கோவிலுக்குப் போய் வந்து கையோடு விடுவாயல்களைப் பெருக்குவேன்; உண் கலங்களைத் துலக்குவேன். பிற்பாடு நானும் பற்றுலக்கிக் கை கா லலம்பிக் கொண்டு சாப்பாட்டறைக்கும் போவேன். அங்கு அம்மாள் எனக்குச் சாதம் படைப்பார்கள். நான் சீக்கிரஞ் சாப்பிட்டு எழுந்து படபட வென்று பாடங்களைப் படித்துக் கணக்கு முதலியவைகளைத் தயார் செய்துகொண்டு உங்கள் வீட்டுக்குவந்து உங்கள் மகள் விஜயவல்லியைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துப்போவேன். வழியிற் போகும்போது அம்மாள் இராக்காலங்களில் எனக்குச் சொல்லுஞ் சிறிய சிறிய சரித்திரங்களை விஜயவல்லிக்குச் சொல்லிக் கொண்டே போவேன். நடோறும் அம்மாள் எனக்குச் சொல்லும் புத்திகளையும் ஆலோசனைகளையும் விஜயவல்லிக்குச் சொல்லி யவளும் என்னைப் போல் நடக்கும்படி செய்வேன். விஜயவல்லி வராத போது நான் தனியாய் ஜெபம் பண்ணிக்கொண்டு போவேன். இதுவெல்லாம் அம்மாள் எனக்கு ஓதிவைத்த புத்தி; சொன்ன கட்டளை; காட்டின மாதிரிகை."

பள்ளிக்கூடத்தில் ஒருவரோடும் பேசேன். என் தோழிகளைச் சீண்டேன். உபாத்தியாயருடைய கட்டளைக்கு விரோதமாய் ஏதையுஞ் செய்யமாட்டேன். அவர் பாடங்களுக்கு அர்த்தஞ் சொல்லும்போது கவனமாய்க் கேட்டுக்கொண்டிருப்பேன். அவர் திரும்பக் கேட்கும் போது பிழை யில்லாமல் சரியாய்ச் சொல்வேன். பெரும்பாலும் உபாத்தியாயர் என்னைப் பாடங் கேட்கிறதில்லை. மற்றவர்கள் பாடம் ஒப்பித்த பிற்பாடு என்னை யர்த்தங் கேட்பார்.

பள்ளிக்கூடத்துக்குப் போகும் போதும் அதை விட்டுத் திரும்பி வரும்போதுங் கோவிலுக்குப் போய் ஐந்து நிமிஷ நேரஞ் ஜெபம் பண்ணிக்கொள்ள வேண்டும். இது அம்மாளுடைய கண்டிப்பான கட்டளை. சாயந்தரம் வீட்டுக்குத் திரும்பி வரும் போது எப்பொழுதுந் தவறாமற் ஜெபமாலை ஜெபித்துக்கொண்டு வருவேன். அப்போது விஜயவல்லி யென்னோடு பேசினாலும் நான் பேசமாட்டேன். இதுவும் என் தாயாருடைய கட்டளை தான்.

நான் வீட்டுக்குத் திரும்பி வந்தவுடன் என் புஸ்தகங்களை மேசைமேல் வைத்துவிட்டு அம்மாளிடம் போவேன். அவர்கள் உடனே விளையாடப் போக எனக்கு உத்தரவு கொடுப்பார்கள். ஆனால் நன்றாய் விளையாடி வரவேண்டும்; உடம்பில் வியர்வை

தாரை தாரையாய் வடிகிற வரையில் விளையாட வேண்டும். வியர்வை வியர்த்து ஒழுகும் உடம்பைக் கொண்டுவந்து காட்டா விட்டால் என்னை முழங்காலில் வைத்துவிடுவார்கள். இதற்காக நானும் என் தோழிகளும் பறந்து பறந்து கும்மி யடிப்போம்; நொண்டியடிப் போம்; நாலு மூலை விளையாட்டைச் சுற்றிச்சுற்றி விளையாடுவோம். நான் இப்படி நாடோறும், கை, கால் அசர விளையாடி வியர்த்து விருவிருத்து வேசாறிக் குளத்திற் குளித்த பெண்ணைப்போல் அம்மாளிடம் ஓடுவேன். அவர்கள் உடனே யென் தலையைத் துவட்டி யுடம்பைத் துடைத்துவிட்டு உடுத்திக்கொள்ள எனக்கு வேறே பாவாடையுந் தாவணியுங் கொடுப்பார்கள். நாடோறும் ஒருதடவை பாவாடை, இரவிக்கை, தாவணிகளைக் கட்டாயம் மாற்றித்தானாக வேண்டும்

நான் விளையாடும் போது எப்போதாகிலுந் தப்பித் தவறி யென் தோழிகளோடு சண்டைபோட்டு அடிபட்டு அம்மாளிடம் அழுதுகொண்டு வந்தால் எனக்குச் சலுகை கிடைக்காது. சலுகைக்கு பதிலாய் என்னை முழங்காலில் வைப்பார்கள். இது தான் எனக்குச் சலுகை." என,

சந்திரசேகரம்பிள்ளை :— "சிவகாமி! கேட்டையா? அபிராமி யல்லவா மெய்யான தாய்? அவள் அநேக மூடத் தாய்மார்களைப் போலவா? ஐயோ! தங்கள் பிள்ளைகள் கொண்டுவருங் கடுகளவு சண்டையை மலையளவு போராய் முடிக்கின்றார்களே! சிறிய பிள்ளைகள் கொண்டுவரும் அற்பச் சண்டைகளைத் தோளின் மேலிற் போட்டுக்கொண்டு கச்சேறி யேறினவர்கள் எத்தனையோ தாய் தந்தையர்கள்! பிள்ளைகள் சண்டையைப் பெற்றோர் கவனித்தமையால் விளைந்த விளைகளுக்கும் பொல்லாங்குகளுக்குங் கணக் குண்டா? எண்ணுண்டா? சிவகாமி! நீ பிள்ளைகளை வளர்க்கிற விதத்தையும் அபிராமி பிள்ளைகளை வளர்க்கிற வகையையுஞ் சற்று ஒத்திட்டுப்பார். நமது குமஸ்தா ஜம்புலிங்கம் பிள்ளையின் பெண் டாட்டி யறிவா யல்லவா?" என,

சிவகாமியம்மாள் :— "ஆ. இராமா! இராமா! போதும்! போதும்! பிள்ளை சண்டைக்காக பொழுது முப்பதும் போர்க்களத்தை விடாளே. அவள் பேச்சை விட்டோட்டுங்கள். இனி யெனது அருமை மகள் அபிராமி யெனக்கு என்றும் உபாத்தியாயினியாயிருப்பாள். அவளைப்போல் நடப்பதே யெனக்குப் பெருந்

சலாக்கியம். மனோரஞ்சிதம் நமது பிள்ளைகள் எல்லோருக்குஞ் சிறந்த அண்ணவியா யிருப்பாள். அவர்களுக்கு இது யார் செய்த பூஜா பலனே தெரியாது என்று மனோரஞ்ஜிதத்தை வியந்துகொண்டார்கள்.

அத்தரவாயில் நான் எனக்குள்ளே:—"என் றுயார் முதலாய் மனோரஞ்ஜிதத்தை யிவ்வாறு கண்ணியப்படுத்த வேண்டுமா? இதனால் எனது துன்பம் மிகவில்லையா?" என்று ஆலோசித்துக் கொண்டிருக்கும்போது.

---

## 14-ம் அத்தியாயம்.

மனோரஞ்ஜிதத்தின் பாலசிக்ஷையின் தொடர்ச்சி. பெற்றோரும் உற்றோரும் பிள்ளைகளுக்குச் செய்யும் நன்மை. பிள்ளைகள் தங்கள் தாய் தந்தையரை அந்நியோந்நியமாய் நேசிக்க வேண்டும். பிதுர் பக்திக்குச் சரித்திர உதாரணங்கள், அபிராமியம்மாளுடைய சம்பாஷணை. அதிமதுர சம்பாஷணை.

மதுரநாயகம் பிள்ளை :— "உனது குழந்தைப் பருவத்தில் உன் றுய் உனக்கு படிப்பித்த படிப்பினைகளைச் சற்றேறக்குறையச் சொன்னய். அது போதும். மீதியை நாளடைவில் உனக்குச் சமயம் வரும்போது சொல்வாய். இப்போது நேற்றைய இராத்திரி அபிராமி யுனக்குப் போதித்ததைச் சொல்" என,

மனோரஞ்ஜிதம் என் றுயாரை நோக்கி :— "அத்தையம்மா! நேற்றைய இராத்திரி அம்மாள் நேர்த்தியான இரண்டு மூன்று சரித்திரங்களைச் சொல்லிப் பற்பல நல்ல வழிகளைக் காட்டினர்கள். எனக்குத் தெய்வ பக்தியையும், வீட்டுப் பணிவிடைகளையும் படிப்பிக்கும்படி ஆஜி அம்மாளுக்குச் சொல்லியிருந்தார்கள். ஆனல் ஓர் முக்கியமான சங்கதியை மறந்துவிட்டார்கள். அது நாம் தாய் தகப்பன் மட்டிற் காட்டவேண்டிய பக்ஷந்தான்" என,

இந்த விஷயத்தைப்பற்றிப் பேச எண்ணி எனது தாயார் :— 'உனது தகப்பனர் நீ பெற்றோர் மட்டில் செலுத்தவேண்டிய அன்பின் கடமையை யுனக்குச் சொல்ல மறந்துவிட்டிருப்பார்கள். அல்லது வேறு சமயங்களிற் போதிப்பார்கள். அப்படி யிருந்தாலும் நான் அவ்விஷயத்தில் ஏதேனுஞ் சொல்லுவது நலமென்று நினைக்கிறேன். ஆதலால் நான் சொல்வதை நன்றாய்க் கவனி. சகலத்

தையும் விட சுவாமியை நேசிப்பது உன் முதற் கடமை. அதன்
பின் நீ உன் றாய் தந்தையர் இன்னும் மற்றுள்ள சகலரையும் விட
உன்னையே அதிகமாய் நேசிக்கவேண்டும். உனக்குப் பிற்பாடு உன்
பிதா மாதாக்களை நேசிக்கவேண்டும். சாதாரண ஜனங்களை நேசிப்
பதைவிட தாய் தந்தையரை அதிகமாய்ச் சிநேகிக்கவேண்டும்.
ஏன் நேசிக்கவேண்டும் ? ஏனெனிற் சுவாமி..." என,

குணமணியம்மாள் :— "அக்கா ! சற்று நிறுத்துங்கள். இவ்
விஷயத்தில் நீங்கள் பேசுவதை விட நான் பேசுவது உசிதம். மகள்
தன்னை நேசிக்கும்படி தாய் சொல்வாளாகில் அது சிலருக்கு விப
ரீதமாய்த் தோற்றும். நான் மாதா பிதாக்கள் மட்டில் இளைஞர்
செலுத்தவேண்டிய அன்பின் விஷயமாக ஏதேனுஞ் சிற் சில வார்
த்தைகள் சொல்லிவிடுகிறேன். நீங்கள் பிற்பாடு உதாரணமாகச்
சரித்திரங்களைச் சொல்லுங்கள்" என்று உத்தரவு கேட்க,

என்றாயார் :— "குணமணி ! நீ யப்படியே செய். அதற்கு
ஆக்ஷேபமில்லை. நாம் கொண்ட கருத்துங் காரியமு நிறைவேறு
வதே பிரதானம். நீ பேசு" என்று உத்தரவு கொடுத்தார்கள்.

அப்போது குணமணியம்மாள் என்னைப் பார்த்து :— 'மனோ
ரஞ்ஜிதம் ! நீயுன் றாயைப்போ லிருக்கிறாய். வயசோடு உன்னை
"நீ அபிராமியா ?" என்று கேட்பார்கள். உன் குணத்திற்கும்
அத்தாளுடைய குணத்திற்கும் எள்ளளவு வித்தியாசமுங் கிடை
யாது. உன் சத்தமும் உனது தந்தையின் சத்தமும் ஒன்றே. நீ யந்
தப் புறத்தி னின்று பேசுவாயோ? வீட்டுக்குள்ளே மதுரநாயகம்
பிள்ளையா ? என்று கேட்பார்கள். உன் முக அழகு, குண அழகு,
சரீர அழகு முதலிய சகல சவுந்தரியங்களையும் உன் தாய் தந்
தைய ரிடத்தி னின்று பெற்றுக்கொண்டாய். உன் சரீர முழுவ
தும் அவர்களுடைய சரீரம். நீயுன் றாயின் கெர்ப்பத்திற் சிறிய
சிசுவாய்த் தரித்த நாள் முதற்கொண்டு நீ பிறக்கும் வரையில்
அவர்கள் பிடித்த பத்தியங்கள் எத்தனை ? நீ சுகமாய்ப் பிறக்கவே
ண்டி யவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிக ளெத்தனை நீ பிறக்கும்
போது அவர்கள் பட்ட பிரசவவேதனைகளை யார் அறிவார்கள்? கட
வுள் ஒருவரே சரியாய் அறிவார். நீ பிறந்த பின்னர் உன்னை யெவ்
வளவு அன்போடு தழுவி மார்போடணைத்து யுனக்கு அமுதூட்டி
னார்கள் ! நீ பால் குடிக்குங் காலத்தில் உனக்கு வந்த பற்பல வியாதி

களைப் பரிகரிக்க தானே கசப்பான மருந்துகளை யுண்டு, தன் சரீரங் கெட உன்சரீரத்தைக் காப்பாற்றினார்கள். உன் குழந்தைப்பருவத்தில் உன் உடலிற் றோன்றிய சிரங்கு, புண், இரணங்களையும் எவ்வளவு அன்போடு சகித்துக்கொண்டார்கள். உன்னுடைய அனுதின கஷ்ட, நஷ்ட, மலஜலாதிகளை யெவ்வளவு பொறுமையோடு சகித்துக் கொண்டார்கள். உன் பல வியாதிகளைத் தீர்க்க எத்தனை பரிகாரங்கள்! எத்தனை வைத்தியங்கள்! எத்தனை முறைகள்! எவ்வளவு பண விரையம்! எவ்வளவு தூக்க வினைக்கேடு! எத்தனை யிராக்காலங்கள் உன்றாயார் பொட்டெனக் கண்ணை மூடாமற் காலங் கழித்தார்கள்! நீ வியாதியால் வருந்திக் கஷ்டப்பட்டபோதும், நீ யாபத்திலிருந்தபோதும் அவர்கள் உதிர்த்த கண்ணீ ரெவ்வளவு! பட்ட உபாதைகளும் வருத்தங்களும் எண்ணி லடங்குமா? பிள்ளையின் அருமையையும் அதற்காகப் பட்ட சிரமங்களையும் பெற்றவள் ஒருத்தியே அறிவாள்.

மனோரஞ்ஜிதம்! பேசவேண்டுமாகில் இவ்விஷயமாக இன்னும் எவ்வளவோ பேசலாம். உனது உற்பத்தி முதல் இது நாள் வரையில் உன் றாய் தந்தையர் உனக்குச் செய்த உபகாரங்களெல்லாம் உனக்கு நன்றாய்த் தெரியும். அவர்கள் செய்த நன்மைகளுக்கு உன் நெஞ்சி லீரமிருக்கவேண்டும். அல்லது நன்றி மறவாதிருக்கவேண்டும். தாய்தந்தையருக்கு எவ்விதமாய்த் தன் நன்றியைக் காட்டுகிறது? அவர்களை உண்மையாய் நேசிப்போமாகில் அவர்களுக்கு நமது நன்றியைக் காட்டுவோம். அதற்காக வேண்டி நீ யுன்றாய் தந்தையரை யெவ்விஷயங்களிலும் பின்செல்லவேண்டுமென்றேன். நான் சொல்வதை நன்றாய்க் கவனி. நாடோடியாய்த் தாயைப்போலப் பிள்ளை யென்பார்கள். உன் பிதா மாதாக்கள் நல்லவர்கள்; யோக்கியர்; புத்திசாலிகள்; புண்யவான்கள்; பொறுமையுள்ளவர்கள்; ஒரே வார்த்தையிற் சொல்லுகிறேன்: அவர்கள் சமஸ்த புண்ய தர்ப்பணம். அதாவது எல்லாப் புண்யங்களும் அவர்களிடத்தில் வாசம்பண்ணுகின்றன; குடியிருக்கின்றன. நீ யெல்லா விஷயங்களிலும் அவர்களுக்கு அமைந்து அவர்களைப்போல் நடப்பாயானால் நீ மெய்யாகவே யவர்களை நேசிக்கிறாய். இதற்குத்தான் பிதுர் பக்தி யென்று பெயர்—அதாவது தாய் தந்தையரை நேசித்தல். மனோரஞ்சிதம்! உன்றாய் தந்தையாரை நேசித்து அவர்களைப் போல் நடப்பதாய் எனக்கு உறுதி வாக்குக் கொடுக்கிறாயா? என,

நான் :—"சின்னம்மா! என்ன இப்படிக் கேட்கின்றீர்களே? அதில் இன்னுஞ் சந்தேகமா? அம்மாள் எப்போதும் நடந்துபோகும் அடிமேலேயே நானும் நடந்துபோக ஆசைப்படுகிறேன். அவர்கள் எப்படி யுட்காருவார்களோ அப்படியே நானும் உட்காருகிறேன். ஆனி யெப்போதும் இடது கையை மார்பின்பேரில் வைத்துக்கொண்டே பேசுவார்கள். அதுபோலவே நான் என்றோழிகளிடத்திற் பேசுகிறேன். எனது ஏழாம் பிராயமுதல் ஆனியும் அம்மாளும் எதேதைச் செய்கிறார்களோ அதையெல்லாம் நானுங் கூடச்செய்கிறேன். அதுதான் எனக்குப் பிரியம்" என,

குணமணியம்மாள் :—"ஆ! மகளே! பெரிய அலேக்சாந்தரின் சினேகனான கிளித்தூஸ் என்பவனைப்போல் நடக்கிறாயா?" என்று சொல்லிக்கொண்டு என்னை வாரியெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டார்கள்.

நான் அப்போது எனது சிறிய தாயாரைப் பார்த்து :—"அம்மா! கிளித்தூஸ் என்ன செய்தான்? அதை யெனக்குச் சொல்லுங்கள்" என,

குணமணியம்மாள் :—"மகளே! பூர்வம் மிக்கப் பேர்போன அலேக்சாந்தர் என்னுஞ் சக்கரவர்த்தி மசேதோனியா நாட்டை விட்டுப் புறப்பட்டு ஆசியாக் கண்டத்தில் நுழைந்து அநேக மகா நாடுகளைக்கட்டி யாண்டுகொண்டிருந்தான். அவனுக்குக் கிளித்தூஸ் என்னுஞ் சிநேக னொருவன் இருந்தான். இருவரும் இணைபிரியாப் பிராண சிநேகர். அலேக்சாந்தர் எதேதைச் செய்வானோ அதையெல்லாங் கிளித்தூசுஞ் செய்வான். இடதுபாகங் கொஞ்சந் தலையைச் சாய்த்து நடப்பது அலேக்சாந்தருக்கு வழக்கம். கிளித்தூசும் அலேக்சாந்தரைப்போலவே யிடதுபக்கங் கொஞ்சந் தலையை சாய்த்துக்கொண்டு நடப்பான்.

மனோரஞ்ஜிதம்! கிளித்தூஸ் எனிப்படி நடந்தான்? தன் சக்கரவர்த்தியின்பேரில் வைத்த அன்பினால் அல்லவா அவ்வாறு செய்தான்? உனக்கு மெய்யாகவே யுன்றாய் தந்தையர் மட்டிற் பக்ஷமிருக்குமாகில் நீ யவர்களைப்போல் நடந்துகொள். அவர்களைப் போலக் கால்களைக் கூட்டியும், அவர்கள் அடிமேல் அடிவைத்தும் அல்லது மார்பிற் கை வைத்துமா? இல்லை இல்லை. அதுவல்ல என் கருத்து; அதுவல்ல என் நோக்கம். நீ யுன் பிதா மாதாக்

ளுடைய தர்மப் படிப்பினைகளைக் காதாரக் கேட்டுக் கண்ணாரப் பார்த்து அவர்களைப் பின்சென்று நடப்பதே யென் ளுற்பரியம். அவர்கள் அனுசரிக்குஞ் சகல புண்யங்களையு நீயு மனுசரிப்பதே யென் கருத்து. எனது கோரிக்கையும் அபிலாஷையு நிறைறவேற...' என,

எனது தாயார் :— "குணமணி! நேரமாயிற்று, நித்திரைக் கெடத் தகாது. நிறுத்து; போதும். நான் சில சிறிய சரித்திரங் களைச் சொல்லிவிட்ட பின்னர் கண்வளரப் போவது நன்று" என்று சொல்லி யென்னை நோக்கி :—"மனோரஞ்ஜிதம்! குணமணி யுனக்குச் சொன்ன புத்திமதிகளுக்குச் சில வுதாரணங்களை யெடுத் துக்காட்டப் போகிறேன்" என,

நான் ;— "அம்மா! சொல்லுங்கள். பெரிய, பெரிய சரித் திரங்களாய்ச் சொல்லுங்கள். எனக்குச் சரித்திரந்தான் பிரியம்" என,

எனது தாயார் :— "மகளே! உரோமை நகரில் ஸ்ரீமதி பவு லாள் என்று ஒரு அம்மை யிருந்தாள். அவள் பெரும் புண்யவதி. அப்புண்யவதிக்கு எவஸ்தோஷியென்று ஒரு குமாரத்தியிருந்தாள். இச் சிறு நங்கை தன் றுயை யெவ்வளவு நேசித்தாளென்று சரி யாய்ச் சொல்லி முடியாது. அவள் தன் றுயாரை யொரு நாளும் ஒரு நிமிஷமேனும் விட்டுப் பிரியாள். தாய் எதைச் செய்வாளோ மகள் அதைச் செய்வாள். தாய் கோவிலுக்குப் போவாளா? மக ளும் அங்கிருப்பாள். தாய் ஜெபம் பண்ணினால் குமாரத்தியுங்கூட ஜெபம் பண்ணுவாள். மாதா முழங்காலிலிருந்தால் மகளுங்கூட முழங்காலிலிருப்பாள். தாய் சாப்பிட்டால் குமாரத்திகூடச் சாப் பிடுவாள். அன்னை சாப்பிடாவிட்டால் புதல்வி யொருகாலும் சாப் பிடமாட்டாள். ஸ்ரீமதி பவுலாள் நித்திரைசெய்யப்போவாளா? எவஸ்தோஷியுந் தாயோடுகூடத் தூங்குவாள். அன்னை யெப் போது எழுந்திருப்பாளோ அப்போது புதல்வியுங்கூட எழுந்தி ருப்பாள். எல்லா விஷயங்களிலுந் தன் மாதாவை யடியடியாய்ப் பின்செல்வாள்.

"ஒரு நாள் பவுலாள் தன் குமாரத்தியை நோக்கி :—"எவஸ் தோஷி! உனக்குத் தக்க வயசு வந்துவிட்டது. நீ கல்யாணம்பண் ணிக்கொள். நான் உனக்குச் செய்யவேண்டிய சீர் வரிசைகளையெல்

லாம் ஒழுங்காய்ச் செய்து உன்னை நல்ல அந்தஸ்தில் வைத்து நான் உலகத்தைத் துறந்து மடம் புகுந்து துறவற நோன்பு நோற்கப் போகிறேன்" என,

எவஸ்தோஷி:— "அன்னையே! நீங்கள் இவ்வாறு பேச வேண்டாம். நீங்கள் துன்பப்படும் இடத்தில் நானுந் துன்பப்படுவேன்! நீங்கள் சுகம்பெறும் இடத்தில் நானுஞ் சுகமடைவேன். நீங்கள் இளைப்பாறும் இடத்தில் நானும் இளைப்பாறுவேன். நீங்கள் எங்கே யுயிர்வாழ்வீர்களோ அங்கேயே நானும் உயிர் வாழ்வேன்: நீங்கள் சாகு மிடத்தில் நானுஞ் சாவேன். எங்கும் இன்பமுந் துன்பமும் எனக்கும் உங்களுக்கும் பொதுவாயிருக்கட்டும்" என்று சொல்லிக் கல்யாணத்தைத் துறந்து தன் ருயோடு மடத்திற் புகுந்தாள்.

அங்கு சாகுந்தனையும் எவஸ்தோஷி தனது அன்னைக்கு எவ்வளவு அன்போடும் ஆவலோடும் சிரவணத்தோடுஞ் சகலவித பணிவிடைகளைச் செய்துவந்தாளென்று சொல்ல என்றால் வலாது. கடைசிவரையில் அவள் தன் மாதாவின் சுக துக்கங்களுக்குப் பங்காளியா யிருந்து அவள் மரித்த இடத்திலேயே யிவளும் மரித்து, அவள் அடைந்த பரம பதவிக்கு இவளும் பாகஸ்தியானாள்" என்று முடித்தார்கள்.

அப்போது யெனது சிறியதாயார்:— "மனோரஞ்ஜிதம் கேட்டையா? ஸ்ரீமதி எவஸ்தோஷியை மறவாதே. அவள் நல்ல பிள்ளைகளுக்கு உத்தம வழிகாட்டி. அவள் தன் மாதா மட்டில் காட்டின நிகரற்ற பக்ஷத்தை யோசித்துப் பார். நீயும் அவளைப்போல் உன் ருய் தந்தையர் மட்டில் நடந்துகொள்" என,

நான்:— "ஓ! எவஸ்தோஷி யென்ன நல்ல பெண்! அவளிங்கே யிருப்பாளாகில் எத்தனைவிசை யவளைக் கட்டிமுத்த மிடுவேன்! இப்போது நான் சற்றேறக்குறைய அவளைப்போல் நடக்கிறேன். முழுதும் அவளைப்போல் நடக்க யினி யெப்பொழுதும் பிரயாசைப்படுவேன். எவஸ்தோஷி யெனக்கு நல்ல தோழி. அவளை நான் காணுவிட்டாலும் அவள் என் முன்பாக நடந்துபோவதாகப் பாவித்துக்கொண்டு அவளைப் பின்செல்வேன்" என,

எனது தாயார் :—“மகளே! இன்னுமோர் சிறிய சரித்திரம் சொல்லுகிறேன் கேள்! ஆசியாவில் அர்மேனியா நாட்டிற் செபஸ்து என்னும் பட்டினத்தில் உத்தம தாய்தந்தையரிடத்தில் மக்கிரினாள் என்ற பெயர்கொண்ட பெண்மணி பிறந்தாள். அவளுக்குச் சுசிகர தேகமுஞ் சுந்தர முகமும் பற்பல சுகுணங்களும் உத்தம பூஷணங்களாய் அமைந்தன. அவள் தனது அன்னைமட்டில் வைத்த அன்பும் பக்ஷமும் அளவைக் கடந்தவை. அவள் தன் றாயாரை யொரு நிமிஷமேனும் பாராமல் மறைந்திருக்க மனம்வராது. அவளை யிடைவிடாது கண்காணித்துக்கொண்டே யிருப்பாள். தன் மாதாவுக்குச் சகல பணிவிடைகளையுந் தானே செய்வாள். வீட்டு ஊழியர் அவளுக்கு யாதொன்றுஞ் செய்ய விடாள். தன்றாயாருக்கு வேலைக்காரர் செய்யும் பணிவிடைகளை யொப்பாள், நம்பவும் ஏற்றுக்கொள்ளவு மாட்டாள். எப்போதுந் தன் கையாலேயே யெல்லா வூழியங்களையும் அவளுக்குச் செய்யவேண்டும். தன் மாதாவுக்கு உகந்த பணிவிடைகளிற் பிறர்கைப்பட மனம் ஒப்பாள். தானே தன் கைப்பட ஆகாரங்களைத் தயார்செய்து அவளுக்குத் தன் கையாற் சாதம் படைப்பாள். இவ்வாறு தன் அன்னை சாகும் வரையிற் சகல ஊழியங்களையுந் தானே செய்துகொண்டுவந்தாள்” என்று முடிக்க,

குணமணியம்மாள் :—‘மனோஞ்ஜிதம்! மக்கிரினாள் தன்றாயார் மட்டில் எவ்வளவு கனிகரமும் பக்ஷமும் அக்கறையுமுள்ள பிள்ளை யென்று பார். காளவாயின் மேற்கிளம்பி யேறும் புகைத்தூண்கள் நமக்கு என்ன சொல்லுகின்றன? காளவாயிற் கடோராக்கினி மூண்டு உள்ளே கொந்தளிக்கின்றதென்று கூறுகின்றன. அவ்வாறே மக்கிரினாளுடைய ஒப்பற்ற அக்கறை நிறைந்த வெளிப்படை பணிவிடைகள் உள்ளத்திற் பற்றி யெரியும் அணைகடந்த சிநேகத்தை வெளியாக்குகின்றன” என,

நான் அம்மாளை நோக்கி:— “அம்மா! நானும் மக்கிரினாளைப்போல செய்யட்டுமா? எவ்வளவு நல்ல குணம்! மக்கிரினாளும் இனிமேல் எனக்கு அக்காள். அவள் நடந்தது போலவே நானும் நடப்பேன்” என,

குணமணியம்மா :— “ஆமாம், மகளே! நீ யப்படியே செய்வாய். ஆனால் இராவும் பகலும் இடைவிடாது உன் றாயாரிட

பிருந்து சகல பணிவிடைகளையுஞ் செய்வது இப்போது உன்னு
லாகாத காரியம். நீ நாடோறும் பாடசாலைக்குப் போகவேண்டி
யிருக்கிறது. படிக்கிறது முக்கியம். நீ வயசோடு மக்கிரினைப்
போல் நடந்துகொள்ளலாம்; பயப்படாதே" என,

நான் :—" ஆம் சின்னம்மா! அது மெய்யே! எத்தனையோ சம
யங்களில் அம்மாளோடு இருக்கவேண்டியிருக்கிறது. அப்போது
நான் அவர்களுக்குப் பிரியமானவைகளைச் செய்யக்கூடாதா" என,

குணமணியம்மாள் :—" அப்படியே செய்! அதிற் றடை
யில்லை. இதைத்தான் நான் உன்னிடத்திற் கேட்கிறேன்" என,

நான் என் றாயாரைப்பார்த்து :—" அம்மா! நீங்கள் நல்ல
சரித்திரங்களைச் சொன்னீர்கள், அதனால் நான் உங்களை நன்றாய்
நேசிக்கவேண்டுமென்றும் உங்கள் இஷ்டம்போல் நடக்கவேண்டு
மென்றும் உங்களுக்கு எல்லாப் பணிவிடைகளையுஞ் செய்யவேண்டு
மென்றுஞ் சரியாய் அறிந்துகொண்டேன். நான் ஆன்றியையும் உங்க
ளைப்போலவே தானே சிநேகிக்கவேண்டும்? அதற்கு உதாரணங்க
ளில்லையா?" என.

எனது தாயார் :— " மகளே! அதிற் சந்தேகமா? இன்
னும் என்னைவிட அவர்களை அதிகமாய் நேசிக்கவேண்டும். கை
கால்களைவிட சிரசை யதிகமாய் நேசிக்கவேண்டும்; பூஜிக்கவேண்
டும்; உபாசிக்கவேண்டும். தலைக்குவேண்டிய உபசாரணைகளை யெல்
லாஞ் செய்துவிட்டுத்தான், பிற்பாடு மற்றுள்ள அவயவங்களுக்குச்
செய்யவேண்டிய வரிசைகளைச் செய்யவேண்டும். உனது தந்தை
யர் எனக்குச் சிரசு. நான் அவர்களுக்குக் கை கால் முதலிய அவய
வங்கள். ஆகையால் முந்த அவர்களை நேசிக்கவேண்டும்; அவர்க
ளுக்குக் கீழ்ப்படியவேண்டும். அவர்கள் மனதுக்குத் தகுந்தாற்
போல் நடக்கவேண்டும். பிற்பாடு உன் றாய்மட்டிற் செலுத்த
வேண்டிய கடமைகளை நிறைவேற்றவேண்டும்."

நான் மேற்சொன்ன இரண்டு சரித்திரங்களும் மாதாவை மாத்
திரமா நேசிக்க வேண்டுமென்று சொல்லுகின்றன? இல்லை நீ
மோசம் போகிறாய். எவஸ்தோஷியின் தந்தையும் மக்கிரினு
டைய தகப்பனும் அவர்களுடைய குழந்தைப் பருவத்திலேயே
யிறந்துபோய்விட்டார்கள். அதனால் அச் சரித்திரங்களில் அவர்க

ளைப்பற்றிப் பேச்சில்லை. அவர்களுங் கடைசிவரையில் ஜீவித்திருப்பார்களாகிற் சந்தேகமற அப்பெண்மணிகள் தங்கள் தாய்மார்களை விடத் தங்கள் பிதாக்களை யின்னும் எவ்வளவோ அதிகமாய் நேசித்திருப்பார்கள்.

இதுவுமன்றி மகளே! 'தாயையாவது தகப்பனை யாவது உதாரணமாய்க் காட்டினால் அது பிதாவையும் மாதாவையும் நேசிக்க வேண்டுமென்றே அர்த்தமாகும். தாயுந் தகப்பனு மொன்றே. நானும் உனது தகப்பனாரும் ஒரே மாம்சம். அதனாலேயே நீ யொன்றாய்ப் பிறந்தாய். நாங்களிருவரும் வெவ்வேறா யிருக்கும் பக்ஷத்தில் நீ வெவ்வெறாய் விகார பூதமாய்ப் பிறந்திருப்பாய்! நீ நாளைய தினம் போய் நமது நிலைக்கண்ணாடியில் உன்னை யுற்றுப்பார். உன் முகம் என் முகம்போலிருக்கும் ஆயினும் உன் கண்களைப்பார். அவைகள் உனது தந்தையின் தயை நிறைந்த கண்களல்லவா? உனது கிள்ளை மூக்கு உனது தகப்பனார் மூக்கல்லவா? உன் கரங்களை யுன் தந்தையரிடங் நீ திருடிக்கொள்ளவில்லையா? உன் தலைமயிர் என் தலைமயிர்போலிருக்கிறது. உன் பொன்னிறம் உனது பிதாவின் நிறமல்லவா? உன் சரீரத்தை நன்றாய்ச் சோதித்துப் பார். அதில் நானும் உனது தகப்பனாரும் இருக்கிறோம். ஆதலால் நானும் அவர்களும் ஒன்று. ஆதலால் நீ யிருவரையும் நேசிக்கவேண்டும். நீ யென்னை நேசிப்பதைவிட உன் தகப்பனாரை யதிகமாய் நேசிக்கவேண்டும். எண்சா ணுடம்புக்குச் சிரசே பிரதானம் குடும்பத்திற்குக் குடும்பத் தேசமானே முக்கியம், நீ விடிந்து எழுந்தவுடனே முக்கியமாய்ச் சிரசைக் கவனிக்கின்றாய். அவ்வண்ணமே யெப்போதும் உன் தந்தையரைக் கவனிக்கவேண்டும். அவராலேயே நமது வீடு சகல சம்பத்துக்களால் நிறைந்திருக்கிறது. அவர் நிமித்தமே நம்மை யெல்லோரும் பூஜித்து உபாசிக்கின்றார்கள். அவரே நமது சுக செல்வங்களுக்கு மூலம். அவரே நமது பெருமை சலாக்கிய பிரக்கியாதிகளுக்குக் காரணம். அவரில்லா விடில் நமது வீடு எதனை யொக்கும்? விளக் கில்லா வீட்டை யொக்கும். அவருடைய வெளிச்சத்தின் கீழ் நாம் தங்க விக்கிரகங்களாய்த் துலங்குகின்றோம். ஆதலால் மகளே, நீ யவரை உபாசித்து நேசிக்கவேண்டிய கடன் சுமந்திருக்கிறாய் என்று இதனால் நன்றா யறிந்துகொள்."

நீ சற்று முந்தி யாக்ஷேபித்ததனால் உனக்குத் திருப்தியாக வேண்டி யின்னும் இரண்டொரு சரித்திரங்களைச் சொல்லப்போகி

றேன். கவனி: இஸ்பானியா தேசத்தில் தோலேது நகரத்தில் ஒரு தட்டான் இருந்தான். அவன் ஒருக்கால் யாரையோ கொலை செய்துவிட்டதாக நீதியாசன சாலையிற் குற்றஞ் சாட்டப்பட்டான். அவன் வதை செய்ததாக ருஜுவாகாவிடினும், அவனுக்கு விரோதமாய்ப் பலத்த சந்தேகங்கள் ஏற்பட்டன. அவைகளை மறுக்க அவனாற் சாத்தியப்படவில்லை. மரணத் தெண்டனை விதிக்கப்பட்டுத் தீர்ப்பு வாசிக்கப்படும்போது அவனுடைய ஏக குமாரன் நீதிமந்தாத்தின் நடுவிலோடி விழுந்து:

"ஐயா! நியாயாதிபதியே! இந்தத் தீர்ப்பு எனது தந்தைக்கு விரோதமாயல்ல, எனக்கு விரோதமா யிருக்கட்டும்! என்னைப்போல் தாய் தந்தையர் வயிற்றிற் பிறந்த கனவானே! உமது தாய் தந்தையருக்கு விபத்து வந்தால், இடையூறு வந்தால், மரண தண்டனை விதிக்கப்பட்டால் நீர் என்ன விதமாய்ப் பதைக்கமாட்டீர்? துடிக்கமாட்டீர்? நீர் அழ அழ, கண்ணீர் ஆறாய் ஓடாதா? புலம்பிப் பரிதவிக்கமாட்டீரா? ஆ! நியாயாதிபதியே! என்னை யன்போடு பெற்று வளர்த்த என் பிதாவானவர் கழுமரத்திற் றொங்கும்போது நான் என்ன விதமாய்ப் பார்த்துச் சகிப்பேன்! சகியேன்! சகியேன்! எனது தந்தையோடு நானுங் கூட பிராணனை விடுவேன்! ஓர் உயிருக்கு இரண்டு உயிர்கள் சேதமாக வேண்டுமாகில் அவரைத் தூக்கச் சங்கற்பியும். இல்லாவிடில் என்னைத் தூக்கக் கட்டளை பண்ணும்."

என்று தன் தகப்பனைப் பலமாய்த் தழுவிப்பிடித்துக்கொண்டு நீதியஸ்தனைக் கெஞ்சி மன்றாடி மூந்தின தீர்ப்பை யிரத்து செய்வித்துத் தகப்பனை விடுவித்து அவனுக்குப் பதிலாய்க் கழுமரத்தில் ஏற்றப்பட்டுச் செத்தான்." என்றார்கள்,

நான் உடனே:—"அம்மா! அந்தப் பையன் எவ்வளவு கீர்த்தியான பிள்ளை! அவனல்லவா தன் தகப்பனை மெய்யாகவே நேசித்தவன். இப்படித்தான் பிள்ளைகளிருக்கவேண்டும். நான் கூட இப்படித்தான் செய்வேன்." என,

எனது தாயார் திரும்ப:—"மனோரஞ்சிதம்! பிராஞ்சு நாட்டில் எப்பேர்னே யென்கிற பட்டினத் தருகில் ஒரு சிறிய கிராமத்தில் காஜேத்து என்று ஒரு கிராமாதிகாரி யிருந்தான். அக்காலத்தில் பிராஞ்சு தேசத்திற் பெரிதான இராஜகலகமும் வேத

கலகமும் எழுந்து பெரும் புசல்போல் நாடெங்கும் பரவிகோடானு கோடி பொல்லாங்குகளை விளைவித்துக்கொண்டிருந்தன. காஜோத்து இராஜ வைரிகளுடைய கொடிய போதனைகளுக்குங் கொள்கைகளுக்கும் உட்படவில்லை. அவன் அவைகளுக்கு விரோதமாய்ப் பேசத் தலைப்பட்டான். கலாபனைக்காரர் காஜோத்தைப் பிடித்துக் கொண்டு போய்ப் பரீஸ் நகரில் ஓர் சிறையில் அடைத்து வைத்தார்கள்.

சிலதினங்கள் கடந்த பின்னர் அந்த இராஜ வைரிகள் காஜோத்தைக் குத்திக் கொல்லும்படி சில கொலைபாதகரை யனுப்பினார்கள். அவர்கள் சிறைச்சாலையைத் திறந்து உள்ளே பிரவேசிக்கும் போது காஜோத்தோடு கூடச் சிறையிலிருந்த அவனுடைய மகள் எலிஜா ஓடிவந்து கொலைஞர் எதிரில் நின்று தனது நெஞ்சைத் திறந்து காட்டி:—

"ஐயன்மீர்! என்னிருதயத்தைக் குத்தி யூடுருவாமுன் என் தந்தையின் இருதயத்தைத் துளைக்க வறியீர்கள். இங்கு வாருங்கள்: பார்ப்போம்" என்று சொல்லிவிட்டுச் சாகத் தயாராயிருந்தாள். அச்சிறுமியின் வீரியத்தைக் கண்ட கொலைபாதகர் கைகளில் இருந்த பட்டயங்களெல்லாங் கீழே விழுந்துபோக அவர்கள் திகைத்து மயங்கி பிரமித்துச் சற்றுநேரம் நின்றபின்னர் எல்லோரும் ஒரு வாய்ப்பட:—"ஓ! அஞ்சாத சுந்தர சுலோசனை! உன்னை எவன் தொடுகிறவன்? தொட்டவன் எங்கள் வாளுக்கிரையாவான். ஓ! பெண் மணியே! கண்மணியே! உன் வீரியமே வீரியம்! உன் பிதுர் பக்தியே பக்தி. உன் அணைகடந்த அன்பின் வெள்ளப்பெருக்கம் எங்கள் ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் அடியோடு அடித்துக்கொண்டுபோய்விட்டது. நீ, வா, மகளே! வா. சுகத்தை யடைய வா."

என்று கூவி ஆர்ப்பரித்து அவளையும் அவளது தகப்பன் காஜோத்தையுஞ் செந்தூக்காய்த் தூக்கிக்கொண்டு போய் அவனுடைய வீட்டில் விட்டுவிட்டு வந்தார்கள்" என்று முடிக்க,

குணமணியம்மாள்:—"மனோரஞ்சிதம்! எலிஜா உத்தம பெண்ணல்லவா? அவளது பக்தியும் பாசமுங் கொஞ்சமா? அவளுடைய தைரியமும் வீரியமும் யாருக்கு வரும்? அவ்வளவன் போடு உனது தந்தையரை நேசிப்பாயா? என,

நான்:—"சின்னம்மா! ஆஜிக்கு வைசூரி கண்டு வியாதி பலத்து அவர்கள் பேச்சுமூச்சின்றிப் பிரேதம்போற் கிடக்கும்போது நானும் அம்மாளும் பட்ட கிலேசமும் வருத்தமுஞ் சஞ்சலமும் யாருக்குத் தெரியும்? சுவாமியொருவருக்கே தெரியும்! எலிஜா கொலைபாதகரோடு போராடினள். நானும் அம்மாளும் மரணத்தோடு போராடினோம். அவர்களுடைய பிரலாபத்துக்கும் எனது ஓலத்துக்கும் நமது திவ்ய இரக்ஷகர் இரங்கிப் போன உயிரை ஆஜிக்குத் திரும்பக் கொடுத்தார். அவர்கள் செத்துப்போயிருந்தால் நாங்களுங்கூட செத்துப்போயிருப்போம். ஆ! அம்மா! ஆஜியெவ்வளவு நல்லவர்கள்! அவர்களுக்குச் சமமான தகப்பன் உலகத்திலிருப்பார்களா? அவர்கள் முகத்தைப் பார்த்தாலும் பசியடங்கிப் போகுமே. அவர்களுடைய கண்களைச் சற்றுநேரம் உற்றுப்பார்த்துவிட்டு அவர்களை நேசிக்காமலிருக்க முடியுமா? அம்மாளும் நானும் ஆஜி யெப்போது கச்சேரியை விட்டுத்திரும்பி வருவார்களோவென்று ஆவலோடு காத்திருப்போம். யாராகிலும் வீதியில்! மதுரநாயகம்! என்று சொல்லிக் கூப்பிடுவார்களாகில் நான் உடனே:—"அம்மா! ஆஜி வருகிறார்கள். இந்நேரம் வரையில் நாம் சலிப்பாயிருந்தோம். இப்போது நமது சலிப்புத்தீரப்போகிறது. சந்தோஷமாயிருங்கள்."

என்று சொல்லி வெளியிலோடிப் பார்ப்பேன். அப்போது ஆஜி வருவார்களாகில் எங்கள் சந்தோஷத்திற்கு மட்டில்லை. அவர்கள் வராவிட்டால் ஒரு நிமிஷநேரம் ஒரு மணிநேரமபோலிருக்கும். அவர்கள் நாள் முழுவதும் கச்சேரியைவிட்டு வாராதபோது ஒரு நாள் எங்களுக்கு ஒரு வருஷம்போற் றோன்றும்' அவர்கள் ஐந்து மணிவரையில் வாராதகாலத்தில் நான்:—அம்மா ஆஜி யின்னும் வரவில்லையே என்ன, அம்மா செய்கிறது? இராத்திரிக்குக்கூட வாராவிட்டால் என்ன செய்வோம்? இராவெல்லாந் தூங்க நம்மாலே முடியுமா? குதிரைக்கார ஆதிநாராயணனைக் கூப்பிட்டு வண்டிகட்டச் சொல்லுங்கள் அம்மா! கச்சேரிக்குப்போய் ஆஜியைப் பார்த்துவிட்டு வந்துவிடுவோம்." என்று மகா வாதனை படுவேன்.

அப்போது அம்மாள்:—"மகளே! நீ கிலேசப்படாதே. ஆறு மணிக்குள்ளாக ஆஜி வந்து விடுவார்கள். நமது சலிப்பு சஞ்

சலமெல்லாஞ் சூரியனைக்கண்ட இருள் நீங்குவது போற் பறந் தோடிப்போம். நாம் எவ்வளவுக்குக் காத்திருந்து ஒரு பொருளைக் கண்டடைவோமோ அவ்வளவுக்கு அதன்மட்டில் நமக்குப் பற்று தலும் பிரியமு முண்டாகும். உனது தந்தையர் வரத் தாமதம் பண்ணுகிறார். நாம் அவர் எப்போது வருவாரோவென்று எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம். நாம் காத்திருக்கும்போது கஷ் டப் படுகிறோம். அவர் நம்மெதிரிற் றோன்றிய மாத்திரத்தில் நமது கஷ்டமும் கஸ்தியும் ஒரு நொடியில் மறைந்து போக நமது அக் களிப்பு இரட்டித்துப் போகின்றது. ஒருவாறு நமது கஷ்டத்துக்கு உடனே சம்பாவனை கிடைக்கிறது." என்று எனக்குத் தேறுதல் சொல்லுவார்கள்.

இவ்வாறு, சின்னம்மா! அம்மாளும் நானும் அல்லும் பகலும் ஆண்டவரை யெங்கள் உயிரைவிட அதிகமா யெண்ணுவோம். நான் பள்ளிக் கூடத்துக்குப் போகும் வேளைபோக, நானும் அம்மாளும் வீட்டிலிருக்கும்போது நாங்கள் ஆண்டவரை நினையாத நேரமில்லை, அவர்கள் பேச்சைப் பேசாத சமயமில்லை; அம்மாள் அவர்களு டைய மேலான புத்தி மதிகளை யெடுத்துச் சொல்லாத வேளையில்லை. நான் பள்ளிக் கூடத்துக்குப் போனாலுங் கோவிலுக்குப் போனா லும் இன்னும் எங்கேபோனாலுஞ் சரி ஆண்டவரை நான் ஒருக்காலும் மறக்கிறதில்லை. நான் பாடசாலைக்குப் போகும் போதும் அதை விட்டுத்திரும்பி வரும்போதும் நான் தனியாய் வரும்பக்ஷத்தில் அவர்களுக்காக வேண்டிக்கொண்டு வருவேன். கோவிலில் நெடு நேரம் அவர்களுடைய ஆத்ம சரீரசௌக்கியத்துக்காக வேண்டிக் கொள்வேன். பாடசாலையில் முதலாய் அடிக்கடி:— "எனது திவ்ய இரக்ஷகரே! இயேசுவே! எனது தந்தையர் பேரில் இரக்க மாயிரும். அவர்களுக்கு வேண்டியதெல்லாங் கொடும். நல்ல சவுக் கியத்தையுந் தீர்க்காயுசையும் அவர்களுக்குக் கொடும். அவர்கள் நல்லவர்களாயிருந்தால் நானும் அம்மாளும் எனது சகோதரரும் நல்லவர்களாயிருப்போம். அவர்கள் சுகமாயிருந்தால் நாங்களுஞ் சுகமாயிருப்போம்; எங்களுக்கு யாதோர் குறையு மிராது." என்று வேண்டிக்கொள்வேன்." என,

குணமணியம்மாள்:— "மனோரஞ்சிதம்! உனக்கு இது வெல்லாங் கற்பித்தது யார்? எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக் கிறது." என,

நான் :— "யார் எனக்குக் கற்றுக் கொடுப்பார்கள்? அம்மாள் தான். நான் ஏற்கெனவே சிவகாமி அத்தையம்மாளுக்குச் சொன்னதுபோல் என் தாயார் எனக்குப் புத்தி சொல்லாத நாளில்லை. நான் ஆன்றி மட்டில் நடந்து கொள்ளவேண்டிய வகை, காட்டவேண்டிய மரியாதை, செய்யவேண்டிய பணிவிடைகள், அவர்களுக்காக வேண்டிக்கொள்ள வேண்டிய சமயங்கள், அவர்களை நேசிக்கவேண்டிய விதம், எல்லாம் ஒன்றொன்றாய்ப் பற்றும் பற்றாய், நன்றாய் விபரமாய்ச் சொல்லிக் கொடுத்து விட்டார்கள். நான் அவர்களுடைய கற்பனைகளை மீறாமல் நடந்து வருகிறேன். நான் என்றாய் தந்தையருடைய கட்டளைகளுக்கு அமைந்து எனக்குத் தெரிந்தமட்டும் அவர்களை நேசித்து வருகிறேன். நான் அவர்களை யுத்தமவிதமாய்ச் சிநேகிக்க வேண்டிய வழியைக் காட்டுங்கள், சின்னம்மா!" என்று குணமணியம்மாளை வேண்டிக்கொண்டேன்.

அப்போது அவர்கள் :— "மகளே! இவ்விதமாய் எப்போதுஞ் செய். நீ யிடைவிடாது எவஸ்தோஷி, மக்திரினாள், எலிஜா முதலிய சிநேக சிந்தாமணிகளை மறக்காதே. அவர்களைப்போல் நட. நீ யுன் தாய் தந்தையர்மட்டில் காட்ட வேண்டிய சிநேக விஷயத்தில் அவர்களை மேலிட்டுப் போகாவிடினும் அவர்களுக் கிளைக்காமலிருந்தாற் போதும்." என்று சொல்லி முடித்தார்கள்.

உடனே யெனது தாயார் :— "குணமணி! இன்றைய விராத்திரி யிவ்வளவு போதும். இராப் பேச்சு நித்திரைக்குக் கேடு. உன் அறைக்குப் போய்ப் படுத்துக்கொள்." என்று சொல்லிவிட்டு என்னை அடிமாடிக்கழைத்துக்கொண்டு வந்துவிட்டார்கள் :— "இதுதான், ஆன்றி! நேற்றை இராத்திரி நடந்த சல்லாபம்." என்று மனோரஞ்ஜிதம் சொன்னாள்.

அப்போது சிவகாமியம்மாள் :— "தம்பி! மதுரநாயகம் எனது அருமை போதக சிகாமணி அபிராமியின் பாடசாலையில் வாசிப்பவர்கள் வாஸ்தவத்தில் பாக்கியசாலிகள். இதுநாள் வரையில் உனது பெண்டீரின் பெருமையை அறியாமல் தடுமாறினேன். இன்றோடு என் கலக்கமுங் முகத்தாக்ஷிணையமுங் காற்றாய்ப் பறதோடிவிட்டன. எனது பந்துக்கள் முகப்பிரீதிக்காகவேண்டு யென் மகன் சுந்தரத்தை யுன் வீட்டுக்குப் போகவேண்டா மென்

சிலவிசை கட்டுப்பாடு பண்ணினேன். நானும் உன் வீட்டுக்குவர அஞ்சிக்கொண்டிருந்தேன். எனது பந்துக்களெல்லாம் அபிராமியின் பாடசாலை யாவார்களா? இருண்ட இரவின் மத்தியிலெழுந்த இருள் கூட்டங்களை யோட்டுஞ் சந்திரனைப் போலச் சம்சார இருட்டில் தடுமாறுங் குடும்பங்கள் மத்தியில் உத்தம படிப்பினைகளாகிய குளிர்ந்த கிரணங்களை வீசிப் பிரகாசிக்கின்றாள். இன்று தினம் வரையில் உனது பெண்டீர் இவ்வளவு ஆழ்ந்த கருத்துள்ளவளென்று எனக்குத் தெரியாது. அவளுக்கு இருபத்திரனு பிராயமாத்திரம் நடக்கிறது. இந்தப்பிராயத்தில் அவளுக்கு இத்தனை யோசனைகளா? இவ்வளவு புத்தியா? எனக்கு மெய்யாகவே திகைப்பாயிருக்கிறது! இனி சமயம் வரும்போதெல்லாம் அபிராமியின் பாடசாலைக்குவரத் தாமதஞ் செய்யேன். இனி யொருநாளும் என் பிள்ளைகளை உன் வீட்டுக்குவரத் தடைசெய்யேன். அபிராமி யெனக்கும் என் பிள்ளைகளுக்கும் பெரும் புதையல். யாரேனும் பற்பல நகை, நாணயம், மொகரா, நவமணிகள் முதலியவற்றால் நிறைந்த பொக்கிஷத்தை அவமதித்து தள்ளுவார்களா? இல்லையே! அபிராமியின் பள்ளிக்கூடம் எவ்வித பூரண பொக்கிஷங்களைக்காட்டிலு மேலாயிற்றே. அதை யலக்ஷியம்பண்ணுகிறவர்கள் ஒப்பற்ற மதியீனர். ஆனதைப் பற்றி, தம்பி! மதுரநாயகம்! இனி யெப்போதும் உன் வீடு என் வீடா யிருக்கட்டும். என் வீடு உன் வீடா யிருக்கட்டும். நான் அநேக இடங்களெல்லாஞ் சுற்றிப்பார்த்தேன். எத்தனையோ பெண்களைப் பார்த்தேன். ஆனால் நான் ஒருநாளும் அபிராமியைப்போல .......' எனவே,

அபிராமியம்மாள் :--"சின்னம்மா! அளவை மிஞ்சினால் அமிர்தமும் விஷமாகும். யாரையும் அபரிமிதமாய்ப் போற்றலாகாது. என் பேரில் அவ்வளவு ஸ்தோத்திரங்களைச் சொன்னீர்களே! நான் அதற்குக் கிஞ்சிற்றும் பாத்திரவதியா? பூனையைப் புலி யென்கலாமா? புலியைச் சிங்க மென்னலாமா? நான் என்ன? எதிற் கூட்டு? எதற் கொப்பு? ஏது மறியாப் பேதைப் பெண்ணை வான மண்டலம் வரையிற் றாக்கிவிட்டீர்களே! நீங்கள் சொன்ன ஸ்துதிகள் எனக் கடுக்குமா? அவைகளை அத்தான் பேரிற் சொல்வீர்களாகில் அவர்களுக்குச்........." என,

மதுரநாயகம் பிள்ளை :-- "அபிராமி! பேசாதே. நிறுத்து; போதும். நீ சிவகாமியம்மாளுடைய வாயை அடைத்துப் பிறர் பேரிற் புகழ் கூறுதே." என,

எனது தந்தையாகிய சந்திரசேகரம் பிள்ளை மதுரநாயகம் பிள்ளையை நோக்கி :— "என்ன வேலைசெய்தீர்கள்? அபிராமியின் சாதுரிய வசனங்களையும் பொருட் செறிந்த போதனைகளையும் நாங் கள் கேட்கலாகாதா?" என்று ஒருவாறு கஸ்திப்பட

மதுரநாயகம் பிள்ளை :— "ஆரியக்கூத்தாடினும் காரியத் தின்பேரிற் கண்ணாயிருப்பார்" என்ற பழமொழியை மறந்துவிட்டீ ர்களா? அபிராமிக்கு உத்தரவுகொடுப்பேனாகில் ஒரு நாளெல்லாம் ஓயாமற் சலியாமற் பேசுவாள். என்னோக்கத்திற்கு அது மாறாயிருக் கும். நமது சிறு நங்கை மனோரஞ்ஜிதத்திற்கு உபதேசிக்கும் நேரத் தில் முடிவில்லாச் சல்லாபங்களைக் குறுக்கே கொண்டுவந்துவிட்டு உபந்நியாசத்தை யட்டிப்படுத்தலாமா? மற்றைய உத்தியோகங்க ளோடு வேதோபதேசங்களையும் பூர்த்தியாக வேண்டுமே. ஆதலால் மன்னிக்கவேண்டும்" என்று அவருக்குச் சமாதானங் கூறிவிட்டு,

தன் மகளை யழைத்து :— "மனோரஞ்ஜிதம்! நேற்றையத் தினம் எதைப்பற்றி யுனக்கு உபந்நியாசித்தேன்?"

———: "கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று போதித் தீர்கள்."

———: "கடவுள் என்றால் என்ன?"

———: "கடவுள் என்றால் ஒருவனாலும் உண்டாக்கப்படா மல் தன்னிலே தானாயிருக்கிறவர். அவருக்குச் சுயம்பு என்று பெயர்."

———: "தேவ னிருக்கிறாரா?"

———: "அதிற் சந்தேகமா ஆஜி? வீட்டுக்குள் நெருப் பில்லாவிட்டாற் கூரை மேற் புகை கிளம்புமா? வித்து இல்லாவிட் டால் மர முளைக்குமா? காரணமின்றிக் காரியமில்லையென்று நீங் கள் எத்தனையோவிசை யெனக்குச் சொல்லியிருக்கிறீர்கள்? அழி ந்துபோகும் உலகமானது காரணமின்றி யுண்டாகவில்லை. ஒரு கார ணத்தால் அது உண்டாயிற்று. அந்தக் காரணமே கடவுள். ஆத லால் கடவுளிருக்கிறார்."

———: "ஓ என் கண்மணியே! சுபம்! சுபம்! நீ நன் றாய்க் கண்டுபிடித்தாய். நான் சொன்னவைகளில் நீ யொன்றையும்

மறக்கவில்லை. கடவுள் உண்டென்று ருஜுவான பின்னர் இனி யவர் எப்பெயர்ப்பட்டவரென்று பார்ப்போம்: அதாவது: அவருடைய இலக்ஷணங்களை யெல்லாம் ஒன்றொன்றாய் ஆராய்வோம் என்றார் மதுரநாயகம் பிள்ளை.

---

## 15-ம் அத்தியாயம்.

மனோரஞ்ஜிதத்தினது பால சிக்ஷையின் தொடர்ச்சி. ஞானோபதேசம். கடவுளின் இலக்ஷணங்கள். நல்ல பிள்ளைகளின் மேன்மையும், கெட்ட பிள்ளைகளின் இழிவும்.

பின்பு அவர் மனோரஞ்ஜிதத்தை நோக்கி:— "மகளே நான் உனக்கு எளிய நடையிற் சொல்லித்தந்த கடவுளின் ஆறிலக்ஷணங்களைச் சொல்; பார்ப்போம்." என,

மனோரஞ்ஜிதம்:— "கடவுளுக்கு

1. பிறப்பும் இறப்பு மில்லை;
2. துவக்கமும் முடிவு மில்லை;
3. சரீர மில்லை. அவர்
4. சகல நன்மைக் கடல்;
5. சகலத்தையு நிரப்பிக்கொண்டு,
6. சகலத்திற்கு மூலமாயிருக்கிறார்."

என்று சொல்லி முடித்தாள்.

தக்ஷணமே மதுரநாயகம் பிள்ளை தமது தம்பியை நோக்கி:— "திருமறை நாயகம்! தெய்வ மகத்துவத்தைப்பற்றி யேதேனுஞ் சொல். நீ சரிதை யாசிரிய ஞதலால் தெய்வமாட்சி விஷயமாய் ஞானிகளுடைய கோட்பாட்டை யெடுத்து எங்களுக்குப் போதி; பார்ப்போம்." என,

திருமறை நாயகம் பிள்ளை பின் வருமாறு:— "சிசேரோன் எழுதிய தேவாக்களுடைய குண விளக்கத்தில் ஓர் சிறிய சங்கதை யுண்டு. அதாவது: சீராக்கூஸ் நகரத்தில் அரசாண்டுவந்த இய

ரோன் என்னுஞ் சக்கரவர்த்தி யொருநாள் சிமோனிதேஸ் என்னும் ஞானியை அழைப்பித்து :— "தெய்வமாவ தென்ன ? நான் அதனை யறியவேண்டும், யோசித்துச் சொல்லும்" என,

சிமோனிதேஸ் :— "பிரபுவே ! உடனே சொல்லமுடியாது. ஒருநாள் கெடு கொடும், நாளையதினம் வந்து சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு நாள் முழுவதும் யோசித்து இராவெல்லாம் யோசித்து மறு நாள் காலையிற் சக்கரவர்த்தியிடத்திற் போய் இரண்டு நாள் கெடு கேட்டான். இரண்டா நாள் மூன்று தினங் கெடு கேட்டான். மூன்று நாள் நாலு திவசம் கெடுவும், ஐந்தாநாள் ஆறுதினக் கெடுவுங் கேட்டுக்கொண்டே வந்தான். இவ்வாறு அவன் கெடு கேட்கக் கேட்க, அரசன் கொடுத்துக்கொண்டே வந்தான். கடைசியாய் இராஜா வியப்படைந்து :— "என்ன ஞானியே ? காலத்தை மலையாய் வளர்க்கின்றீர் ! உமது கருத்து எனக்குப் புலப்படவில்லையே !" என,

சிமோனிதேஸ் :— "ஆ ! மகாராஜாவே ! நான் யோசிக்க, யோசிக்கக் காரியங் கரிசலாகின்றதே யல்லாது கிஞ்சித்துந் துலங்கவில்லை. நான் எவ்வளவுக்கு ஊன்றி நினைக்கிறேனோ தெய்வம் இன்னதென்று சொல்ல அவ்வளவுக்குங் கஷ்டமாயிருக்கிறது. வாஸ்தவத்தில் இன்னதென்று சொல்ல வறியேன். ஆதலால் மகாப்பிரபுவே ! என்னை யுபாதிக்கவேண்டாம் ; மன்னிக்கவேண்டும்" என்று சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டான்.

இதுவிஷயத்தைப்பற்றியே ஒருநாள் சொக்கிராத்து தன் மாணாக்கனாகிய திமேயனை நோக்கி :— "சிஷியா கடவுள் ! கடவுள் என்றால் என்ன ? சொல் ; பார்ப்போம்" என

திமேயன் :— "குருவே ! தேவரீருடைய திருவடிகளைப் பணிந்து நிற்கிறேன். நீர் என்னைக் கேட்டகேள்வி மகா கஷ்டமான கேள்வி. தெய்வத்தினிடத்தில் இல்லாததை யறிவேன், அவர் மண்ணல்ல ; கல்லல்ல, மரமல்ல ; மலையல்ல ; பூதமல்ல. ஆனால் அவரிடத்து உள்ளதைச் சொல்லவறியேன்." என்றான்.

மேற்படி வினா விஷயமாய் யாரேனும் பேர்போன ஞானியாகிய எப்பிக்தேத்து இடத்திற் சம்பாஷிக்கும்போது அவன் பின்

மருமாறு :—“கடவுளைச் சரிவர அறியவேண்டுமாகில் இரண்டில் ஒன்று; அதாவது நான் கடவுளாயிருக்கவேண்டும்; அல்லது கடவுள் கடவுளாயிருத்தலாகாது” என்று எப்போதுஞ் சொல்லிக் கொண்டிருப்பான்.

ஸ்ரீமத் பவுல்:—“கடவுள் எம்மனிதனுக்கும் அண்டாத ஒளியின் மத்தியில் வசிக்கிறார்.” என்று தமது சிஷ்யனுகிய தீமோத்தைக்கு எழுதினர், எனச் சொல்லி முடித்தார்.

உடனே தன் மகளைப் பார்த்து:—“மனோரஞ்ஜிதம்! உனது சிறிய தந்தை சொன்ன காரியங்களைக் கண்டுணர்ந்தையா?”

மனோரஞ்சிதம்:— “ஆம், ஆஜி! கண்டுபிடித்தேன். கடவுளையறிய யாராலு முடியாது. கடவுளைக் கண்டுபிடிக்கக் கடவுளாய்ப் பிறந்திருக்கவேண்டும்” என,

மதுரநாயகம் பிள்ளை:—“ஆமாம், மகளே! நீ சொன்னது வாஸ்தவமே. ஸ்ரீமத் பவுல் சொல்லுவது போல் மனிதன் புத்திக் கெட்டாப் பிரகாச மத்தியில் உஜ்ஜீவிக்கின்றார். அப் பிரகாசத்தை யண்டுவது சிருஷ்டியாற் சாத்தியப்படாது. அதனை யண்ட முயலும் மனிதனுடைய புத்தி குருடாகும். நியாயமாய் அணுகப் பிரயாசப்படுவோமாகில் நமது மதி மழுங்காது. நாம் சூரியனைக் கிரமந் தப்பின விதமாய் அரைமணி நேரம் உற்று நோக்குவோமாகில் என்ன நேரிடும்? கண்களிற் குருடு பாயும். கிரமமாய்ச் சற்று நேரம் அதனைப் பார்ப்போமாகில் நமது கண்கள் கெடா.

இவ்வாறே நாம் கிரமமாய்க் கடவுளின் திவ்ய இலக்ஷணங்களைப் பரிசோதிப்போமாகில் நமது புத்தியிற் குருடு பாயாது. ஆயினும் அது இலேசான காரியமல்ல. கடல் ஜலத்தை வடிப்பது யாராலாகும்? மலையை ஓர் அணு அசைக்குமா? யானையை யெறும்பு இழுத்துப்போவது சாத்தியமா? கடவுள் சர்வலக்ஷணக் கடல். நான் சேற்றில் உதித்துக் கண்ணுக்குத் தோன்றாத ஓர் சிறிய கிருமி! சர்வலோகத்திலுமுள்ள சகல மலைகளைக்காட்டிலும் உயர்ந்த மலையாகிய இமயகிரி கடவுள். நான் ஓர் அற்ப அணு. கிசித பூச்சியாகிய நான் கரைகாணுச் சமுத்திரத்தை யெவ்விதம் இறை

த்து வடிப்பேன் ? எவ்வாறு காற்றோடு பறக்கும் சொற்ப அணுவாகிய நான் மகத்தான மலையைப் பிளந்து அதன் கெற்பத்தி லிறங்கி யதன் குணங்களை யறிவேன் ?

மகளே ! இந்த உபமானமுஞ் சரியல்ல. ஏன் சரியல்ல ? என்கிறாயா ? சொல்லுகிறேன் ; கேள். கடவுள் சுயம்பு ; இருக்கிறவர். அவருக்கு முன்பாக ஒருவாறு நாம் இல்லாத வஸ்துக்கள் போலாம். ஒருவாறு இல்லாத வஸ்துக்களாகிய நாம் இருக்கிறவருடைய குணங் குறிகளைக் கூறுவ தெப்படி ? அவருடைய திவ்ய இலக்ஷணங்களை யொருங்காய்க் கூறுவது ஒருபோது முடியாத உத்தியோகம் ! ஆம், மனோரஞ்ஜிதம் ! சரியாய்ச் சொல்வது சாத்திய மல்ல. மேற்படி விஷயத்தை யின்னுந் தெளிவாய் விளக்குகிறேன் ; சற்று கவனி ; பந்து வடிவமான ஓர் பூகோள உண்டையை நிதானித்துக்கொள்."

—: "ஓர் உண்டையை நிதானித்துக்கொண்டேன். ஆஞ் !

—: "அந்தப் பந்தைக் கணக்கு மிதமில்லாமல் பெருக்கு, மகளே, அந்த உண்டைக்கு வரம்புவைக்காதே ; அதற்குண்டான ஆறு எல்லைகளையும் எடுத்து அப்பால் எறிந்துவிடு."

—: எறிந்துவிட்டேன், தந்தையே ! ஓ ! மதிப்பில் அடங்காத அண்டம் ! புத்தியைப் புரட்டிப் பேதளிக்கப்பண்ணும் மகாகோளம்! பயங்கரமான அண்டம்."

—:" இப்பெயர்ப்பட்ட எல்லை, வரம்புகளில்லாக் கோளத்திற்கு மையம் எங்கே யிருக்கும், மகளே ?"

—: "எல்லைகளில்லா வஸ்துவுக்கு மையம் எங்குங் கிடையாது, தந்தையே !"

—: "அப்படியல்ல, மகளே ! எங்குங் கிடையாது என்று சொல்வதை விட, மையம் எங்கு முண்டென்று சொல்வது வாசி! அதுவே நிஜம்" என்று மதுரநாயகம் பிள்ளை கூறவே.

மனோரஞ்ஜிதம் :—"தந்தையே ! அந்த அண்டகோளத்தை நினைத்து, யோசிக்க, யோசிக்க, என் புத்தியிற் பயமும் திகிலும் அச்சமும் நடுக்கமும் உண்டாகின்றன ! என,

மதுரநாயகம் பிள்ளை :—" ஆம், மகளே ! அது வாஸ்தவமே. இவ்வாறு அடி, முடி, பக்க, பாரிசங்கள் முதலிய எல்லைகளில்லா அண்டகோளத்துக்கு ஒப்பான கடவுளின் திவ்ய இலக்ஷணங்களை யெவ்வாறு நான் எடுத்து உரைப்பேன்? சற்று முன்னமே திரு மறைநாயகஞ் சொன்னதுபோல் எடுத்து உரைப்பது என்னால் ஏலாத விஷயம்.

உலகத்திலுள்ள சகல சமுத்திரங்கள், ஏரிகள், தடாகங்கள், குளங்கள், நதிகள், வாரிகள், ஓடைகள் முதலியவற்றி லிருக்குஞ் ஜலப்பெருக்கத்தை யெல்லாம் மையாக்கி, பூமியில் முளைத்திருக்கும் நானாவித விருக்ஷங்கள், செடிகள், பூண்டுகளிலிருக்கும் இலைகள் மட்டைகளையுஞ் சகல மனிதருந் தரித்திருக்கும் வஸ்திரங்களையுங் கடிதங்களாக மாற்றிப் பருவதங்களாகக் குவித்துக்கொண்டு, எக் காலத்திலும், எத்தேசத்திலும், எக்குலத்திலும் உதித்த சகல சாஸ்திரிகளும், பண்டிதருஞ், சான்றோரும், மேதாவிகளுங், கற்ற கல்லூரிகளும், வித்வசிரோமணிகளும், வேத விற்பன்னரும், தர்க்க சிந்தாமணிகளுந், தத்துவ ஞானிகளுந், தவநிதிகளும், மூவாசை துறந்து, வனம் புகுந்து தியான சமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கும் யோகிகளும், பிரபஞ்சக்கடலைக் கடந்து பரமபதவியை அடைந்த சமஸ்த முக்தருங் கடவுளின் பத்திராசனத்தை யண்டி நிற்குங் கணக்கில்லா மனோருபிகளுந், தேவதூதரும் ஒருங்குகூடிச் சாவகா சமாயுட்கார்ந்து, சாவதானமாய் ஆலோசித்து எல்லை வரம்புகளி ல்லா அண்டத்துக்கு ஒப்பான கடவுளின் கெற்பாகரத்திற் பிர வேசித்து, அவரது திவ்ய இலக்ஷண கோடிகளில் ஒவ்வொருவன் ஒவ்வொன்றைத் தெரிந்துகொண்டு, அதனை விளக்கத் தலைப்பட்டு, அன்று தொட்டுக் கோடானுகோடி வருஷங்களாய் எழுத முய ன்று, எழுதி யெழுதி, மேற்கூறிய மைக்கடல்களை வற்றடித்தபோ திலும், எழுதி யெழுதி மேற்சொன்ன கடிதமலைகளை வேறிடத்திற் பெயர்த்துக் குவித்தபோதிலும் எல்லோருங்கூடிக் கடவுளின் கரைகாணா இலக்ஷணக் கடலில் இன்னுமோர் துளி முதலாய் எடுக் கவில்லையே, மகளே!

அப்படியிருக்க, மனோரஞ்ஜிதம்! அவருடைய இலக்ஷணக் கடலில் எம்மாத்திரம் எடுப்பேன்? எப்படி யெடுப்பேன்? எடுத் ததை யென்னவென்று சொல்வேன்? எவ்விதஞ் சொல்வேன்?

சமஸ்த சாஸ்திரிகளாலுஞ் சான்றோராலுஞ் சாத்தியமாகாத காரியம் என்னாலாகுமோ? ஆகாதே! நான் என்ன சொல்வேன்? நான் சொல்லுவது கடவுளுக்குத் தகுமா? தகாதே! பொருந்துமா? பொருந்தாதே! நான் சொல்லுவதெல்லாந் தப்புந் தவறுமாயிருக்குமே! சப்பாணி நடப்பானோ? பிறவிக் குருடன் பார்ப்பானோ? ஊமையன் பேசுவானோ? செவிடன் கேட்பானோ! இல்லையே! நான் நடையில்லா, கண்ணில்லா, காதில்லா, வாயில்லாச் சிறு மழலையாயிற்றே!

ஆதலால், மகளே, அவருடைய திவ்ய இலக்ஷணங்களையொன்றொன்றாய் ஆராய்வோம், என்றது மிதமிஞ்சின துணிவு ஆயினும் உனது நன்மைக்காகவேண்டிக் கிரமமாய் அவைகளை யுசாவிச் சில வுணர்ச்சிகளை யுனக்குத் தெரிவிப்பது என்பேரிற் சுமந்த வுசித கடன். ஆகையால் நான் உனக்குச் சொல்லப்போகிற வுணர்ச்சிகளை மனத்திற் பத்திரமாய்ப் பதித்துக்கொள்.

நீ கடவுள் உண்டென்று இரண்டொரு வார்த்தைகளிற் சற்று முன்னர் நிரூபித்து விட்டாய். அதில் எட்டுணையுஞ் சந்தேகங் கிடையாது. ஆதலால் கடவுளிருக்கிறார். இனி யவர் யெப்படி யிருக்கிறாரென்று பார்ப்போம்.

மகளே தேவனுடைய ஆதிலக்ஷணங்களில் முந்தின இலக்ஷணமெது?" என,

மனோரஞ்சிதம்—: "தேவனுக்குப் பிறப்பும் இறப்புமில்லை." என்றாள்.

மதுரநாயகம்பிள்ளை—: "ஆம், மகளே, அவருக்குப் பிறப்பும் இறப்புமில்லை! அதாவது சுயமாயிருக்கவேண்டும். தானாயிருக்க வேண்டும். அவருக்குத் தாயுமில்லை, தகப்பனுமில்லை. அவர் யாரிடத்து மிருந்து வரவில்லை. அவர் யாராலும் நிர்மிக்கப்படவுமில்லை, சிருஷ்டிக்கப்படவுமில்லை. அவர் சுயம்......எனவே,

மனோரஞ்சிதம்—: "ஆ ஜி! நிர்மிக்கப்படுகிற தென்றால் என்ன? என,

மதுரநாயகம்பிள்ளை—: "மகளே! நிர்மித்தல் என்னில் உண்டு பண்ணுதல் என்று அர்த்தமாகும்.

அவர் சுயஞ்ஜீவியான கடவுள். கடவுள் என்றால் கட......
எல்லாவற்றையுங் கடந்து,......வுள்—தனக்குள்ளே சகலத்தையும் அடக்கிக்கொண்டவராய் நின்றவர் என்று அர்த்தம் விரியும். இவ்வாறு சகலத்தையுங் கடந்தவர், சகலத்தையுந் தனக்குள்ளே யடக்கிக்கொண்டிருக்கிறவர் ஒன்றுக்கும் ஐக்கியப் பட்டவரல்ல; அமைந்தவரல்ல; கீழ்ப்பட்டவரல்ல. ஒன்றுக்கும் அடங்காதவர் யார்? அகத்தியவஸ்து. சர்வ சுவாதீனமுஞ் சர்வ சுவாதந்தரியமும் பூஷணங்களாகத் தரித்தவர். இவ்வாறு எல்லாவற்றையுங் கடந்து ஒருவனுதீனத்திலுமில்லாதவர். பரமோத்தமரா யிருக்கவேண்டும். அவர் பரமோத்தமரானால் யாராலும் படைக்கப்படாமலுஞ், ஜன்மிக்கப் படாமலும், வளர்க்கப்படாமலுந் தம்மிலே தாமாய் நிர்ணயித்துச் சுயஞ்சீவியாயிருப்பது அவசியம். அவ்வாறு இராவிடில் அவர் பரமோத்தமரா யிரார்; சகலத்தையுங் கடந்து நில்லார்; சகலத்தையுந் தனக்குள்ளே யடக்கிக்கொண்டிரார்.

மீண்டும் நம்மைச் சுற்றிலும் மேலுங் கீழுங் கண்களை நோக்குவோமாகில் வானமும் பூமியும் அவைகளில் அடங்கிய சமஸ்த சராசரங்களுஞ், சேதனுசேதனங்களுஞ், சிருஷ்டிகோடிகளும் நமக்கென்ன சொல்லுகின்றன? அவைகள் நம்மை நோக்கி—: ஓ! அறிவாகரத்தை விருதுக்கொடியாகக் கொண்ட மனிதனே! எங்களைப் பார்; நாங்கள் அனுவசியம்; நாங்கள் அநித்யம்; ஆயிர மாற்றங்களுக்குச் சார்பாயிருக்கிறோம்; மாறி மாறிக் கடைசியாய் மறைந்து போகிறோம். எங்கள் நிர்ணயம் அவசியமல்ல. நாங்கள்......" என,

மனோரஞ்ஜிதம்—: "ஆஜி! தயை செய்து சற்று நிறுத்துங்கள். எனக்கு அநேக வார்த்தைகள் புலப்படவில்லை. அறிவாகரம் என்றால் என்ன? சரா சரங்களென்றால் என்ன? சேதனுசேதனங்களென்ன? நிர்ணயமாவதென்ன? என,

மதுரநாயகம் பிள்ளை—: "அப்படித்தான் கேட்டு உணர்ந்துகொள், எனது செல்வச் சிரோமணியே. சரம் என்றால் மரம், விருக்ஷம், புல், பூண்டு, செடிகள் முதலியவைகளாம். அசரம் என்றால் கல், மண், தண்ணீர், ஆகாயம், காற்று முதலியவைகளாம். சேதனம் என்னில் மனிதர், வானோர், முதலானவர்களாம். அசேதனம் மிருக ஜெந்துக்களாம். நிர்ணயம், என்றால் இருத்தல், இருக்கிறது, உண்டாதல் என்று அர்த்தமாகும்." என,

மனோரஞ்ஜிதம் :— " ஆஞி ! இனிமேல் நான் ஏதாகிலுங் கேட்டால், ஆக்ஷேபித்தால் நீங்கள் கோபித்துகொள்ளமாட்டீர் களே ? என,

மதுரநாயகம் பிள்ளை :—"இல்லை யில்லை, எனது இரமணியே! தாராளமாய்க் கேள். அடிக்கடி யாட்சேபி. அது எனக்கு மெத்த சந்தோஷம்" என்று தனது குமாரத்திக்குத் திடஞ்சொல்லிவிட்டு, மறுபடியும் உபந்நியாசத்தை யெடுத்துத் தொடர்ந்துசொல்ல வாரம் பித்து:— " மகளே ! இன்னமுஞ் சிருஷ்டிகள் என்ன சொல்லு கின்றன ?

அவைகள் :— "எங்கள் நிர்ணயம் அவசியமல்ல. ஆனுல் இப் போது நாங்கள் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறோம். ஆதலால் எங்களை வெறுமையினின்று சிருஷ்டித்தவர் ஒருவர் இருக்கிறார். அவர் அக த்தியவஸ்து. அவர் அகத்தியவஸ்து வாதலால் பரகாரணத்தால் வராமற் றம்மிலே தாமாயிருக்கிறார். ஆதலால் அவர் சுயம்பு, தற் ஜீவி, தன்வயத்தன்," என்று கூறுகின்றன. ஆனதைப்பற்றி, மகளே, கடவுளுக்கு ஜீவியமும் நிர்ணயமுஞ் சொந்த மென்றும், அவர் *Tes pelagos ousias* நிர்ணயக் கடலென்றும்; *Plenus essendi* பூர்ணச்சுதாரணி யென்றும்; *Est qui est* சுயம் பென்றுஞ் சாஸ் திரிகள் நிச்சயிக்கிறார்கள். ஆகையால் கடவுள் தம்மிலே தாமாய் அநாதி நித்யமாய் நிர்ணயித்துத் தற்ஜீவியாயிருக்கிறார் என்பதிற் சந்தேகங் கிடையாது. மனோரஞ்ஜிதம் ! நான் உனக்குச் சொன்ன வைகள் புலப்பட்டனவா ? என,

மனோரஞ்ஜிதம்:—" தந்தையே ! சற்றேறக்குறையக் கண்டு பிடித்தேன். கடவுளுக்குத் தாய் தந்தைய ரில்லை. அவர் பிறக்க வில்லை, இறக்கவுமாட்டார். அவர் தாமாயிருக்கிறார், அவர் வேறொ ருவனுல் உண்டாக்கப்படவில்லை ; வரவில்லை என்று கண்டு பிடி த்தேன் " என,

மதுரநாயகம் பிள்ளை :—" குணமணி ! நான் மேற்கூறிய உபந் நியாசத்தைக் குறுகிய சூத்திரத்திற் சுருக்கமாய்ப் பாடு." என,

குணமணியம்மாள் :— " அத்தான் ! 'பெண்படையும் அம்ப லமும்' என்ற பழமொழியை நீங்கள் மறந்தவர்களாய்ப் பேதைப் பெண்ணைத்தானு தெருவி லிழுத்துவிடவேண்டும் ! பலர் பலவா றுய்க் குறைகூறுவார்கள் " என,

அபிராமியம்மாள் !—"குணமணி! பெரியோர் சொல்லும் போது தட்டாதே. யார் என்ன சொன்ன போதிலும் உனக்கென்ன குறை வந்துவிடும்? சும்மா பாடு" என,

குணமணியம்மாள் :—

பிறக்கா னிறக்கான் பிழையிலாவீசன்
பிறக்க வகையறியானே பெற்றோ ரில்லான்—பிறப்புண்டோ
தன்வயத்த ரூபிக்குத் தானேதன் றுதையாந்
தன்னிறுனே நின்ற பிரான்.

இதன் பொருள்; பரிசுத்த தேவன் பிறக்கவும் இறக்கவுமாட்டார். பிறக்கவும் அவருக்கு வகையில்லை. அவருக்குத் தாய்தந்தைய ரில்லை. தன் வய்த்தனுகத் தோன்றுஞ் சொரூபிக்குப் பிறப்பேது? அவர் தம்மிற் றுமா யுதித்த கடவுள். தமக்கே தகப்பன் அவர். என்று சொல்லி முடித்தாள்.

அப்போது மதுரநாயகம் பிள்ளை :—"குணமணி! கூடிய வரையிற் சரியாய்ப் பாடினுய். நீ நன்றாய் யோசித்துச் சாவகாசமாய்ப் பாடுவாயேல் வெண்பா இன்னுஞ் சிறப்பா யிருக்கும். இன்னு மற்றுள்ள ஐந்து தேவ இலக்ஷணங்கள் பேரிலும் விதேனும் பாடல்களைத் தயார் செய்துவை" என்று அவளுக்குச் சொல்லிவிட்டுத் தன் குமாரத்தியை நோக்கி:—"தேவனுடைய இரண்டாம் இலக்ஷணத்தைச் சொல்" என,

மனோரஞ்ஜிதம் :—"கடவுளுக்குத் துவக்கமுமில்லை, முடிவுமில்லை" என,

மதுரநாயகம் பிள்ளை—;"மகளே! நான் மேலே கடவுள் சுயம்பென்று நிரூபித்தேன். அவர் சுயம்பானுல் துவக்கமுடிவில்லாமை யவருக்கு ஆதீனமாகவேண்டும். அதாவது: நித்யம் அவருக்குச் சொந்தமாகவேண்டும். நித்யமென்றால் என்ன? நித்யமென்றால்: Interminabilis vitæ tota simulque perfecta possessio. முடிவில்லா சர்வோத்தம ஜீவாதீனம் என்று பேயேஸ் என்னும் ஞானி கூறுகிறுர். ஆதியந்தமில்லாத ஜீவியந் தெய்வத்துக்குரிமை. ஆதலால் கடவுளுக்கு ஆரம்பமிருக்கத் தகாது. ஏனெனில் அவருக்குத் துவக்கமிருக்குமாகில் அவருடைய உற்பத்திக்கு ஓர் காரணம். ஏற்பட்டுப் போகும். இதர காரணத்தால் வரும்

வஸ்து அகத்திய வஸ்துவல்ல வென்று உருஜுவாக்கினேன். அவர் நித்திய காலமாய்த் தம்மிலேதாமாய் நிர்ணயித்திருக்கிறார் என்றும், அவருக்கு வேறு காரணமில்லை யென்றும் ஏற்கெனவே யெண்பித்தாயிற்று. அவருக்கு வேறு காரண மில்லாவிட்டால் அவர் சுயம்பு. அவர் சுயம்பானால் என்றென்று மிருக்கிறார். என்று மிருக்கிறவருக்கு ஆரம்பம் கிடையாது.

ஆரம்ப மில்லாத சுயஞ்ஜீவிக்கு முடிவு மிருக்காது. நான் முற் சொன்னதுபோலக் கடவுளுக்குப் பிறப்பில்லை. பிறப்பில்லாத போது இறப்புமில்லை. எப்பொழுது அவருக்குப் பிறப்பில்லையோ அப்பொழுதே யவருக்கு முடிவுமில்லை. இவ்வாறு அவருக்குப் பிறப்பும் இறப்புமில்லாமையால் அவருக்கு அனாதி யென்றும் நித்யரென்றும் பெயருண்டாயிற்று. உள்ளபடியே சமஸ்கிருத பாஷையில் நித்யம் என்னும் பதம் இறந்தகால எதிர்கால நோக்கமின்றி நிகழ்காலமென்று அர்த்தமாகிறது. ஆதலால் இருக்கிறார் என்றே சொல்லத் தகும். கடவுள் இருக்கிறார் என்று சொல்லும் வகைமாத்திரம் அவருடைய ஆயுசுக்குப் பொருந்துமே யல்லாது 'இருந்தார்' 'இருப்பார்' என்று பேசும் வகை யவருக்குப் பொருந்தவே பொருந்தாது. என்று மிருந்தார், இன்றிருக்கிறார், என்று மிருப்பார் என்று பேசும் வகை, பிறந்து, வளர்ந்து, ஜீவித்து முடிவைப் பெறும் மனிதர் பேசும் வகையாம். நாம் இவ்விதம் பேசினால் மாத்திரம் அற்பமேனுங் கடவுளுடைய ஆயுளைக் கண்டுபிடிப்போம். நம்முடைய ஆயுசாற் கடவுளின் ஆயுசை யளந்துகொண்டு பிற்பாடு அதனை யபரிமிதமாய்ப் பெருக்கி மட்டில்லாத வயசாக உருபிகரித்துக் கொள்ளுகின்றோம்.

நான், மேலே, தேவன் அடி, முடி, மேல், கீழ், பக்கம், பாரிசம் முதலிய எல்லைகளைக் கடந்த முடிவில்லாத அண்டத்துக் கொப்பாயிருக்கிறார் என்று சொன்னேன். இந்த முடிவில்லாத அண்டத்தை அவருடைய முடிவில்லாக் கண்ணென்று நிதானித்துக்கொள். இந்த எல்லை வரம்புகளில்லாக் கண்ணால் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களையும் ஒரேபார்வையால் நோக்குகிறார். இதனாலேயே, மகளே, சாஸ்திரிகள் கடவுளின் வயதைத் தமிழில் நித்யமென்றும் இலத்தின் பாஷையில் Momentum æternum, duratio simultanea என்றுங் கூறுகிறார்கள்.

மனோரஞ்ஜிதம்! நீ யிப்போது கேட்ட காரியங்களில் என்ன கண்டுபிடித்தாய்? என,

மனோரஞ்சிதம்—: "ஆஜி! நீங்கள் சொன்ன நியாயங்களில் சிலவற்றைக் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் பொதுவில் தேவனுக்குத் துவக்கமு மில்லை; முடிவு மில்லை. எப்போது மிருந்தார்; எப்போது மிருப்பார். என்று கண்டுபிடித்தேன்" என,

மதுரநாயகம் பிள்ளை—: "அவ்வளவு போதும், மகளே! அதுவே யெனது படிப்பினையின் கருத்து."

என்று சொல்லி விட்டுத் தமது தம்பியை நோக்கி—: "திருமறை நாயகம்! நமது நங்கைக்குக் கடவுளுடைய நித்யத்தைப்பற்றி யேதேனுந் தெளிவு படச்சொல்" என,

திருமறைநாயகம் பிள்ளை —: "மனோரஞ்சிதம்! நீ நீலகிரி மலைக்கு எப்போதேனும் போயிருக்கிறாயா?"

—: "ஆம் சின்னாஜி! போயிருக்கிறேன். சௌக்கியத்துக்காகவேண்டி ஆஜியும் அம்மாளும் நானும் பலதடவைகளில் அங்கு போயிருக்கிறோம்."

—: "மகளே! அந்தமலையைப் பார்த்தையா? அதனைக்குறித்து என்ன நினைக்கிறாய்?"

—: "ஓ! பிரமாண்டமான மலை! அதில் ஏற ஏற மாளாதே!"

—: "சரி. இதோ இங்கு ஊறுகிறதே யிந்த எறும்பைப் பார். அதுமகா சொற்ப ஜீவி. இந்த அற்ப எறும்பானது ஆயிரம் வருஷத்துக் கொருதடவை யந்த நீலகிரிமலையில் ஓர் சிறிய அணுவைக் கவ்வியெடுத்துக் கொண்டு வந்து, கீழச் சமுத்திரக் கரையிற்போட்டு விட்டு இன்னும் ஆயிரம் வருஷம் இளைப்பாறி வேறோர் அணுவையெடுத்துக் கொண்டு போய்ப் போடுகிறது. இவ்வாறு ஆயிரம் வருஷத்திற்கு ஒரு விசை யொரு அணுவை யந்த எறும்பு எடுக்கும் பக்ஷத்தில் மலை முடிவாக எத்தனை வருஷங்கள் செல்லும்?

—: ஆ! சின்னாஜி! என்ன சொல்லுவேன்? நீலகிரி யொருக்காலும் முடியவே முடியாது போலிருக்கிறதே. எத்தனை, கோடாநுகோடி வருஷங்கள், மகா கோடிவருஷங்கள், சங்ககோடி வருஷங்கள், அற்புதகோடி வருஷங்கள் செல்லுமே! அந்த எறும்பால் அம்மலை யப்புறப்படுமா? முடியவே முடியாதே!

—; முடியும், மகளே! எதுவும் எடுக்க எடுக்கக் குறையுமே யல்லாது ஒருபோதும் உயராது. கடவுள் அந்த எறும்புக்குத் தக்க ஆயுசைக் கொடுப்பாராகில் அதனால் அந்த நீலகிரிமலை சந்தேகமற அப்புறப்படும். ஆனால் எத்தனை கற்பகோடி வருஷங்கள் செல்லுமோ! தெரியாது. இதுவு நித்யமல்ல மகளே! என்று முடித்தார் திருமறை நாயகம்பிள்ளை. முடிக்கவே,

அபிராமியம்மாள் —: "மனோரஞ்சிதம்! கடவுள் சுயம்பென்றும் நித்தியரென்றுங் கேட்பது பெரிதல்ல. காதாற் கேட்பது போதாது. அதனை மனத்தால் உன்னி நினைக்கவேண்டும். ஸ்ரீமதி தெரேசம்மாளைப்போற் சுவாமியுடைய திருவடிகளைத் தொழுது அவருக்கு நல்ல சேவையும் ஊழியமுஞ் செய்யவேண்டும், அவளைப் போல் நினைக்கவேண்டும்; நடக்கவேண்டும்; ஆண்டவரை நேசிக்க வேண்டும். அவள் அடிக்கடி மணியடிக்கும்போதெல்லாம் —; "இதோ ஒரு மணிநேரங் குறைய, எனது ஜென்ம நாட்டை நோக்கி யொரு மணிநேரம் பிரயாணம் பண்ணியாயிற்று! எனது நித்ய சம்பாவனைக் கர்த்தாவை யண்டிவருகிறேன்" என்பாள்.

ஜெவக்சிஸ் என்னுஞ் சித்திரிகன் வெகு விநோதமான படங்களைச் சித்திரிப்பான். அவைகளை யெழுதும்போது வெகு உன்னிப்பாயும் நுட்பதிட்பமாயும் வேலை செய்வான். அப்போது யாரேனும் —: "ஏனிவ்வளவு கஷ்டப்படுகிறீர்! ஏனிவ்வளவு கவனம், ஏனிவ்வளவு ஜாக்கிரதை? ஏனிவ்வளவு விசாரம்? என்று கேட்டால், அவன் விடையாக—: "நான் நித்யகாலத்துக்கு வேலை செய்கிறேன்". என்பான்.

அவனுடைய கருத்தென்ன மகளே? தன்னைக் காலாகாலமாய் எல்லோரும் புகழும்படியாய் வேலை செய்தானல்லவா? அப்படிப் பேசினானல்லவா?

நித்யகாலமாய் நமக்கு நித்ய சம்பாவனையை யளிக்கக் காத்திருக்கும் நித்யதேவனுக்கு நாம் வேலைசெய்கிறோம் என்று சொல்வது அதிக நியாயமல்லவா? அவன் கால சம்பாவனைக்கு அவ்வளவு முயற்சி செய்திருப்பானாகில், நாம் நித்ய சம்பாவனைக்கு இன்னும் எவ்வளவோ முயற்சிசெய்ய வேண்டும்! மகளே! நித்யசம்பாவனையை அடைந்து நித்ய சுகத்தைப் பெறவேண்டுமாகில் நித்திய கடவுளைத் தழுவிக்கொள்" என்கிறார் ஸ்ரீமத் அகுஸ்தினர்.

மனோரஞ்ஜிதம்! உனக்குத் தாய் தந்தையர் உண்டு; பந்துக்கள் உண்டு; எல்லாமுண்டு. ஆயினும் முன்னொருக்கால் ஓர் விதவை தன் பிள்ளைகளுக்கு—:"நீங்கள் தந்தையில்லை யென்று கவலைப் படாதேயுங்கள், மக்களே! நித்யமாய் ஜீவித்து என்றென்றுஞ் சாகாத தந்தையொருவர் இருக்கிறார்" என்று சொன்னதுபோல் நானுஞ் சொல்லுகிறேன். நாங்கள் உனக்குத் தாய் தந்தையராயினும் என்றுஞ் சாகாத மெய்யான தகப்பனை நேசிக்க மேன்மேலும் பழகு, மகளே! நீ யவருடைய பாதார விந்தம்போய்ச் சேர்ந்த பின்னர் அவர் உன்னை நித்யகாலமாய்—மகளே யென்பார். நீ யவரை நித்யமாய், தகப்பனே, யென்பாய். ஆதலால் உன் மாதா பிதாக்களுடைய போதனைகளை யொருநாளும் மறக்காதே" என்று முடித்தார்கள்.

அப்போது மதுரநாயகம் பிள்ளை :—"காலை வேளையில் இவ்வளவு போதும், எழுந்திருங்கள்; வெளியிற் போவோம். காலத்தை யெப்போதுங் குந்திக் கழிப்பது கெடுதி. புத்தியை விருத்தி பண்ணுவதோடுகூட சரீரத்தையும் பயிற்சியினால் விருத்திசெய்ய வேண்டும்.'; என்று வெளிப்பட்டார்.

எல்லோரும் அவரைப் பின் சென்றார்கள். நானும் (சுந்தரம்) எப்போதும்போல மதுரநாயகம் பிள்ளையைப் பின்சென்றேன்.

அவரும் எனது தந்தையரும் உத்தியோக விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டு அவருடைய மாந்தோப்பைச் சுற்றினார்கள். எனது தாயாரும் அபிராமியம்மாளும் குணமணியம்மாளும் மாந்தோப்பு மத்தியில் நின்றுவிட்டார்கள். விஜயவல்லியும் மனோரஞ்ஜிதமும் இன்னுஞ் சில பிள்ளைகளும் தோட்டத்தில் வடபக்கத்தில் விளையாடிக்கொண்டிருந்தார்கள். நானுந் திருமறைநாயகம் பிள்ளையும் பிள்ளைகளுக் கருகாமையிற் சற்றேறக்குறைய ஒரு கூப்பிடு தூலையில் ஒரு பலாமரத்தடியில் உட்கார்ந்து எனது கல்வி விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தோம்.

அப்போது மனோரஞ்ஜிதம் நாங்களிருக்குந் திசையை நோக்கி நின்றுகொண்டு:—"ஏ! சின்னாஜி! இங்கே யோடிவாருங்கள்! குழந்தை, குழந்தை தண்ணீரில்! சீக்கிரம் ஓடிவாருங்கள்" என்று பதைத்துத் துடித்து அலறினாள்.

நாங்கள் அவளுடைய கூக்குரலைக்கேட்டு விரைவாய் எழுந்தோடினோம். ஓடிப் பார்த்தால் மார்பளவு வாய்க்காலில் மனோரஞ்சிதம் கழுத்தளவு தண்ணீரில் சட்டிக் கரியைப்போன்ற நாலுவயசு பிள்ளையைத் தூக்கி மார்போடு அணைத்துப் பிடித்துக்கொண்டு நிற்கிறாள். எனது தங்கை விஜயவல்லி கட்டுக்கரை மேலே நின்றுகொண்டு:—"மனோரஞ்சிதம்! பிள்ளையைத் தண்ணீரில் போட்டுவிட்டு மேடேறு! மேடேறு! அது பறைப்பிள்ளையாயிற்றே! அதை தொடலாமா? ஐயையோ! கர்மம்! கர்மம்! இப்படித்தான் கிறிஸ்துவர்கள்! அப்பா! உங்களுக்குத் தீண்டலில்லையா? நாளையோடே உங்கள் வீட்டுக்குக்கூட நான் வரவேமாட்டேன்" என்று மனோரஞ்சிதத்தை நிந்தித்தாள்.

நான் போனவுடனே எனது தங்கையைக் கன்னத்திற் பளீரென்று அறைந்து கட்டுக்கரையை விட்டுக் கீழே தள்ளிவிட்டு:—"நீ ரொம்பத் தீண்டலைக் கண்டாய்! மிருக ஜென்மமே! ஆபத்துவேளையிற் றீண்டலா? என்று சொல்லிக்கொண்டு வாய்க்காலில் தொப்பென்று குதித்துக் குழந்தையை வாங்கி மேட்டில் வைத்துவிட்டு மனோரஞ்சிதத்தைத் தூக்கிக் கரைமேல் விட்டேன். பிற்பாடு நானும் மேடேறி குழந்தையைத் தூக்கிக்கொண்டு மனோரஞ்சிதத்தை யழைத்துக்கொண்டு மாந்தோப்புக்குள்ளே வந்தேன். அதற்குள்ளாக எனது தங்கை விஜயவல்லி கோவென்று இரைச்சல் போட்டு அழுதுகொண்டு என் தாயாரிடம் ஓடினாள். வெகுதூரத்தில் நடவுநட்டுக்கொண்டிருந்த குழந்தையின் றாய் அலறிப் பதைத்துத் துடித்தோடி வந்தாள். தோட்டக் கடைசியில் உலாவிக்கொண்டிருந்த எனது தந்தையரும் மதுரநாயகம்பிள்ளையுங் கடுகி வந்தார்கள். அபிராமியம்மாளும் குணமணியம்மாளும் ஓடிவந்தார்கள். எனது தாயார் விஜயவல்லி கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு வரும்போது:—"சுந்தரம்! உனக்கெப்போதுங் கைப் பதஷ்டம்! பிள்ளைகளையடிக்க நீ பின் வாங்குகிறதில்லை. கட்டுக்கரையில் நின்றுகொண்டிருந்த பிள்ளையை யேனடித்தாய்? ஏன் கீழே தள்ளினாய்? நீ சுத்த முட்டாள்...!" என்று கோபித்துக்கொண்டார்கள்.

நான் விடையாக:—"அடிக்க எனக்கென்ன பைத்தியமா? அங்கு விடவிடவென்று நடுக்கிக்கொண்டு நிற்கும் மனோரஞ்சிதத்தைப் பாருங்கள். அவளைக் கேளுங்கள்; சொல்வாள்" என,

எனது தாயார் சிவகாமியம்மாள் :—“மனோரஞ்ஜிதம்! என்ன நடந்தது?” என,

அபிராமியம்மாள் :—‘மகளே! ஏன் நனைந்துபோயிருக்கிறாய்? இங்கு வா’ என்று அழைத்துத் தனது முன்றானையால் அவள் தலையைத் துவட்டித் திருமறைநாயகம் பிள்ளையின் அங்கவஸ்திரத்தை வாங்கி யவளுக்குக் கொடுத்து ஆடைகளை மாற்றிக்கொள்ளச் சொன்ன பின்னர் :—“மனோரஞ்ஜிதம்! நடந்ததென்ன? ஏன் விஜயவல்லி யழுகிறாள்? நீ நனைந்ததற்குக் காரணமென்ன? என்று கேட்க,

மனோரஞ்ஜிதம்! —“அம்மா! அதோ அங்கே தூக்குபோட்டுத் தொங்கலாடுகின்றதே அந்த மாமரத்தடியில் நானும் விஜயவல்லியும் பள்ளாங்குழி விளையாடிக்கொண்டிருந்தோம். அப்போது இந்தக் குழந்தை யேணையில் தூங்கிக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரம் பொறுத்துத் தொட்டிலைவிட்டு மெல்ல இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, அந்த வாய்க்காலுக் கக்கரையில் வெகு தூலையில் நடவு நட்டுக்கொண்டிருக்குந் தன் தாயை நோக்கி யழுதுகொண்டு அந்தக் கரைமேலே கொஞ்சதூரம் போயிற்று. சற்றுப்பொறுத்துத் தொப்பென்று சத்தங் கேட்டது. பார்த்தால் பிள்ளையைக் காணோம். உடனே நான் எழுந்து :—“விஜயவல்லி! பிள்ளை வாய்க்காலில் பெருக்குத் தண்ணீரில் விழுந்துவிட்டது. ஓடிவா! போவோம் என்று சொல்லி, இருவரும் வெகு ஜல்தியாய் ஓடிப் பார்க்க, பிள்ளை தண்ணீரைக் குடித்துக்கொண்டு வாயை வாயைத் திறந்தது. நான் தணமே :—“விஜயவல்லி! நீ நெட்டையாயிருக்கிறாய்; உனக்குத் தண்ணீர் அண்டும். எனக்கண்டாது. நீ தாமதமின்றிக் குதித்துப் பிள்ளையைத் தூக்கு இல்லாவிட்டால் பிள்ளை செத்துப்போகும்” என்று சொன்னேன்.

அப்போது விஜயவல்லி:—“ஓ! பறைப் பிள்ளையை நாம் தொடலாமா? நமக்கென்ன? அது போனாற் போகட்டும். நீ வா; போவோம்” என்று சொல்லிவிட்டாள். நான் தாமதமின்றித் தண்ணீரிற் குதித்துப் பிள்ளையைத் தூக்கி மார்போடு அணைத்துப் பிடித்துக்கொண்டு :—‘விஜயவல்லி! இப்போதாகிலும் பிள்ளையை வாங்கு, நான் மேலேறி வருகிறேன்” என;

விஜயவல்லி :—"பறைப் பிள்ளையைத் தொடுவேன் என்று நினைக்கிறையா ? பிள்ளையை யெறிந்துவிட்டு மேலேறி வா" என்றாள்.

நான் :—"விஜயவல்லி ! நீ எனக்கு அக்கா அல்ல ? சுவாமி! சுவாமி ! நீ தொடாமற் போனா லிருக்கட்டும். உனது தாவணியை யாகிலும் விடு. நான் ஒரு கையாற் குழந்தையைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையாற் றாவணியைப் பிடித்து மேலேறுகிறேன். அது பறைப்பிள்ளை யென்றால் என்ன நம்மைப்போல அதுவும் ஒரு உயிரல்லவா ? ஐயோ ! அதைச் சாகவிடலாமா ? நமக்குப் பாவமாயிற்றே. அக்கா ! எனக்குக் குளிருகிறதே. சீக்கிரம் விடு. நான் ஏறிவருகிறேன். இல்லாவிட்டால், சுந்தர அத்தானையாகிலுங் கூப்பிடே ! சின்னாஞியைக் கூப்பிடே !" என்று கெஞ்சிக் கெஞ்சிப் பார்த்தேன். அவளுக்கு மனசு கொஞ்சங்கூட இரங்கவில்லை. அதற்கு விரோதமாய் என்னென்னவோ சொல்லி யென்னைத் திட்டிக் குழந்தையைத் தண்ணீரிற் போட்டுவிட்டு மேலேறும்படியாய்ச் சொல்லிக்கொண்டிருந்தாள். நான் குழந்தையை விடவே யில்லை. சற்று நேரத்துக்குள்ளே சுந்தர அத்தான் ஓடிவந்து விஜயவல்லியைக் கன்னத்தி லறைந்து கட்டுக்கரையைவிட்டுக் கீழே தள்ளிவிட்டு வாய்க்காலிற் குதித்துப் பிள்ளையை வாங்கி மேட்டில் வைத்துவிட்டு என்னையுங் கரையில் தூக்கிவிட்டார்கள். இதுதான், அம்மா ! நடந்த சங்கதி" என்றாள்.

எனவே, அங்கு இச்சங்கதியைக் கேட்டுக்கொண்டிருந்த குழந்தையின் றாய் ஓட்டமா யோடி மனோரஞ்ஜிதத்தின் காலிற் சாஷ்டாங்கமாய் விழுந்து அவளுடைய கால்களுக்குக் கணக்கில்லாத கும்பிடு போட்டு :—"தாயே ! மகராசி ! நீ நல்லா இருக்க ! எனக்குப் பிள்ளைபிட்சை கொடுத்த புண்ய துரைசானி ! என் கண்ணே ! கண்மணியே ! நீ யில்லாவிட்டால் என் பிள்ளை யென்ன கதியாயிருக்கும் ! என் புருஷன் பேதியி லிறந்துபோய் இந்த குழந்தையைக் வைத்துக்கொண்டு வனவாசம் பண்ணுகிறேன். அம்மா ! சொக்கநாத வம்மிசமே ! இப்போதே யுனக்கு இவ்வளவு தர்மசிந்தையிருக்குமானால், உன் வயசுகாலத்தில் நீ யென்னமாயிருக்கமாட்டே ? பூங்காவனமே ! பூந்தோட்டமே ! நீ போகிற விடமெல்லாம் உன்மேலே பூமாரி பெய்ய ! நீ யின்றைக்கு என் பிள்ளைக்குத் தாயாய்

விட்டாய். என்னம்மணி! என்று அவளைப் பலவாறாய்த் தோத்திரம் பண்ணினாள்.

அப்போது சந்திரசேகரம்பிள்ளை :—" ஓ! பிள்ளை! நீ யழாதே; உனக்குக் கடவுள் கிருபை செய்தார். உன் குழந்தையை யெடுத்துக்கொண்டு போய் இனி ஜாக்கிறதையாய்ப் பிழை" என்று அந்தப் பஞ்சம ஸ்திரிக்குச் சொல்லிவிட்டு,

எனது தங்கையை நோக்கி:—'விஜயவல்லி! நீ செய்தது பெரும் பிசகு. ஆபத்து வேளையில் ஜாதி பேதம் பார்க்கலாமா? எல்லா உயிர்களையும் நமது சொந்த உயிரைப்போலவே பாவிக்க வேண்டாமா? மனோரஞ்ஜிதத்துக்குப் பத்து வயசுமாத்திர நடக்கிறது. உனக்குப் பதின்மூன்று பிராயமாயிற்று. நீ நெட்டையாய் வாட்டசாட்டமா யிருக்கிறாய். அவள் மட்டமா யிருக்கிறாள்! நீ தண்ணீரில் இறங்கி குழந்தையைத் தூக்கவேண்டியிருந்தது. அப்படி செய்யாம லிருந்ததோடுகூட மனோரஞ்ஜிதம் கஷ்டப்படும்போது நீ யவளுக்கு யாதோர் சகாயமுஞ் செய்யவில்லை. இதுவுமன்றி அவள் தூக்கின குழந்தையைத் தண்ணீரில் விட்டுவிடச் சொன்னாய்! அது அடுக்குமா? சுந்தரம் உன்னை யடித்துக் கீழே தள்ளினது ஞாயம். இனி யெப்போதுந் தர்ம சிந்தனையோ டிரு. நாளையும் பின்னையும் அப்படி செய்யாதே" என்று அவளைக் கண்டித்துவிட்டு, என் றாயாரைப் பார்த்து:—"சிவகாமி! என்ன செய்கிறது? வழக்கம் பிரதானம், நாம் சிறுபோது பிள்ளைகளை யெவ்வாறு வளர்த்து நடத்துகின்றோமோ அவ்வாறே ஜீவியகால மெல்லாம் நடப்பார்கள். 'தொட்டிற் பழக்கஞ் சுடுகாடுவரையில்' என்று பழமொழி ஒன்றுண்டு. பாடிப்பாடி யளந்தபோதிலும் பதர் அரிசியாகிறதில்லை. வாரி வாரி வாட்ட பொலி போட்டாலும் நெல்லு களத்திலேயே, கருக்காய் காற்றிலேயே. நூற்று நூற்று சொன்னபோதிலும் அபிராமி அபிராமியே! சிவகாமி சிவகாமியே. மனோரஞ்ஜிதம் இன்று நிறைவேற்றின வீரிய கிரியை அபிராமியினுடைய கிரியை. விஜயவல்லி செய்த வெட்கக் கேடு சிவகாமிக்குச் சொந்தம். வழிகாட்டி குருடனாகில்..." எனவே,

எனது தாயார்:—"என்ன அப்படிச் சொல்லுகிறீர்களே? எனது ஆத்திரத்தைத் தூண்டாதேயுங்கள், நான் விஜயவல்லிக்குத்

துர்ப்போதனைகளைப் போதித்தேனா? அவள் தூக்கின குழந்தையைத் தண்ணீரிற் போடச் சொன்னேனா? இதென்ன காலக்கேடாயிருக்கிறது?" என்று எரிந்து வெடுக்கென்று பேச,

எனது தந்தையர் :—"சிவாமி! கோபித்துக் கொள்ளவேண்டாம். பதைக்காமற் காரியங்களை யுய்த்துணர். என் றாற்பரியத்தை நீ கண்டுபிடிக்கவில்லை. தொட்டிற்பழக்கஞ் சுடுகாடுவரையிலும் என்றேன். இதனை மறந்துவிட்டு இன்று அகஸ்மாத்தாய் நடந்த ஒரு விசேஷத்தை யெடுத்துக்கொண்டு ஆடுகிறாய்; அதுவல்ல என் கருத்து. குழந்தைப் பருவத்திற் குடித்த பாலின் பலத்தால் விரிந்த நெஞ்சு எப்போதும் பலமாயிருக்கும். பாற் குறைவால் மெலிந்த மார்பு கடைசிவரையில் பலவீனமுள்ள மார்பே. இவ்வண்ணமே சிறுவயதுமுதற் புண்ணியத்திலுஞ் சன்மார்க்கத்திலும் பழகிய பிள்ளைகள் எப்போதும் புண்யவான்களா யிருப்பார்கள். துன்மார்க்கத்திற் பழகினவர்கள் எப்போதுந் துன்மார்க்கரா யிருப்பது திண்ணம். ஒன்றிலும் பழகாத பிள்ளைகள் கசடரா யிருப்பார்கள்.

சிவகாமி! சற்று சாவகாசமாய் யோசனைபண்ணு. நீ கமலாலயத்திற்கு வந்து எவ்வளவோ நாளாயிற்று. நாடோறும் எதிர்வீட்டுக்கு முன் வீதியிற் கூடும் ஏழைகளின் பெருங் கூட்டத்தைப் பார்க்கிறாய். ஏன் கூடுகிறார்கள்? தேனும் மணமும் எங்கேயோ தேனீக்களும் அங்கேயே. அவைகள் பூக்கவறியா முட்செடிகள் மீது பறக்குமா? உன் வீட்டுக்கும் அபிராமி வீட்டுக்குங் காதமல்ல தூரமல்ல. நடந்தால் நாலு தப்படிகளாகா. அவள் வீட்டுக்கு நித்தியம் ஆயிரம்பேர் வந்துகொண்டே யிருக்கிறார்கள். உன் வீட்டுக்கு யாரையுங் காணோம். ஏனிந்த வித்தியாசம்? அறியாதவர்கள் யாரேனுந் தப்பித் தவறி யுன் வீடு தேடி வந்தால் ஈயாமலும் உபசரியாமலும் ஓடவோடத் துரத்தி யடிக்கிறாய். அதுவும் போதாதாம் என்றதுபோல் விஜயவல்லியையும் ஏவிவிடுகிறாய்! தாயைப்போற்பிள்ளை, உன்னைப்போல் விஜயவல்லி! அபிராமியைப்போல் மனோரஞ்ஜிதம். அபிராமியின் கரங்கள் தர்ம மென்னுந்தேனை வாரி யேழைகள்மீது பொழிகின்றன. மான் ஓர் அடி தாண்டுமாகில் குட்டி யைந்து அடிகள் தாண்டுமாம். தாயின் கையினின்று பூமாரி சொரியுமானால் பிள்ளையின் கரத்தினின்று தேன்மாரி சொரியாதா! கண் கண்டால் கைகள் செய்யும். மாதா முன்னே போனால் மகள் பின்னே போவாள். தாய் எதைச்செய்வாளோ பிள்ளை யதனைச் செய்ய ஆசிக்கும். நீ பார்

க்கிறாயே; அபிராமி யெவ்வித தர்மங்களைச் செய்கிறாள்? ஒரு சம
யாசமயத்தில் அது கிறிஸ்துவேதப் பைத்திய மென்று நினைக்கி
றாய். நீ யப்படி யெண்ணுவது சரியல்ல. எவ்வேதத்தாருக்கும் பிச்
சை, தான, தர்மங்கள் பொது. அபிராமியைப் பார்; தினந்தோ
றும் பிச்சையிடுகிறாள். அவள் ஏழைகளுக்குத் தியாகங் கொடுக்
கும்போது அவளுடைய மகளும் அவளோடுகூடவே யிருந்து தர்
மஞ்செய்கிறாள். அபிராமி கோவிலுக்குப் போவாளா? மனோரஞ்
ஜிதமுங் கூடப் போகிறாள், தாய் ஜெபம்பண்ணுவாளாகில் மகளுஞ்
ஜெபம்பண்ணுகிறாள். அபிராமி உரோகசாலைகளுக்கு நோயாளி
களைச் சந்திக்கப்போவாளா? மகளும் பின்னாலேயே போகிறாள்.
அபிராமி தன் ஜீவியகாலத்தில் எத்தனைபேருக்குச் சகாயம்பண்ணி
யிருப்பாள். நான் எத்தனையோ தடவை அவள் தன் வீட்டில் அநே
கருக்குக் காயங்கட்டிச் சொஸ்தமாக்கினதைப் பார்த்திருக்கிறேன்.
சிலவேளையில் சிறுபிள்ளைகள் கனத்த காயம்பட்டு ஆருட்டப்படும்
போது அவள் அவர்களை யெவ்வளவோ அன்போடு அரவணைத்து
விசிறிபோட்டு விசிறி யவர்களுக்குப் பராக்குவருத்தி யவர்களு
டைய காயங்களைக்கட்டி யனுப்புவாள்! அவளுடைய ஜீவகாருண்
யத்தை யார் சரியாய் மதிப்பிட்டுக் கண்டுபிடிப்பார்கள்! இவ்வாறு
ஒவ்வொரு தர்மத்தைச் செய்யும்போதும் அவளுடைய அருமை
மகள் சமீபத்திலிருந்தே பார்த்துக்கொண்டிருக்கிறாள். அவளு
டைய தர்ம பாடசாலையில் வாசித்த மனோரஞ்ஜிதத்துக்குத் தாயின்
ஜீவகாருண்யமும் நன்னடக்கையும் புண்யங்களும் இல்லாமற் போ
குமா? அபிராமியினுடைய பாடப் பயிற்சியினாலேயே யின்று
மனோரஞ்ஜிதம் ஓர் உயிரை யிரட்சித்தாள். "தாயைப்போற்
பிள்ளை" யென்ற பழமொழியை மறக்காதே.

சிவகாமி! அபிராமி யிடத்தில் இனிமேலாகிலுந் தர்மஞ்
செய்யக் கற்றுக்கொள். உன் பிள்ளைகளுக்குங் கற்றுக்கொடு.
இன்று விஜயவல்லி செய்ததைக் கேட்கும்போது எனக்கு வெட்க
மாயிருக்கிறது, உன் பிள்ளைகளுடைய நன்னடக்கையைக் கவனி.
முந்த நீ நல்லொழுக்கத்தைக் கற்றுக்கொள்; தானே யவர்கள்
உன்னைப் பின்செல்வார்கள். நாம் மதுரநாயகம் பிள்ளையைப்போல்
ஐசுவரியவானா யிராவிடினும் நமக்குங் கடவுள் போதுமானமட்டும்
படியளந்துவருகிறார். ஆனதைப்பற்றி யுனது அந்தஸ்துக்குத் தக்க
தர்மங்களைச் செய்ய சகல வித முயற்சிகளும் எடுத்துக்கொள்"
என்று சொல்லி முடித்து வீட்டுக்குப் போய்விட்டார்.

எல்லோருங் கணக்கு மிதமின்றி மனோரஞ்ஜிதத்தைக வாழ்த்தினார்கள். விஜயவல்லியை பொருவாறு சிந்தித்தார்கள்.

பிற்பாடு ஒவ்வொருவரும் தத்தம் வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.

---

## 10-ம் அத்தியாயம்.

ஞானோபதேசத் தொடர்ச்சி. மனோரஞ்ஜிதத்தின் பால நன்னடக்கை. இரக்கம் எல்லா நற்குணங்களுக்குந் தாய். கன்னெஞ்சத்தின் அவலக்ஷணம். விஜயவல்லி கீர்த்தாக்ஷண்யமுள்ள சிறுமி; மனோரஞ்ஜிதம் சிறந்த பரோபகாரி.

துர்வழக்கம் உடனே யொழிந்துபோகிறதில்லை. வழக்கம் இரண்டாஞ் சுபாவம் என்று சொல்லப்படும். நல்ல வழக்கமேனுஞ் சரி; துர்வழக்கமேனுஞ் சரி; யாரேனும் அதிற் பழகிவிட்டார்களா! அதனை யொழிப்பது மகா அரிது. விசேஷமாய்த் துர்வழக்கத்தை நிவர்த்திப்பது பெரும் பிரயாசையாம்!

இரண்டு மூன்று மணி நேரத்துக்கு முன்னதாய் எனது தந்தையர் என் முயாருக்குந் தங்கைக்குந் தர்மத்தைப்பற்றி விஸ்தார கதாப்பிரசங்கம் பண்ணினர். அது விழலுக் கிறைத்த நீராயிற்று. ஓடுந் தண்ணீரில் வரைந்த எழுத்துக் கொப்பாயிற்று. எனது தந்தையர் சொன்னது போல் வழக்கம் பிரதானம்.

அன்று மாலை சுமார் மூன்று மணியிருக்கும், இராஜமார்க்கத்தில் இங்கும் அங்குந் தடுமாறிக்கொண்டு அலைந்த ஒரு விருத்தாப்பியக் குருடனை யெங்கள் தோட்ட வீடு வரையிற் சில மாட்டுக்காரப் பிள்ளைகள் கொண்டுவந்துவிட்டுப் போனார்கள். நான் அப்போது எங்கள் வீட்டுக் கெதிரில் இருந்த பாக்குத் தோப்பிற் குரிச்சிபோட்டு உட்கார்ந்து பேர்போன ஆங்கிலேய வித்வானான மில்ட்டனுடைய (The Paradise lost) "இழந்துபோன மோக்ஷம்" என்னும் பிரபந்தத்தை வாசித்துக்கொண்டிருந்தேன்.

அத்தருவாயில் அந்தகன் தட்டித்தடுமாறிச் சுற்றுக்கட்டுச் சுவரைக் கடந்து வீட்டுவாசற்படிக் கெதிரில் முற்றத்தில் நின்று கொண்டு :—" அம்மணி! தல்லி, நேனு கன்னில்லாத கபோதி.

இரெண்டு நாளாகா அந்நந்தன்னீரில்லாமே பசியினாலே வருந்து கிறேன். தல்லி! கொஞ்சமு அன்னமு போடுங்கலே, வயிறு பசிக்கி கிறே! குலேபரைத்துத் துடிக்கிறே" என்று ஐந்து நிமிஷ நேரங் கூவிக்கொண்டிருந்தான்.

சற்றுநேரம் பொறுத்து:— "போ! போ! நொள்ளேயா, அம்மாள் படுத்திருக்கிறார்கள். எழுந்துவரமாட்டார்கள். அப்பா தூங்குகிறார்கள். சத்தம்போடாதே போ! போ!" என்று ஒரு சத் தங் கேட்டது.

குருடன்:—"தர்ம துரைசானி! காதை யடைக்கிறே, கொ ஞ்சம் பச்சத்தண்ணிரானும் ஊத்துங்கலே" என்றான்.

—"அதுகூட இல்லையடா! போடா. கரு கரு வென்று கூவாதே" என்று மறு சத்தம் சப்தித்தது.

அந்தகன் மீண்டும் மீண்டும் வருந்தி வருந்தி கெஞ்சினான். இரண்டொரு நிமிஷங்கள் சென்றபின்னர் குருடன் வெளியில் வந்து மடேரென்று குப்புற விழ, தெருவாசற்படிக்கதவு படீரெ ன்று சாத்தப்பட்டது. விழுந்தவன் குப்புறக்கிடந்தவண்ணமாய்:— "அம்மணி நீயு நல்லா இருப்பையா? ஐயோ தேவடா! தேவடா! மூக் குப் போயிச்சே! நெற்றிப் பொத்துப்போயிந்தே! ஆதி நாராயணா! ஆதிநாராயணா! நீவே கேளு! நீவே கேளு!" என்று அலறினான்.

நான் இந்த அங்கலாய்ப்புக்குரிய அபய சத்தத்தைக் கேட்டுத் தோப்புமத்தியிலிருந்து ஓடிவந்தேன். நான் வருகிறதற்குள்ளாக எங்கள் வீட்டுக்கருகாமையில் இருக்கும் மகிழமரத்தடியில் தனது தங்கை இரவாமணியோடு விளையாடிக்கொண்டிருந்த மனோரஞ்ஜி தம் அவனுடைய கூக்குரலைக் கேட்டு ஓட்டமாய் ஓடிவந்து குப்பு றக் கிடந்த விருத்தாப்பியனைத் தூக்கி யுட்காரவைத்துத் தனது தாவணியை யவிழ்த்து அவன் முகத்தில் வடியும் இரத்தத்தைத் துடைத்துக்கொண்டு:—"தாத்தா! அழாதேயுங்கள். நான் உங் களை அம்மாளிடம் இட்டுக்கொண்டுபோகிறேன். அவர்கள் உங் கள் காயங்களைக் கட்டி யாற்றிவிடுவார்கள்" என்று அவனுக் குப சாரஞ் சொல்லிக்கொண்டிருந்தாள்.

மனோரஞ்ஜிதம் இவ்வாறு அக் கபோதியை யுபசரிக்கக்கண்ட நான் கமுகுத்தோப்பின் வேலியில் வைக்கப்பட்டிருந்த கதவினி

டம் வந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். பெண்மணி துடைக்கத் துடைக்க அவள் தாவணி யிரத்தத்தாற் றோய்ந்துபோயிற்று, சரிகைபோட்ட அவளுடைய வெள்ளைத் தாவணி முற்றிலும் இரத்த மயமாய்ப் போய்விட்டது.

இரத்தத்தைப் பார்க்க எனக்குப் பதைத்தது. ஓடி அந்த விருத்தாப்பியனை விசாரிக்கலாமென்று ஆவல் என்னிருதயத்தில் மூண்டு எரிந்தது. ஆனால் மனோரஞ்ஜித மனோன்மணியின் ஜீவகாருண்யம் எவ்வளவென்று அறியவேண்டி யங்கு பலவந்தமாய் நின்றேன். அந்த வயோதிகனைப்பார்த்தால் இராஜவடிவமா யிருந்தான். அவனுக்கு வயசு எண்பதிருக்கலாம். அவனுக்குத் தலை நிறைய மயிரிருந்தது. அவன் சிரசைப் பார்த்தாற் பஞ்சு கூடையைச் சுமந்ததுபோலிருந்தது. அவனுடைய சரீரந் திரைந்து வில்லைப்போல் வளைந்து சடசடவென்று எங்கோமு நடுங்கிக்கொண்டிருந்தது. இந்த நிர்ப்பாக்கிய அந்தஸ்திலிருக்கும் அந்தகனை யொரு நாய் கடித்துப் பீறிவிட்டு உள்ளே யோடிக் கதவைச் சாற்றிக் கொண்டதையும், ஓர் செம்மறிப்புருவை காயங்களைத் துடைத்து இரத்தத்தாற் றோய்ந்து போகிறதையும் நான் பார்த்தபோது என்னிருதயம் வெடித்துப் போயிற்று. கண்ணீர் தாரை தாரையாய் வழிந்தோடிற்று! ஆத்திரம் என்னை வாரிக்கொண்டுபோயிற்று. என் கால்கள் என் சடத்தைத் தாங்கமாட்டாமல் துள்ளித்துடித்தன. ஆயினும் என் தாயாரையும் தங்கையையும் முற்றுந் திருத்தக் கருதி அங்கு கட்டாயத்தினால் ஸ்தம்பித்து நின்றேன்.

என்ன செய்கிறாள் மனோரஞ்ஜிதம்? தட்டித்தடுமாறிக் குருடனைத் தூக்கிவிட்டு :—“ தாத்தா! என் தலைமேலே யொரு கையை வைத்துக்கொள்ளுங்கள், வேறோர் கையால் இந்தக் கோலை யூன்றிக்கொண்டு என் பின்னாலே மெல்ல நடந்துவாருங்கள், எங்கள் வீட்டில் அம்மாள் உங்கள் காயங்களைக்கட்டிப் பக்குவம்பண்ணுவார்கள். உங்களுக்குச் சாப்பாட்டுக்குக் குறைவில்லாமல் விசாரிப்பார்கள், துணியில்லாமல் நிர்வஸ்திரதாரியா யிருக்கிறீர்களே ; வீட்டுக்கு வாருங்கள், எனது துப்பட்டியில் ஒன்று கொடுக்கிறேன், ஆஜி, சின்னம்மாள், சின்னாஜி, எல்லோரும் உங்களுக்கு வேண்டியவையெல்லாஞ் செய்வார்கள் ; பயப்படாதேயுங்கள் ” என்று சொல்லிக்கொண்டு மெதுவாய் இவள் முன்னாலே நடக்க,

விருத்தாப்பியன்:— "அம்மா! நா ரத்னமா! நீவு பில்லனு! லேக்க தர்ம தேவத்தனு? நீ மேதக அலங்காரமுனுச் சூச்சுட்டக்கு நாக்குக் கன்னுலு லேவே" என்று பிரலாபித்துக்கொண்டு மனோ ரஞ்ஜிதத்துக்குப் பின்னாலே மெல்ல நடந்தான்.

நான் இனி தாமதமின்றி வெளியிற் புறப்பட்டு :— "உரூப லாமணியம்மாள் மனோரஞ்ஜிதத்தின்பேரில் சில தினங்களுக்கு முன் சொன்னவைகள் இப்போதே நிறைவேறத் துவக்கிவிட்டன. அப்பெருமாட்டி தன் பேத்தியை நோக்கி:—"மகளே! நீ கண்ணில் லாருக்கும் கண்ணாவாய்" என்றார்கள். இதோ மனோரஞ்சிதம் இன்று குருடனுக்குக் கண்ணாகிவிட்டாள். "நீ நடையில்லாருக்கு ஊன்று கோலாவாய்" என்றார்கள். இதோ நடைதளர்ந்த விருத்தாப்பிய னுக்கு ஊன்றுகோலாகிவிட்டாள். ஓ மனோன்மணியே! மனோரஞ் ஜிதமே! ஏன் என்னைப் புண்ணாக்குகிறாய்? என்று மனத்திலெண் ணிக்கொண்டு ஓடித் தெருக்கதவைப் பட்டுப்பட்டென்று தட்டி னேன். சற்றுப் பொறுத்து விஜயவல்லி யோடிவந்து கதவைத் திறந்தாள். நான் காலை பதினொரு மணிக்குச் செய்ததுபோல அவள் கன்னத்திற் பலமாய்ப் பளீரென்று அறைந்துவிட்டு வீட் டுக்குள்ளே கடுகிப்போனேன். அங்கு என் மாதா கண்வளர்ந்து விழித்துக் கட்டிலில் உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்கள் —: "அப்பா! மகனே! என்ன வெளியில் அழுகைக் குரல்? ஏன் வேகு! வேகு! என்று ஓடிவருகிறாய்?" என,

நான்—:"நீங்கள் வெளியிற்போய்த் தெருவாசற்படியில் விஜய வல்லி செய்திருக்கும் வேலையைப் பாருங்கள். அப்பா அவ ளுக்குக் காலையிற் சொன்ன புத்திமதிகளெல்லாங் காடேறிவிட் டன" என்று விடைசொல்லிவிட்டு மேன்மாடிக்கு ஓடினேன். அங்கு எனது தந்தையார் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார். நான் விரைந்தோடின சந்தடியைக்கேட்டு அவருந் துயிலைத் தவிர்த்து எழுந்து கண்களைத் துடைத்துக்கொண்டு—: "ஏன் சுந்தரம்? இந் நேரத்தில் வழக்கத்திற்கு விரோதமாய் நீ யிங்கு வந்த வயணமெ ன்ன? ஏன் விஜயவல்லி ஓலமிடுகிறாள்? என்ன நடந்தது?" என,

நான் —: அப்பா! கீழே வந்து பாருங்கள். ஆ! விஜயவல்லி யின் கொடுமையை யென்னவென்று சொல்லுவேன்? என்று

சொல்லியவளைத் தாழ அழைத்துவந்து தெருவாசற்படியில் ஏராளமாய்ச் சிந்திக்கிடந்த இரத்தத்தைக் காட்ட,

எனது தந்தையர் —: "ஆ! ஆ! இது யார் செய்த வேலை? என்ன இவ்வளவு இரத்தம்? விஜயவல்லியா? யாரை? மனோரஞ்சிதத்தோடு சண்டை போட்டு அவளைக் காயப்படுத்தி விட்டாளோ? மனோரஞ்ஜிதம் எங்கே?" என்று வாயில் வாயில் அடித்துக்கொண்டார். எனது தாயார் ஒருபக்கத்தில் வெருவாய்க் கிலேசப்பட்டுக் கைகளை முறித்துக்கொண்டு —: "மகளே! யென்ன நடந்தது? யாருக்கு இத்தகைய அவகேடு வந்தது. மனோரஞ்ஜிதத்துக்கா? சொல்லப்பா! எனக்குக் குலை யெல்லாம் நடுங்குகிறது" என்று ஆருட்டப்பட,

நான் —; இல்லை, அம்மா! மனோரஞ்ஜிதத்திற்கு யாதொன் றுமில்லை" என்று என் தாய்தந்தையரின் பயத்தைத் தவிர்த்து, அவர்களை மதுரநாயகம் பிள்ளையின் வீட்டுக்கு அழைத்துப் போனேன். அங்கு அபிராமியம்மாள் அந்தகனுடைய நெற்றியிற்பட்ட பலத்தகாயத்தைப் பக்குவமாய்க் கட்டி யதன்பேரில் ஏதோ தைலத்தை விட்டுக்கொண்டிருந்தார்கள். எனது பிதா மதாக்கள் அங்கு கீழே சிந்திக்கிடக்கும் இரத்தத்தையும் மனோரஞ்ஜிதத்தின் றுவணியில் தோய்ந்திருக்கும் உதிரத்தையுங் கண்டு ஒவ்வொருவராய்—: "அம்மா! மனோரஞ்ஜிதம்! நீயும் விஜயவல்லியும் இப்படிச் செய்துவிட்டீர்களா?" என,

மனோரஞ்ஜிதம் —: "இல்லை அத்தையம்மா! நான் ஒன்றுஞ் செய்ய வில்லை. உங்கள் வீட்டு வாசற்படியில் இந்த தாத்தா தாழக் குப்புறவிழுந்துகொண்டு —: அம்மணி நீ நல்லா இருப்பாயா? ஐயோ! தெய்வமே! நெற்றி பொத்துப் போயிற்றே. ஆதி நாராயணா" என்று அழுது பரிதவித்தார். நான் ஓடி யவர்களைத் தூக்கி விட்டு வீட்டுக்கு அழைத்துவந்தேன். அம்மாள் காயங் கட்டுகிறார்கள். இது தான், அத்தையம்மா எனக்குத்தெரியும்" என,

எனது தந்தையர் —: "விஜயவல்லி நீ யென்ன செய்தாய்? உள்ளதைச் சொல், இல்லாவிடில்......உன்னை......பார்" என்று பயமுறுத்த,

விஜயவல்லி :— ஆஜி! நீங்களும் அம்மாளும் படுத்துத் தூங்கினீர்கள். அப்போது இந்தப் பெரியவர் நமது வாசலில் ஏகமாய்ச் சும்மா கூவினர். நான் அவரை வெளி வாசற்படி வரைக்கும் அழைத்துவந்து போகச் சொன்னேன். அப்போது போகேனென்றார். நான்......நான்......" என்று சற்று மயங்கித் தயங்க,

சந்திரசேகரம் பிள்ளை —: "என்ன? நான்......? நான்......? சொல்.........குறையுஞ் சரியாச் சொல்" என்று கோபித்துக் கொண்டார்.

அப்போது விஜயவல்லி —: "அப்பா! நீ வெளியிற் போவென்று அவரைப் பிடித்துத் தள்ளினேன். அவர் வெளியிற்போய் விழுந்தார். நான் பயந்துகொண்டு உடனே கதவைச் சாற்றிவிட்டேன். நான் கதவைச் சாற்றும்போது சுந்தர அண்ணன் பாக்குத்தோப்பி லிருந்துகொண்டு —: 'விஜயவல்லி! நிஜந்தானா? என்றார்கள் எனக்கிதுதான் தெரியும்" என்று ஏறக்குறைய உள்ளதைச் சொல்லிவிட்டாள்.

என் தகப்பனர் —: "நீ வீட்டுக்கு வா: சாயந்திரம் பேசிக் கொள்ளுகிறேன். உனக்குக் காலமே சொன்னதெல்லாம் வியர்த்தமாயிற்று. உனக்கு எப்போது நல்ல புத்தி வருமோ! தெரியவில்லையே! இவ்வளவு காலமாய் மனோஞ்ஜிதத்தோடு பழகுகிறாயே! நீ யவளைப் போல் நடக்கக்கூடாதா?" என்று முறையிட்டுக்கொண்டு குருடனைப்பார்த்து —: ஐயா! பெரியவரே! மன்னிக்கவேண்டும். இந்தத் தகாதவேலை செய்த பிள்ளை நமது குழந்தைதான். மதளைப் புத்தியினல் அப்படிச் செய்து விட்டது. ஆதலால் தயைசெய்து அதன் குற்றத்தை மன்னித்துக் கொள்ளுங்கள்" என,

அந்தகன் —: "மஹாராஜ்! நமபளுக்குக் கோபமில்லே. அந்த லடுக்கி நீங்களுடைய குலந்தையா? நம்பலே முதுகிலே கைபோட்டு பலமா தல்லினல் அந்தச் சோட்டிபேட்டி. நம்கிலே கர்ணம்போட்டு விளுந்தோம். நாக்கு மூக்கு போயிந்தி. நம்பளுக்கு தவபகிலிப் போயிந்தி. நம்பளுக்கு நிண்டா நெத்துருச்சோதமு" என,

சுற்றி நின்ற எல்லோருங் கொல்லென்று சிரித்தார்கள். சிரிக்கவே, குருடன் —: மஹாராஜ்! மஹாராஜ்! நவபேடா. நம்பளுக்கு அரவ தெளியாது. நீங்களுடைய பேச்சு நாங்களுக்கு நள்ளத்

தெளியாது. நம் ரஜபுத்ர. நம் செக்கந்திராபாதுனுஞ்சி வருக்தோம்" என, திரும்பப் பெருநகைப்பு எங்கே பார்த்தாலும் ஒலித்தது.

அந்தகன் —: "மஹா ராஜ்! எந்துக்கு ஊரிக்க சிரிக்கிறிங்கோ? நம் உத்திராதி தேசமு. நம் இந்திகோ, இந்துஸ்தானிக்கோ, கன்னடக்கோ, தொலிங்கிக்கோ, பேச்சுக்கோ பேச்சுவோம்" என, இன்னும் அதிக சிரிப்பு எல்லோரையும் வாரிக்கொண்டு போயிற்று.

மீண்டும் விருத்தாப்பியன் —: "மஹாராஜ்! நம் ரஜபுத்ர நம்பளுக்கு மூக்கு மேலே கோப்பம். சும்மனே சிரிக்கபேடா' என,

எல்லோரும் வாயில் துணியை வைத்துக்கொண்டார்கள். மதுரநாயகம்பிள்ளை வீடு சிலேயோடுகிறது.

திரும்பவும் அந்தகன் —: "நம் ரஜபுத்ர் சொன்னேம். நீங்கோ நாங்களுடைய பேச்சுக்கோ கேக்கிற மாட்டிங்கோ. நம்பளுக்கு கிண்டா கோப்பம். நீங்கோ நாங்கலே பஹு"த்சே பரியாசம் பண்ணுரிங்கோ. இப்புடு நம்பளுக்கு கத்தியிருந்தாக்கோ கையில் கத்திக்கு பிடிச்சிக்குவோம், நீங்களுடைய வயிற்றுக்குக் குத்துவோம். இனி மேலே சும்மனே யிருங்கோ" என்றான்.

ஜனங்கள் மதுரநாயகம்பிள்ளை வீடு, வாசல், திண்ணை, தாழ்வாரம், எப்பக்கத்திலு மாய்ந்து மாய்ந்து சிரிக்கிறார்கள்; கடகடவென்று உருளுகிறார்கள். அப்போது மதுரநாயகம்பிள்ளை ஜனங்களை யமர்த்தி, எனது தந்தையரை நோக்கி —: "அத்தான்! இவர் வடதேசத்து மனுஷர் இவருக்குத் தமிழ்பேசுவது கஷ்டம். தெலுங்குங் கன்னடமு நன்றாய்ப் பேசுவார் போலிருக்கிறது. அநேகமாய்த் தமிழில் தெலுங்கு கன்னடவார்த்தைகளைக் கலந்துபேசுகிறார். இந்தஸ்தானி பதங்களும் வருகின்றன. இந்தி அவருடைய சொந்தபாஷை. இந்துஸ்தானியுந் தடங்கலின்றியே பேசுவாரென்று நினைக்கிறேன். நமது மனோரஞ்ஜிதத்தை விட்டு அவரோடு தெலுங்குங் கன்னடமும் பேசச் சொல்லுவோம்" என்று சொல்லி —: "மகளே! இங்கு வா; தாத்தாவோடு தெலுங்குபேசு, பார்ப்போம். பிற்பாடு கன்னடமும் பேசு" என,

மனோரஞ்சிதம்—:"உத்திராதி தேசமுனுண்டி வச்சின தாத்தா! மீ பேரேமி, நாத்தோ தெலுகு மாட்டலு ஆடண்டி: சூத்தமு."

—: ஆ! நா ரத்னமா! நாத்தல்லீ! நாயம்மா! நாயொக்க பேரினு அடுக்குச்சுன்னுவு? நாப் பேரு ராமநாத சிங்கு.

——: அஜ்ஜா! இல்லி யாத்தக்கே பந்தீரீ? நிம்ம ஊரு ஏ ஊரு? நிமகே மக்களு இல்லவோ?

—: "நன்ன கண்ணே! நன்ன கண்மணியே! நனகே எவனூ இல்லா. நன்ன ஊரு செக்கந்திராபாது. நன்ன மக்களு எல்லவரு சேத்து ஹோதரு."

—: அவுது நீவு ஏளுவது எல்லா சரியே. இனிமேலே யெல்லி ஹோகுவிரீ? நம்ம மனேதல்லி யித்து ஹோகுத்தீரா?

—: "அவுது நன்ன மாணிக்கமே! இத்து ஹோகுத்தேனே நின்ன தந்தகே பேளு. நன்கே சன்னுயிதே" என்றான் விருத்தாப்பியன். உடனே மனோரஞ்ஜிதம் எனது தந்தையார் சந்திரசேகரம் பிள்ளையை நோக்கி—, "தாத்தா! பெரியவர் என்ன நேற்றியாய்க் கன்னடமும் தெலுங்கும் பேசுகிறார். எங்கள் வேலைக்கார சுந்தர காந்தியும் இரத்னங்கியும் இவ்வளவு சுத்தமாய்ப் பேசமாட்டார்களே" என,

சந்திரசேகரம் பிள்ளை—, "உனக்குக் கன்னடமும் தெலுங்கும் தெரியுமா? என்ன? ஆச்சரியமாயிருக்கிறதே! தெலுங்குங் கன்னடமுங் கூடவா பேசுகிறாய்? கண்டுபிடிக்கிறாயா? எழுதுவாயா? வாசிப்பாயா? என,

மனோரஞ்ஜிதம்—:"ஆம் தாத்தா? வாசிப்பேன் கண்டுபிடிப்பேன்; எழுதுவேன். சுந்திரகாந்தியோடும் இரத்னங்கியோடுந் தாராளமாய்ச் சம்பாஷிப்பேன்" என,

சந்திரசேகரம் பிள்ளை—:"அந்த இரண்டு பெண்டுகளும் யார்?"

—: "தெலுங்குங் கன்னடமும் பேசுகிற இரண்டு சேடச்சிகள்."

—: "எழுத வாசிக்க எப்படிக் கற்றுக்கொண்டாய்?"

—: "ஆனி கற்றுக் கொடுத்தார்கள்."

—: "பெரியவர் என்ன சொன்னார்?"

—: "அவர் பேர், அவருடைய ஊரின் பேர், முதலியவைகளைக் கேட்டேன். அவைகளைச் சொன்னார். செக்கந்திராபாத்திலிருந்து வந்தாராம். அவருடைய பிள்ளைகள் எல்லோரும் செத்துப் போனார்களாம். "இங்கேயே யிருந்து விடுகிறீர்களா? வென்று கேட்டேன். இருந்து விடுவதாய்ச் சொன்னார்" என்று தனது தந்தையை நோக்கி—: "ஆனி! அந்த தாத்தாவை ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளும்படிக் கேட்கட்டுமா? என,

மதுரநாயகம் பிள்ளை—: "கேள் மகளே, அவருக்கு மனதிருந்தால் நமது கிறிஸ்துவேதத்தைத் தழுவிக்கொள்ளட்டும். இல்லாவிடில் அவரைக் கட்டாயம் பண்ணுவார் யாருமில்லை" என்று அவளுக் குத்திரவளிக்க,

மனோரஞ்ஜிதம்—: "" தாத்தா! மீக்கு எவருலேருகாபட்டி யிக்கடனே யுண்டி போண்டி. மீக்கு அந்நவஸ்திரமுலு அந்தி சமிருத்திகா தொரக்குனு. தீனிகன்ன இங்கோக காரியமு மேலு. அதேமனின முக்திக்குப் போவு மார்க்கமுனு மாவத்த நேர்ச்சுகோவச்சுனு. முக்தி பொந்தவலேயுனா? கிறிஸ்துவேதமுனு அவலம்பிஞ்சுகோ வலேயுனு" என,

அந்தகன்—: "நன்னு காப்பாட்டின நாஜீவதல்லி! அஷ்டலானே கானி" என.

சந்திரசேகரம் பிள்ளை—: "என்ன மனோரஞ்ஜிதம்? மீக்கு நாக்கு, எக்கு, மேனு, கீனு, நானு, கன்னா பின்னா வென்று உளப்பறிக்கிறீர்கள்? எங்களுக்கு ஒன்றுந் தெரியவில்லையே. எங்களுக்கு அர்த்தஞ் சொல் பார்ப்போம்" என,

மனோரஞ்ஜிதம்—: "இதோ சொல்லுகிறேன்: கேளுங்கள்: தாத்தா! உங்களுக்கு யாருமில்லையே. ஆதலால் இங்கேயே யிருந்துவிடுங்கள். இங்கு உங்களுக்கு அன்னவஸ்திரங்கள் எதேஷ்டமாய்க் கிடைக்கும். இதனைவிட ஒரு மேலானகாரியமுண்டு. அதென்

னமெனில் முக்திக்குப்போகும் வழியை எங்களிடத்திற் கற்றுக் கொள்ளலாம். முக்தியடையவேண்டுமா? கிறிஸ்து வேதத்தைத் தழுவிக் கொள்ளவேண்டும்" என்றேன். அவர் "அப்படியே ஆகட்டும்." என்றார் இது தான் தாத்தா! எங்களுக்குள்ளே நடந்த சம்பாஷணை" என,

சந்திரசேகரம்பிள்ளை—; "உபகாரம் வீணாய்ப்போகிறதில்லை. உபசாரம் இன்னும் அதிலும் மேல். உபகாரகுணமும் உபசாரமும் யாரிடத்திலுண்டோ அவர்களை யநேகர் எப்பொழுதுஞ் சுற்றிக் கொண்டு அவர்கள் இஷ்டம் போல் நடப்பார்கள். சந்தேகமற மகளே உன் குணத்திற்கும் உன் நற்செய்கைகளுக்காகவும் வேண்டி கோடானுகோடிபேர் உன்னைப்புடை சூழ்ந்துகொண்டு உன்புத்தி மதிகளுக்கும், யோசனைகளுக்கும், ஆக்ஞைகளுக்கும் அமைந்து நடப்பார்கள். இனியொருக்கால் எல்லா விஷயங்களிலும் உன்றாயாரை மேவிட்டுப்போவாய். என் பிள்ளைகளையும் விசேஷமாய் விஜயவல்லியையும் நீ தான் திருத்தவேண்டும்' என்று சொல்லிவிட்டு, அந்தகனைநோக்கி—:" பெரியவரே! சிறுவி சொன்னதுபோல் நடக்கலாமென்று நினைக்கிறீரா? கிறீஸ்து மதத்தைத் தழுவிக்கொள்வீரா? என,

அந்தகன்—: "ஹாங் மஹாராஜ்! ஜோ ஜோ மேரீ மிஹர்பானிச்சோட்டி பேட்டி முஜ்ஜே காத்திஹைஹஸோமயிங்கருங்கா: ஜோ ஜோ மேரீ அச்சிலடுக்கி முஜ்ஸெக் சாலேகி ஸோமயிங் ஆமேஷா கருங்கா ஜோ ஜோ மேரீச்சோட்டி அஜ்ரத்கானிம் போலேகி ஹாஸோமயிங் கர்னேக்கோதயார் ஹைஹங் மேரே தில்கோ மேரோ அச்சி பச்சிக்கோ தேனேக்கேச்சா யியேத்தோ மயிங்குஷிஸேஸ் தேவுங்கா" என,

சந்திரசேகரம் பிள்ளை—: "என்ன தம்பி? மதுரநாயகம் பிள்ளை! பெரியவர் ஜோ! ஜோ! ஜே; ஜே! சீ! சீ! சிச்சி! ஆச்சி! ரே! ரே! அச்சி! பட்சி! என்கிறாரே. என்ன அர்த்தம்? என்ன பாஷையிது? சற்று முந்தி யவர் மனோஞ்ஜிதத்தோடு பேசினபோதாகிலும் இரண்டொரு வார்த்தைகள் புலப்பட்டன. இப்போது சுத்தமாய் ஒன்றுந் தெரியவில்லையே. இது இந்தி பாஷையா? அல்லது இந்துஸ்தானியா? உங்களுக்கு இந்தி, இந்துஸ்தானி, இன்னும் எத்தனையோ பாஷைகள் தெரியுமே. எங்களுக்குச் சொல்லுங்கள் பார்ப்போம்". என,

மதுரநாயகம் பிள்ளை—"ஆம் அத்தான்! இது இந்துஸ்தானி பாஷைதான். அது வெகு துடியான பாஷையாதலால் அப்படிதான் முடுக்காயிருக்கும். அதற்குக் குதிரைபாஷை யென்று பெயர். பெரியவர் தமிழ் பேசினால் நாம் பரிகாசம் பண்ணுகிறோம் என்று அறிந்து இந்துஸ்தானி பேச ஆரம்பித்துவிட்டார். அவர் பின் வருமாறு—. "எனது இரக்க நிறைந்த சின்ன மகள் எனக்கு ஏதேதைச் சொன்னாளோ அதை யெல்லாம் நான் செய்வேன்; எனது நல்ல சிறு நங்கை யெதை பெண்ணைக் கேட்பாளோ நான் அதற்கு உட்படுவேன்; எனது மாட்சி தங்கிய இராஜாத்தி யேதேதைச் சொல்லுவாளோ அதனைச்செய்ய தயாராயிருக்கிறேன். என்னம்மணி நல்ல மகளுக்கு என்னிருதயத்தைக் கொடுப்பேன்" என்றுசொன்னார். இதுதான் ஷை வசனங்களின் ருற்பரியம்" என,

சந்திரசேகரம் பிள்ளை—: "பார்த்தீர்களா? நான் சொன்னவைகள் இப்போதே நிறைவேறுகின்றன. யாரார் மனோரஞ்ஜிதத்தின்பேரில் ஏதேதை யூகிக்கின்றார்களோ அதுவெல்லாம் நிறைவேறிக்கொண்டேவருகிறது. கடைசிவரையில் எல்லாம் நிறைவேறித்தானாகும். அதற்குச் சந்தேகமில்லை" என்று சொல்லிவிட்டு மதுரநாயகம் பிள்ளையின் சல்லாப சாலைக்குப் போய்விட்டார்.

மதுரநாயகம் பிள்ளை தனது குமாரத்தியை நோக்கி—:"மனோரஞ்ஜிதம், தாத்தா உன்னிஷ்டம்போல் நடந்துகொள்வதாய் எல்லோருக்கு முன்னதாய் உறுதிவாக்குக் கொடுத்துவிட்டார். உனக்குக் கன்னடபாஷையும் தெலுங்கும் நன்றாய்த் தெரியும். தெலுங்கிலாவது கன்னடத்திலாவது அவருக்குத் திருமந்திரங்களையுஞ் ஜெபங்களையும் சொல்லிக்கொடு. நான் இரகசியத்தில் அவருக்கு ஞானோபதேசம் செய்துகொள்ளுகிறேன். உனக்குச் சாவகாசமிருக்கும்போது பொறுத்துச் செய்யலாம். துரிதப்படவேண்டாம். உனது உபதேச சிக்ஷை முடியட்டும். அப்போது உனக்குத் தெரிந்தவைகளை யெல்லாம் நீ அவருக்கு தாராளமாய்ச் சொல்லிக்கொடுப்பாய். இப்போது உனக்கு உபதேசம் ஒதிவைக்கவேண்டும். சல்லாப கூடத்திற்கு வா: போவோம். காலதாமதந் தகாது" என்று சொல்லிவிட்டுத் தமது மகளையும் மற்றவர்களையும் அழைத்துக்கொண்டு ஷை ஜகாவுக்குப் போனார். நானும் அவரைப்பின் சென்றேன்.

அங்கு எல்லோருந் தயாராயிருக்க, எனது தந்தையர் குணமணியம்மாளைப்பார்த்து :—"மகளே! காலமே கடவுளின் நித்யத்

தைக்குறித்து உபந்நியாசம் நடந்தது. மதுரநாயகம்பிள்ளை யுனக்கு ஏதோபாடல்களைத் தயார்பண்ணச் சொன்னார். நீ யேதேனுஞ் சித்தப்படுத்தி யிருப்பாயென்று நினைக்கிறேன். ஆதலால் நீ பாடு; சபை களிக்கட்டும். சபையலங்காரி சங்கத்தையாரம்பிப்பது எல்லோருக்கும் மனோகரமாயிருக்கும்" என,

குணமணியம்மாள் :— "இன்று நேரமேது தந்தையே? ஏதுந் தயார் செய்ய எனக்கு சாவகாசமில்லை. ஆயினும் எனக்கு வாயில் வந்ததைப் பாடுகிறேன். கேளுங்கள்" என்று சொல்லிக் கொண்டு பின்வருமாறு —:

இருந்தானிருந்தானே யெஞ்ஞான்றுந்தேவ
னிருப்பானிருப்பானே யென்றுமிருப்பா
னிருந்தானென்னிலொக்குமோ? வொக்கா
திருப்பானெனினுமிருந்தலேயொக்கு மொக்குமே"

என்றுபாடி யென் தந்தையரை நோக்கி—: "ஆஞி! இதன் பொருள் உங்களுக்கு விளங்குகிறது. ஆயினும் மற்றையவர்களுடைய நன்மையை முன்னிட்டுப் பாட்டுக்கு அர்த்தஞ் சொல்லுகிறேன்; கேளுங்கள் கடவுள் என்றென்றும் இருந்தார். இனியென்றென்றும் இருப்பார். ஆனால் இருந்தார் என்று சொல்லுவது இனியிருப்பாரென்று சொல்லுவதும் அவருக்குத் தகவே தகாது. தேவன் இருக்கிறார் என்று சொல்லுவதே தகும். இதுவே தர்க்க நூலுக்குகந்தது. இதுதான் டி பாட்டின் சாரம்" என,

சந்திரசேகரம்பிள்ளை —: "அம்மா! குணமணி! நீ தர்க்க நூற்களை வாசித்திருக்கிறாயா? தமிழில் என்ன தர்க்க நூற்களிருக்கின்றன? அப்படி யிருந்தபோதிலும் உனது கொள்கைகளுக்கு ஒத்து வராதே" என.

குணமணியம்மாள் —; "நான் தமிழில் தர்க்க நூற்களை வாசிக்கவில்லை, ஆங்கிலேய பாஷையிற் பலரால் எழுதப்பட்ட தர்க்க நூற்களையுந் தத்துவ சாஸ்திரங்களையும் எனக்குத் தெரிந்தவரையிற் பார்த்துவைத்திருக்கிறேன். தமிழிற் பட்டினத்துப்பிள்ளை, தாயுமானவர், சிவவாக்கியர் முதலிய ஞானிகளுடைய பாடல்களையும் இன்னும் பற்பல சிறந்த நாவலர்களுடைய கவிகளையுஞ் சங்கராசாரியாருடைய கொள்கைகளையும் வேதாந்தத்தையும் நன்றாய் வாசித்திருக்கிறேன். ஆனால் விசேஷமாய் ஆங்கிலேய பாஷையில் எழு

தப்பட்டிருக்கும் நூற்களை வாசித்து, வாசித்துத்தான் தர்க்கம் பண்ணக் கற்றுக்கொண்டேன்" என,

சந்திரசேகரம்பிள்ளை :—"உனக்கு இங்கிலீஷ் பாஷைகூடத் தெரியுமா?" என,

அபிராமியம்மாள் : "ஆம்! நானுங் குணமணியும் ஆறுவது வகுப்பு வரையிற் படித்துப் பரீக்ஷையில் தேறினோம். அதன்பின் எங்கள் தந்தையர் எங்களுக்கு அவ்வளவு படிப்பு போதுமென்று நிறுத்தி விட்டார்கள். பள்ளிக்கூடத்துக்குப் போகாவிடினும் எனது தங்கையொருநாளும் புத்தகங்களைக் கைவிட்டவளல்ல. ஒரு நாளொன்றுக்கு ஒரு மணி நேரமேனும் படிக்காவிடில் குணமணிக்குத் தூக்கமே வாராது. இதனாலேயே யவள் எங்கள் இரண்டு குடும்பங்களிற் பிறந்த எல்லாப் பெண்டுகளையும் விடக் கல்வியிற் சிறந்தவளாயிருக்கிறாள்" என,

மதுரநாயகம் பிள்ளை :—"குணமணி; நான் இப்போது கடவுளின் மூன்றும் இலக்ஷணத்தைக் குறித்துப் பேசப்போகிறேன். அதற்கு நீ தான் வழிதிறக்க வேண்டும். நீ கொஞ்சங் கரிசலாய்ப் பாடிக்கொண்டே வருகிறாய். நாமிங்கே மதுரைக் கல்விச் சங்கத்திலில்லை. நாம் பிள்ளைகளுக்கும் பெண்டுகளுக்குஞ் சாமான்ய ஜனங்களுக்கு முன் பேசுகிறோம். ஆதலால் சாதாரணத் தமிழிற் பாடு" என,

---

## 17-ம் அத்தியாயம்.

கடவுளின் மூன்றும் நாலாம் இலக்ஷணங்களின் பேரில் ஓர் உபன்னியாசம். மனோரஞ்ஜிதம் எப்போதும் பரோபகாரி.

குணமணியம்மாள் :—

கருவேது உருவேது உடலேது கடமேது கண்காணுக் கருணையாகி
யருபனு யமலனு யின்பனு யன்பனு யானந்தக் கடலுமாகி
யருளாகித் தெருளாகி யருண் ஞானப் பொருளாகி நினையறிந்தோர்க்கே
மருளாகி வெருளாகி நின்னையறி யாதவறிஞர்க் கிருளாய நின்றபரனே

என்று பாட,

மதுரநாயகம் பிள்ளை :—"நன்றாய்ப் பாடினாய் குணமணி! தெளிவாய் ஆழ்ந்த கருத்தோடு ஆசிரிய விருத்தத்தை யியற்றினாய். பெரியோர் எல்லோரும் இதனைக்கண்டு மிடிப்பார்களென்று நினைக்

கிறேன். ஆயினும் இளைஞருக் குபயோகமாய் உன் பாட்டுக்கு விரித்துரை செய்" என,

குணமணியம்மாள் :—" கடவுள் கருவில் அமைந்தவரல்ல; அவருக்குச் சடமாகிய உடலில்லை; உருபமில்லை. எவ்வித குற்றங் களையும் அறியாத அந்தக் கண்ணுக்கெட்டாத அருபக்கடவுள் தம் மையறிந்த அடியார்களுக்குக் கருணை சமுத்திரமாய் நிற்கின்றார்! பித்திரனை ஒப்புகிறார்; ஞான வின்பங்களைப் பொழிகிறார். அவர் சகல சுக செல்வங்கள் நிறைந்த பேரின்பக் கடலாதலால் தமது தொண்டருக்கு நானாவித அநுக்கிரஹங்களையும் ஞான வெளிச்சங் களையும் ஏராளமாய்க் கொடுக்கிறார். ஆனால் தம்மை யறியாத ஞானக் குருடருக்குப் பயங்கர பீதியாயும் மயக்கமாயும் பேரிருட் டாயு நிற்கிறார். இதுவே சரீரமில்லாத கடவுளின் தன்மை" என்று அர்த்தஞ் சொல்லி முடித்தாள்.

முடிக்கவே, மதுரநாயகம் பிள்ளை :—" ஆம் குணமணி! என க்கு நல்ல வழி திறந்தாய்; நல்ல யோசனைகளைக் கொடுத்தாய். இனி கடவுளின் மூன்றாவது இலக்ஷணத்தைக் குறித்துப்பேசுவது எனக்கு அவ்வளவு கஷ்டமல்ல. சட்டி நிறைய மாவிருக்கும்போது பலதினுசு பலகாரங்களைச் சுட்டுச் சாப்பிட்டுச் சுகித்துச் சுகம்பெற லாம். உன் பாடல் என் புத்தியை நிரப்பிவிட்டது" என்று அவளை வியந்துகொண்டு தன் மகளை நோக்கி :—" மனோரஞ்ஜிதம்! தேவ னுடைய மூன்றாவது இலக்ஷணத்தைச் சொல்" என,

மனோரஞ்ஜிதம் :—" கடவுளுக்குச் சரீரமில்லை" என,

மதுரநாயகம் பிள்ளை :—" ஆம், மகளே தேவனுக்கு உடலில்லை. அவருக்குச் சரீரமே இருக்கத்தகாது; இருக்கலாகாது. அவருக் குச் சரீரம் எட்டுணையும் பொருந்தவே பொருந்தாது. என் பொரு ந்தாது? அவருக்குச் சரீரமிருக்குமாகிற் சகலவித குறைகளுக்கு முள்ளாய் விடுவார். என்? என்று கேட்பாயா? சரீரத்துக்குப் பிற ப்பு, வளர்ப்பு, மூப்பு, இறப்பு, மட்டு, திட்டம், பங்கு, பாகம், அளவு, பரிமாணம், கஷ்டம், நஷ்டம், துர்ப்பலம், அழிவு, இழிவு, தாழ்வு, நோய், துன்பம் முதலிய குறைகள் இருக்கின்றன. ஆத லால் அவருக்குச் சரீரம் பொருந்தாது. ஆகவே தேவன் அரூபி. இதுவுமன்றி—" என,

மனோரஞ்ஜிதம் :—" ஆம் ஆஞ்! நீங்கள் இவ்வாறு சொல்லு கிறீர்கள்; அதை யெப்படி நம்புகிறது? நமது திவ்ய இரக்ஷகர்

மனிதனுய்ப் பிறந்து நமக்காக பாடுபட்டு மரித்து உயிர்த்தாரென்று நாம் விசுவாசப் பிரமாணத்திற் படிக்கிறோமே; நாடோறுஞ்சொல்லி வருகிறோம்; நீங்கள் கடவுளுக்குச் சரீரங் கிடையாது என்கிறீர்கள்; அப்படியானுல் அவர் கடவுளல்ல என்கிறீர்களா ?" என்று ஆக்ஷேபிக்க.

மதுரநாயகம் பிள்ளை :—" நன்றுயாக்ஷேபித்தாய், மகளே! நான் பொதுவில் தெய்வ இலக்ஷணங்களைக் குறித்துப் பேசுகிறேன். நமது இயேசு பெருமான் நமக்காக மனிதனுய் அவதரித்தது ஓர் விசேஷம். அவர் தெய்வமென்கிற முறையில் அவருக்கு யாதோர் குறையுங் கிடையாது. அவர் நமதுபேரில் வைத்த நிகரற்ற அன்பினுல் மனிதனுய்ப் பிறந்தார். நமது இரக்ஷகருடைய சரீரம் எடுத்த சரீரமேயன்றி யியல்பாய் அவருக்கு எப்போதும் இருந்த சரீரமல்ல; காலத்தில் மனமொப்பி யவர் ஏற்றுக்கொண்ட சரீரம், அதனுல் அந்தச் சரீரம் தெய்வீகத்துக்கு மாருகாது. அந்தவுடல் அவருடைய தெய்வீகத்தைக் குறைக்கவும் அதிகரிக்கவுமாட்டாது. நீ யணிந்திருக்கும் நகைகளுந் தரித்திருக்கும் உடைகளும் உன்னை யென்ன செய்கின்றது ? உன்னைக் குறைக்கின்றனவா ? இல்லை. உன்னை யதிகரிக்கின்றனவா ? இல்லை. காலக்கிரமத்தில் நமது திவ்விய இரக்ஷகர் மனப்பூர்வமா யெடுத்துக்கொண்ட சரீரம் தெய்வ இலக்ஷணங்களைப் பங்கப்படுத்தாது. மீண்டுங் கடவுளுக்கு இயல்பாய், அநாதி நித்யமாய் சரீரமிருக்குமாகில் அவருடைய சர்வ வியாபகத்துக்கும் மட்டில்லாமைக்கும் பங்கம் வந்துவிடும். ஏன் பங்கம் வரும்? ஏன் பின்னம் வரும்? என்பாயோ? சரீரம் ஓரிடத்திலிருந்தால் இன்னோரிடத்திலிருக்கச் சாத்தியப்படாது. ஏன் சாத்தியப்படாது? என்றுல் சரீரம் மட்டு, திட்டம், அளவு, பரிமாணங்களுக்கு உட்பட்டிருக்கின்றது. ஆதலால் கடவுளுக்குச் சரீரம் பொருந்தாது; ஆதலால் அவர் உருபமில்லா நிஷ்களவஸ்து, மனோரஞ்ஜிதம்! ஏதேனும் ஆக்ஷேப முண்டா? கண்டு பிடித்தையா ?" என,

மனோரஞ்ஜிதம் :—" ஆக்ஷேபமில்லை. ஆம்! தேவனுக்குச் சரீரமில்லை. அவருக்கு உடலிருக்குமானுல் அவர் நம்மைப்போலிருப்பார். அவருக்கு உருபமில்லை யென்றும், இருக்கத் தகாதென்றுங் கண்டு பிடித்தேன்" என,

மதுரநாயகம் பிள்ளை :—" மகளே! தேவனுடைய நாலாவது இலக்ஷணத்தைச் சொல்" என,

மனோரஞ்ஜிதம்:—"தேவன் சகல நன்மைக்கடல்." என,

மதுராநாயகம்பிள்ளை:—"குணமணி! நீ யுன் உத்தியோகத்தைச் செலுத்து" என,

"ஓதினே னுண்மையாமே யொருங்கோ டமைந்த வமலக்
கோதிலான் குணமுரைத்தற்குக் குறைமதிபோதுமா சொல்வீர்
சோதியாய்ச் சொரூபனுகிச் சுத்த நலமெலா நன்கடைந்த
வாதியாமனந்த நிதியாமகோசர தேவதேவனும்" என்று,

குணமணியம்மாள் பாடி:—"உண்மையைச் சொல்லிவிடுகிறேன்: தூய பரிசுத்தத் தனத்தையுடைய கடவுளின் நான்காம் இலக்ஷணத்தை யெடுத்துச் சரிவரச் சொல்ல எனது அற்பப் புத்தி போதாது. ஆயினும் என் சிற்றறிவுக் குற்றதைச் சொல்லுகிறேன்; அவர் சகலவித நன்மைகளால் நிறைந்த பூர்ண சமுத்திரமாய்ப் பிரகாசித்துத் துலங்குகின்றார்."

என்று அர்த்தமுஞ் சொல்லி முடித்தாள்...

மதுராநாயகம்பிள்ளை அப்போது தமது குமாரத்தியை நோக்கி:—"மனோரஞ்ஜிதம்! கடவுளுக்கு குணநிதியென்று பெயர். குணநிதி யென்றால் அர்த்த மென்ன? இலக்ஷணக்கடல்; நன்மைக் கடல் என்று அர்த்தமாகிறது. சகல நன்மைகளும் இலக்ஷணங்களும் பூரணமாய் எந்த வஸ்து விடத்திற் கூடி யிருக்குமோ அந்த வஸ்து குணநிதியென்று சொல்லப்படும். சகல நன்மைகளும் இலக்ஷணங்களு மென்று சொன்னேன். எவ்வித நன்மைகள்? எத்தகைய இலக்ஷணங்கள்? குறையில்லா நன்மைகள்; குறையில்லா இலக்ஷணங்கள். அவைகள் நிறைந்து பூர்ணமாகவே யிருக்கவேண்டும். ஏனெனில் நான் மேலே கடவுளின் நாமகரணத்தை வியாக்தி செய்தபோது அவர் பரமோத்தமரென்று காட்டினேன். அவர் பரமோத்தமரானால் எல்லா நன்மைகளையும் ஒழுங்காய்க் கொண்டிருக்கிறார் என்பதிற் சந்தேகமில்லை. இதற் குதாரணமாக அவருடைய வல்லமையை யெடுத்துக்கொள்வோம். ஓர் வஸ்துவுக்கும் வெறுமைக்கும் மட்டில்லாத் தூர மிருக்கிறது. மட்டில்லாத் தூர மிருக்குமாகில் அதனைச் சிருஷ்டிக்க மட்டில்லாத வல்லமை வேண்டும். அப்படி யில்லாவிடில் வானமும் பூமியும் அவைகளில் அடங்கிய சிருஷ்டிகோடிகளும் ஒருபோதும் படைக்கப்பட்டிரா. படைக்கப் பட்ட பின்னர் நிலைபெற்றிரா; எல்லாம் ஒருநொடியில் அழிந்து, ஒழிந்து, மறைந்துபோம். இவ்வாறு சுந்தரகோளப்படாமல் படைப்

புண்டு நிலைபெற்றிருப்பது கடவுளின் அளவில்லா வல்லமையினு லன்றி வேறல்ல. அவருடைய வல்லமை யளவைக் கடந்ததாகில் அவருடைய அறிவு, ஞானம், நீதி, தயை, ஜீவகாருண்யம், மாட்சி, மகத்துவம், இன்னும் நமது யுத்திக்குப் புலப்படாத அவருடைய இலக்ஷண கோடிகளும் மட்டில்லாதவைகளா யிருக்கவேண்டும். இதுவே ஞாயம். அவ்வாறு அல்லாது இவருக்குரித்தான யாதோர் இலக்ஷணத்திற் குறையிருக்குமாகில் அவருடைய சமஸ்த இலக்ஷ ணங்களிலும் குறையுண்டென்று சொல்லலாம். ஏனென்பாயோ? அவரது இலக்ஷணங்களெல்லாம் ஒன்றுக்கொன்று குறையாமலும் ஏருமலுஞ் சமநிலை பெற்றிருக்கின்றன வென்று சாஸ்திரிக ளெல் லோரும் ஒருவாய்ப்படக் கூறுகின்றார்கள். அவர்களுடைய உடன் பாடுங் கோட்பாடும் புத்திக்கும் ஞானத்திற்கும் ஞாயத்திற்குந் தர்க்கத்திற்கும் ஒத்திருக்கின்றன.

இதனாலேயே கடவுள் எல்லா நலமுளன், அதாவது சகல நன் மை சொரூபியென்று திராவிட சாஸ்திரிகளும்; 'ஸர்வ ஸத்குண சம்பன்னன்' அவர் சமஸ்த சற்குணங்களையு மட்டு திட்டமின்றி சம்பூரணமாய்க் கொண்டிருக்கிறாரென்று வடமொழி ஞானிகளும்; 'Cui omne genus perfectionum' அவர் வரையில்லா இலக்ஷ ணங்களாலும் அநந்த பூர்த்தியாய் நிறைந்தவரென்று சத்தியவேத சாஸ்திரிகளுஞ் சான்றோரும் மேதாவிகளும் வேத விற்பன்னரும் எங்கும் கோஷித்து முழக்குகின்றார்கள். ஆதலால், மகளே, நாமும் அவர்களைப்போல் கடவுள் குணநிதியென்று அதாவது: கரை காணாத நன்மைக் கடலென்றும் எல்லை வரம்பில்லா இலக்ஷண சமு த்திரமென்றும் ஒப்புக்கொள்ளவேண்டும். மகளே! தேவன் குறை யில்லா வுத்தமரென்று இந்த உபந்நியாசத்தினால் நமக்குப் பரிஷ் காரமாய்த் துலங்குகின்றது.

ஆதலால் நமது திவ்ய இரக்ஷகர் :—"Estote perfecti sicut Pater vester coelestis perfectus est: உங்கள் பரமபிதா உத் தமரா யிருப்பதுபோல் நீங்களும் உத்தமரா யிருங்கள்."

என்று போதித்ததுபோல் நானும் உனக்குச் சொல்லுகிறேன். தகப்பன் உத்தமனானால் பிள்ளையும் உத்தமனாயிருப்பது சலாக்கியம். தந்தை போனவழி பிள்ளை போவது இயல்பு. பெற்றவன் உத்தமனா யும் பிள்ளை யன்மார்க்கனாயு மிருப்பது விகாரம். நமது பரமதந்தை யாகிய கடவுள் பரமோத்தமரா யிருக்கும்போது நாம்........."

என்று வாயெடுக்கும் நேரத்தில் ஒருவன் ஓடிவந்து:—'ஐயா! பெண் பிள்ளைகள் பள்ளிக்கூடத் தலைவராகிய, பி. ஏ. ஜெயராமச் சந்திர ஐயர் தங்கள் பேட்டிக்கு வந்திருக்கிறார்" என,

மதுரநாயகம் பிள்ளை அவருடைய வரவை யறிவித்தவனை நோக்கி:—

"நீ போய் அவருக்குச் சொல்லி யுடனே யவரை யுள்ளேவரு ம்படியாய்ச் செய்"

என்று அவனுக்குச் சங்கற்பித்து அனுப்பிவிட, சற்றுநேரம் பொறுத்து ஜெயராமச்சந்திர ஐயர் வந்து சங்கத்தில் நுழைந்தார்.

நுழையவே மதுரநாயகம் பிள்ளை யெழுந்து உபாத்தியாயரு க்கு உபசாரம்பண்ணி யவருக்கு ஆசனங்கொடுத்து மரியாதை செய்தபின்னர்:—

"ஐயரே! எது இவ்வளவுதூரம்? பத்துக்கல் தூரம் என் னைத் தேடிக்கொண்டு வரவேண்டியதென்ன? நாம் இருவரும் கம லாலயத்தி லிருக்கும்போது எப்போதோ ஒருதடவை யத்திப் பூத் ததுபோல் அபூர்வமாய் என் இருகத்திற்கு வருவீர்கள். இப்போது பிரயாணம் பண்ணிக்கொண்டு என்னைத் தேடிவந்த காரணம் எனக் குப் புலப்படவில்லையே" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"தயைசெய்து மன்னிக்கவேண் டும். தங்களுடைய பேட்டிக்கு அடிக்கடி வரஎனக்கு மெத்த அபி லாஷை. ஆனால் பாடசாலையின் கவலை நிமித்தம் வெளியிற் புறப்பட எனக்குச் சாவகாசங் கிடையாது. எனக்கு ஓய்வு ஒழிவில்லை. தற் போது வாவு காலமாதலால் இரண்டுமாச காலம் இளைப்பாறக் கிர [illegible]ரிக்குப் போகிறேன். துல்யமணி கிராமம் போகும் வழியில் இருக்கின்றமையால் வழியில் ஒருநாள் தங்கியிருந்து தங்களோடு மனோரஞ்ஜிதத்தின் படிப்பு விஷயமாய்ச் சில சங்கதிகளைச் சொல்ல யோசித்து இங்கு வந்தேன். இவ்வருஷம் அவள் நான்காவது பரீ க்ஷையிற் பூராய்த் தேறினது தங்களுக்கு நன்றாய்த்தெரியும். நமது நாட்டு குருட்டாச்சாரத்தைப் பின் செல்லவேண்டாம். பிள்ளைக ளுக்குப் பத்துப் பதினொரு பிராயமாய்விட்டால் தாய் தந்தையர் அவர்களைப் பள்ளிக்கு அனுப்பாமல் நிறுத்திவிடுவார்கள். நீங்கள் சிறந்த மேதாவி யாதலால் அவ்வாறு செய்யமாட்டீர்களென்று நினைக்கிறேன். இன்னுஞ் சிறிதுகாலந் தங்கள் குமாரத்தியைப் பாடசாலைக்கு அனுப்பி வையுங்கள். நான் கமலாலயத்திற்கு வந்து

பாடசாலைத் தலைமை உபாத்தியாயராகிக் கொஞ்சநாள் தானாயிற்று. இந்த சொற்ப நாட்களில் நான் அநேக ஆண்பிள்ளைகளிடத்திற் காணாத அரிய நுண்ணறிவை மனோரஞ்ஜிதப் பெண்மணியிடத்திற் கண்டேன். போன பரீக்ஷையில் அவளுடைய புத்திக் கூர்மையுஞ் சாமர்த்தியமு நன்றாய் வெளியாயின. நீங்கள் அவளை யெவ்வளவு தூரம் படிக்கவிடுவீர்களோ அவ்வளவு தூரம் படிக்க அவளுக்குச் சக்தியுண்டு. ஒருவிசை தன் காதாரக் கேட்டவைகளை யொருபோதும் மறக்கவே மறக்காள். ஒரு மாசத்திற்கு முந்தி யர்த்தஞ்சொன்ன பாடத்தை யெடுத்துத் திரும்ப அர்த்தங் கேட்டால் உபாத்தியாயர் சொன்னதில் ஓர் புள்ளி குறையாமற் சரியாய்ச் சொல்வாள். எல்லா பரீக்ஷைகளுக்கும் போகக்கூடியவள், ஆதலால் தயைசெய்து இன்னும் ஐந்து ஆறு வருஷங்கள் வரையிற் படிக்க வுத்தரவு கிடைக்குமாகில் மனோரஞ்ஜிதம் பெரும் மேதாவியாய் விடுவாள்" என,

மதுரநாயகம் பிள்ளை :—"ஐயரே! இனி இதுவிஷயத்தில் உங்களுக்குக் கலக்கம் வேண்டாம். காலோச்சிதமாய் என் மகள் எவ்வளவு படிக்கக்கூடுமோ அவ்வளவு வரையில் நான் முயற்சி யெடுத்துக்கொள்வேன்".

என்று உபாத்தியாயருடைய வேண்டுகோளை ஒப்புக்கொண்டு "தற்போது ஐந்து மணியாயிற்று. மூன்றுகல் தூரத்துக் கப்பால் இருக்கும் பஞ்சலிங்கபுர கிராமம் வரையிற் போய்வருவோம்; வாருங்கள்" என்று கூட்டத்தைக் கலைத்துவிட்டுக், குதிரை வண்டியைப் பூட்டச்சொல்லி, இருவரும் அதில் ஏறிக்கொண்டு வெளியிற்போய் விட்டார்கள்.

நானுந் திருமறைநாயகம் பிள்ளையும் நவபுரிக்குப் போகும் பெரிய இரஸ்தாவில் இரண்டு கல் தூரம்போய் உலாத்திவிட்டுத் தோட்டத்திற்குத் திரும்பிவந்தோம். அப்போது சுமார் ஆறுமணி யிருக்கலாம். சூரியன் அஸ்தமிக்கிற சமயம். எங்கள் தோட்ட வீட்டுக்கும் இரஸ்தாவுக்குங் கால் கல் தூரமிருக்கும். மனோரஞ்ஜிதம் விஜயவல்லி, ரவாமணி முதலான பிள்ளைகளும் பெரிய இரஸ்தாவரையில் விளையாட வந்திருப்பார்கள்போலும்; நானும் திருமறைநாயகம் பிள்ளையும் இராஜமார்க்கத்தை விட்டுத் தோட்டத்துக்குத் திரும்பும்போது விஜயவல்லி யெனக் கெதிரே யோடிவந்து;—

" அண்ணு! கேட்டீர்களா சமாச்சாரத்தை?"

:—" என்ன சமாச்சாரம்?"

:—" இனிமேல் மனோரஞ்சிதத்தைத் தொடவே படாது!"

:—" ஏன் தொடப்படாது அம்மா?"

:—" அம்மாள் சொன்னது சரியா யிருக்கிறது அண்ணே! கிறிஸ்தவர்களுக்குத் தீண்டலில்லை என்று எனக்கு அநேகவிசை சொல்லி யிருக்கிறார்கள். அது மெய்யாய்த்தா னிருக்கிறது!"

:—" எப்படி மெய்யா யிருக்கிறது விஜயவல்லி? மூடமந்திர மாய்ச் சும்மா என்னத்தையோ உளறுகிறையே. உள்ளதை யுடனே சொல்."

:—" மனோரஞ்சிதத்தைத் தொடாதேயுங்கள் அண்ணே! அவள் நமது எருமைகளை மேய்க்கிற பள்ளச் சின்னகுட்டியைத் தொட்டுக்கொண்டாள், அத்தோடவா விட்டாள்? அவளுடைய உதடெல்லாம் பாருங்கள் இரத்தம்! சீச்சீ! அவள் குடிப்பிள்ளையா? அப்பா! அவள் செய்கிற வேலை யெனக்குப் பிடிக்கவில்லையே! அவளோடு சேர்ந்து விலையாடலாமா? என்று சொல்லி முடித்தாள், விஜயவல்லி.

உடனே திருமறைநாயகம் பிள்ளை:— " மனோரஞ்ஜிதம்! ஏன், அம்மா! சின்னகுட்டியைத் தொட்டாய்? ஏன் உன் மூக்குக் குங் கீழ யிரத்தங் காய்ந்திருக்கிறது?

:—" சின்னுஜி! கோபித்துக்கொள்ளாதேயுங்கள்"

:—" இல்லை மகளே! பயப்படாதே. நடந்ததைச் சொல்"

:—" நானும் விஜயவல்லியும் அந்தவாய்க்காலோடே அலரிப் பூப் த்துக் கொண்டே வந்தோம். சின்ன குட்டி அந்தக் காரைக் குத்து ஓரமாய் உட்கார்ந்துகொண்டு தேம்பித் தேம்பியழுதாள். நான் அவள் கிட்டத்திலோடி :—"ஏன் சின்னகுட்டி யழுகிறாய்? யாராகிலும் உன்னையடித்தார்களா? சொல்: நான் சிவகாமி யத்தையம்மாளிடஞ் சொல்லுகிறேன்" என,

சின்னகுட்டி :— அம்மா! என்காலைப் பாருங்களே! கட்டை முள் ஆழமாய்த் தைத்துக் கொண்டதே! என்னாலே நடக்க முடியவில்லையே! இந்த முள்ளைப் பிடுங்கிப் பிடுங்கிப்பார்க்கிறேன். முள்ளு வரவில்லையே" என்று அலறினாள்.

நான் :— "சின்னகுட்டி! நீ பயப்படாதே. நான் அந்த முள்ளை யெடுத்துவிடுகிறேன். எங்கே? உன்காலைக் காட்டுபார்ப் போம்' என, அவள்காலை நீட்டிக் காட்டினாள். காலைப் பார்த்தால் ஒரு பெரியமுள் பலமாய் அவளுடைய குதிகாலில் தைத்துக் கொண்டிருந்தது. நான் உடனே யொரு காரைமுள்ளை யொடித் துக் குதிகாலைக் குத்திக் குத்திக் தோலைப் பெய்த்து விட்டு முள்ளை யசைத்துப் பிடித்து இழுத்தால் அது வருவேனா என்றது. பட்டவாயில் இரத்தங் கசைந்து கொண்டு பிடிக்கு இடங்கொடுக்க வில்லை. வெகுநேரம் பிடுங்கப் பிரயாசப்பட்டேன். முள்ளு வழு க்கி வழுக்கிக் கொண்டு வெளியில் வரவில்லை. கடைசியாய் முள் ளைப் பிடுங்க முடியாமல் சின்னக்குட்டிக் காலை தூக்கி யென் முழங் கால்மேலே வைத்துக்கொண்டு முள்ளைப் பல்லாலேகடித்து பலமா யிழுத்தேன். முள் வெடுக்கென்று வெளியில் வந்து விட்டது. அதனாலேதான் சின்னாஜி! என் உதடெல்லாம் இரத்தமாயிருக்கி றது. இப்போது தான், ஒரு நிமிஷங்கூட இருக்காது முள்ளைப் பிடுங்கினேன். அதற்குள்ளே நீங்கள் வந்து விட்டீர்கள். இதோ பாருங்கள்" என்று கட்டையாய் இரண்டங்குல நீளமுள்ளைத் திருமறைநாயகம் பிள்ளை யிடங்காட்டினாள். அவர் தன்னுடைய மயவளை வாரித்தழுவி முத்தமிட்டு :—' ஆ! என்னருமை மகளே! இத்தகைய மேலான தர்மக்கிரியை செய்து விட்டா பயந்துகொ ண்டு " சின்னாஜி! கோபித்துக் கொள்ளாதேயுங்கள்? என்று கேட்டாய்? யார் உனது தர்மசிந்தனைக்கு விரோதமாய்ப் பேசுவார் கள்? விஜயவல்லி யேதேனுஞ் சொன்னாளா?" என்றுசொல்லி மனோ ரஞ்ஜிதத்தை வீட்டுக்கு அழைத்துவந்தார்.

நான் வழியில் வரும்போது:—" மனோரஞ்ஜிதம்! விஜயவல்லி யென்னசொன்னாள் ?" என,

:—" பெண்ணே! நீ யவளைத் தொடப்போகிறையா? பள் ளத்தியைத் தொடலாமா? தீண்டலாயிற்றே. நீ யவளுடைய காலைப் பிடித்து முள்ளு களையலாமா? நாம் உயர்ந்த ஜாதியல்லவா? நீச ஜாதியாரைத் தொடக் கூடாதே" என்று விஜயவல்லி யென்னைத் தடு க்கப்பார்த்தாள். நான் அதையெல்லாஞ் சட்டைப்பண்ணாமல் முள் ளைக் களைந்து கொண்டே :—'விஜயவல்லி! நீ யப்படி நினைக்காதே. நம்முடைய காலில் முட்பட்டால் நமக்கு நோகாதா? அவள் இப்படி வருத்தப்படும்போது நாம் பார்த்துக் கொண்டு நிற்கலாமா? தோஷ

மல்லவா? நாம் இரங்கினால் தானே மற்றையவர்கள் இரங்குவார்கள்; ஆனதைப்பற்றி விஜயவல்லி! தர்மத்தை யெண்ணுவது நல்லது என்று சொன்னேன். ஆனால் அவள் கேட்கவில்லை. நான் பல்லால் முள்ளைக் கடித்திழுக்கும்போது அவள் என்னை யதிகம் அதிகமாய் அவமானமாய்ப் பேசினாள். நான் அதையுங் காதிலேற்றுக் கொள்ளவில்லை" யென்றாள் மனோரஞ்ஜிதம். அதற்குள்ளாக வீடு வந்து சேர்ந்தோம். நான் அப்போது:—"மனோரஞ்ஜிதம்! விஜயவல்லி யென்ன அவமானமாய்ப் பேசினாள்? என்ன சொன்னாள்? அதனைச் சொல்" என,

மதுரநாயகம் பிள்ளையின் குமாரத்தி:—"அத்தான்! நான் அதைச் சொன்னால் நீங்கள் விஜயவல்லியை யடிப்பீர்கள். நான் சொல்லமாட்டேன். ஏற்கெனவே யிரண்டுதடவை யடித்துவிட்டீர்கள். போதும்! போதும்!" என்று சொல்லிக்கொண்டு தனது சிற்றப்பாரோடு தன் வீட்டுக்குப் போய்விட்டாள்.

நான் எனது தங்கையின் குணக்கேட்டை நினைத்து நினைத்து விசனப்பட்டேன். அச்சிறு நங்கையின் குண அழகையும் தர்ம சிந்தனையையும் யெண்ணி யெண்ணி வியப்படைந்து எனக்குள்ளே:—"அச்சிறு கன்னிகாமணி மனுப்பிண்டந்தானா? மனுஷர் வயிற்றிற் பிறந்த பிள்ளையா? இவ்வளவு சிறிய வயசில் மனுஷ ஜென்ம மெடுத்துப் பிறந்தவர்களுக்கு இவ்வளவு அறிவா? இவ்வளவு தர்ம சிந்தனையா? இவ்வளவு விமரிசையா? என்ன விந்தை! என்று நினைத்துக்கொண்டு எனது வீட்டுக்குள் நுழைந்தேன். அங்கு எனது தந்தையரும் தாயாரும் மனோரஞ்ஜிதத்தின் குணாதிசயங்களைப் புகழ்ந்து வியந்துகொண்டும் விஜயவல்லியின் குறைகளைக் குறித்துப் பேசி விசனப்பட்டுக்கொண்டும் இருந்தார்கள். நான் அவர்களோடு உட்கார்ந்து சம்பாஷிக்க ஆரம்பித்துச் சற்று நேரத்துக்கு முந்தி நிகழ்ந்த சங்கதியை யவர்களுக்குச் சொன்னேன். அவர்கள் அதனைக் கேட்டு இன்னும் அதிகக் கிலேசப்பட்டு விஜயவல்லியை யழைத்துக் கேட்க, அவளும் நடந்ததைச் சொல்லிவிட்டாள்.

அப்போது எனது தந்தையர்:—"விஜயவல்லி! ஏனிப்படிச் செய்கிறாய்? நீ யிராஜ வம்சத்திற் பிறந்து ஏனிவ்வளவு கேவலமாயிருக்கிறாய்? உனது வம்ச பெருந்தன்மையை யெங்கே யொழித்து விட்டாய்? யாவருக்கும் இரங்குவதே மேன் குலத்தாருக்கு

அடுத்தது. இரண்டு மூன்று சமயங்கள் வந்தன. மனோரஞ்ஜிதம் ஆபத்து வேளையில் தர்மத்தைச் செய்து குலதீபமாய்ப் பிரகாசிக்கிறாள். நீயோ! எனக்கு அவமானம் பண்ணுகிறாய்! எத்தனைவிசை யுனக்குப் பன்னிப் பன்னிச் சொல்வேன் மகளே? உன் வயசுக்கு மனோரஞ்ஜிதத்தைவிட நீ நன்னடக்கையில் மீசுரமாயிருக்கவேண்டாமா? நீ சுதாவாய்ச் செய்யாவிடினும் அவளைப் பார்த்தேனும் நடக்கக் கூடாதா? அவள் வயசிற் சிறுவியாயினும் எவ்விஷயத்திலும் உனக்கு உபாத்தியாயினியா யிருக்கிறாளே. அவள் போனவழி போவது கஷ்டமா?" என்று வெகு கிலேசமாய்ப் பேச,

நான்:—"ஆஜி! என்ன சொல்லுகின்றீர்கள்? மனோரஞ்ஜிதம் நடந்த வழியில் இவள் நடக்காவிடினும் போகட்டும். அவளுடைய தர்ம சிந்தனைக்கு விஜயவல்லி யெப்போதும் மாறாய்ப் பேசுகிறாள். அவள் செய்யுஞ் சுகிர்த கிரியைகளை யெந்நேரமும் இவள் தடுக்கிறாள். இதனோடுகூட இழிவாயும் பேசுகிறாள். அவளை யிவள் அவமானமாய்ப் பேசுகிறாள். சற்று முந்தி மனோரஞ்ஜிதத்தைத் தூஷித்து வந்திருக்கிறாள். அவளை நான் விஜயவல்லி யென்ன தூஷணஞ் சொன்னாள் என்று கேட்டபோது நான் எனது தங்கையை யடித்துவிடுவே னென்று அஞ்சி யுண்மையைச் சொல்லாமற் போய்விட்டாள். நிகழ்ந்தது என்னவென்று விஜயவல்லியை விசாரியுங்கள்" என,

எனது தகப்பனார்:—"விஜயவல்லி! மனோரஞ்ஜிதத்தை யேன் குறையாய்ப் பேசினாய்? என்ன சொன்னை? நிஜத்தைச் சொல்" என,

விஜயவல்லி கொஞ்சநேரந் தறுகினபின்னர் என் பிதா மேன்மேலும் பயமுறுத்தக்கண்டு அடிவருமென்று வெருண்டு:—"ஆஜி! சின்ன குட்டிக்கு முள்ளு களையவேண்டாமென்று தடுத்துப் பார்த்தேன். அவள் என் வார்த்தைகளைச் சட்டை பண்ணவில்லை. அப்போதெல்லாம் ஒன்றுஞ் சொல்லாமற் சும்மா நின்றேன். அவள் கடைசியாய் சின்னகுட்டி காலைத் தூக்கி முள்ளைப் பல்லாலே கடித்திழுக்கும்போது எனக்கு எரிச்சலும் ஆக்கிரமுமா யிருந்தது: அரோசிகங் குடலைப் பிடுங்கிற்று! அப்போது என்னாற் றாளமுடியாமல்:—தூத்தூ! போடி! பறைவேதத்திலே விழுந்த பறைச்சி; இன்றோடே நீ யெனக்குத் தோழியல்ல; போ! என்றேன்" என,

சந்திரசேகரம் பிள்ளை :—' அவள் என்ன சொன்னாள்? உன்னைத் திட்டினாளா?

:—" இல்லை ஆஜி! ஒன்றும் சொல்லவில்லை. அவளுக்குத் திட்டக்கூடத்தெரியுமா? எனது ஏசலைச் சட்டைபண்ணாமல் முள்ளைப் பிடுங்கிவிட்டு காலில் வடிகிற இரத்தத்தைத் துடைத்துக்கொண்டிருந்தாள்."

:—" பின்னும் என்ன செய்தாய்?"

:—" அண்ணன் வருவதைக் கண்டு அவர்களுக்கு எதிரே யோடி மனோரஞ்ஜிதஞ் செய்ததைச் சொன்னேன்" என்றாள் விஜயவல்லி. அப்போது எனது தந்தையர் சற்று நேரம் மவுனமாயிருந்து எனது தங்கையை விறைக்க விறைக்க கோபமுகத்தோடு உற்றுப் பார்த்தபிற்பாடு :— "நல்லதாகட்டும், விஜயவல்லி! சிவகாமியுன்னைக் கெடுத்தாள். உன்னை யவள் தக்கவிதமாய் வளர்க்கவில்லை. அடித்துவளர்க்காத பிள்ளையும் முறுக்கிவளர்க்காத மீசையும் நேர்மையறியா. விஜயவல்லிக்கு நீ கொடுத்த அளிரல்லவா இது சிவகாமி? நீ பிள்ளைகளை நன்றாய் வளர்க்காததோடுகூட துர்ப்போதனையுஞ் செய்துவைத்திருக்கிறாய்! நீ கிறிஸ்துவர்களைப்பற்றி யிழிவாய்ச் சொன்னதினால் அல்லவா இன்றைக்கு விஜயவல்லி யிவ்வாறு பேசிவிட்டு வந்திருக்கிறாள். நீ யிவ்வாறு பேசும்போது நான் சில சமயங்களிற் கேட்டிருக்கிறேன்" என்று என் தாயாரைக் கோபித்துக்கொள்ள, எனது மாதா :— "ஐயையோ! பிள்ளைகளுக்கு ஏதும் விரோதமாய்ச் சொன்னதாக நினைப்பில்லையே, துவக்கத்திலேயே நானும் பிள்ளைகளும் இங்கு வந்தபின்னர் சுந்தரத்துக்குக் கிறிஸ்துவர்களைப் பற்றிப் புகழ்ச்சியாய்ப் பேசினேனேயல்லாது யிகழ்ச்சியாய் ஏதுவுஞ் சொல்லவில்லையே. இரண்டொரு சமயத்தில் நமது பந்து ஜனங்கள் என்னைத் தொந்தரை செய்தமையால் அவர்களுடைய முகத்தாக்ஷிண்யத்துக்காகவேண்டியே தாகிலும் பிள்ளைகளுக்குச் சொல்லி யிருப்பேனாக்கும். மதுரநாயகம்பிள்ளை வீட்டுக்குப் பிள்ளைகளைப் போகக் கூடாதென்று தடுத்தேன். அவர்கள் என் கட்டளையை மீறி யங்கு போய்க்கொண்டிருந்தார்கள். அதைப்பற்றி யவர்கள் அங்கு போகாதபடிக்கு ஏதாகிலுங் குறைவாகச் சொல்லியிருப்பேன். அதற்கு முழு விரோதமாய்க் கொஞ்சநாளாய்ப் பிள்ளைகள் அவர் வீட்டுக்கே போகவேண்டு

மென்று அடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறேன். இப்போது நான் பந்துக்களையும் முகப்பிரீதியையும் முற்றிலும் ஒழித்துவிட்டேன். ஆதலால் இனி பழய பேச்சை யெடுக்காதேயுங்கள்" என்று எனது தந்தையருக்குச் சாமாதானஞ் சொல்லி மன்னிப்புக்கேட்டுக்கொண்டார்கள்.

ஆகவே யெனது தகப்பனார்:— "போகட்டும்! மனோரஞ்ஜி தம் விஜயவல்லியினுடைய தூஷணவார்த்தைகளைத் தனது தாய் தந்தையரிடஞ் சொல்லியிருந்தால் அவர்கள் என்ன நினைப்பார்கள்? சிவகாமி இதற்கென்ன செய்கிறது? ஓர் சூழ்ச்சி சொல்; பார்ப்போம்" என,

எனது தாயார்:— "நீங்கள் அப்படி நினையாதேயுங்கள். மனோரஞ்ஜிதத்திற்குக் கோள், குண்டுணி, தூறு சொல்லுங்குணங் கிடையாது. சுந்தரங் கேட்டபோது நமது பிள்ளையின் குற்றத்தைச் சொல்லாதவள் தாய் தந்தையரிடத்திலா போய்ச் சொல்லுவாள்? ஒரு போதுஞ் சொல்லாள். ஆதலால் நீங்கள் இவ்விஷயத்திற் கவலைப்படவேண்டாம்" என்று அவருக்குத் தைரியஞ்சொன்னார்கள். ஆயினும் அவர் என்றாயார் சொன்னதையுங் கேளாமல் என்னை யழைத்துக்கொண்டு மதுரநாயகம் பிள்ளை வீட்டுக்குப்போனார். அப்போது கிராமத்திற்குப்போயிருந்த மதுரநாயகம்பிள்ளையும் ஜெயராமச்சந்திர ஐயரும் இன்னுந் திரும்பிவரவில்லை. நாங்கள் வீட்டுக்குள் பிரவேசிக்குஞ் சமயத்தில் குணமணியம்மாள் மனோரஞ்ஜிதத்தைத் தன்னருகில் உட்கார்த்திக்கொண்டு பின் வருமாறு:—"மகளே! உலகத்தில் வாழுங் கோடாகோடி மனிதருடைய முகங்களைப்பார். இரண்டு முகங்கள் சமமாயிருக்கின்றனவா? இல்லையே. அவைகளை யுற்று நோக்க, நோக்க வெவ்வேறாகவே யிருக்கின்றன. அவ்வாறே குணங்களும் வெவ்வேறாகத்தானிருக்கும். ஆதலால் ஒவ்வொரு குணத்துக்கும் ஒத்து நடப்பதே பரமசலாக்கியம்; அதுவே சகல கல்விகளிலும் மேலான கல்வி; சகல சாஸ்திரங்களிலும் மேலான சாஸ்திரம்; அதுவே புத்தியை முக்கிய இலக்ஷணமாகக் கொண்ட மனிதனுக்கு சிறப்பு, அழகு, அலங்காரம். மனிதரில் சிலர் சாதுக்கள்; சிலர் அசாதுக்கள்; சிலர் மந்தப்புத்தியுள்ளவர்கள். இவ்வாறு அரிசியுங் கல்லும், பயிருங் களையுங் கலந்தது போற் குணசாலிகளுங் குணக்கேடரும் உலகில் எப்போதுங் கலந்துதான் ஜீவிப்பார்கள். ஆதலால் மகளே! ஒவ்வொருவர் குணத்

தக்குத் தக்காப்போல் நடந்துகொள். விஜயவல்லி குணம் வேறு; உன் குணம் வேறு; இரவாமணிகுணம் வேறு; கமலாம்பாள் குணம் வேறு; நமது கிட்டின பந்துக்களாகிய இராஜாத்தியம்மாள், ஸ்தெல்லாள், பிறந்த பாப்பாள், சந்திரம்பாள், இராஜாமணி முதலிய பெண்மணிகளுடைய குணங்கள் வேறு. ஆகையால் நீ யவர்களோடுறவாடி, வழங்கும்போது ஒவ்வொருவர் குணத்தைக் கண்டு நடந்துகொள்" என்று மனோரஞ்ஜிதத்துக்குப் போதித்துக்கொண்டிருந்தாள்.

நாங்கள் அங்கு போன உடனே யென்னையும் எனது தந்தையரையுங் குணமணியம்மாள் உபசரித்து எங்களுக்கு ஆசனங்கொடுத்து எனது பிதாவை நோக்கி :...' ஆஜி! எங்கே யிந்நேரத்தில் வந்தீர்கள்? அத்தான் இன்னுந் திரும்பிவரவில்லை. இன்னும் அரைமணி நேரத்துக்குள்ளாக வந்துவிடுவார்கள்" என, எனது தந்தையர் —" அம்மா! குணமணி! இப்போது நான் மதுரநாயகம்பிள்ளையைத் தேடிவரவில்லை. மனோரஞ்ஜிதத்தைத் தேடிவந்தேன். இன்று சாயந்திரம் விஜயவல்லிக்கும் அவளுக்கும் நடந்த சம்பாஷணையைப் பற்றி யிரகசியமாய் இரண்டொரு வார்த்தைகள் கேட்டுப்போக வந்தேன்" என குணமணியம்மாள் மனோரஞ்ஜிதத்தைத் தனியாய் விட்டுவிட்டு வீட்டுக்குள்ளே போய்விட்டாள். அப்போது சந்திரசேகரம்பிள்ளை அச்சிறு பெண்ணை யழைத்துக் காதோடுகாதாய்:— "மனோரஞ்ஜிதம்! இன்று சாயரட்சை விஜயவல்லி யுனக்கு விரோதமாய் ஏதோ சில அடாத வார்த்தைகளைச் சொன்னளாமே. அவைகளை யுன் ருயாரிடம் சொன்னையா? என,

மனோரஞ்ஜிதம்; —"இல்லை, தாத்தா! அவைகளை நான் சொல்லுவேனு? சொன்னல் என்ன வந்துவிடும்? ஒன்றுமில்லை. அம்மாளும் ஆஜியும் ஒன்றுஞ்செய்யமாட்டார்கள். அப்படி யிருந்தாலும் விஜயவல்லிபேரில் வருத்தமாயிருக்கமாட்டார்களா? நான் நடந்ததைச் சொன்னல் அவர்களுக்கு அவள்மேல் வெறுப்பு உண்டாகுமே. ஆனதைப்பற்றி நான் சொல்லமாட்டேன்" என்று மெல்ல பேசிக்கொண்டிருக்கும்போதே, சமீபத்திலிருந்த அறையினின்று அபிராமியம்மாள் சிரித்துக்கொண்டு வெளியிற் புறப்பட்டார்கள். அப்போது சந்திரசேகரம் பிள்ளை கிஞ்சித்துத் திகைத்துப் பேசாமலிருக்க,

அபிராமியம்மாள் :—"கவலைப் படாதேயுங்கள் ! தந்தையே ! சிறுவர்களுடைய விளையாட்டுச் சண்டைகளையும் வீண்வார்த்தைகளையுந் தோள்மேற்போட்டுக்கொள்ளும் வழக்கம் எனக்கும் அத்தானுக்குங் கிடையவே கிடையாது. எனது பிள்ளைகள் இதர பிள்ளைகள் தங்களை யடித்துவிட்டதாகப் பிரியாதுகொண்டுவந்தால் அவர்களை விசாரணையின்றி யுடனே முழங்காலில் வைப்பதே நான் கேட்குஞ் சலிகை. அவர்கள் ஐந்து நிமிஷ நேர முழங்காலிலிருந்த பின்னர் :— "எழுந்துபோங்கள், நாளையும் பின்னையும் யார்பேரிலும் எவ்வித புகாருங் கொண்டுவராதேயுங்கள்" என்று அவர்களை யனுப்பிவிடுவேன். பிள்ளைகள் இப்போது அடித்துக் கொள்வார்கள்; இன்னுஞ் சற்றுப்பொறுத்துக் கூடிக்கொள்வார்கள், இப்போது சொன்ன தூஷணவார்த்தைகளைக் கொஞ்சநேரம் பொறுத்து மறந்துவிடுவார்கள். ஆதலால் சின்னுஜி! பாடசாலை மாணுக்கருக்கும் வீதிகளில் விளையாடித்திரியுஞ் சிறு பிள்ளைகளுக்குஞ் சலிகை யொருநாளுங் கேட்கக்கூடாதென்பது எனது சித்தாந்தம். அதுவே யுங்கள் சித்தாந்தமாயு மிருக்கட்டும்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, மதுரநாயகம் பிள்ளை வீடுவந்து சேர்ந்தார்.

---

## 18-ம் அத்தியாயம்.

சிறுபிள்ளைகளோடு இங்கிதம்பேசலாகாது. பள்ளிப்பிள்ளைகளுக்குச் சலிகை கேட்கவொண்ணுது. சச்சிதானந்தமுதலியார், வெங்கட்டராமநாயுடு, கோவிந்த படையாக்ஷி முதலிய தந்தையர்கள் தங்கள் மக்களை வளர்த்தவகை. மனோரஞ்ஜிதஞ் சிறுவியாயினுந் தர்க்க சிகாமணி. தேவசிநேகத்தைப்பற்றி யொரு சிறிய உபன்னியாசமும் நிதரிசனமும்.

அவர் வரவே யவரிடஞ் செலவு பெற்றுக்கொண்டு நானும் எனது தந்தையரும் வீடுவந்து சேர்ந்தோம். அங்கு எனது மாதா எங்களுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள், நாங்கள் போன வுடனே எனது அன்னை :— "என்ன நடந்தது ? என்ன சமாசாரம் ? நான் உங்களுக்குச் சொன்னது மெய்யா ? பொய்யா ? மனோரஞ்ஜிதம் ஏதேனுஞ் சொல்லிவிட்டாளா ? அவ்விஷயத்தில் அபிராமியின் ருப்பிரிய மென்ன ?" என்று வெகு ஆவலோடு கேட்க, எனது தந்தையார்:—"சிவகாமி ! துரிதப்படாதே, சொல்லுகிறேன், கேள் ; இன்று அபிராமியிடம் இரண்டு அதை காரியங்களைக்

கற்றுக்கொண்டேன். நான் அவைகளை யொருபோதும் மறவேன். நீ சொன்னதுபோல் மனோரஞ்ஜிதம் தன் றாய்தந்தையரிடம் ஏதுஞ் சொன்னவளல்ல. விஜயவல்லி மனோரஞ்ஜிதத்தைப் பார்த்து :— “ தூத்தூ! போடி பறைவேதத்தில் விழுந்த பறைச்சி ” என்று சொன்ன தூஷண வார்த்தைகளைக் குறித்து அக்கன்னிகா விரக்தினத்தோடு இரகசியமாய்ப் பேசிக்கொண்டிருந்ததை அபிராமியம்மாள் பக்கத்து அறையினின்று கேட்டுக்கொண்டிருந்து, சிரித்துக்கொண்டே வெளியில்வந்து எனது கிலேசத்தையும் கவலையையும் முற்று மொழித்து எனக்குச் சமாதானஞ் சொல்லி யனுப்பிவிட்டாள். சிறுவருக்கும் பள்ளிப் பிள்ளைகளுக்குஞ் சலிகை கேட்காமலிருப்பது தனது சித்தாந்தம் என்றாள். இனி யதுவே யெனது சித்தாந்தம். உனது சித்தாந்தமும் அபிராமியின் சித்தாந்தமா யிருக்கட்டும், இதுவே பிள்ளைகள் சன்மார்க்கத்திலும் கல்வியிலும் அபிவிர்த்தி யடைவதற்கு நல்ல வழி. சிவகாமி! அபிராமியம்மாள் சாமான்ய பெண்ணல்ல. அவள் நியாயங்களைத் தராசில் வைத்துத் தூக்கிப் பார்ப்போமாகில் அவை இலேசல்ல. பெருந்தன்மையோர் மாத்திரம் அவைகளின் கனகனங் கண்டறிவார்கள். இதிலேயே பிள்ளைகளுடைய பிற்கால சுகமும் க்ஷேமமும் பெயரும் பிரக்கியாதியும் நன்னடக்கையும் மோக்ஷ சாதனமும் அடங்கி யிருக்கின்றன. ஆதலால் நீ யின்றுதொட்டு உன் பிள்ளைகள் மட்டில் அபிராமியைப் பின்செல்.

சிவகாமி! அநேக தாய்தந்தையர் தங்கள் பிள்ளைகளுக்கு இளக்காரங் கொடுப்பதனாலும், இங்கிதம் பேசுவதனாலும், இளைஞர் சச்சரைகளை யேற்றுக்கொண்டு அவர்களுக்குச் சனுகாய்ச் சலிகை கேட்பதனாலும் உலகில் எவ்வளவோ தின்மைகள் விளைகின்றன! இதனால் எத்தனை குடும்பங்களில் நெடுநாளாய்ச் சமாதானம் அற்றுப்போயிற்று! இதனால் எத்தனையோ மாணாக்கர் படித்துத்தேறிச் சான்றோராகக்கூடிய சாமர்த்தியமும் புத்தியும் இருந்தும் படியாத கசடராய் நிலைத்துத் தங்களையுந் தங்கள் பிதா மாதாக்களையுஞ் சகலவித நிர்ப்பாக்கியங்களுக்கும் உள்ளாக்கிவிட்டார்கள். இதற்கு நிதரிசனமாக நான் சிறுவனா யிருக்கும்போது நடந்த இரண்டு சம்பவங்களைச் சொல்லுகிறேன் ; கேள் :

நமது குமஸ்தாவாகிய ஜம்புலிங்கம் பிள்ளையின் மாமனார் சுந்தரேசம் பிள்ளையை யுனக்கு நன்றாய்த் தெரியும். அவருக்கு எட்

டிப்பிள்ளைகளிருந்தார்கள். அவருக்கு தனசம்பத்துக்கள் விஷயத்தில் யாதோர் குறையுங் கிடையாது. திரிபுவனசாலையில் அவருக்கு நூறு வேலி நிலங்களிருந்தன. கையிற் கணக்கற்ற சங்கம சொத்துக்களையும் வைத்திருந்தார். ஆனால் தனது மக்களை நன்றாய் வளர்க்க அவருக்குத் தெரியவில்லை. அவர் இன்றுதினம் உலகில் உயிர்வாழவில்லை. மாண்டோர் மவுனப்பாடியை அடைந்துவிட்டார். ஆனால் அவருடையபிள்ளைகள் எக்கோலமானார்கள்? ஓ! நிர்ப்பாக்கியம்! நிர்ப்பாக்கியம்! அவருடைய நாலாவது மகன் அண்ணாமலைப்பிள்ளை தவிர மற்றவர்கள் என்ன செய்கிறார்கள்? கேசவ பிள்ளை விபசாரி: அரங்கசுவாமி குடியன்; பாணாசூரன் சூதாட்டத்தில் தீரன்; திருமலைப்பிள்ளை விலங்கிற் கிடக்கிறான். அவருடைய மூன்று பெண்பிள்ளைகளில் சுந்தரம்பாள் சுமாராயிருக்கிறாள்; குணசிந்தாமணி யென்ன செய்கிறாள்? அவளது தந்தையர் அவளைச் செல்வப்புத்திரியா யெண்ணி மிக்க செல்வமாய் வளர்த்து அவளுக்குக் குணசிந்தாமணி யென்று பெயரிட்டார்! அடேயப்பா! அவள் குணசிந்தாமணியா? குதர்க்க சிந்தாமணியல்லவா? அவள் நுழைந்த வீட்டில் மறுதினம் உலை யிரண்டே! பெரும் வாய்ப்பட்டி! அவளைத் தர்க்க சிந்தாமணி யென்றாலும் செல்லும்! நூறுபேருக்கு வாய் கொடுத்து வாயடைப்பாள். களரியிற் கடைசி வார்த்தை யவளுக்கே சொந்தம். இன்னும் அவளுடைய குணாதிசயங்களை யெடுத்துரைக்க வேண்டுமானால் மலை மலையாய் வளரும்.

ஜம்புலிங்கம்பிள்ளை பெண்டீர் புஷ்பக்கண்ணென்ற தில்லைநாயகத்தைச் சற்றுக்கவனிப்போம்: அவள் எட்டாம்பேறு. ஆ! நாராயணா! அவள் எட்டிப்பார்த்த விடமெல்லாங் குட்டிச்சுவர்! சிவகாமி! நீ நாடோறுங் கண்காட்சியாய் ஜம்புலிங்கம்பிள்ளை படும்பாட்டைப் பார்த்துவருகிறாய். அன்றாடகம் நமதுவீதி அம்புபறந்துபோகிறது! அவளுடையபிரதிதின துர்ச்செயல்களாலுந் தூஷணவார்த்தைகளாலும் அசப்பியங்களாலும் அநாச்சாரங்களாலும் நமது மனசு வெறுப்படைகிறது! கண்கள் கரிக்கின்றன! காதுகள் புளித்துப்போகின்றன! அவள் குலமகளா? கொண்டவனை மதிக்கின்றாளா? இன்று தினம் அவளுடைய பந்துக்கள் பரம ஏழைகள். அவர்களுடைய சதவேலி நிலங்களும் போயின; ஜங்கம சொத்துக்களும் ஒழிந்தன. தில்லைநாயகத்தின் செல்வாக்கெல்லாஞ் சிறுமையாய் முடிந்தும் அவளுடைய கர்வம் அவளை விட்டு நீங்கவில்லை. அவள் திரிதராஷ்

டிரன் பெண்டீர் காந்தாரிக்குத் தங்கை யாவாள் போலும். அவள் ஜம்புலிங்கம் பிள்ளைக்குப் பெருஞ் சுமையாய் வந்து நேர்ந்தாள்.

நான் மேற்கூறியவர்க ளெல்லோரும் பெரிய மனுஷர் வீட்டுப் பிள்ளைகள் தான். அவர்க ளெல்லோருஞ் சுகத்தை யடையப் போதுமான தனசம்பத்துக்களும் வகையும் வழியும் இருந்தன. ஆனால் பிதாமாதாக்களுடைய அபல ஆள்கையினாலும் கண்காப்பின்மையினாலும் பிள்ளைகள் கெட்டார்கள். சுந்தரேசம் பிள்ளை ஸ்வாமி சௌந்தரநாயகம்பிள்ளையைக் கண்டு நடந்தார்களா? இல்லை மதுரநாயகம் பிள்ளையின் தந்தையரைப் பின்சென்றார்களா? இன்னுங் கிடையாது. அல்லது சச்சிதாநந்த முதலியாரைப்போலத் தன்னுடைய பிள்ளைகளைக் கண்டிப்பாய் நடத்தினார்களா? அதுவுமில்லை. மேற்படி முதலியாரைப்போல் நடந்திருக்கும் பட்சத்தில் சுந்தரேசம் பிள்ளையின் மக்கள் சந்தேகமற இன்று பெரிதான உத்தியோகங்களை வகித்தும், பெரும் பிரக்கியாதி அடைந்து மிருப்பார்கள்! ஆனால் அவர் தன் பிள்ளைகளைச் சரியாய் வளர்க்காமையால் அவர்கள் விபசாரஞ், குடி, களவு முதலிய துர்க்குணங்களில் அபிவிர்த்தியடைந்து, நிர்ப்பாக்கியராய்த் தரித்திரராய்ச் சகலராலும் நிந்திக்கப்பட்டுத் தெருவில் நிற்கின்றார்கள்!" என,

நான் (சுந்தரம்):—"அப்பா! சச்சிதாநந்த முதலியார் தமது பிள்ளைகளை யெவ்வாறு வளர்த்து நடத்தினார்? தயைசெய்து அதனை யெனக்குச் சொல்லுங்கள்" என,

எனது தந்தையர்:—"மகனே! நான் உனக்கு அதனைச் சொல்லும்பட்சத்தில் உனக்கே யது விரோதமாய் நிற்கும். ஆயினும் உன் நலத்தைக் கோரிச் சொல்லுகிறேன்: கேள். நான் அரவாம் புரியில் பாடசாலையில் வாசிக்கும்போது என்னோடு சச்சிதாநந்த முதலியாருடைய மக்கள் நாலுபேர் படித்துக்கொண்டிருந்தார்கள். நால்வரில் இருவர் சாதுக்கள்; மற்றிருவர் கொஞ்சங் குணக்கேடர்; விளையாட்டுப்பிரியர்; வீண்சண்டைகளை யடிக்கடி கொண்டு வருகிறவர்கள். ஆனால் அவர்களுடைய தந்தையர் அந்தத் துர்க்குணங்களுக்கு இடங்கொடுத்தவரல்ல; பையல்களுடைய சண்டைகளுக்குக் கச்சைகட்டிக்கொண்டு வீதிக்குப் போனவரல்ல. அவர்களுக்கு ஒருபோதும் இளக்காரங் கொடார். அவர்களோடு இங்கிதம் பேசார்: அவர்களுடைய அணுவளவு குற்றத்தைக் கண்

டாரா? அதனை விடவே விடார். ஒரு குறையைப் பரிகரிக்க வேண்டி தமது பிள்ளைகளை யெத்தனையோவிசை முழங்காலில் வைப்பார்! எத்தனையோ அடிகள் அடிப்பார்! எத்தனையோ பிரம்புகள் தெறித்துப்போயிருக்கும். கல்வி விஷயத்தில் அவர்கள் சரியாய்ப் படிக்காவிட்டால் என்னசெய்வார்? அவர்களுக்கு உப்பில்லாத் தண்ணீர் வார்த்த சாதம்போடுவார். இன்னும் அவர்கள் கவனியாவிடில் ஒவ்வொருவனை யொவ்வோர் தூணில் நாய்கட்டுஞ் சங்கிலியாற் கட்டி நாய்க்குச் சாதம்போடுங் காலத்தில் அவர்களுக்குச் சாதம் படைக்கச் சொல்வார்! இவ்வாறு அவர் இடைவிடா முயற்சி செய்தமையால் பிள்ளைகள் எல்லாத் துர்க்குணங்களையுந் திருத்திக்கொண்டார்கள்; கல்வியில் கவனம்வைத்துப் படித்ததனால் எல்லோரும் சிறந்த மேதாவிகளாய்ப் போனார்கள், அவர்களில் இருவர் பி. ஏ., பி. எல். பரீட்சைகொடுத்தார்கள்; ஒருவர் பி. எல், எம். எ., மற்றவர் எம். எ, எம். எல். பரிட்சையிலுந் தேறினார்கள். இப்போது அவர்களெல்லோரும் பெருத்த உத்தியோகங்களைச் செய்து சுகத்தை யடைகிறார்கள். பார்த்தையா மகனே! இந்த நலங்களுக்குக் காரணபுருஷன் யார்? தகப்பனல்லவா? முதலியார் சுந்தரேசம் பிள்ளையைப்போல் வளவள குளகுள வென்று விளக்கெண்ணெயுங் கற்றாழைச்சாறுமா யிருந்தால் அவருடைய பிள்ளைகள் எப்படி யிருப்பார்கள்? சுந்தரேசம் பிள்ளையின் புத்திர பாக்கியங்களைப்போலத்தா னிருப்பார்கள். ஆதலால், சிவகாமி! நீயுன் பிள்ளைகள் மட்டில் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்று இந்தச் சிறிய சரித்திரத்தினால் நன்றாய்க் கற்றுக்கொள். பிள்ளைகளுடைய சுகமும் அசுகமும் பெற்றோருடைய கரங்களில் இருக்கின்றன. உன் மக்களின் நன்மையுந் தின்மையும் உன் கைகளில் அடங்கி விட்டன. இனி நீ நாடோறும் விஜயவல்லிமீது விசேஷ கண்ணோக்கமா யிரு.

அரவாம்புரிக்கடுத்த நந்தன்பாடியில் மேட்டு சிந்தாமணி, பள்ள சிந்தாமணி யென்று இரண்டு வீதிக ளிருக்கின்றன. மேட்டு சிந்தாமணியில் வெங்கட்டராம நாயுடு என்று ஒரு கவரை குடியிருந்தான். பள்ள சிந்தாமணியில் கோவிந்த படையாச்சி யென்று ஒரு வன்னியன் வாசம்பண்ணிக்கொண்டிருந்தான். இருவருந் தனவான்கள்; இருவரும் பெரிய மனுஷரே. இருவருக்கும் இரண்டு எக புத்திரர்களிருந்தார்கள். வெங்கட்டராமநாயுடுவின் பிள்ளை பெயர் தன

ராஜுலு. கோவிந்த படையாச்சியின் மகன் பெயர் தனக்கோடி. இரண்டு பிள்ளைகளுக்குஞ் சற்றேறக்குறைய ஒரேவயசு. அவ்விரு தந்தையர்களுந் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கு வைத்தார்கள்; தனராஜுலுக்கு நுண்ணறிவுஞ் சாமர்த்தியமுஞ் சுவாப கொடைகளாயிருந்தன. தனக்கோடி சற்று மந்தப புத்தி. புத்திக்குத் தக்காப் போற் பெற்றோரும் அமைந்தார்கள். எவ்வாறு? முழு விரோதமா யமைந்தார்கள். தனராஜுலுவினுடைய தந்தை தன் மகனை வெகு செல்வமாய் வளர்த்துவந்தார். யாரும் ஏதையுந் தனராஜுலுக்கு விரோதமாய்ச் செய்யப்படாது. பிள்ளை கொண்டு வரும் ஒவ்வொரு வீண் சண்டைக்குங் கையிற் கங்கணங் கட்டிக் கொண்டு வியர்த்த சச்சரைக் கேற்படுவான். பிள்ளைகளுடைய ஒவ்வொரு விளையாட்டுச் சண்டைக்கும், தன் மகனுக்குச் சலிகை கேட்பான். உபாத்தியாயர்மீதீ தனராஜுலு நாடோறும் பிரியாது கொண்டுவருவான்; நாடோறும் வெங்கட்டராமநாயுடு பள்ளிக் கூடத்துக்கு வந்து உபாத்தியாயர் பேரில் முறைப்பாடு சொல்வான். அவரிடம் தன்குமாரனுக்குச் சிபாரிஸ் பேசுவான், நினைத்த நேரத்திற் புத்திரனுக்காக வேண்டி சலிகைக்கு வந்துவிடுவான். இதனால் தனாராஜுலு ஒருநாளும் நன்றாய்ப் படிக்கிறதில்லை. வெங்கட்டராம நாயுடுவுக்குப் படிப்பு அவ்வளவு பெரிய காரிய மல்ல. மகனுக்கு நோவாம விருந்தாற் போதும்.

ஒரு நாள் உபாத்தியாயர் தனராஜுலை நாலு ஐந்து அடிகள் பலமா யடித்துவிட்டார். அடிகளால் தனராஜுலுக்கு உடம்பு பல விடங்களில் தடித்துப்போயிற்று. பையன் அடிகளை வாங்கிக் கொண்டு ஒரே யோட்டமாய்த் தன் தகப்பனிடம் ஓடிச்சொல்ல, தகப்பன் உடனே கேள்வி, முறை, விசாரணை யாதொன்று மில்லாமற் கச்சேரிக்குப்போய்ப் பிரியாது எழுதி நீதியஸ்தரிடங் கொடுத்துவிட்டான்.

சிலதினங்கள் கடந்தபின்னர், நீதியஸ்தர் உபாத்தியாயரையும் மாணாக்கனையும் அழைத்துத் தீர்க்க விச்சாரித்து அண்ணாவிசெய்தது நியாயமென்று தீர்த்து வெங்கட்ராம நாயுடுவின் வியாஜியத்தை தள்ளிவிட்டார். மறு நாள் காலமே யுபாத்தியாயர் தனராஜுலை யேற்றுக்கொள்ளாமல் தள்ளிவிட்டார். வெங்கட்டராமநாயுடு வேறு வேறு பள்ளிக்கூடங்களைத் தேடிப்போயும் ஒரு வுபாத்தியாய

ரும் தனராஜுலுவை யேற்றுக்கொள்ளவில்லை. இவ்வாறு ஒவ்வொரு பாடசாலையின் உபாத்தியாயரும் தங்களில் ஒருவருக்கு வந்தது மற்றெல்லோருக்கும் வந்ததென்று எண்ணிக்கொண்டு தனராஜுலுவைத் திரஸ்கரித்து விட்டார்கள். வடுகர் வீம்புக்கு மீசுரமான வீம்பு உண்டா? அதுதொடங்கி பையனுடைய பாடசாலை நாடகசாலையாயிற்று. வெங்கட்டராம நாயுடு தொங்கட்டராம நாயுடுவானான், எந்த உபாத்தியாயரை யேனும் பேயடித்தவனுமல்ல. இவ்வாறு தனராஜுலு பள்ளிக்கூடத்தை விட்டு நீங்கி கடிவாள மில்லாக் குதிரை போல் துஷ்ட ரோடுகூடி குடி, விபசாரம், திருட்டு முதலிய துர்க்கிருத்தியங்களில் விர்த்தியடைந்து தன் தந்தையருக்கு அடங்காமல் தன்னிஷ்டம் போல் நடந்தான். இதனால் வெங்கட்டராம நாயுடுவுக்கு வாக்கிலடங்காத கிலேசமுந் துக்கமும் வியாகூலமும் நேரிட்டு மனமுறிந்து சீக்கிரம் தேகவியோகமாகி சமாதியடைந்து விட்டான்.

தனராஜுலு தன் பிதுரார்ஜிதத்தைத் தன்னிஷ்டம்போல் விபசாரம்,குடி முதலிய துர்நடத்தையிற் செலவிட்டு கடைசியாய்ப் பெரும் ஏழையானான். இந்த ஏழ்மையினும் தன் விசேஷ துர்க்குணத்தை விடாமல் ஓரிராத்திரி துராக்கிருதமாய் ஓர் வீட்டில் நுழைந்து நிர்ப்பாக்கியமாய்க் கொலையுண்டு ஓர் பாழுங் கிணற்றிற் போடப்பட்டான். இதுவே தனராஜுலுவின் முடிவு.

தற்போது தனக்கோடியைப் பார்ப்போம்: நான் மேலே சொன்னதுபோல் அவன் கொஞ்சம் அறிவீனன். ஆனால் அவனது தந்தை யவன்மட்டில் மெத்த சிரத்தையுஞ் சிரமமும் எடுத்துக் கொண்டான். தினந்தோறும் தகப்பனுடைய தூண்டல் அவனுக்கு முதல் உபாத்தியாயரா யிருந்தது. கோவிந்த படையாச்சி யொரு நாளேனுந் தவறாமல் தன் மகனை விசாரிப்பான், பரீக்ஷிப்பான், தண்டிப்பான்; திருத்துவான். அவனுக்கு இளக்காரங் கொடான்; சச்சிதாநந்த முதலியாரைத் தோற்கடித்து விடுவான்போலும்! எல்லா விஷயங்களிலும் தன் மகனை இடைவிடாது கண்காணித்து வந்தான். தனக்கோடி தன் சொந்தமுயற்சியினாலும், தாய்தந்தையருடைய பிரயாசையினாலும், உபாத்தியாயருடைய பிரயத்தனங்களாலும் ஒழுங்காய்ப் படித்துப் பற்பல பரீக்ஷைகளில் தேறி அரவாம்புரியில் நீதி மந்தரத்தில் முந்நூறு ரூபாய்ச் சம்பளத்துக்குச் சிரஸ்ததாராய், அமர்ந்து நீதிமானாய்த் துலங்கி யெல்லோருடைய

மதிப்பினும் நாளுக்கு நாள் வளர்ந்து, எல்லாராலுந் தர்மதேவதை தனக்கோடி நயினுரென்று சொல்லப்பட்டு நாளதுவரையில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிருர்.

தனக்கோடி நயினுருடைய சுகக்ஷேமத்திற்கும் தனராஜு ஆவினுடைய நிர்ப்பாக்கியத்துக்குங் காரணம் யார்? வெங்கட்டராம நாயுடும் கோவிந்த படையாச்சியு மல்லவா?

சிவகாமி! இச்சிறிய சம்பவங்களை மறக்காதே. நமது பிள்ளைகள் நன்மையைச் செய்யினுந் தின்மையைச் செய்யினும் நன்மையுந் தின்மையும் நம்மையே சாரும்! நாம் இப்போது நமது பிள்ளை களிடத்தில் எதனை விரைக்கின்ருேமோ காலத்தோடு அதுவே முளைக்கும். அவர்களிடத்தில் நாம் தற்போது நல்ல பயிர்களை விதைத்தால் அவர்கள் பிற்காலத்தில் நல்லபலனைக் கொடுப்பார்கள்; நாம் சிறு வயசில் அவர்களிடத்தில்முட்செடிகளையும் இண்டங்கொடிகளையும் நாட்டிவிட்டு, முதிர் வயதில் அவர்களிடத்தில் மாம்பழங் களையுந் திராக்ஷக்கனிகளையுந் தேடினுற் கிடைக்குமோ? கிடைக்காதே. ஆதலால் இளமையிலே பிள்ளைகளைச் சன்மார்க்கத்திற் பழக்க வேண்டும். புண்ணியத்தில் அபிவிர்த்தி யடையவும் துர்க்குணங்களை நிவிர்த்திக்கவும் பிள்ளைகளுக்கு இளமையே தக்கவயசு. இளமையில் ஓர் செடியை நமது இஷ்டம்போல் நிமிர்த்தலாம்; வளைக்கலாம். அது வயது முதிர்ந்து மரமாய்விட்டதா? அதனை நிமிர்த்தப்போனுலும், வளைக்கப்போனுலும் அது கட்டாயம் முறியும். இதுவே பிள்ளைகளின் இயல்பு. நாம் சிறுபோதே நமது பிள்ளைகளைக் கவனித்துக், கண்காணித்து, சீர்திருத்திச், சரியாய் வளர்த்தோமா? அவர்கள் பால்யத்தில் ஒழுங்காய், நேர்மையடைந்து, நேராய் நடப்பார்கள். சிறுவயதில் அவர்கள் யுக்தியின் முரடும் முடக்கும் முடிச்சும் பாய்ந்தனவா? முதிர் வயதில் அவர்கள் முரடரே; கசடரே; கவ்வைக்குதவாக் கடையரே; அதிற் சந்தேகங் கிடையாது. ஆதலால், சிவகாமி! அபிராமியம்மாள் உனக்கு நீதி தர்ப்பணமாயிருக்கட்டும். பார்வையற்றவர்கள், அரைப்பார்வை, காற்பார்வை யுள்ளவர்கள் கண்ணுடித்துணையாற் பொருட்களைப்பார்த்துக் காரியங்களை யேப்போற்றிக்கொள்வார்கள். நீ படிகத்தில் உன் முகத்தைக்காண்பதுபோல் அபிராமியுடைய செய்கைகளில் நீ செய்ய வேண்டியவைகளை நன்ருய்ப் பார்க்கிருய். ஆதலால் இனி வீண் சாக்குப்போ

க்குச் சொல்லாதே. பந்துக்களுடைய சனுகுஞ் சகாயமுஞ் சங்காத்தமும் நமக்கு வேண்டுவதில்லை. ஆனதுகொண்டு நமது பிள்ளைகள் மதுரநாயகம் பிள்ளை வீட்டுக்குப் பிரதிதினமுந் தடையின்றிப் போகட்டும். நீயும் அங்கு தடையின்றிப் போகலாம். 'இயற்கை வாசனை சேர்க்கைவாசனை' யென்ற பழமொழியை மறந்து போகாதே. நாம் சுவாபீகமாய்ப் புண்ய வாசனையால் சுகந்தம் வீசுவது நமக்கு வாசி. இன்றுதொட்டு இனி யெப்பொழுதும் விஜயவல்லியைக் கண்டிப்பாய் நடத்து. அவள் நன்றாய்த் திருந்தி மனோரஞ்ஜிதத்துக்குத் தமக்கையாகாவிடினும் போகட்டும்; அவளுக்கு உகந்த தங்கையாகுந் தனையும் இன்று நேர்ந்துகொண்ட பிரதிக்ஞையை யொருபோதுங் கைவிடாதே' என்று,

எனது தாயாருக்கு இதம் போதித்துவிட்டு எனது தங்கை விஜயவல்லியை நோக்கி:—“ அம்மா! மகளே! நான் சொன்ன புத்திமதிகளை யெல்லாங் கேட்டுக்கொண்டிருந்தாய். இவைகளை மறக்காதே. நீ நாடோறும் ஒரே யொரு காரியத்தைக் கவனிக்கவேண்டும்: மனோரஞ்ஜிதத்தைப்போல் நடந்துகொள். அதுவே போதும். அவள் எதேதைச் செய்கிறாளோ அதையெல்லாம் நீயுஞ் செய். அவளுக்கு மறுப்புச் சொல்லாதே; விரோதமாய்ப் பேசாதே; அவளை தூஷிக்காதே. அவள் சிறுவியா யிருந்தாலும் ஆழ்ந்த கருத்தோடு செய்யுங் காரியங்களை நீ குருட்டாட்டத்தினாற் குற்றமா யெண்ணுகிறாய். அது சரியல்ல. இனி யொழுங்காய் நடந்து கொள்ளுவாயா?”

என்று எனது தங்கையை வினவ, அவள்:—“ அப்படியே செய்கிறேன், அப்பா! இனிமேல் மனோரஞ்ஜிதம் கிணற்றில் விழுந்தாலும் நானுங் கூட விழுகிறேன். தந்தையே! என்பேரில் உங்களுக்கு இருக்கிற வருத்தமெல்லாம் விட்டுவிடுங்கள், இனி யெல்லாக் காரியங்களிலும் உங்கள் பிரியம்போல் மனோரஞ்ஜிதத்துக் கொப்பாய் நடந்து கொள்ளுகிறேன் ” என,

அவர்:—“மகளே! ஒரு நாளையில் மனோரஞ்ஜிதத்தைப்போல் உத்தம பெண்ணாய்ப் போகமாட்டாய். நீ அவளைக் கவனிக்கும் பக்ஷத்தில் நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சற்றேறக்குறைய அவளுக்குச் சமமாய் நடப்பாய்.” என்று சொல்லி முடித்து எழுந்தார்.

பிற்பாடு நானும் அவருஞ் சாப்பிட்டுவிட்டு மேன்மாடிக்குப் போனோம். அங்கு அவர் மனோரஞ்ஜிதத்தின் குணாதிசயங்களைப் பற்றியும், அவளது தாய்தந்தையர் அவளை வளர்க்கும் அருமை, பெருமையைப்பற்றியும் அவளுடைய பந்துக்களில் அத்தனைபேர் அவ்வளவு நிலைமையோடு அவளுக்கு உபதேசிக்கும் ஆச்சரியமான அக்கறையைப்பற்றியும் என்னோடு வெகுநேரஞ் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். அவர் என்னை நோக்கி:— "சுந்தரம்! நேரமாயிற்று, கண் வளருகின்றது. உனக்கு ஓர் விசேஷ ஆலோசனை சொல்லுகிறேன், கேள்: அச்சிடாப் புஸ்தகம் ஒன்று சேகரித்துக்கொள். இப்போதே நீ நாடோறுங் கேட்கும் விஷயங்களை யதில் வரைந்து வைத்துக்கொள்வாயாகில் அது உனக்குப் பிற்காலத்தில் மிக்கப் பிரயோஜனமாயிருக்கும்." என்று எனக்கு நல்ல யோசனை சொல்லிவிட்டுப் படுத்துக்கொண்டார்.

நான் மறுதினந்தொட்டு எனது தந்தையரின் ஆலோசனைப் பிரகாரம் அநுதினமும் நான் காதாரக் கேட்டவைகளையும் புஸ்தகத்திற் குறித்துவைக்கத் தலைப்பட்டேன். அது பிற்காலத்தில் இப் பிரபந்தத்தை யெழுத எனக்கு வெகு உபயுக்தமா யிருந்தது.

மறுநாட் காலையிற் சுமார் ஏழுமணிக்கு நானும் எனது பந்துக்களும் மதுரநாயகம் பிள்ளை வீட்டிற்குப் போனோம். நாங்கள் உள்ளே பிரவேசிக்கும்போது மதுரநாயகம்பிள்ளை.— "மகளே! நானும் ஜெயராமச்சந்திர ஐயரும் உனது கல்வி விஷயமாய்ப் பேசிக்கொண்டிருக்கும்போது, நீயும் அபிராமியும் குணமணியும் நெடுநேரஞ் சம்பாஷித்துக்கொண்டிருந்தீர்களே. இருவரும் உனக்கு என்ன போதித்தார்கள்? குணமணி என்ன சொன்னாள்? அபிராமி யென்ன சொன்னாள்? சங்க்ஷேபமாய்ச் சொல்" என.

மனோரஞ்ஜிதம்:—"ஆஹா? எனது சிறியதாயார் என்னை நோக்கி:—மகளே! நான் உனக்குக் கொஞ்சநேரத்துக்கு முன்னதாய்ச் சொன்னதுபோல் ஒவ்வொருவர் குணத்துக்குந் தக்கது போல் நடப்பதே சலாக்கியம். இங்கு சற்றுநேரம் அசுசீலதேவியை உதாகரிப்போம்: அவள் நல்ல பெண்ணே, ஆனால் அவளுடைய தாய்தந்தையர் அவளை வளர்த்த தன்மையாய் நடந்துகொள்ளுகிறாள். அர்த்தநாரீ சுசீலதேவியை நீ யறிவாயல்லவா மகளே!" என

நான்.—"ஆம், அம்மா! அறிவேன். அவள் எனது பள்ளித் தோழி. அவளும் நானும் ஒரே வகுப்பிலே வாசிக்கிறோம்."

என, எனது சிறியதாயார்:—சுசீலதேவி சகல சகுணங்களைப்படைத்த சுகோசனை தான். ஆயினும் பெற்றோருடைய மாதிரிகையாலும் போதனை வலியாலும் தன்னியல்பான சத்குணத்திற்கு ஏற்ப நடக்க அவளால் முடியவில்லை. அவளுடைய தாய்தந்தையர் வெளிப்படையான வியர்த்த கிரியைகளில் அவளுக்குப் புண்யத்தைக் காட்டினார்கள். அநுதினமும் ஒருதடவை ஸ்நானம் பண்ணுவதிலும், பறையர் பள்ளர் முதலிய பஞ்சமரைத் தொடாமல் ஒதுங்கிப் போவதிலும், நீசர்களைத் தொட்டுக்கொண்டால் உடனே ஸ்நானம் பண்ணித் தீண்டலைப் போக்கிக் கொள்வதிலும், தான தர்மங்களை பிராமணருக்கே கொடுப்பதிலும், கங்கா காவேரி முதலிய தீர்த்தங்களில் விழுந்து முழுகி வருவதிலும் மோக்ஷ சாதனங்களையும் முக்தி நெறியையும் இவளுக்குக் காட்டினார்கள். அப்படியிருக்க எவ்வாறு நடந்துகொள்வாள்? பறையர், பள்ளர்களுக்கு உபகாரஞ் செய்வாளா? தான தர்மங் கொடுப்பாளா? ஆபத்து வேளையில் அவர்களுக்கு உதவுவாளா ? அவர்களைத் தொடுவாளா? இன்னுஞ் சொல்ல வேண்டுமாயில் சுசிகர சீலர்களாகிய நம்மையுந் தொடவும் நம்மோ டுறவாடி வழங்கவும் அரோசிகமடைவாள்!" என,

நான் :—"ஆம் சின்னம்மா! நீங்கள் சொல்லுவதெல்லாஞ் சரியாயிருக்கிறது. ஓர் நாள் நானும் சுசீலதேவியும் பாடசாலையை விட்டு சிவகங்கை குளத்தின் வழியாய் வீட்டுக்குத் திரும்பிவரும் போது வீதிக் கடையில் ஒரு கண்தெரியாத பறைச்சி இரஸ்தா கால்வாயில் விழுந்துகொண்டு தடுமாறினாள். அப்போது எனது தோழியவளைப் பார்த்துப் பரிகாசம்பண்ணிக்கொண்டு நின்றாள். நான் பரிதாபப்பட்டு என்புஸ்தகங்களைக் கீழேவைத்துவிட்டு அந்தக் குருட்டுக் கிழவியை வாய்க்காலைவிட்டு மேடேற்றி நல்ல வழியிற் கொண்டுவந்துவிட்ட பிறகு என் புஸ்தகங்களை யெடுத்துக் கொண்டு சுசீலதேவியோடு வீட்டுக்குவந்தேன். நாங்கள் இருவரும் வழியில் வரும்போது என்தோழி என்னைத் தொடாமல் ஒதுங்கி யொதுங்கி நடந்தாள்.

நான் அப்போது :— "சுசீலதேவி! ஏன் ஒத்தி யொத்திப் போகிறாய்? என்னிடத்தில் என்ன இருக்கிறது ? நான் எப்படி யிருக்கிறேன்! ஒன்றுந் தெரியவில்லையே." என,

சுசீலதேவி :—" சீச்சீ! உங்களைத் தொட்டாலும் எங்களை அக்கியானம் பிடிக்கும்! கிறிஸ்தவர்களுக்குத் தீண்டலில்லை; சுத்த பத்தமில்லை; சூதகமில்லை. பறையர் பள்ளர் எல்லோரும் உங்களுக்குச் சரிதான்" என்று வெகு மூடுக்காய்ப் பேசினாள்.

அப்போது எனக்குக் கோபமுண்டாகி—" அக்கா! சீலக் காரி! அதிகமாய் மூடுக்காதே. நான் சொல்லுகிறதைச் சற்றுக் கவனமாய்க் கேள்: நீ நாடோறும் வீதிகளிற் போகும்போது ஒரு நாளொன்றுக்கு எத்தனைவிசை பறையர், சக்கிலிகளுடைய அசுசியங்களை மிதித்துக்கொண்டு போகிறாய்! அதனால் உனக்கு தீண்டல் வரவில்லையா? யாருமில்லாமல் வாய்க்காலில் தடுமாறிக்கொண்டிருந்த சுசிகரமான ஒரு பறைச்சியைத் தொட்டுவிட்டதனாலா எனக்குத் தீட்டு வந்துவிட்டது?

—:" கண்ணாற் கண்டதற்குங் காணாததற்கும் வித்தியாசமில்லையா, மனோரஞ்ஜிதம்?

—:" ஆமாம், சுசீலதேவி! மெத்த வித்தியாசந்தான்! நீ காணாமல் மிதித்த அசுசியத்தைத் தொட்டு மோந்துபார். அது வாசனை கமழும்! நீ கண்டு மிதித்ததை யெடுத்துப் பார், குற்கந்தங் குடலைப் பிடுங்கும்! ஆமாம்! மெத்த வித்தியாசந்தான்! இந்நாள் வரையில் எனக்குத் தெரியாமற்போயிற்று! இன்றைக்குத்தான் எனக்குக் கண்திறந்தது. நான் கண்டு பறைச்சியைத் தொட்டது பெரீயீயீயீய தீட்டே! நீ காணாமற் பறைச்சி மல ஜலங்களை மிதித்துக்கொண்டது சுஉஉஉத்தந்தான்! வாசனை கம கம கம கம வென்றுதான் கமழும்."

—:"மனோரஞ்ஜிதம்! நீ கெட்டவள். கிறிஸ்துவர்கள் எப்போதும் எப்போதுங் கிலக்கக்காரர்கள். ஏளனம் பண்ணுவதில் தீரர்கள். நீ யிலேசா? நீ மதுரநாயகம் பிள்ளையின் மகளல்லவா?"

: அதுபோகட்டும் அக்கா! நீங்கள் சுத்தக்கார, சீலக்கார சைவாளாயிற்றே. பறையர், பள்ளர், சக்கிலியர், குளிக்கிற, குடித்துக் கொப்பளிக்கிற குளங்களில் வாய்க்கால்களில் ஏன் தண்ணீர் எடுக்கின்றீர்கள்? குடிக்கின்றீர்கள்? அதில் தீண்டலில்லையா?"

:"கலத் தண்ணீரில் கைலாசம், பெருக்கில் தீட்டேது?"

:" ஆ! அப்படியா சுசீல தேவி? ஆயிரம்பீப்பாத் தண்ணீரில் ஒரு பறையன் கொப்பளித்து உமிழ்ந்த ஒரு மிணறு தண்ணீரில்

ஒரு துளியானது ஒவ்வொரு பீப்பாவிலுஞ்சேராதா ? ஒருகுளத்திற் குளிக்கிற பறையன் எத்தனைவிசை கொப்பளிக்கிறான்! அந்தக் குளத்துத் தண்ணீரிலேயே அவன் சரீர மெல்லாம் ஊறுகிறது! தண்ணீரெல்லாந் தீட்டாய்ப் போய்விட்டது. அப்படியிருக்க நீங்கள் ஏன் அந்தத் தண்ணீரை யெடுத்துக் குடிக்கின்றீர்கள் ? சிவகங்கை குளத்தில் எத்தனையோ பறையர், பள்ளர், சக்கிலியர் முதலிய நீசர்கள் குளிக்கின்றார்கள்! நீங்கள் ஏன் அதில் தண்ணீரெடுத்துக் குடிக்கின்றீர்கள் ? நீங்கள் குடிக்கிற தண்ணீரில் பறையருடைய எச்சில்தண்ணீர் ஒரு துளியாகிலும் இல்லையா ?

—: மனோரஞ்ஜிதம் ! ஊன்றி யூன்றி சும்மா ஊளையம் பேசாதே, இப்படிப் பார்க்கப்போனால் உலகத்திற் பிழைக்க வழியில்லை."

—: சுசீலதேவி ! கொஞ்சம் இறங்கினையா ? இன்னுங் குறையுங் கேள் : எங்களுக்குச் சுத்த பக்ஷம் இல்லை ; சூதகமில்லை யென்றாய்; உங்களுக்கு இருக்கிறதாமா ? உனது தாயார் அம்பிகாவல்லியம்மாளும் உனது தமக்கை சாரளதேவியு மிருக்கின்றார்களே: அவர்களுக்குச் சுத்தமுஞ் சூதகமும் இருக்கின்றனவா ?

—:" சந்தேகமா, மனோரஞ்ஜிதம்? என்ன ? மெல்ல இலக்கணமாய்க் கேட்கிறாயே ? உங்களைப்போல வென்று நினைத்துக் கொண்டையா ?"

—: இல்லை அக்கா ! நீங்கள் சுசிகர சீல சைவரென்று தான் நினைக்கிறேன். வீட்டுக்குள்ளே யொரு மூலையில் ஒருமுழ இடுக்கு முடுக்கில் உலக்கையைக் குறுக்கப் போட்டுக்கொண்டு நீட்டு உலக்கையைத் தாண்டாமல் மறிகட்டிவிட்டு, ஒதுக்கில் ஒத்தி யொத்தி யுறங்குவார்கள் உன்றாயாரும் தமக்கையும். அது எனக்குத் தெரியாதா? தெரியும்! தெரியும்! அது ஒருபக்கத்தி லிருக்கட்டும். ஆனால் உன் றாயாருந் தமக்கையும் எப்போதும் வெளியில் வந்து தானா வீட்டுக்குத் தூரமாகிறார்கள்? சில சமயத்தில் நடுவீட்டிலும், சில சமயத்திற் சமயல் பண்ணிக்கொண்டிருக்கும்போதும், சில சமயத்தில் தூங்கும்போதும் அது நிகழ்வ தில்லையா ? அப்போது ஏன் வீட்டை மெழுகி தண்ணீரிற் குளிப்பாட்டுகிற தில்லை ? சமைத்த சாதத்தை யேன் வெளியில் எறிந்துபோடுகிறதில்லை ? சட்டிப் பானைகளை யேன் வெளியில் வாரி யெறிந்து போடுகிற தில்லை ? கள்ள சுசிகர சீலர்களே ? உங்கள் வீடுநிறைய சேறுஞ்

சகதியும், ஊறும் ஊத்தையும் நாற்றமும், வைத்துக்கொண்டு மற்றை யவர்கள் பேரில் என் தோஷஞ்சொல்லவும் குறைகூறவும் ஏற்படு கின்றீர்கள்? உங்களுடைய கள்ளத்தனத்தை யெல்லாம் எடுத் துச் சொல்லவேண்டுமானால் எவ்வளவு நேரம் பிடிக்கும்! மூடி போட்டுக் கவிழ்த்திருக்கும் உங்கள் கஸ்மாலக் குழிகளையெல்லாந் திறந்தாலல்லோ தெரியும்......!"

:—"ஆயா! மனோரஞ்ஜிதம்! உன்னோடு வாயாடினது எனக் குப் போதும்! போதும்! உபாத்தியாயரை வாயடைக்கிற வல் லாள சுண்டியாயிற்றே நீ! ஜெயராமச்சந்திர ஐயர் பட்ட பாட் டுக்கு நான் எந்த மூலை? இனிமேல் நீ யென்னோடு பேசாதே அம்மா! நான் உன்னோடு பேசவும் வரவில்லை. எனக்கு உன்னை நன்றாய்த் தெரிந்திருந்தும் இன்றைக்கு வகையறியாமல் உன்னிடத் தில் அகப்பட்டுக்கொண்டேன்" என்று சொல்லித் தன் வீட்டுக் குப் போய்விட்டாள் சுசீலதேவி.

"நான் இன்னுங் கொஞ்சதூரம் நமது வீட்டுக்குத் தனியாய்ப் போகவேண்டியிருந்தது. அப்போது நான் எனக்குள்ளே:—"இந் நாட்டு அஞ்ஞானிகள் இப்போர்ப்பட்டக் குருட்டு நியாயக்காரரா? இது பைத்தியமல்லவா? தங்களுடைய சொந்த அழுக்கைச் சுத் தம் என்கிறார்கள்" பிறருடைய சுத்தத்தை யழுக்கென்கிறார்கள்!"

என்று வீடுவந்து சேர்ந்தேன் சின்னம்மா! இப்போர்ப்பட்ட மூட ஜனங்கள் நடுவில் நாம் என்னமாய் ஜீவிக்கிறது? நாம் சுத்த மாய் ஜீவித்தபோதிலும் அவர்கள் நம்மை அசுத்தர்களென்றே சொல்லுவார்கள். என்று முடித்தாள் மனோரஞ்ஜிதம்.

அப்போது குணமணியம்மாள்:—"இதுவெல்லாம் ஆச்சரிய மல்ல, மகளே! இது தாய் தந்தையருடைய போதனாவிர்த்தி. இதற்காகவேண்டி நாம் கிலேசப்படத் தகாது. எப்போதும் எவ் விடத்தும் எல்லோருடைய குறைகளையும் சகித்துக்கொண்டுதான் ஜீவிக்கவேண்டும். இவைகள் மாத்திரமல்ல, இன்னும் அநேகா நேகங் குற்றங் குறைகளையும் தப்புத் தவறுகளையும் குருட்டாட் டங்களையும் மூட பக்தியையும் இமயகிரிதொட்டு கன்னியாகுமரி வரையிலும் கீழ்சமுத்திரந்தொட்டு மேல்சமுத்திரம் வரையிலும் எங்கும் பார்ப்பாய். ஆனதைப்பற்றி யிவ்விஷயத்தில் வியப்படை யாதே. எல்லோரோடும் ஒத்துவாழும் மேன்பாடத்தை நன்றாய்க் கற்றுக்கொள். அதுவே விசேஷம்.

உனது இணைபிரியாத் தோழியாகிய விஜயவல்லியை மறந்து போகாதே. அவளிடத்தில் நான் மேற்கூறிய குறைகளை யடிக்கடி காண்பாய். ஆனால் நீ யவைகளை யிலக்ஷியம் பண்ணாதே. உனது பொறுமையினாலுஞ் சாந்த குணத்தினாலுஞ் சகிப்பினாலும் அவளுக்கு நல்ல உபாத்தியாயினியா யிரு. அவள் காலத்தோடு உன் வார்த்தைக்கு இரண்டில்லாமல் நடப்பாள். ஆதலால் அவள் தெரியாத்தனமாய் உனக்கேதேனுங் குறைசெய்தால் நீ யதனை நல்ல மனதோடு சகித்துக்கொள்."

என்று இதுமுதலான சில புத்திமதிகளைச் சுருக்கமாய்ச் சொல்லிவிட்டு ஏதோ தங்களுக்கு அசவுக்கியமென்று சொல்லி சீக்கிரம்போய்ப் படுத்துக்கொண்டார்கள்.

அவர்கள் போனபின்பு எனது தாயார்:—"மனோரஞ்ஜிதம்! உனது தந்தையரும் குணமணியுஞ் சொன்னதுபோலக் 'கடவுள் குணநிதி; அவர் எல்லா நன்மைகளாலும் நிரம்பித், ததும்பி, வழிந்தோடுங் கரைகாணாக் கடல்; எல்லைகளில்லாச் சமுத்திரம். இந்த நன்மைக்கடலில் நாம் ஓர் நாள்போய் மூழ்கி மீன்களைப்போல் இன்ப, [illegible], போகங்களில் நீந்துவோம். என்றும் வற்றாத அவருடைய சிநேகக் கடலில் அவரது சிநேகாமிர்தத்தைக் குடித்துத் திருப்தி யடைவோம். ஆதலால், மகளே! உன் முழு இருதயத்தோடு அவரை நேசி. உன்னிருதயத்தை யவருக்குத் தத்தம் பண்ணிவிடு. உன்னிருதயத்தைப் பவ்வாதியாய்ப் பங்கிட்டு ஒரு பாகத்தை யவருக்கும் மற்றொரு பாகத்தைச் சிருஷ்டிகளுக்குங் கொடுக்காதே. அதனை முழுசாய் அவருக்குக் கொடுத்துவிடு. நீ யவருக்கு உன் முழு இருதயத்தைக் கொடுத்து அவரை யுண்மையாய் நேசிக்க வேண்டுமானால், நீ யெதற்கும் பின்னிடையாதே. ஒரு அற்ப குற்றத்தை முதலாய் மனதுபொருந்தி செய்யாதே. சுவாமியுடைய நேசத்தைப்பற்றி நமது உயிரை பலியிட வேண்டுமானாலும் பின் வாங்கலாகாது. சுவாமியுடைய நேசத்திற்காகவும் வேதத்துக்காகவும் உன்னைப்போலொத்த சிறுபிள்ளைகள் எத்தனையோபேர் தங்கள் பிராணனைப் பலியிட்டு அவருடைய சிநேகக்கடலில் போய் மூழ்கி யின்று சகல சுகபோகங்களை யநுபவிக்கிறார்கள்" என,

நான்:—"அம்மா! அப்பேர்ப்பட்ட பிள்ளைகளுடைய சரித்திரங்களைச் சொல்லுங்களேன், நானும் அவர்களைப்போலச் சுவாமியை நேசிக்கக் கற்றுக்கொள்ளுகிறேன்" என,

அம்மாள்:—"கேள், மகனே! சொல்லுகிறேன் : உரோமை
யாருடைய சக்கரவர்த்தியாகிய க்லேர் இராயன் காலத்தில் அந்தி
யோக்கியாபுரியில் அஸ்கிளேப்பியாதேஸ் என்னும் நகராதிகாரி யிரு
ந்தான். அவன் அஞ்ஞானி; வேத விரோதி; கிறிஸ்துவர்களுக்குப்
பெரும் பகையாளி. அவன் அந்நகரில் அதிகாரஞ் செலுத்தி வருங்
கால் அங்கு ஏழு வயதுள்ள வருல்லா என்று ஒரு கிறிஸ்துவ பைய
னிருந்தான். அவன் சிறுவனானாலும் பெரும் புத்திசாலி. சுவாமி
பேரிலும் வேதத்தின் மட்டிலும் மெய்யான பக்தன். சில கோளர்
அஸ்கிளேப்பியாதேஸ் இடம்போய் வருல்லா கிறிஸ்துவனென்று
தூறேற்றினார்கள். அவன் வருல்லாவைத் தருவித்து அவனுக்கு
நல்ல வார்த்தைகளைச்சொல்லித் தடவிக்கொடுத்து இங்கிதம்பேசி
:—" மகனே! உன் வேதமென்ன?

:—"ஐயா! என்வேதங் கிறிஸ்துவேதம். நான் கிறிஸ்துவன்,
ஒரே பொருு கடவுளை நம்பி விசுவசிக்கிறவன் நான்."

:—"ஆமாம். பிள்ளாய்! உன் விசுவாசம் ஒருபக்கத்தி லிருக்
கட்டும். ஒரு தேவனைக் கும்பிடுவதைவிடப் பல தேவர்களை [illegible]ரா
திப்பது நன்றல்லவா?"

:—"ஐயா! நியாயாதிபதியே பல தேவர்களேது? ஒரேயொரு
கடவுள்தானே யிருக்கவேண்டும். நீங்கள் சொல்லுவது சரியல்ல.
இதோ எனது வேத விசுவாச பிரமாணம் சொல்லுகிறேன் கேளுங்
கள்: பரலோக, பூலோக சிருஷ்டிகரும் சர்வ சக்தி யுள்ளவருமான
தேவனை விசுவசிக்கிறேன். அவருடைய ஏக மகனும் நமது கர்த்த
ருமான இயேசுக் கிறிஸ்துவை விசுவசிக்கிறேன். இவர் கன்னிமரி
யம்மனிடம்நின்று பிறந்து போஞ்சு பிலாத்தின் அதிகார நாளில்
............"

:—"போதும்! மகனே! நிறுத்து, உனது வேத விசுவாச
பிரமாணங்கள் எனக்குத் தெரியும். ஆனால் மகனே! கிறிஸ்து வே
தத்தை யநுசரிக்கக் கூடாதென்று சட்டம் பிறந்திருக்கிறதை நீயறி
யாயோ? நீயதை யநுசரித்தால் உனக்கு மரண தண்டனை விதிக்கப்
படுமென்று உனக்குத் தெரியு மல்லவா?"

:—"ஆம் தெரியும், நீதிபதியே! அது எனக்குப் பாரமல்ல.
நான் என் தேவனுக்காகச் சாகத் தயாரா யிருக்கிறேன்" என்றான்
வருல்லா. எனவே,

அஸ்கிளேப்பியாதேஸ் கோப மூண்டவனாய்ப் பற்களை நற நறவென்று கடித்துக்கொண்டு வருல்லாவின் மாதாவை யழைப் பித்து அவளுடைய முகதாவில் அந்த இளம்பாலனைக் கொரோமாய் அடிக்கச் சங்கற்பித்தான். கொலைஞர் கொடிய ஓனாய்களைப் போல் வருல்லாவை அகோரமாய் அடிக்க, அவனுடைய தேகமெ ல்லாம் பிய்ந்து கிழிந்துபோக, இரத்தம் வெள்ளமா யோட சிறு வன்:—"என் தேவனே! என் தேவனே! நீர் ஒருவரேயன்றி வேறு தேவர்க ளில்லை. இயேசுவே! எனது இரக்ஷகரே, நீரே மோக்ஷ வழி."

என்று ஓயாது கடவுளைப் போற்ற, தாய் மகன் அருகில் நின்று கொண்டு வியாகுலத்தினால் மனநொந்து துக்கசாகரத்தி லமிழ் ந்தி தனது பிள்ளையின் இரத்தத்தையும் உயிரையுஞ் சுவாமிக்குப் பலியாக ஒப்புக் கொடுத்தாள்.

அப்போது வருல்லா தன்றாயை வெகு பக்ஷத்தோடு சற்று நேரம் பார்த்தபின்னர்:—"அம்மா! எனக்குத் தாகமா யிருக்கிற தே. தண்ணீர் கொண்டுவாருங்கள். நாவரண்டு போகிறதே."! என,

தாய்:—"அப்பா! மகனே! என் கண்மணியே! இன்னுங் கொஞ்சநேரம் பொறுமையாயிரு. இன்னுஞ் சற்று நேரத்துக்குள் ளே நீ ஜீவிய ஊற்றைக் கண்டடைவாய். அங்கு நமது திவ்ய இரக்ஷ கர் ஒருக்காலும் உனக்குத் தாகத்தை வருத்தாத திவ்ய ஜலத்தைக் கொடுப்பார்." என்று தன் மகனுக்குத் தேறுதல் வருத்த.

அஸ்கிளேப்பியாதேஸ் பசாசு ஆவேச மேறின வெறியனைப் போற் புதைத்துத் துடித்துச் சீறிவிழுந்து உடனே தாயின் கண்க ளுக்கு முன்பாக பிள்ளையின் சிரசை வெட்டிப் போடும்படி ஆக்ஞா பிக்க, கொலைபாதகர் அவன் சங்கற்பத்தை நிறைவேற்றினார்கள்.

தக்ஷணமே தாய் தலையையும் சடலத்தையும் குடங்கையில் வாரி யணைத்துப் பலதடவை பிள்ளையின் முகத்தை முத்தமிட்டு இரத்தத்தாற் றோய்ந்த தன் முகத்தை வானத்துக் கேறெடுத்து, ஆநந்தக்கண்ணீர் வெள்ளமாய்ச் சொரிய:—"ஓ! பரிசுத்தவான்க ளுடைய மரணம் ஆண்டவருடைய சன்னிதானத்தில் மிக்க விலை யேறப்பெற்றது." என்று தன்மகளைப் புகழ்ந்தாள்.

என்று சரித்திரத்தை முடித்து.—"பார்த்தையா, மகளே? என்ன நேர்த்தியான பிள்ளை. அவன் ஏழுவயசு குழந்தை. அப்படி

யிருந்தும் எவ்வளவு ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும், இருதய அவுதாரியத்தோடும் கடவுளை நேசித்தான்! தன்னுயிரைக் காப்பாற்றவேண்டி தனது தேவனை மறுதலித்தானா? கொடூர ஆக்கினை வேளையிற் கொஞ்சமேனுந் தளர்ந்தானா? வேதத்தைத் திரஸ்கரிக்கக் கனவில் முதலாய் நினைத்தானா? இல்லை, மகளே! அந்தப் பிள்ளையைப்போல் தான் நாம் தேவனை நேசிக்கவேண்டும். இதுதான் மெய்யான தேவசிநேகம். உற்றார், பெற்றார், பந்துக்கள் முதலியவர்களை நேசிப்பதைவிட ஆண்டவரை யதிகமாய் நேசிக்கவேண்டுமென்று உனக்கு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். இவ்வாறு உன்னுயிரைவிட அதிகமாய் அவரை நேசிக்கவேண்டும். இதோ, இந்த நமது ஒப்பற்ற வருல்லாவிடத்தில் நிதரிசனமாய்ப் பரம தேவநேசத்தைக் கண்டாய், மகளே! நீ யவனைப்போல் தேவனை நேசிக்கிறாய். ஒருக்கால் உன்னை யஞ்ஞானிகள், அல்லது மகமதியர்கள் உனது வேதத்தை மறுதலிக்கச் சொன்னால் நீ யென்ன செய்வாய், மனோரஞ்ஜிதம்" என,

நான்:—சுவாமியுடைய அநுக்கிரகத்தினால் நானும் வேதத்துக்காகத் தலைகொடுப்பேன். ஏழு வயசு பிள்ளைக்கு அவ்வளவு மனோதிடனைக் கொடுத்த நமது திவ்ய இரக்ஷகர் பத்துவயசுள்ள எனக்கு அவ்வளவு விசுவாசத்தையும் தேவ சிநேகத்தையும் தைரியத்தையுங் கொடுக்கமாட்டாரா? எனது சொந்தபலத்தினாலாகாது. அவருடைய தயையினால் எல்லாமாகும், அம்மா!" என்றேன்.

அப்போது அம்மாள்:—"இக்காலத்தில் அப்பேர்ப்பட்ட வேத கலகங்களும் கலாபனைகளும் ஒருக்காலும் வரப்போகிறதில்லை. அது பெரிதல்ல, மகளே! நமது மனசாக்ஷிக்கு விரோதமில்லாமல் சுவாமிக்கு ஊழியம்பண்ணி நமது முழு இருதயத்தோடு நேசித்து நமது ஸ்திதியின் கடமைகளையும் தர்மங்களையும் நாளுநாளுக்கமாய் நிறைவேற்றிவருவோமானால் நாம் வருல்லாவைவிட சுவாமியை யிவ்வுலகத்தில் அதிகமாய் நேசித்து மறுலோகத்தில் அவனைவிட அதிக சம்பாவனையடைந்து அதிகமாய் அவரை நேசிப்போம் என்பதிற் கிஞ்சித்துஞ் சந்தேகமில்லை. ஆதலால், மகளே! சுவாமியுடைய நேசத்தைப்பற்றி யொவ்வொரு காரியத்தையும் நுட்பதிட்டமாய்ச் செய்துமுடி" என்றுசொல்லி சம்பாஷணையை நிறுத்தி என்னைப் படுத்துக்கொள்ள அனுப்பிவிட்டு ஜெபம்பண்ணிக் கொண்டிருந்தார்கள். இவைகள்தான், ஆநீ! இராத்திரி அம்

மாள் எனக்குச்சொன்ன புத்திமதிகள். ஏறக்குறைய எல்லாவற்றையுஞ் சொல்லிவிட்டேன்'' என்று முடித்தாள் மனோரஞ்ஜிதம்.

நாலும் எனது பந்துக்களுஞ் ஜெயராமச்சந்திர ஐயரும் மனோரஞ்ஜிதஞ் சொன்னவைகளை வெகு வியப்போடு கேட்டுக் கொண்டிருந்தோம்.

---

## 19-ம் அத்தியாயம்.

*சரீரசுத்தம், ஆத்ம அழுக்கைத் துடைக்காது. தீண்டல் என்பது மூடத்தனம். தீண்டல் விஷயத்தில் சைவருடைய மூடபக்தி. பாத்திரமறிந்து பிச்சையிடு,*

அன்றைபதினம் எங்கள் வீட்டில் எனது பாட்டனருக்குத்திதி கொடுக்கவேண்டி யிருந்தமையால் எங்கள் குலகுருவாகிய ஜடகோபாலாச் சாரியாரும் அன்று தினமே துல்யமணி கிராமத்துக்கு வந்திருந்தார். மனோரஞ்ஜிதம் தன் மாதாவின் உபந்நியாசத்தை முடித்தவுடனே அவருஞ் சங்கத்தில் வந்து சேர்ந்தார். மதுரநாயகம்பிள்ளை அவருக்கு மரியாதை சமர்ப்பித்து ஆசனங்கொடுக்க, அவரும் எங்களோடு உட்கார்ந்துகொண்டார்.

அப்போது திருமறைநாயகம்பிள்ளை ஜெயராமச்சந்திர ஐயரையும் ஜடகோபாலாச்சாரியாரையுஞ் சுட்டிக்காட்டி :—''இதோ வேதியரும் உபாத்தியாயரும் நமது நடுவில் விஜயமாயிருக்கின்றார்கள். அவர்களில் ஒருவர் நமக்கு வைதீகக் கண்; மற்றையவர் லௌகிகக் கண். இவ்விரண்டு கண்களும் பொருந்த அமைந்த சங்கம் சோதியாதித்தனைப்போலப் பிரகாசிக்கும். நமது சங்கை, சம்சய, சந்தேகங்களை யெல்லாம் நிவர்த்தி பண்ணிக்கொள்ள வேண்டும்'' என,

ஜெயராமச்சந்திர ஐயர் :—''ஐயா! திருமறைநாயகம்பிள்ளை! நீங்கள் எங்களைப் பரிகசிப்பதாக எண்ணுகிறோம். ஏன்? என்பீர்களா! மதுரநாயகம்பிள்ளையைவிட இங்கு சிறந்த மேதாவி யார்? அறிவிலும் அலங்காரத்திலும் போதனவிர்த்தியிலும் அபிராமியம்மாளை வெல்லுகிறவன் யார்? குணமணியம்மாளுடைய நியாயங்களை மறுப்பவன் யார்? வினைக்களுக்கு விடைகூறுகிறவன் யார்? நீர் சிங்கமாயிற்றே! சிறிய இரண்டு நரிகள் சிங்கத்தை யென்ன செய்யலாம்? மனோரஞ்ஜிதத்துக்குச் சரியான ஜவாபுசொல்லு

கிறவன் யார்? ஒரு நாள் விளையாட்டுக்கு இரண்டொரு வார்த்தைகள் நான் சொல்லப்போய்ப் பிற்பாடு பித்தா! பித்தா! வென்று விழிக்கும்படியாய் நேரிட்டது. இங்குத் துலங்கும் மெய்யான நேத்திரங்களை விட்டுப்போட்டு ஊமையனையுங் குருடனையும் உன்னத மண்டலம் வரையில் தூக்கி விட்டுவிட்டீர்களே! உங்கள் வாக்கு உண்மையல்ல. உங்களிடம் வாக்கு வேறு, மனசு வேறு" என,

திருமறைநாயகம் பிள்ளை:— "அப்படி நினையாதேயுங்கள்! ஐயா! உங்கள் மத சம்பந்தமான சில கேள்விகளைக் கேட்கக் கருதி நீங்கள் அவைகளுக்குச் சமாதானங்கூறமாட்டுவீர்களென்று நம்பி நான் அவ்வாறு பேசினேன். ஆதலால் என் வார்த்தைகளைப் பரிகாச வார்த்தைகளாக எடுத்துக்கொள்ளவேண்டாம். காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும். அத்திப்பூத்ததுபோல் நீங்கள் இருவரும் வந்து ஒத்துக்கொண்டீர்கள். உங்களுடைய தர்ம சாஸ்திரத் திரட்டில் அனேக ஆக்ஷேபங்களிருக்கின்றன. நீங்களிருவரும் அவைகளுக்குச் சமாதானங் கூறும்படி வேண்டுகிறேன்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அவைகள் என்ன? சொல்லுங்கள்: பார்ப்போம் என, திருமறைநாயகம் பிள்ளை:—" சற்று முன்னமே குணமணி மனோரஞ்ஜிதத்துக்குச் சில தர்மங்களையெடுத்துக்காட்டி சைவரும் வைஷ்ணவரும் வெளிப்படையான கிரியைகளில் புண்யத்தை நிலைநாட்டினார்களென்று சொன்னதைக் காதாரக் கேட்டோம். இந்துதேச முழுவதிலும் பார்க்கிறேன். அது நிஜமாய்த்தானிருக்கிறது. அவள் சொன்னவைகளை யொன்றொன்றாய் ஆராய்வோம்: ஸ்நானம் பாவமா? புண்யமா? பாவமுமல்ல; புண்யமுமல்ல. இந்திரியங்களுக்குப் புலப்படும் சரீரத்தின்மேற் பட்ட அழுக்கைப்போக்கி; உடலுக்குச் சுகத்தையுண்டாக்குமே யல்லாது அரூபியான ஆத்மத்திற் பட்ட அரூபப் பாவக் கறையைத் துடைக்க வல்லதா ஜலம்? தண்ணீர் உரூப வஸ்து; பாவம் ஞான வஸ்து. ஒன்றுக்கொன்று சம்பந்தங் கிடையாது. ஆதலால் ஜலம் பாவத்தைத் துடைக்காது; துடைக்காவிடில் ஸ்நானம் பாவமுமல்ல; புண்யமுமல்ல. ஆகையால் ஸ்நானம் தேக சுகத்திற்காக ஏற்பட்டதே தவிர ஆத்ம இரக்ஷண்யத்திற்காக ஒருபோதும் ஏற்பட்டதல்ல."

:—நான் உமது மகான்களைவிடப் பெரியவனென்று சொல்லிக் கொள்ளவில்லை. ஆனால் உமது இரிஷிகள் நியாயத்துக்கு விரோதமாய்ப் போதித்தால் அவர்களின் போதனைகளை யொப்பத் தகுமா? உமது மகான்கள் 'நெருப்பைத் தண்ணீர் வளர்க்கின்றது. இருளும் வெளிச்சமுஞ் சரி. கருப்பும் வெள்ளையும் ஒன்றே' என்கிறார்கள். இத்தகைய நியாயங்களை யொப்பத் தகுமா? தகாதே. இவ்வாறே கண்ணுக்குப் புலப்படுந் தண்ணீர் கண்ணுக்கெட்டாத பாவக்கறையைத் துடைக்கின்றது என்கிறார்கள். சில சமயங்களில் ஜலம் நமது இந்திரியங்களுக்குப் புலப்படும் அசுசிய வஸ்துக்களைச் சுத்தம்பண்ணக் கூடவில்லை.'

ஜடகோபாலாச்சாரி :—"என்ன ஐயா! திருமறைநாயகம் பிள்ளை! இது மிக்க விந்தையே! ஏன் கூடவில்லை? உமக்குத்தான் பேசத்தெரியுமா? தண்ணீரால் சுத்தமாகாத வஸ்து எது?"

திருமறை:—"இது விந்தையல்ல. கேளும்; சொல்லுகிறேன்; நீர் ஏதேனும் காரியாவசிய நிமித்தம் ஓர் மங்கைக்கரையைக் கடப்பீராகில், அங்கு நின்று புறப்படுந் துர்வாசனை யணுக்கோடிகள் உமது மூக்கு, வாய், கண், காது முதலிய புலன்கள் வழியாய் உமது மூளைவரையிற் போய்ச் செம்பிக்கொள்ளுகின்றன, மூளையிற் படிந்த அசுசியத்தை யெந்தத் தண்ணீராற் கழுவுவீர்? சற்றுசொல்லுமே பார்ப்போம்! இன்னொரு விசேஷத்தைக் கவனியும்;

> சூத்ரான்னம் சூத்ரசம்வர்க்கம் மாசமேவ
>
> ஏஜன்மனீ ... சூத்ரத்வம் ...

ஒரு பிராமணன் ஒரு சூத்ரனோடு சேர்ந்து சூத்ரனுடைய அன்னத்தைச் சாப்பிட்டால் அவன் சூத்ரனாய்ப் போவானென்று உம் மதக் கொள்கை கோஷித்து முழக்குகின்றது; இஃதிப்படியிருக்க, நானும் நீரும் இன்று கட்டுச்சாதங் கட்டிக்கொண்டு திரிசிரபுரத்துக்குப்போய் அங்கு நமது சாத மூட்டைகளைச் சுரட்சிதமானவோரிடத்தில் வைத்துவிட்டு நமது வேலையை முடித்துக்கொண்டு திரும்பிவந்து சாதத்தை யெடுத்துக்கொண்டுபோய்க் காவேரிக் கரையிற் சாப்பிட்டுவிட்டு, கட்டுச்சாத துணிகளைச் கசக்கும்போது துணிகுறிப்பினால் என் சாதத்தைநீர் சாப்பிட்டுப்போட்டதாகவும் உமது சாதத்தை நான் சாப்பிட்டுவிட்டதாகவும் நமக்குத் தெரியவருகிறது. உடனே நீர்:—"ஐகோ! நான் மோசம்போனேனே! சூத்

ரன் சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டேனே. தீண்டலாய்விட்டதே! தவறிப்போனேனே! தவறிப்போனேனே" என்று பரிதவித்துப், பிராயச்சித்தஞ்செய்துக்கொண்டு காவேரி தீர்த்தத்தில் நூற்றெட்டுவிசை விழுந்து விழுந்து மூழ்கி மேடேறிவந்தீர்! அதனால் உமது காவேரி தீர்த்தம் உமது குடலில் தூங்கும் எனது கட்டுச் சாதத்தை வெளியாக்கி விட்டதா? தீண்டலைத் துடைத்துவிட்டதா? உமது குடலைச் சுத்தம்பண்ணிவிட்டதா? ஓ! மௌடீகமே! அறியாமையே! குருட்டு நியாயமே! எனது சாதம் கொஞ்சநேரத்துக்குள்ளாக இரத்தத்துளிகளாக மாறி யுமது தேகமெல்லாம் ஓடிப்பாயவில்லையா? உமது காவேரி தீர்த்தம் சூத்ரன் சாதத்தினால் வந்த தீட்டை யெங்கே துடைத்தது?"

ஜடகோபாலாச்சாரி:—"ஓ! இதென்ன நியாயம்?"

திருமறை:—"சரியான நியாயம். உமது நியாயத்தைப் போன்ற குருட்டு நியாயமல்ல. உமது வியர்த்த ஸ்நானங்களும், காவேரி, கங்காதீர்த்தங்களும் ஆத்மத்திற்பட்ட பாவ அழுக்கின் ஒரு அணுவை முதலாய் துடைக்க வறியாவென்பது திண்ணம். ஆதலால் ஸ்நானம் தேக சுகத்துக்கேயன்றி ஆத்ம சுகத்துக்கு அமைந்த தல்ல, ஐயா! ஆச்சாரியாரே! தீண்டலாவ தென்ன?"

:—"தீண்டலென்றால் ஓர்வித அழுக்கு."

:—"அதற்கு உருபமுண்டா? அதனைப் பார்க்கலாமா? தொடலாமா? அது கண்களுக்குப் புலப்படுமோ?"

:—"திருமறைநாயகம்பிள்ளை! இவை யென்ன வினாக்கள்? தீட்டு என்றால் ஒருவித அழுக்கு என்றேன். அதற்கு உருபங் கூடவா இருக்கும்? முரட்டுக் கேள்விக்கு முட்டாள் மறுமொழி தான். தீட்டு அழுக்கைப்போல்தா னிருக்கும்."

—. ஆச்சாரியாரே! கண், வாய், மூக்கு முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடிய வஸ்து அழுக்கென்பது. அதற்கு உருபமிருக்குமா? என்கிறீர்! தீண்டலுக்கு உருபமில்லாவிடில் ஏன் உருபமுள்ள வஸ்துவாகிய தண்ணீரைத்தொந்தரை செய்கிறீர்? உருபவஸ்துவும் அருபவஸ்துவும் ஒன்றுக்கொன்று பொருந்துமா? பொருந்தாதே. அப்படியிருக்க ஏன் வீணில் ஸ்நானம்பண்ண? உருபமில்லாதவஸ்து ஸ்நானத்தினால் போகுமா? தீண்டலுக்கு உருபம் இருக்கிற தென்பீரா? அதனையும் ஒப்புகிறேன். நமது வண்டி சாரதி, பஞ்சம ஆதிநாராயணன் இருக்கிறானே அவனைத்

தருவிப்போம். அவன் நம்மைப்போல் சுசிகரமாய்த்தா னிருக்கிறான். அவனைத்தொட்டு உமது தீண்டலைக் காட்டும். பார்ப்போம்..."

—:" திருமறைநாயகம்பிள்ளை! இவைகள் பெரியோருடைய ஏற்பாடுகளேயன்றி என்னுடைய நிபந்தனைகளா?"

—:" ஆதலால், புரோகிதரே! தீண்டலென்பது பிராமணக் கற்பனை பொருளேயன்றி வேறென்ன? பிராமணக்கற்பனைபொருள் என்றேன். ஏன்? என்பீரா? சற்று கண்களை பேறெடுத்து இந்த பிரமாண்டமான உலகத்தைப்பாரும். அதில் ஏறத்தாழ இருநூறு கோடி ஜனங்கள் வசிக்கின்றார்கள். இவர்களில் எத்தனைகோடிகள் ஆரியமதத்தினர்கள்? பதினெட்டு அல்லது இருபது கோடி ஜனங்களிருப்பது பெருங்காரியம். இவர்கள்தான் தீண்டலைச் சிரங்கொண்டு தாங்குகின்றார்கள்! மற்றைய அத்தனைகோடி ஜனங்களும் தீட்டை யறியார்கள். "ஆஹா! சைவரும், வைஷ்ணவரு மாத்திரம் சுசிகரசிலர். மற்ற சதகோடி ஜனங்களும் சகதியிற் புரளுகின்றார்களா? என்னையும் எனது பந்துக்களையும் பாரும். நாங்கள் எவ்வாறு இருக்கின்றோம்? முகத்திற் கரியைப்பூசிக்கொண்டு இடையிற் கம்பளியைக் கட்டிக்கொண் டிருக்கிறோ மல்லவா! நீங்களிருக்கும் நிலைமைக்கும் நாங்களிருக்கும் நிலைமைக்கும் பாரதூர வித்தியாச மல்லவா! ஐயா புரோகிதரே! நீங்கள் சுசிகர சிலராயிற்றே. அப்படியிருக்க, உமது இனத்தாராகிய பிராமணர் ஆங்கிலேயருக்கு ஏன் அவ்வளவுதொண்டு செய்கின்றார்கள்? சில சமயங்களில் அவர்கள் வெளியிற்போய் தங்களாதீன கிராமங்களைச் சுற்றி வரும்போது உமது சகோதரர் அவர்களுடைய கூடாரங்களிற் பஞ்சமரோடு கூடிக்கொண்டு துரைகளின் மேசைகளில் பெருமாம்சம் பன்றி மாம்சம் மீன் முதலிய புலால்களை யவர்களுக்குப் பறிமாறுகின்றார்களே? சுசிகரசிலர் இவைகளைச் செய்யத்தகுமா?

—: ஓ! இது கலிகாலம்! பிராமணர் தங்கள் வர்ணாசிரம தர்மங்களை யனுசரிக்கின்றார்களா? அதற்கு நான் என்ன செய்ய! அதற்கு நான் உத்தரவாதியா? ஐயா! திருமறைநாயகம்பிள்ளை! இவ்விஷயங்களில் என்னிடத்தி லதிகமாய்ப் பேசவேண்டாம்."

—:" ஆச்சாரியாரே! இவைகள்மாத்திரமா? மது மாம்ச போஜனாதிகளையுஞ் சாப்பிடக் கற்றுக்கொண்டார்கள்" என்றார் திருமறைநாயகம்பிள்ளை. எனவே,

ஜெயராமச்சந்திர ஐயர்—"திருமறைநாயகம் பிள்ளையே! இவைகளைப்பற்றிப் பேசுவதனால் வரும்பயனென்ன? இவ்விஷயங்கள் யாருக்குத் தெரியாது? பிராமணர்களிடம் இன்னும் எவ்வளவோ பெருத்த அசங்கியங்களெல்லாம் நடக்கின்றன, அவைகளைத் தவிர்த்தொழியும்: போதும்! இதர விஷயங்களைப்பற்றிப் பேசும். எனக்கு நேரமாகிறது, இன்று சாயந்திரம் நான் கிரமபுரிக்குப் போகவேண்டும்" என,

திருமறைநாயகம் பிள்ளை.—"நீண்டல் இன்னும் முடிவு பெறவில்லை. இந்நேரம் வரையில் அற்ப சங்கதிகளைப்பற்றிப் பேசினோம். இரண்டொரு முக்கிய கேள்விகளிருக்கின்றன: எமது சிறு நங்கை அ. சுசீலதேவியைச் சில யூகக்கேள்விகள் கேட்டாள். அந்தக் கேள்விகளையே புரோகிதரை நானுங் கேட்கிறேன்: ஐயா! ஆச்சாரியாரே! எம் கிறிஸ்துவேதப் பெண்களைப்போலவே யுமது ஆரிய மதப் பெண்களும் மாதந்தோறும் சூதகநோய்க்குச் சார்புள்ளவர்கள், இதில் எட்டுணையும் யாருக்குஞ் சந்தேகங் கிடையாது. எம் மகள் கேட்டதுபோல் நானுங் கேட்கிறேன்: உமது ஆரியமதப் பெண்களுக்கு அது எப்போதும் வீதியில்தான் பிறக்கிறதோ? மனோரஞ்ஜிதஞ் சொன்னதுபோல் நடுவீட்டிலும், படுக்கையிலும், தூங்கும்போதும், சமயற் பண்ணும்போதுஞ், சாப்பிடும்போதும் இன்னும் எந்தெந்த நேரத்திலும் அகஸ்மாத்தாய் நினையாத சமயத்தில் உண்டாவதில்லையா? அதற்கு நேரமுண்டா? பெண்களுடைய இஷடம்போல் அவர்களுக்கு இஷ்டமான சமயத்திற் பிறக்குமா? என,

ஜடகோபாலாச்சாரி:—"மலஜலாதிகளைக் கொஞ்சநேரங் கட்டாயமாய் நிறுத்தலாம். ஆனால் அதை நிறுத்த யாரால் முடியும்? முடியாத காரியம்."

திருமறைநாயகம்:—"ஆதலால் எமது மனோன்மணி கேட்ட கேள்வி நியாயமான கேள்வி. அவ்வாறிருக்க, நீங்கள் ஏன் வீட்டைக் குளிப்பாட்டுகிறதில்லை? சட்டிப்பானைகளை வாரி வெளியிற் கொட்டி விடுகிறதில்லை? சமைத்த சாதத்தைக் குப்பையிற்கொட்டி விடுகிறதில்லை? அதனால் உண்டான தீட்டு, வீடு, வாசல் எல்லாம் பரவிக்கொள்ள வில்லையா? தீட்டைத் தோளிற் சுமந்த சுசிகாசீலரே! இக்கேள்விகளுக்கு என்ன சொல்லுகின்றீர்? எனது தமயனார் நீதியாசன சாலையில் ஏவல் புரியும் இராமச்சந்திர முதலியின்

பெண்டீர் சத்தியபாமாளுக்கு யாருமில்லை. தாயுமில்லை; மாமியாரு மில்லை. பன்னிரண்டு மணிக்கு இராமச்சந்திர முதலி வீட்டுக்குத் திரும்பிவரும்போது அவனது பெண்டீர் வீதியில் உட்கார்ந்திருக்கிறாள். புருஷன் 'என் பெண்ணே! நீ வீதியில்?' என பெண்டீர் 'நான் வீட்டுக்குத் தூரமாய்விட்டேன்' என்கிறாள். அவன் வீட்டுக்குள் நுழைந்து பார்க்க, சாப்பாடு தயாராயிருக்கிறது! உணவு முழுதுந் தயாராகிறவரையில் அது காத்துக்கொண்டிருந்ததாமா? கள்ள சுசிகர ஆரிய சிரோமணிகளே!!! நியாயத்தைப் பின்சென்றால் கடைசிவரையிற் பின் செல்லவேண்டாமா? எமது தோட்டக்காரன் முத்துகுமாரசுவாமி எமது பூந்தோட்டத்தில் தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குப் பசியினாற் காதடைக்கிறது; கண்பூத்துப்போகிறது. வழியை, வழியைப் பார்த்துக் கொண்டு ஏற்றம் ஓடுகிறான். சற்றுநேரம் பொறுத்து அவனது சம்சாரம் அங்காளம்மை சாதங்கொண்டுவந்து இறக்கிவைக்க, முத்துகுமாரசுவாமி பறக்கப் பறக்க ஏற்றத்தை விட்டிறங்கி:— "அங்காளம்மே! எனக்கு மெத்தப் பசியாயிருக்கிறது! சீக்கிரஞ் சாதம்போடு" என,

அங்காளம்மை:—"அத்தான்! நான் வீட்டுக்குத் தூரமாய் விட்டேன். நீங்களே சாப்பிடுங்கள்" என்கிறாள். சைவ சுசிகர சீல சிந்தாமணிகளே! அங்காளம்மைக்கு அது எப்போ உண்டாயது? வழியிலா? அல்லது சோற்றுப்பானையை யிறக்கின வுடனேயா? அது வழியிற் பிறந்தது என்பதிற் சந்தேகமா? வஞ்சக சுசிகர சிந்தாமணிகளே! எமது மகள் உரைத்ததுபோல் உங்கள் வீடு நிறைய சேறுஞ் சகதியும் மலத்தையும் நாற்றமும் கஸ்மாலங்களும் வைத்துக்கொண்டு மற்றைய ஜனங்கள்மீது என்னத்தைப்பற்றி தோஷஞ் சொல்லுகின்றீர்கள்? ஆச்சாரியாரே! நீங்கள் சொல்லுவ தெல்லாம் நியாயம், உண்மை, பிரகாசம்! நாங்கள் சொல்லுவ தெல்லாம் நியாய விரோதம், அபத்தம், அந்தகாரம் அல்லவா? ஆம் என்று சொன்னாலுஞ் சொல்லுவீர்! ஏன்? உமது வாக்கியங்கள் தேவாக்களுடைய வாக்கியங்களல்லவா?"

சடகோபாலாச்சாரி:—"திருமறைநாயகம்பிள்ளை! பயனற்ற விதமாய்ப் பரிகாசம் பண்ணாதேயுங்கள்! இது உம்மைப்போலக் கற்ற மேதாவிகளுக்கு அழகல்ல. எங்களுடைய வாக்கு தேவாக்களுடைய வாக்கென்று சொல்லிக் கொள்கின்றோமா? அளவை மிஞ்சிப் பேசுவது அறிஞர்க்குச் சிறப்பல்ல."

திருமறைநாயகம்:—"ஐயா! புரோகிதரே ஆத்திரப்படாதே யும். நான் நியாயநெறி நின்றே பேசுகிறேன். நீர் உமது வாக்கை தேவ வாக்கென்று சொல்லாவிடினும் உமது கொள்கை பிராமண வாக்கு தேவ வாக்கென்று கோஷித்துக் கூழுறுகிறது! நான்சொல் வதை யுமது ஆகம போதனைகளை ஆதரித்தே யெடுத்துக் காட்டு கிறேன்" இதோ கேளும்:

"Brahmana yani bashante man'yante tani devata"
பிராமணர் எவைகளைச் சொல்லுகின்றார்களோ அவைகளை தே வாக்களே நினைக்கின்றார்கள்.

நீர் பிராமணனல்லவா? நீர் எதனைச் சொன்னாலும்,; பேசினு லும், பொய்யைச் சொன்னாலும், மெய்யைச் சொன்னாலும், நீர் கறுப்பை வெள்ளை யென்றாலும்,வெள்ளையைக் கறுப்பென்றாலும், குதிரையைக் கழுதையென்றாலும், கழுதையைக் குதிரையென்றா லும், நாயை நரி யென்றாலும், நரியை நாயென்றாலும் இன்னும் எதேதைச் சொன்னாலும் இவையெல்லாம் உமது தேவதைகளே நினைக்கின்றார்கள்! ஆதலால் உமது வாக்கும் தேவர்கள் வாக்கும் ஒன்றல்லவா?"

ஜடகோபாலாச்சாரி:—"ஐயோ! நாராயணா! நாராயணா! கற் றறி சூத்ர சங்கத்தில் உட்கார்ந்ததற்கு நான் கண்ட பலனிதுதான். நான் எனது வேத விதியையும் நிபந்தனைகளையும் கட்டுப்பாடுகளை யும் மறந்துவிட்டேன்!"

திருமறைநாயகம்பிள்ளை:—"என்னத்தை மறந்துவிட்டீர்? உ மது மதக் கட்டுப்பாடுகள் உமக்கு என்ன சொல்லுகின்றன? "கற்ற றிந்த சூத்ர மேதாவிகளோடு சேராதே" என்று சொல்லுகின்றன!

சூத்ரம் அக்ஷர சம்புக்கம் தூரத: பரிவர்ஜயேத்."

சான்றோனான ஒரு சூத்ரனைக் கண்டால் வெகு தூரத்தில் ஓடிப்போக வேண்டுமென்று சொல்லுகிற தல்லவா உமது வேத விதி? இது நியாயமா? வேதமென்றால் அறிவு; கல்வி; தெளிவு; தெ ருள், பொருள் என்று விரியும். அதனை யெல்லோரும் அறிய வே ண்டு மென்பதே அதன் றாற்பரியம். அப்படியிருக்க, உமது வேத விதி படிப்புள்ள சூத்ரனைக்கண்டால் தூரமாய்ப் போகச் சொல்லு கிறது."

சந்திரசேகரம்பிள்ளை:— "நீ சொன்னதெல்லாம் வாஸ்தவந் தானா, திருமறைநாயகம்? படிப்புள்ள சூத்ரனை பிராமணன் விலக வேண்டுமென்றால் என்ன அர்த்தம்? சூத்ரன் படிக்கத்தகாது என்பதல்லவா ஷை சுலோகத்தின் கருத்து? பிராமணன் வாக்கெல் லாந்தேவதைகள் வாக்கு என்பது மண்டைக்கு ஏறின ஒப்பில்லாப் பித்தமல்லவா? இதுவும் தர்மசாஸ்திர வாக்கியமாமா? என் குல குருவாகிய ஜடகோபாலாச்சாரியார் சூத்ரன் படிக்கத் தகாதென் றும் தம் வாக்கு தேவ வாக்கென்றுஞ் சொல்ல வருவாராகில், என க்கு ............"

திருமறைநாயகம்:— "அத்தான்! இதைத்தானா கண்டீர்கள்? இன்னும் எத்தனையோ அபாசங்கள்! எண்ணில், ஏட்டில் அடங்கு மா? கல்விமானான சூத்ரனைக் கண்டால் விலக வேண்டுமென்று உங் கள் வேதவிதி கூறக்கேட்டு புஸ்ஸென்று சிறி விழுகின்றீர்கள். உங்கள் மகன் சுந்தரம்பிள்ளை பெல்லாம் அறிய வேண்டுமென்று ஆசைப்படுகிறார். எச்சரிக்கை! வேதங்களை யறிய வேண்டுமென்று ஆசைப்படுகிறார்! நினைத்தால் போதும்! சற்றுநேரம் சதுர் வேதங் களை யறியவேண்டுமென்று கவலைப்படுவாராகில், போயிற்று போ யிற்று! சண்டாளனாய்ப் போய்விடுவார்! ஏற்கெனவே இரிஷிகள் சாபம் போட்டிருக்கின்றார்கள்! அதனைப்பற்றிக் கவலை வேண்டா மென்று கண்டிப்பாய்ச் சுந்தரம்பிள்ளைக்குச் சொல்லுங்கள்!" என

நான் (சுந்தரம்) திருமறைநாயகம் பிள்ளையை நோக்கி:— "என்ன அத்தான் இப்படிப் பேசுகின்றீர்கள்? இது எனக்குப் பரிகாசமாய்த் தோன்றுகிறதே. வேதமென்றால் 'அறிவு, கல்வி' என்றீர்கள். வேதத்தையும் வேத போதனைகளையும் நாம் அறிந்து தானே தர்மங்களைச்செய்து மோக்ஷகதி சேரவேண்டும்? அப்படி யிருக்க எந்த இருஷியாயினுஞ் சரி: வேதத்தை யறியவேண்டாம் என்று தடுப்பாரா? நான் நம்பேன்! நீங்கள் சும்மா பரிகாசத்திற்கு இவ்வாறு பேசுகின்றீர்கள்" என,

திருமறைநாயகம் பிள்ளை :— "இல்லை, சுந்தரம்! பரிகாச மல்ல. கண்டிப்பான காரியமே, உமது மாகனன்கள் வேதங்களை அறியத் தகாதென்று தடுத்ததோடுகூட அவைகளை யறியவேண்டு மென்கிற விச்சாரத்தை முதலாய்த் தடுத்துவிட்டார்கள். உமக்கு வேதங்களை யறியவேண்டு மென்கிற விச்சாரமிருக்குமோ? உடனே நீர் சண்டாளனாய்ப் போய்விடுவீர்! இதோ நிதரிசனம்; கேளும்:

வேதாக்ஷர விச்சாரேண
சூத்ராஸ் சண்டாலத்தாம் விரஜேத்!

சூத்ரன் வேதங்களை யறியவேண்டுமென்று கவலைப்படுவானுகில் சண்டாளனுய்ப் போவான். அதாவது: பறையனுய்ப் போவான் என்று தர்மசாஸ்திர சுலோகஞ் சொல்லுகின்றது. ஆதலால் நான் சொல்லுகிறவை பரிகாசவார்த்தைகளல்ல" என,

நான் என்து தந்தையரை நோக்கி:— "அப்பா! பிராமண ருடைய பித்தலாட்ட மல்லவா இது? இத்தகைய சுயபக்ஷமுள்ள மனிதரையும் நாம் குருக்களென்று அவர்களுக்குக் கைபெடுக்கலா மா? இன்றேடு அவர்கள் விஷயத்தில் என் மனதிற் பெருங் கட் டை விழுந்துபோயிற்று! அரம் விழுந்துபோயிற் றென்றுலுஞ் செல்லும்!" என,

திருமறைநாயகம்:—" இது மாத்திரமா? தம்பி! சுந்தரம்! என்னத்தைக் கண்டீர்? நீர் சமஸ்கிருதம் படிக்கத் துவக்கியிருக் கிறீர். அதனைப் படித்து முடியும்! பிராமணக் கட்டுப்பாட்டின் மகத் துவம் இன்னதென்று அறிவீர். தங்களுக்கும் தங்கள் குலத்தா ருக்கும் தங்கள் ஜீவனுர்த்தத்துக்கும் ஏதேது பிரயோஜனகரமோ அதனை யெல்லாம் தங்களுக்கு உரித்தாக்கிக்கொண்டார்கள். அதிற் சூத்ரன் பிரவேசிப்பானுயில் உடனே சாபம்...! பால் தங்க ளுக்கு அவசரமாதலால் பசுவின் பாலைச் சூத்ரன் குடித்தால் சண் டாளனுய்ப் போவா னென்கிறுர்கள்!

கபிலாக்ஷீர பானேன
சூத்ரா சண்டாலத்தாமவிரஜேத்

சூத்ரன் காராம் பசுவின் பாலைக்குடிப்பதனுல் சண்டாள னுய்ப் போகிறுன்! என்று பிதற்றுகிறது வடமொழி சுலோகம்.

மதுரநாயகம் பிள்ளை:— "திருமறைநாயகம்! என்னத்திற்கு வீண் மனஸ்தாபத்தை மூட்டுகிறுய்? எதனை யாரம்பித்து எதில் நுழைந்துவிட்டாய்? நிறுத்து, போதும், விவாதம் இப்போது முடியாது போலும்! சூதக விஷயத்தை முடி" என,

திருமறைநாயகம் பிள்ளை:— "ஐயா! ஆச்சாரியாரே! மாதக் கழிவு விஷயத்தில், தீண்டல், தீட்டு என்று ஓர் அசங்கிய சங்கற்

பத்தை யேற்படுத்தி யுமது ஆரியமதப் பெண்டுகளைத் தெருக்களிலும், திண்ணைகளிலும், மக்தைக்கரைகளிலும், மூலைமுடுக்குகளிலும் உட்கார்த்தி யவர்களை யவமானம் பண்ணுகின்றீர்கள்! இத்தகைய அசுசிய வழக்கங்களையும் அநாச்சாரங்களையும் ஆச்சாரமென்பது மிக்க விந்தையே! நல்ல வம்சத்தில் பிறந்து சகலராலும் வந்திக்கப்படத்தக்க சில பெண்மணிகள் வீதியில் உட்கார்ந்து துஷ்டருடைய கண்களுக்கும் நெஞ்சத்திற்கும் இரையாகப் போவதைவிட வேறு அநாச்சாரம் உண்டா? மேற் கூறிய கண்ணியம் நிறைந்த ஸ்திரிகள் இவ்வாறு பகிரங்கமாய் வெளியில் உட்கார்ந்திருப்பதனால் துஷ்டருடைய மனதில் எத்தனை துரெண்ணங்கள், எத்தனை அசுசிய தோற்றங்கள், எத்தனை யவலக்ஷண பிரதிக்ஞைகள் பிறக்கின்றன! உமது ஆரியமதப் பெண்களைச் சுசிகரமாயிருக்கவேண்டாம் என்று தடுத்தது யார்? தாங்கள் சுசிகர சீலரென்று மற்றைய ஜனங்கள் அறியுமாறு தங்களுடைய குறைகளை வெளியிற் காட்டிக்கொள்ளவேண்டுமா? தங்களுடைய அசுசியங்களை யிரகசியத்தில் சுசிகரமாக்கிக்கொண்டு கவர்தையாயிருந்தா லாகாதோ? இது தானா ஆச்சாரம்? சுத்த அனாச்சார மல்லவா?''

''இது நிற்க தான தர்மங்களைச் செய்யும்போது முக்கியமாய்ப் பிராமணருக்கே செய்யவேண்டுமென்று பிரம்ம சமயத்தார் தங்கள் பிள்ளைகளுக்குப் போதிப்பதாய்க் குணமணி யெமது மகள் மனோரஞ்ஜிதத்துக்குச் சொன்னதைக் கேட்டோம். பிச்சை கொடுப்பது ஜீவகாருண்யத்தைப் பொறுத்த பெரும் புண்யம். 'பாத்திரம் அறிந்து பிச்சையிடு' என்று பழமொழி கூறுகின்றது. நேரம், நிலைமை, யவசியம், அறிந்து தர்மங் கொடுக்கவேணுமே யல்லாது, குலம், பெருமை, உயர்வு, தாழ்வு பார்த்துப் பிச்சையிட லாகாது. தர்மத்திற்கு பிராமணனென்றும், வைசிய னென்றுஞ், சூத்திரனென்றும், பறையனென்றும் வித்தியாசங் கிடையாது. தர்மத்திற்கு அவசியமே முக்கிய காரணம். யாருக்கு அவசியமோ அவர்களுக்கே பிச்சை கொடுக்கவேண்டும். இதுவே நியாயத்துக்கு ஒத்தது. இதுவே கடவுளுடைய சங்கற்பம். நாம் நியாயத்தை யொட்டிப் பேசவேண்டுமாகில் இழிகுலத்தோரையும் பலவீனரையுமே யதிகமாய்ச் சன்மானித்து அவர்களுக்குத் தானங்கொடுக்கவேண்டும். பலவீனனுக்கே சகாயம்பண்ணவேண்டுவதுபோல் பசித்தவனுக்கே சாதம் போடவேண்டும். இது நியாயத்தை யொட்டியது. இதனை த

தவிர்த்து பிராமணனுக்கே தர்மங் கொடுக்கவேண்டுமென்ற போதனைக்கு நியாயமென்ன? ஒரு நாள் ஒரு பிராமணனும் ஒரு பஞ்சமனும் எமது வீட்டுக்குத் தர்மங்கேட்க வந்தார்கள். பிராமணன் நல்ல வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டு நன்றாய்ச் சாப்பிட்டுவிட்டு வந்து பிச்சை கேட்கிறான். பறையன் கௌபீனத்தோடு பசியினால் வருந்தி கஷ்டப்பட்டுத் தர்மங் கேட்கிறான். ஐயா! ஆசாரியாரே! இருவரில் யாருக்குத் தியாகங் கொடுக்கவேண்டும்? யாருக்குக் கொடுத்தால் புண்யம்?"

—: "திருமறைநாயகம்பிள்ளை! இங்கு இவ் விஷயத்தில் வினவ வேண்டுமா? நிஸ்ஸந்தேகமாய்ப் பறையனுக்கே கொடுக்க வேண்டும். இங்கு பிராமணன் சுகமாயிருக்கிறான்; பஞ்சமன் பசியினால் வருந்துகிறான். இவனுக்குக் கொடுப்பதுதான் புண்யம். பாத்திரம் அறிந்து பிச்சையிடவேண்டியது தியாகியின் கடமை."

—: "எனது பந்துக்களும் விசேஷமாய் எனது அண்ணியார் அபிராமியம்மாளும் பாத்திரமறிந்து பிச்சையிடுவார்கள். ஏன் அப்படிச் செய்கின்றார்கள்? நாங்கள் கிறிஸ்துவர்களாதலால் அவ்வாறு செய்வோம். இதுவே எங்கள் வேத போதனை. ஆனால் உம்மதஸ்தர் அவ்வாறு செய்வார்களா? செய்யார்கள்! ஏன் செய்யார்கள்? நீரும் உமது மதபோதனைகளும் பிராமணருக்குத் தியாகங்கொடுப்பதிலேயே புண்யத்தை யடக்கிவிட்டிருக்க, பறையனும் பிராமணனும் உமது சிஷ்யரிடம் பிச்சைக்கு வந்தால் யாருக்குக் கொடுப்பார்கள்? இவ்விஷயத்தில் வினவ வேண்டுமா?" கைப்புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமா?" என்று திருமறைநாயகம்பிள்ளை புரோகிதருக்குச் சொல்லிவிட்டு, எனது தங்கையை நோக்கி":—"விஜயவல்லி! உன் கையில் அரைக்கால் ரூபாயிருக்கிறது என்று நினைத்துக்கொள். ஒரு பிராமணனும் ஒரு பறையனும் வந்து உன்னைப் பிச்சை கேட்கிறார்கள். நீ யாருக்கு அந்தப் பணத்தைக்கொடுப்பாய்? பிராமணனுக்கா? பறையனுக்கா?"

விஜயவல்லி:—"ஐயருக்குத்தான் கொடுப்பேன். பறையனுக்குக் கொடுக்கவா? சண்டாளனுக்குக் கொடுக்கலாமா? பிராமணர் எங்களுக்கு குரு. குருவுக்குக் கொடுத்தாற் புண்யம். பறையனுக்குக் கொடுத்தால் என்ன புண்யம்?"

திருமறைநாயகம்பிள்ளை:—"கேட்டீரா புரோகிதரே? உதாரணத்திற்குக் காதத் தூலைதூரம் போகவேண்டியதில்லை. இங்கேயே யுமக்கு நிதரிசனங் கிடைத்தது. இது வெல்லாந் தாய் தந்தையருடைய போதனை யல்லவா? தாய் தந்தையர் ஏன் அவ்வாறு பிள்ளைகளை வளர்க்கின்றார்கள்? உமது சமய கொள்கைகள் அவர்களுக்கு வழிகாட்டியாயிருக்கின்றன. குருடனுக்குக் குருடன் வழிகாட்டினால் இருவருங் குழியில் விழுவார்களென்று எமது குரு, இயேசு பெருமான் சொல்லிவிட்டார். உமது மத போதனைகளில் உண்மையும் நேர்மையும் இல்லாவிடில் சிஷ்யரிடத்தில் உண்மையும் நேர்மையும் எங்கே யிருக்கும்?"

ஜடகோபாச்சாரி:—"தாய் தந்தையர் தங்கள் பிள்ளைகளுக்கு அவ்வாறு போதித்திருக்கலாம், போதிக்கலாம். அது என்னைச் சார்ந்ததல்ல. ஆனால் ஆரிய மதம் பஞ்சமருக்குப் பிச்சையிடலாகாதென்றும் பிராமணருக்கு மாத்திரமே தானம்பண்ணவேண்டுமென்றும் போதிக்கிறது என்பது சுத்த பிசகு. இதனை நீர் நிரூபிக்க மாட்டீர். இதற்கேதேனும் பிரமாணம் எடுத்துக்காட்டுவீரா?"

திருமறைநாயகம் பிள்ளை :—" எடுத்துக்காட்ட என்னால் ஏலும். இதோ கேளும்;

"ஸமம் அபிராமனே தானம் ஸஹஸ்ரம் பிராமணப்ருவே
அயுதம் ஸ்ரோத்ரியே தானம் அநந்தம் வேதபாரகே".

பிராமணரன் அல்லாதவனுக்குக் கொடுத்த தானம் தானந்தான். ஆனால் அதற்குப் பலனில்லை. ஸ்நான முதலிய நித்ய கருமங்களை விட்ட பிராமணனுக்குச் செய்த தர்மம் ஆயிர மடங்கு பலனைத்தரும்; வேதமறிந்த பிராமணனுக்குக் கொடுத்த தர்மம் பதினாயிரமடங்கு பலனைத்தரும்; வேதமோதும் வேதபாரகருக்குக்கொடுத்த தர்மம் மட்டுதிட்டமில்லாத பலனைப்பெறுவிக்கும் என்று உமது தர்மசாஸ்திரம் போதிக்கின்றது. இவ்வளவு சொகுசான போதனை யிருக்கும் போது பிராமணரும் சூத்ரரும், பஞ்சமரும் ஓர் தியாகவள்ளல் வீட்டுக்குத் தர்மங் கேட்கப்போனால் யாருக்குப் பிச்சை கிடைக்கும்." நான் மேற்கூறிய வடமொழி சுலோகத்தின் பிரகாரம் மற்றைய ஜாதியாருக்குச் செய்கிற தானம் பலனையடைகிறதில்லை; பிராமணன் எத்தகைய மனிதனா யிருந்தபோதிலும் பெரிதல்ல; அ

வனுக்குப் கொடுக்கும் தர்மத்திற்குமாத்திரம் பலனுண்டு. அப்படி யிருக்க உமது சிஷ்யர் யாருக்குத் தியாகங் கொடுப்பார்கள்? பாத்திரமறிந்து பிச்சையிட அவர்களுக்கு வழியில்லை. பஞ்சமன் பசியினால் வருந்தி மடிந்தாலும் அவனை யொதுக்கிவிட்டு, பிராமணன் மூக்கு முட்ட சாப்பிட்டு, புளித்தேப்பம் விடினும் அவனுக்கே தர்மஞ் செய்யவேண்டும். இதில்தான் புண்யம் அடங்கியிருக்கிறது. இதுவே யுமது மத ரசம்! இந்த இனிய ரசத்தை யருந்தின உமது சிஷ்யர் வாய்க்காலில் விழுந்து சாகப்போகும் பஞ்சம குழந்தையைத் தூக்குவார்களா? சூத்ர ஏழை பிச்சைக்கு வந்தால் பிச்சைபோடுவார்களா? இழி குலத்தோர் காலில் முள் தைத்தால் அதனைக் களைந்து எடுப்பார்களா? கபோதி பறைப்பிள்ளை இரஸ்தாக் கால்வாயில் விழுந்து தடுமாறினால், அதனை நல்வழியில் கொண்டுவந்துவிடுவார்களா?" யதாகுரு ததா சிஷ்யா; "குருவெப்படியோ சிஷ்யனும் அப்படி. குரு பஞ்சமனைக் கண்டால்—" ஒத்திப்போ! ஒத்திப்போ! என்று ஒரு காத தூரம் ஒதுங்கி யோடும்போது சிஷ்யன் எவ்வளவு தூரம் போகமாட்டான்? மான் அடி தாண்டு மாகில் குட்டி ஐந்தடி தாண்டாதா? இத்தகைய உபாத்தியாயர் பாடசாலையில் வாசிக்கும் மாணுக்கர் எவ்வாறு இருப்பார்கள்? குருவை மிஞ்சாவிடினும் குருவைப்போலாயினு மிரார்களா? இரக்கம், தயை, ஜீவகாருண்யம் முதலிய பரோபகார புண்யங்களை யறியாத வேதியர்கள் !!! ஐயா! புரோகிதரே! பாண்டு புத்திரனும் பாரதனுமான நகுலன் சொன்ன வாக்கியம் உமக்குத் தெரியாதா? தெரியாவிடில், கேளும் சொல்லுகிறேன்.

ஆத்மவத் ஸர்வ பூத்தானி ய: பசியதி ஸபசியதி.

மன்னுயிர்களைத் தன்னுயிரைப்போல் எவன் பாவிக்கிறானோ அவனே கண்திறந்தவன்; அவனே ஞானி யென்கிறான் நகுலன். பாரதம் உமது ஐந்தாம் வேதமல்லவா? ஏனிந்த சுலோகத்தைப் பின்செல்லுகிறதில்லை? சொல்லுகிறதொன்று, செய்கிறதொன்றா? இனியேனும் நீரும் உமது சிஷ்யரும் ஜீவகாருண்யத்தைப் பாராட்டி தர்மத்தை யாருக்கும் வித்தியாசமின்றிச் செய்வீர்களென்று நம்புகிறேன்." என்று சரமாரியாய்ப் பொழிந்து ஜடகோபாச்சாரியாரைக் குரல் வளையைப்பிடித்து நெரித்ததுபோல் வாதிக்க, நான் எனது தந்தையாரையும தாயையும் விஜயவல்லியையும் உற்று அடிக்கடிப் பார்க்க

ஜெயராமச்சந்திர ஐயர்:—"திருமறைநாயகம்பிள்ளை! இவை யெல்லாம் எங்கே பார்த்தீர்கள்? திருமறைநாயகம் என்ற சிறந்த பெயர் உமக்கே செல்லும்!" என,

சந்திரசேகரம்பிள்ளை:—"ஐயரே! நான் எற்கெனவே சொன்னதுபோல் நீங்களுஞ் சொல்லுகின்றீர்களே. நான் திருமறைநாயகத்துக்கு வெகுமறை நாயகமென்று பெயர் கொடுத்திருக்கிறேன்". என,

மதுரநாயகம்பிள்ளை.—"ஜெயராமச்சந்திர ஐயரே! நாள்வட்டத்தில் எனது தம்பி திருமறைநாயகம் இன்னுனென்று அறிவீர்கள். இலத்தீன் பாஷையிலாகட்டும் சமஸ்கிருத பாஷையிலாகட்டும் அவன் புரட்டாத பிரபந்தங்களில்லே. கிரந்தங்களைப் பரிசோதிப்பதில் குணமணிக்கு இளைத்தவனல்ல..." என்றவுடன் ஜெயராமச்சந்திர ஐயர்! செலவு பெற்றுக்கொண்டு தம ஊருக்குப் போய் விட்டார்.

---

## 20-ம் அத்தியாயம்.

ஐந்தாம் இலக்ஷண விளக்கம். தேவன் எங்கு மிருக்கிறார். தெய்வ சன்னிதானத்தின்பேரில் ஓர் உபன்னியாசம். தெய்வ சன்னிதானந் தீமையொழிக்க நல்வழி. அதற்குச் சரித்திர உதாரணங்கள். கோபத்தை விட வேண்டும். கிருபாவான் சுவாமிகளின் வரவு. தாயைப்போல் பிள்ளை,

மதுரநாயகம்பிள்ளை தமது மகளைப்பார்த்து:—"மனோரஞ்ஜிதம்! தேவனுடைய ஐந்தாம் இலக்ஷணத்தைச் சொல்" என,

அவள்:—கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார்" என்றாள்,

எனவே குணமணியம்மாள்:—

நிரம்பிய குளத்தை நோக்குமின் நீக்கற நின்ற நீரே நீரென
வரம்பிலான் வகுத்தவைந்தாம் வரமதை வரையறச் செப்பலாம்
பரம்பிய பரத்தின்கண்ணே பறந்தேகிப்பார்க்கினும் பார்க்கினுமே
நிரம்பிய நிலத்தை நெருக்கினு நிறைய நின்றவனிவ்றவனே."

என்று பாடி முடித்தாள். முடிக்கவே,

மதுரநாயகம்பிள்ளை:—"ஆம், மகளே! குணமணி சொன்னதுபோல் ஆண்டவர் ஒரு குளத்தை யதிலுள்ள தண்ணீர் சம்பூரணமாய் நிரப்பிக் கொண்டிருக்கிறதுபோல் எல்லா சிருஷ்டிகளையும்

நிரப்பிக்கொண்டிருக்கிறார். மேலே வானமண்டலங்களை யெல்லாங் கடந்து எவ்வளவு தூரம் பறந்தோடிப் பார்த்தாலும் அங்குமிருக்கிறார். பூமியின் கெற்பகரத்தி லிறங்கி யெவ்வளவு தூரம் போன போதிலும் அங்குமிருக்கிறார். உலகத்தின் நாற்றிசைகளிலும் எவ்வளவு தூரம் பிரயாணம்பண்ணினாலும் அங்குமிருக்கிறார். எங்கும் பூரணமாயிருக்கிறார்; தூணிலுமிருக்கிறார்; துரும்பிலுமிருக்கிறார்; நாசியிலுமிருக்கிறார். சேறு, சகதி, சுஸ்மாலங்களிலுமிருக்கிறார். நரகததிலுமிருக்கிறார். அவர் இல்லாதவிடங் கிடையவே கிடையாது. ஒரு பாத்திரத்தில் வழிய வழியத் தண்ணீரைவிட்டால் எவ்வாறு அந்த பாத்திரத்தில் அற்பமேனும் இடமில்லையோ, அவ்வாறே யவர்சிருஷ்டியை நீக்கமின்றி நிரப்பிக்கொண்டிருக்கிறார். அவர் எவ்வாறு சிருஷ்டிகளை... ? என,

மனோரஞ்ஜிதம்:—"ஆஹா! நீங்கள் சொன்னதெல்லாம் எனக்குச் சரிதான். ஆனால் கடவுள் சேறு, சக்தி. நாற்றம் முதலிய அசுசியங்களில் எப்படி யிருக்கக் கூடும்? நெருப்பு அவரைச் சுடாதா? நரகம் கொடுமையான இடமாயிற்றே. அங்கு மிருப்பாரா?" என,

மதுரநாயகம் பிள்ளை:—'மகளே! கடவுளின் மூன்றும் இலக்ஷணத்தை மறந்துவிட்டையா? அவர் அரூபியாயிற்றே, சேறு, சகதி, நாற்றம், நெருப்பு முதலிய உரூபிகர வஸ்துக்கள் அவரை யென்ன செய்யும்? கடவுளுக்குச் சுத்தா சுத்தங் கிடையாது. அவருக்கு எல்லாஞ்சரியே. இதுவுமன்றி யவர் படைத்துப் பரிபாலித்து வருஞ் சிருஷ்டிகள் அவருக்கு விரோதமாய் நிற்குமா? இல்லை ஆதலால் அவர் எவ் வஸ்துவிலு மிருப்பது அடுக்காத காரியமல்ல.

கடவுள் எங்கும் நிரம்பியிருப்பது திண்ணம். ஆனால் எப்படி யிருக்கிறார்? தமது Omniscientia சர்வஞானத்தினாலும், தமது Substantia சுபாவத்தினாலும் இயல்பினாலும், தமது Omnipotentia சர்வ வல்லமையினாலும் எங்கும் வியாபித்திருக்கிறார்.

1. தமது சர்வ ஞானத்தினால் இராப்பகலிலும், இருட்டு வெளிச்சத்திலும், பயிரங்கத்திலும், இரகசியத்திலும், ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வோர் வஸ்து செய்யும் ஒவ்வோர் கிரியை, வினையம் செய்கை முதலியவைகளையும் பரிஷ்காரமா யறிந்துகொள்ளுகிறார்.

மகனே! நாம் நாடோறும் அருந்தும் ஒவ்வொரு மிடறு தண்ணீரில் கண்ணுக்கெட்டாத இரண்டு மூன்று லக்ஷம் பூச்சிகளிருக்கின்றன. அவைகளின் நடப்பும், செய்கையும், அவைகள் விடும் மகா நுட்பமான சுவாசமும் அவருடைய பார்வைக்கு எட்டாமற் போகிறதில்லை! கடைசியாய் அவர் அறியாத காரியம் ஒன்றுமில்லை.

2. கடவுள் தனது இயல்பினாலும் சுபாவத்தினாலும் எங்கும் நிறைந்திருக்கிறார். அவருடைய இலக்ஷணங்களில் தாரதம்மியம், எக்குத்தக்கு, பெரிது சிறிது கிடையாதென்றும், எல்லா இலக்ஷணங்களுஞ் சமமாயிருக்கின்றன வென்றுஞ் சொன்னேன். அவர் தமது சர்வ ஞானத்தினால் எவ்விடத்தும் நடக்கும் எல்லாவற்றையும் பார்க்கிறார். தமது சர்வ சக்தியினால் எவ்விடத்தும் தமக்கிஷ்டமான காரியங்களைச் செய்து முடிக்கிறார். ஆதலால் மற்றைய இலக்ஷணங்களில் விகாசப்படாத தமது சுபாவத்தினால் இயல்பினாலும் எங்கும் எல்லாவற்றையும் நிரப்பிக்கொண்டிருக்கிறார் என்பது குன்றாத சத்தியம்.

3. கடவுள் தமது சர்வ வல்லமையினால் எங்கும் நிறைந்திருக்கிறார். தமது சர்வ சக்தியினால் எவ்விடத்திலும் தமக்கிஷ்டமானதைச் செய்கிறார். அப்படியே மேலே வானமண்டலத்தில் சந்திர சூரிய நக்ஷத்திரங்களும் தங்களுடைய சக்கிரவாளத்தை விட்டு விலகாமல் ஒருகண்டசீராய் அதனைச் சுற்றிவருவதும் அவருடைய சர்வ சக்தியாலேயே; பூமியில் புல், பூண்டு, செடிகள், மரங்கள், விருக்ஷங்களும் முளைத்துத் தழைத்தோங்குவதும் அவருடைய சர்வ வல்லமையினாலேயே. இன்னும் மற்றுள்ள மிருகங்களும் ஜீவகோடிகளும் விசேஷமாய் மனிதரும் அழிந்துபோகாமல் மேன்மேலும் பலுகிவருவதும் அவருடைய சர்வ வல்லமையின் பலத்தினாலேயே யன்றி வேறென்ன? இவ்வாறு மகத்துவ தேவன் தமது சர்வ ஞானத்தினாலும், சர்வ வல்லமையினாலும், இயல்பினாலும் எங்கும் எல்லாவற்றையும் நிரப்பிக்கொண்டிருக்கிறார். ஆனால் மகனே! நான் சொன்னவைகளெல்லாங் கண்டுபிடித்தையா? எங்கும் நிறைந்திருக்கிறார், என்றால் என்ன அர்த்தம்:"

—: "ஆஜீ! கடவுள் எங்குமிருக்கிறார் என்றால், உண்டாக்கப்பட்ட ஒவ்வொரு வஸ்துவிலுமிருக்கிறார்;"

—: "இன்னுந் தெளிவாய்ச் சொல், மகனே! நீ சொல்லுவதை யுதாரணத்தினால் விளக்கிக்காட்டு; பார்ப்போம்."

—:"அப்படியே வானத்திலுஞ், சந்திரனிலுஞ், சூரியனிலும், நக்ஷத்திரங்களிலும், பூமியிலும், தண்ணீரிலும், பூமிக்குள்ளும், மரங்களிலுஞ், செடிகளிலும், தூசியிலும், கடவுளால் படைக்கப்பட்ட என்னென்ன காரியங்களிருக்கின்றனவோ அவைகள் எல்லாவற்றிலுந் தேவன் நிறைந்திருக்கிறார். இப்படித்தான் நான் கண்டுபிடிக்கிறேன், ஆனு! இது சரிதானு?"

:—"ஆம், மகளே! சரியாய்ச் சொன்னுய். சுவாமியின் இந்த லக்ஷணத்துக்குத்தான் சர்வ வியாபகமென்று பெயர். இந்த இலக்ஷணம் சிருஷ்டிகள் எங்கெங்கு இருக்கின்றனவோ அதுவரையில் மாத்திரம் போகும்; சிருஷ்டிகளைக் கடக்காது. ஆனுல் மனோரஞ்ஜிதம்! கடவுள் சிருஷ்டிகளைமாத்திரந்தானு நிரப்பிக்கொண்டிருக்கிறார்?"

—:"ஆனு! அவர் எங்கு மிருக்கிறார்; அது எனக்குத் தெரியும். இன்னும் வேறுவிதமாய் எப்படி யிருக்கிறார்? எனக்குத் தெரியவில்லையே. நீங்கள் சொல்லுங்கள்."

—:"மகளே! சிருஷ்டிகளிருக்கும் இடமெல்லா மிருக்கிறார். இதுமாத்திர மல்ல. இன்னும் சிருஷ்டிகளை யெல்லாங் கடந்து நிற்கிறார். அவரை குணநிதி யென்று சொன்னேன். எல்லா நன்மைகளாலும் நிறைந்த கரைகாணுத சமுத்திரம் என்றும் உனக்கு ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். அவரது ஒரு லக்ஷணத்தையேனும் மனிதனுடைய புத்தியினுல் அளக்க முடியாது. சிருஷ்டிகளை யெல்லாங் கடந்து திட்டமில்லாமலு மட்டில்லாமலுந் தூர தூரவுலகங்களை யெல்லாந்தாண்டி அபரிமிதமாய்ப் பரவி நிற்கும் அவருடைய இயல்பை யளக்க எந்த சிருஷ்டியாலு முடியாது. இந்த இலக்ஷணத்திற்கு வரம்பிலாமை என்று பெயர். இந்த இலக்ஷணத்தை எந்த சிருஷ்டியாலுந் தன் இந்திரியங்களைக்கொண்டாகிலும் புத்தியைக்கொண்டாகிலும் அளக்க முடியவே முடியாது" என்று,

மதுரநாயகம் பிள்ளை யுபதேசத்தை முடித்து தமது சம்சாரத்தை நோக்கி:—"அபிராமி! கடவுளுடைய ஆறு இலக்ஷணங்களில் அவரது ஐந்தாம் இலக்ஷணத்தை யதிகமாய்க் கவனிக்கவேண்டியது. சுவாமியுடைய சர்வ வியாபகத்தை நாம் நன்றாய் உய்த்துணர்ந்தால், நாம் சன்மார்க்கத்தில் அபிவிர்த்தியடைய அது பெருஞ் சாதனமாயிருக்கும். ஆதலால் தேவ சன்னிதானத்தைப்பற்றி

பொரு சிறிய உபந்நியாசம் நமது நங்கைக்குச் செய். நானும் திரு மறைநாயகமும் சந்திரசேகரம் பிள்ளையும் கிராமத்துக்குப் போய் வரவேண்டியிருக்கிறது” என்று சொல்லி சங்கத்தைவிட்டெழுந்து மேற்குறித்த இருவரையும் அழைத்துக்கொண்டு வெளியிற் போய் விட்டார் அவர்களோடு ஜடகோபாச்சாரியாரும் எழுந்துபோய் விட்டார். எனது தாயார், விஜயவல்லி, குணமணியம்மாள், மனோ ரஞ்ஜிதம், அபிராமியம்மாள் முதலிய ஸ்திரிகளும், நானும் அங்கு இருந்தோம். அப்போது அபிராமி யம்மாள் மனோரஞ்ஜிதத்தைப் பார்த்து :—

“மகளே! உனது தந்தையர் சொன்னது போல் கடவுள் சகலத்தையும் நிரப்பிக்கொண்டிருக்கிறார்; எல்லாவற்றையுங் கடந்து நமது மனோ, வாக்குப், பஞ்சேந்திரியங்களுக்கு எட்டா தூர தூரமாய்ப் பரவிநிற்கிறார். ஒருதடாகத்தி லுள்ள தண்ணீர் அதிலுள்ள ஜீவஜெந்துக்களை நிரப்பிக்கொண்டிருக்கிறதுபோல், தேவன் நம்மை முற்றிலும் சம்பூர்ணமாய் நிரப்பிக்கொண்டிருக்கிறார். நமது சரீரத்தின் நாற் பக்கத்திலுமிருக்கிறார். கண்ணாடித் துண்டை யூடுருவிப் பாய்ந்து பிரகாசிக்கும் சூரிய கிரணங்களைப்போல் சுவாமி நமது உட லாதியந்தமும் ஊடுருவிப் பாய்ந்து அதனை மூடிக்கொண்டிருக்கிறார். அதன் உள்ளத்திலும் புறத்திலும் இருக்கிறார். நமது இருதயத்தில் தமது ஆசனத்தை ஸ்தாபித்து அங்கு இடைவிடாது வீற்றிருக்கிறார். அவருடைய வடிவமாய் அமைக்கப்பட்ட நமது ஆத்மாவையும் அதன் தத்வங்களையும் நிரப்பிக்கொண்டிருக்கிறார். ஆதலால் நமது இருதயத்தில் க்ஷணத்துக்கு க்ஷணம் உண்டாகும் அற்ப ஆசை, அசைவு, ஆட்டம், விகற்பங், கலக்கங் குழப்பம், நினைவு, எண்ணங், தோற்றம் முதலிய எல்லாவற்றையும் பரிஷ்காரமாய்ப் பார்க்கிறார். நமது தேகத்தின் மேற்பாகங்களிலும் உட்பாகங்களிலும் நமக்குத் தெரியாமல் வினாடிக்கு வினாடி, நொடிக்கு நொடி, இமைப்போதுக்குப் போது பிறக்கும் கோடானுகோடி சுளிப்புகளும், ஆட்டங்களும், அசைவுகளும் அவருடைய மட்டில்லாத திருஷ்டியில் அற்றுப்போயிருக்கின்றன. கடைசியாய், மகளே! அவர் அறியாத காரியமில்லை. ஆதலால் நாம் தூங்கினாலும் விழித்திருந்தாலும் எப்போதும் அவருடைய சன்னிதானத்தி லிருக்கிறோம். இதனை யொருக்காலும் மறவாதே, மகளே! ஆனதுபற்றி கடவுள் நமது இருதயத்தில் உதிக்கும் இரகசிய எண்ணங்களையெல்லாம் அறிகிறார்; நமதுசெயல்களை யெல்லாம் பார்க்கிறார்; நமது

வாயினின்று புறப்படும் ஒவ்வொரு வார்த்தையையுங் கேட்கிறார். இதனை யொருநாளும் ஒரு நிமிஷமேனும் மறக்கத் தகாது. நாம் துன்மார்க்கத்தைத் தவிர்த்து, சன்மார்க்கத்திற் சரியாய்ப் பிரவர்த்திக்கவேண்டுமானால் நாம் இடைவிடாது தெய்வசமூகத்தில் இருப்பதாய் நினைத்துக்கொள்ளவேண்டும். மகளே! நீ தேவனுடைய சன்னிதானத்தில் எப்போதும் இருப்பதாய் நினைப்பாயாகில் எவ்வித குற்றத்தையும் அற்ப தப்பு முதலாய்ச் செய்யமாட்டாய். சுவாமியை மறந்தவர்கள் துன்மார்க்கத்தில் பிரவர்த்தன மடைவார்கள். புண்யவான்கள் கடவுளை யிடைவிடாது தியானித்துக்கொண்டிருந்தமையால் பாவ வலையிற் சிக்காமல் தப்பித்துக்கொண்டார்கள். சில பாவிகள் அசுப்பில் சுவாமியுடைய சன்னிதானத்தை நினைவுகூர்ந்தமையால் துன்மார்க்கத்தைவிட்டு, சன்மார்க்கத்திற் பிரமாணிக்கமாய் நடக்கத் துவக்கினார்கள். ஸ்ரீமதி சூஜானாள் தேவனை யெப்போதும் நினைத்துக்கொண்டிருந்தமையால் பெரும் விபசாரத்துக்குத் தப்பித்துக்கொண்டாள்" என

மனோரஞ்ஜிதம் :—"சூஜானாள் என்றால் யார், அம்மா? எவ்விதமாய்ப் பாவத்துக்குத் தப்பித்துக்கொண்டாள்? தயைசெய்து அதை யெனக்குச் சொல்லுங்கள்" என,

அபிராமியம்மாள் :—"மகளே! ஸ்ரீமதி சூஜானாளின் சரித்திரத்தை நீ பிற்பாடு புஸ்தகத்தில் வாசித்தறிவாய். இங்கு எல்லாஞ் சொல்லுவது சாத்தியமல்ல. உனக்கு வேண்டுவதைமாத்திரஞ் சொல்லுகிறேன்: கேள்; பாபிலோன் நகரத்தில் யோவாக்கின் என்னும் ஓர் யூதன் இருந்தான். அவனுக்குச் சூஜானாள் என்ற ஓர் பெண்டீர் இருந்தாள், இவள் ஒப்பு, உவமையில்லாத அலங்காரமான பெண். அவள் எந்நேரமும் கடவுளைச் சிந்தித்துக் கொண்டிருப்பாள். இவளுடைய வுருபலாவண்ணியத்தைக் கண்ட சில துஷ்டர் மதிமயங்கி நின்றார்கள். அவர்களுள் இருவர் முற்றிலும் மதியிழந்த பைத்தியர். ஓர் நாள் ஸ்ரீமதி சூஜானாள் தனது தோட்டத்திலிருந்த குளத்தில் தனியாய் ஸ்நாநம் பண்ணிக்கொண்டிருக்கும்போது நான் மேற்கூறிய இரண்டு துஷ்டரும் அவளிடத்திலோடி:—'பெண்ணே! இதோ தோட்டத்தின் கதவுகள் சாற்றப்பட்டிருக்கின்றன. நம்மை யாரும் பார்க்கவில்லை. உன்மீது நாங்கள் கொண்ட மோகாக்கினி யெங்கள் இருதயத்தைச் சுட்டெரிக்கின்றது! பெண்மணியே! எங்களாசைக்கு இசையாயோ? தயைகூர்ந்து

எங்களோடு சயனிக்க வாராயோ? என்ன சொல்லுகிறாய்? நீ யொப்பாவிடில், நாங்கள் உனக்கு விரோதமாய்ச் சாக்ஷி சொல்வோம். ஓர் வாலியன் உன்னோடு இருந்ததாய் நிச்சயிப்போம். இதனைப்பற்றியே நீ யுனது தாதிகளை யனுப்பிவிட்டு தனித்திருந்தாயென்று சொல்வோம். என்ன சொல்லுகிறாய்?" என,

சுஜானாள் யோசித்தாள்; தன்னிருதயத்தைச் சுவாமியுடைய சமுகத்துக் குயர்த்தினாள்; சற்றுநேரம் தனக்குள்ளே விம்மி யேங்கினாள். பின்பு அவர்களைநோக்கி:—"ஐயன்மீர் எப்பக்கத்திலும் இக்கட்டும் இடையூறும் என்னைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றன! உங்கள் இஷ்டத்தை நிறைவேற்றுவேனோ? எனது ஆத்துமாவுக்கு மரணம் வந்து நேரிடும்! நான் அதனை நிறைவேற்றவில்லையோ? உங்கள் கொடுமைக்குத் தப்பித்துக்கொள்ளேன்! ஆயினும் கடவுளுடைய சன்னிதானத்திற் பாவம் செய்வதைவிட குற்றமின்றி யுங்கள் கைகளில் அகப்பட்டுக்கொள்வது எனக்கு வாசி."

என்று அவர்களுடைய துராபிஷ்டத்தை நிராகரித்துவிட்டு:- "கூ! கூ! பாங்கியர்களே! ஓடிவாருங்கள்! ஆபத்தில் அகப்பட்டேன். என்று இரைச்சல் போட்டாள். உடனே யொருவன் தோட்டத்துக் கதவைத் திறந்துகொண்டு ஓடிவர, ஆபத்து நீங்க சுஜானாள் பாவத்துக்குத் தப்பித்துக்கொண்டாள். பார்த்தையா, மனோரஞ்ஜிதம்? சுஜானாள் கடவுளுடைய சன்னிதியில் எப்போதுமிருப்பதாய் எண்ணிக்கொண்டிருந்தமையால் "அவரது சமுகத்தில் பாவத்தைச் செய்யேன்" என்று மறுத்துவிட்டாள். மீண்டுங் கேள், மகளே! தயீஸ் என்னும் ஓர் பெரும் பாவி யிருந்தாள். அவள் ஒருநாள் ஸ்ரீமத் பவ்னூஸ் முனிவரின் தபக்குகையின் அருகில் மழையில் நனைந்து விடவிடவென்று நடுக்கிக்கொண்டு ஒரு சிறிய மூட்டையோடு நிற்கும்போது, ஷை முனிவர்:—மகளே! எங்கே வந்தாய்! ஏனிந்தக் கோலம்?

:—தந்தையே! ஓர் ஊருக்குப் போகிறேன். வழிதப்பி யிங்கு வந்துவிட்டேன். இந்த இராவைப்போக்க கொஞ்சம் இடங் காட்டுவீர்களாகில் உங்களுக்குப் பெருஞ் சுகிர்தம் உண்டாம்

—: "அப்படியானால், பிள்ளாய், எனது குகையில் ஒதுங்கி இந்த மூலையில் இரு." என்று அவளை யொரு சாக்ஷிதமான இடத்தில் வைத்துவிட்டு குகையின் கடைசி மூலைக்குப் போய்விட்டார்."

பவ்னூஸ் முனிவர் மறுநாள் காலமே எழுந்து வெளியில் வரும் போது நேற்றையத்தினம் அவர் கண்ட ஏழைப்பெண்ணுக்குப் பதிலாய் கண்ணைப் பறித்துக்கொண்டு போகும் ஓர் அழகான மோகினியைக் கண்டு சற்றுநேரம் பிரம்மைகொண்டு விலையேறப் பெற்ற பூஷணங்களையும் ஆபரணங்களையுஞ் சிறந்த வஸ்திரங்களை யுந் தரித்துக்கொண்டு, கண்களைப் பசப்பி, கைகளை விரித்து அவ ரைத் தாவிப் பிடிக்க முயன்றாள். அப்போது தபோதனர்:— "மகளே! என்ன வேலை செய்தாய்? எங்கே வந்தாய்? உன் கருத் தென்ன?"

:—"ஐயா! உம்மைத் தேடித்தான் வந்தேன். என் மனது உமதுபேரில் தாகமா யிருக்கிறது. எனது ஆசையை நிறைவேற்ற வேண்டும். இதுவே என் கருத்து. எனக்கு வேறெண்ணங் கிடை யாது."

:—"அப்படியா, பிள்ளை? அப்போது உள்ளேவா போவோம்."

:—"நில்லுங்கள்: போதும். இவ்வளவு மறைவு போதாதா?

:—"போதாது: இன்னும் உள்ளே வா!"

:—"இருட்டா யிருக்கிறதே! இவ்வளவு தூரம் போதும்."

:—"இன்னும் போதாது."

:—"ஐயா! என்னைப் பரிகாசம் பண்ணுகின்றீர்கள்! இன்னுங் கெபி முழுதும் போகவேண்டுமா? சரிதான்; நில்லுங்கள். இங்கு யாரும் நம்மைப் பார்ப்பாரில்லை. கடவுள் ஒருவரே நம்மைப் பார்க் கிறார்" என்கிறாள் தயிஸ்.

உடனே முனிவர்:—"ஆ; மகளே! கடவுள் உன்னைப் பார்க்கி றார். என்று அறிந்தும் நீ பாவத்தைக் கட்டிக்கொள்ள மனந் துணிந்தாயா?" என்கிறார்.

இந்த வினா அவளுக்கு ஓர் இடிவிழுந்ததுபோல் இருந்தது. உடனே அவள் முழந்தாட்படியிட்டு:—"தந்தையே! தவறிப்போ னேன். எனக்கு வழிகாட்டும் என, அவர் அவளுக்குத் தக்கபுத்தி மதிகளைச் சொல்லி இதம்போதிக்க, அவள் அன்று பாவவழியைத் தவிர்த்து கடுந்தவஞ்செய்து மோக்ஷபதவியை யடைந்தாள்." :— "மகளே! சுவாமியுடைய சன்னிதானத்தைத் தயீஸ் சற்று நினைத் தமையால் இரக்ஷண்ய மடைந்தாள். நீயும் எப்போதேனும் எவ்வ கைச் சிறிய குற்றத்தையாவது செய்யவேண்டுமென்று உனக்குச்

சோதனைவரும்போது, 'மனோரஞ்ஜிதம்!' சுவாமி யிருக்கிறார் என்று உனக்கு நன்றாய்த் தெரியும். நீ அவருடைய சன்னிதானத்தில் இருக்கிறாய். அப்படியிருந்தும் இக்குற்றத்தைச் செய்யப்போகிறாயா? என்று உன்னையே வினவிக்கொள் ஷை குற்றத்தை நீ யொருபோதுஞ் செய்யமாட்டாய்."

இதனைப்போலவே யின்னொரு சிறிய சங்கதியைக்கேள். ஓர் நாள் ஸ்ரீமத் எவ்ரெம், ஏதேஸ் நகரத்தில் தெரியாத்தனமாய் ஓர் துஷ்ட ஸ்திரீயின் வீட்டுக்கு எதிர்மனையில் தங்கியிருந்தார். அவள் கெட்ட எண்ணத்தோடு தமது திட்டி வாசலின் அருகாமையில் நின்றுகொண்டு:—"ஐயா! உமது வீட்டில் ஏதேனுங் குறையவில்லையா?" என,

:—"ஆம், பிள்ளை! குறைகிறது. கொஞ்சம் மண்ணும் கல்லுங் குறைகின்றன. இருக்குமாகில் எனது திட்டிவாசலை யடைத்து பந்தோபஸ்து செய்துகொள்வேன். நீ யப்போது என்னைப் பார்க்க மாட்டாய்" என்றார் முனிவர்.

அப்போது அந்த துஷ்டை கைகளால் பற்பல அசுசிய சைக்கினைகளையும் ஜாடைகளையுங் குறிகளையுங் காட்டிக்கொண்டு:—

"ஐயா! அங்கு யாருமில்லையே? நான் வரட்டுமா? உமக்குச் சம்மதந் தானா? சொல்லும்" என அவர் :—

"அம்மா! பெண்மாணிக்கமே! உன் ஜாடை சைக்கினைகளை பயிரங்க வீதியில் போய்க் காட்டு. உனது அசப்பியங்களை வீதி கடப்போருக்குச் சொல். பார்ப்போம்"

:—"ஐயையோ! அவலக்ஷணம்! அவமானம்! அவமானம்! இத்தகை யாலோசனை சொல்ல எப்படி மனந்துணிந்தீர், ஐயா?

:—"என்ன சொன்னை? இன்னொரு தடவை இரட்டி பார்ப்போம்"

:—"என்ன ஐயா? மறுபடியும் அப்படிப் பேசுகிறீர்? இந்தச் சைக்கினைகளை ஜனங்கள் பார்த்தால் இந்த வார்த்தைகளை யவர்கள் காதாரக் கேட்டால் என்ன நினைப்பார்கள்? ஓ வெட்கக் கேடு! இன்னொருதடவை அப்படிச் சொல்லாதேயும், ஐயா!

:—"நீ ஷை அசுசிய காரியங்களை மனிதர் முன்னிலையிற் செய்ய அஞ்சுகிறாய்? அசங்கியப்படுகிறாய்? வெட்கப்படுகிறாய்?

நாணுகிறாய். ஆ! சற்று யோசித்துப்பார், மகளே! உனது புத்தியை எங்கே விட்டாய்? அதனை மோகச்சேற்றிலும் சகதியிலும் புதைத்துவிட்டாயே? நீ மனிதர் முகதாவில் செய்யத் துணியாத காரியங்களை, எல்லாவற்றையும் பரிஷ்காரமாய்ப் பார்த்துக்கொண்டிருக்குங் கடவுள் சன்னிதானத்திற் செய்ய நடுங்காயோ? நாணுயோ? உன் குற்றங்களை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லப்போகுந் தேவனுடைய சமுகத்தில் உனக்கு இவ்வளவு துணிவா? அகந்தையா? இறுமாப்பா?" என்று அதம்புகிறார் எவ்ரேம்.

இதனைக்கேட்ட துஷ்டப்பெண் நடுங்கி கிடுகிடாய்த்து:—"சுவாமியுடைய சன்னிதானத்தை மறந்தேன். அதனால் இத்தனை பாவங்களுக்கும் பழிகளுக்கும் உள்ளானேன். என்னை மன்னியும் பிதாவே! எனக்குப் பரலோக வழியைக் காட்டும்," என்று முனிவருடைய பாதத்தில் வந்து விழுந்தாள். அவர் அவளுக்கு நன்றாயுபதேசம்பண்ணி அவளை ஒரு மடத்தில் வைத்தார்.

மகளே! நீ யடிக்கடி தேவனை யுன் கண்முன்பாகவும் உன்னிருதயத்தின் மத்தியிலும் உருபிகரித்துக் கொள்வாயாகில் சன்மார்க்கத்தில் மேன்மேலுங் கடுகி நடப்பாய். சேனாதிபதி தலையில் நின்றால் சேவகர் உற்சாகத்தோடும் மனவூக்கத்தோடும் போராடார்களா? சமையற்கூடத்தில் எஜமாட்டி நிற்பாளாகில், பணிப்பெண்கள் துரிதமாய் வேலைசெய்யார்களா? மகளே! நீ எங்கேயிருந்தாலும் எங்கேபோனாலும் எதேதைச் செய்தாலும் ஒரு நிமிஷமேனும் நமது திவ்ய இரக்ஷகரை மறக்கவே மறக்காதே. இவ்விஷயத்தில் ஸ்ரீமதி தெரேசையும் சியேன் கத்தரினாளையும் உனக்கு நன்னெறி காட்டிகளாக வைத்துக்கொள். அவர்கள் நாவில் இயேசுவென்னும் நாமகரணம் எந்நேரமும் ஊறிக்கொண்டேயிருக்கும். அவ்வாறே யுன்நாவிலுஞ் சுரந்துகொண்டே யிருக்கட்டும். நீ விடும் இடைவிடாத சுவாசங்களில் இயேசுவென்னும் நாமகரணத்தின் சுகந்த வாசனை எந்நேரமும் பரிமளித்துக்கொண்டேயிருக்கட்டும். நீ எந்நேரமும் அவரை நினை" என, மனோரஞ்ஜிதம்:—

"அம்மா! ஸ்ரீமதி தெரேசையும் கத்தரினாளும் என்னசெய்தார்கள்? என.

அபிராமியம்மாள்:—"மனோரஞ்ஜிதம்! ஸ்ரீமதி தெரேசை நமது இயேசு பெருமானை யொரு கைந்நொடிப் பொழுதேனும் மறக்காள். அவள் ஓர்நாள் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கி தனது இரு

தயத்தில் இருக்கும் இதயநாயகனோடு வெகு உருக்கமாய்ச் சம்பா ஷித்துக்கொண்டு போஜனசாலை வழியாய்க் குறுக்கே போகும் போது அங்கு கண்களைக் கொள்ளைகொண்டுபோகுஞ் சகல சவுந் திரிய சொரூபியான ஒரு சிறு பையனைக் கண்டு."

:—"நீயார் அப்பா? ஏதிங்கு? என்ன செய்கிறாய்? நீ தனியா யிருக்கிறாயே, உன் பெயரென்ன? என்கிறாள்."

—: "அம்மா! உன் பேரென்ன? நீ முந்த சொன்னால் நான் பிற்பாடு சொல்லுகிறேன்."

—: "என் பேரா? என்பெயர் இயேசுவின் தெரேசை."

—: "இயேசுவின் தெரேசையா? அப்படியானால், என் பெயர் தெரேசையின் இயேசு." என்றுசொல்லி பாலன் மறைந்து போனான். ஆ! மகளே! அப்போது ஸ்ரீமதி தெரேசைக்கு இருந்த அக்களிப்பும் ஆனந்தமும் யாரால் சொல்லிமுடியும்? ஸ்ரீமதி கத்த ரீனாள் ஸ்ரீமதி தெரேசைக்கு இளைத்தவளல்ல. "எனது இருதயம் என்னிரக்ஷகருடைய ஆலயம். அதில் அவருக்கு ஓர் சிம்மா சனத்தை ஸ்தாபித்துவிட்டேன். அதன்பேரில் என் மன மண வாளன் வீற்றிருக்கிறார். இதோ அவரை நான் பார்க்கிறேன்." என்று எப்போதும் அவரைத் தியானித்துக்கொண்டே யிருப் பாள். மகளே! இவ்விரண்டு கன்னிகா சிரோமணிகளை யொருநாளு மறக்காதே" என,

மனோரஞ்ஜிதம் :—"என்ன நேர்த்தியான புண்யவதிகள்! அம்மா! நானும் அவர்களைப்போல் நடக்க ஆசைப்படுகிறேன். ஆஹா! நமது மத்தியில் நாம்காலி போட்டு உட்கார்ந்துகொண்டு பேசுவதுபோல் எனது இருதயத்தின் நடுவில் நமது இரக்ஷகரை யுட்காரவைத்துக்கொள்ளுவேன். அம்மா! அவரை நினைக்கிறது கஷ்டமா? அவரோடு பேசுவது வருத்தமா? அவரை மறக்காம லிருப்பது பெரிய வேலையா? இந்நாள் வரையில் ஒருநாளும் அவரை நான் மறந்ததே யில்லை. இனிமேலும் அதிகமதிகமாய் நினைப்பேன். இனி எவ்விடத்திலும், எந்தக் காரியங்களிலும் நமது இயேசு நாயகரைக் காணாமலிரேன். நான் தூங்கும்போது கன வில் முதலாய் நமது திவ்ய இரக்ஷகரை நினைத்துக்கொள்ளும்படி யேதுகரம் பண்ணுவேன்" என,

அபிராமியம்மாள் :—"அம்மா! மகளே! நீ சொன்னதெல் லாம் அன்பர்களுக்கு மகா எளிது. சுவாமிபேரில் நேசமற்றவர்க

ளுக்கு அது மகா கடிது. சிநேகத்தினால் எல்லாம் இலேசாகும்; எளிதாகும். சிநேகக்குறையினால் எல்லாம் பாரமாகும், கஷ்டமா கும். நமது திவ்ய இரக்ஷகரை யுனது முழு இருதயத்தோடு நேசிக் கப் பிரயாசப்படு; எல்லாம் உனக்கு இலேசாகிவிடும். மேற்கூறிய புண்யவதிகளைப்போல் நீயும் புண்யவதியாய்ப் போவாய்" என்று, உபந்நியாசத்தை முடித்து தமது தங்கையை நோக்கி :—

"குணமணி! அத்தான் சாயந்திரம் ஆறு மணிக்குத்தான் வரு வார்கள், அதுவரையில் நீயே பெண்களெல்லோருக்கும் உபாத்தி யாயர். கூட்டங் களித்து அகமகிழும் வண்ணம் ஏதேனுஞ் சொல்; நாங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறோம்" என,

குணமணியம்மாள்:—"அக்கா! இவ்வாறு இனி பேசாதீர்கள். எங்கள் அபிராமியிருக்கும் சங்கத்தில் குணமணி யொருபோதும் அண்ணாவி யாகாள். அகர, ஆகார, இகர, ஈகார வென்று ஆரம்பிக் கும் ஓர் சிறிய பையல் தர்க்க சிந்தாமணிகளுக்கு உபாத்தியாய னான கதையே என் கதை. நீங்களே யல்லாது இன்னும் யாரேனும் இவ்வாறு பேசி யிருப்பார்களாகில், அவர்களுக்கு நான் என்ன பிரத்தியுத்தாரஞ் சொல்லியிருக்க மாட்டேன்! எனக்குக் கோபம் ..." என,

அபிராமியம்மாள் :—"குணமணி! உன் முன் கோபத்தை யெப்போது விடுவாய்? நீ வாசிக்காத பிரபந்தங்களில்லை; நீ படிக் காத நூற்களில்லை. நீ யெவ்வளவோ கிரந்தங்களை யாராய்ந்திருக் கிறாய்! நீ எல்லாம் அறிந்தும் இந்த விசேஷ துற்குணத்தைத் தவி ர்க்க வுன்னால் முடியவில்லையே! உனது முன் கோபம் சொற்ப நேர த்தியதே. அது நீளிக்கிறதில்லை. ஆயினும், அது காலத்தோடும் வயசோடும் ஏதோ சிலவேளை பலத்துப்போகுமென்று நாம் பயப் பட வேண்டுவ தில்லையா? கன்று முளைக்கும்போதே கவனிப்போ மாகில் அதனைக் கையால் களைந் தெறிந்துவிடலாம். அது பலத்துக் கொண்டதா? அதனைக் கோடரிகொண்டு வெட்டவேண்டும்! ஆத லால் இப்போதே யுனது முன் கோபத்தைக் களைந்து தூரத்தில் எறிந்துவிடு. நீ பலபாடற்றிரட்டை வாசித்ததில்லையா? வாசித்தி ருப்பாய். ஆனால் அதன் அநுஷ்டானத்தை மறந்துவிட்டாய் கேள் : சொல்லுகிறேன் :

"பேரொளி வேண்டிற் பொருள் பொழிக பின்றனக்கே
"சேரப் பொருள்வேண்டிற் றீதொழிக—பாருனி மேன்

" மன்னின்பம் வேண்டின் அறம் வாய்க்க துயரின்மை
" வேண்டின் வெகுளி விடல்.

நீ நல்ல அந்தஸ்தி லிருக்கவேண்டுமா? தீமையொழி. பெரும் பிரக்யாதி வேண்டுமா? தானதர்மஞ் செய்; நீ மோக்ஷமுக்தி யடைய வேண்டுமா? புண்யங்களைச் செய்து பாவத்தைத் தவிர்த்தொழி. உனக்கு மனஸ்தாபமும் மனோதுக்கமும் வேண்டாமா? கோபத்தை விட்டொழி" என்று இவ்வெண்பா கூறுகின்றது. நீ யிதனை யெத்தனையோ தடவை வாசித்திருப்பாய். ஆயினும் அநுஷ்டானத்தை மறந்துவிடுகிறாய். குணமணி! செனேக்கா ஞானி சொல்வதுபோல் வெகுளி யல்லது கோபம் க்ஷணப் பைத்தியம், கொஞ்சநேரம் இருக்கும் பைத்தியம். இதனை நீ யெவ்விதத்திலேனும் விடவேண்டும், இந்தக் குறையல்லாது உன்னிடத்தில் வேறு குறையை நான் பார்த்ததில்லை. இதனை முற்றிலுந் தவிர்த்தொழிக்க ஓர் சிறிய உபாயஞ் சொல்லித் தருகிறேன்: கேள், கோபஞ் ஜனித்தவுடனே யாருக்கும் பதில் சொல்லாதே. அத்தேனேடோர் என்ற ஞானி ஒக்தாவு ஒகுஸைதூஸ் சக்கரவர்த்திக்குச் சொன்னதுபோல் நானும் உனக்குச் சொல்லுகிறேன். நீ யதனை யொரு நாளும் மறவாதே" என, குணமணியம்மாள் :—

" அக்கா! அத்தேனேடோர் ஒகுஸ்தூஸ் சக்கரவர்த்திக்கு என்ன சொன்னான்? அதனை எனக்குச் சொல்லுங்கள்" என,

அபிராமியம்மாள் :—" தங்கையே! அத்தேனேடோர் வெகு நாள் ஒக்தாவு அரண்மனையில் வசித்து சக்கரவர்த்திக்கு ஆலோசனை மந்திரியாயிருந்தான். ஞானி வயசில் வளர வளர அரண்மனையின் சந்தடிகளும், சம்பிரதாயங்களும் வீண் ஜம்பங்களும் அவனுக்கு வெறுப்பையும் மனக் கிலேசத்தையும் ஆயாசத்தையும் இடைவிடாது விளைவித்துக்கொண்டே வந்தன. இவைகளைத் தாளமுடியாமல் அத்தேனேடோர் அரசனை யணுகி.—" மகாராஜாவே! நாளது வரையில் உமது இராஜோலகத்தில் ஜீவித்து வந்தேன். என்னை இதுநாள் பரியந்தம் பராமரித்ததற்காக கிருதக்ஞனாயிருக்கிறேன்! நீர் எனக்குச் செய்த நன்றியை யென்றும் மறவேன். இந்தத் தளர்ந்த பிராயத்தில் அரண்மனை ஜீவியம் எனக்குச் சரிப்படவில்லை. தனிவாசம்பண்ண ஆசிக்கிறேன். தயைசெய்து அரண்மனையை விட்டுநீங்குமாறு எனக்கு உத்தரவு அளிக்க உம்மை

வேண்டுகிறேன்." என, ஒகுஸ்தூஸ் நிரம்பக் கிலேசப்பட்டு "ஞானார்த்தியே! நீர் என்னைவிட்டுப் போகிறது போகிறீரே! நீர் போகுமுன் கடைசி யாலோசனையாக எனக்கு என்ன சொல்லுகிறீர்? இந்தப் பிரமாண்ட இராஜ்யபாரச் சுமையைத் தாங்கிக் கொண்டிருக்கிறேனே. இந்தச் சுமையினால் வருஞ் சஞ்சல காலத்தில் எனக்கு உபசாந்தி கிடைக்கும்பொருட்டு எனக்கு ஓர் நல்ல யோசனை சொல்லும்" என,

அத்தேனேதோர்:—" சக்கரவர்த்தியே! உமக்குச் சொல்ல வேண்டிய தெல்லாம் ஒழுங்காய்ச் சொல்லிவிட்டேன். கடைசியாய் ஓர் சிறிய ஆலோசனை சொல்லுகிறேன்: கேளும்: உமக்குக் கோபம் வரும்போது எதனையும் செய்யவேண்டாம், சொல்லவேண்டாம். கோபம் இருதயத்தில் மூண்டுகொள்ள, ஆவேசப்புகை மூளையைக் கப்பிக்கொள்ளும்போது 'அகர, பகர சகர, தகர' வென்று இலத்தீன் பாஷையின் இருபத்துநாலு அக்ஷரங்களையும் மெதுவா யுச்சரித்துவிட்டு பிற்பாடு எதையேனுஞ் செய்யும்" என்று யோசனை சொல்லிக்கொடுத்துவிட்டு அரசனிடம் செலவு பெற்றுக்கொண்டு போய்விட்டான். அந்த யோசனையே யுனக்குஞ் சொல்லுகிறேன், குணமணி! உனக்குச் சுறுக்கென்று முன்கோபம் வரும்போது எதுஞ் செய்யாதே! எதுஞ் சொல்லாதே. கோபம் வந்தவுடனே கர்த்தர் ஜெபத்தை யொரு முறை முழுவதும் மெல்ல, மெதுவாய்ப் பொறுமையுடன் சொல். நீ யதனைச் சொல்லும்போது அசை யசையாய்: 'பர - மண் - டலம் - களில் - இருக் - கும் - எங் - கள் பி - தா - வே' என்று மந்திரத்தைக் முழுதுஞ் சொல்லி முடித்து விட்டுப் பேசு" என,

குணமணியம்மாள்:—" அக்கா! பேருபகாரம்! உங்களுடைய யோசனையை யினி யொரு நாளும் மறவேன். இத்தனை நாளாய் உங்களோடு இருந்திருப்பேனாகில் என் முன்கோபத்தை யேற்கெனவே வேரோடு களைந்து தூரத்தி லெறிந்திருப்பேன். எனது படபடப்பையும் பதஷ்டத்தையுஞ் சகித்து என்னை மன்னியுங்கள்" என்று தனது தமக்கையை வேண்ட,

அபிராயியம்மாள் தமது மகளை நோக்கி:—" மனோரஞ்சிதம்! இந்நேரம்வரையில் நான் குணமணிக்குச் சொன்னதெல்லாம் யாருக்கோ வென்று நினையாதே. உனது நன்மைக்காகவே யவளைக்

கண்டித்தேன். நான் அவளுக்குப் போதித்த புத்திகளெல்லாம் முக்கியமாய் உனக்கேயென்று திண்ணமாய் வைத்துக்கொள். இங்கு உன்னைப்பற்றியே யுபந்நியாசம் நடக்கின்றது. ஆதலால் நான் குணமணிக்குச் சொன்னவைகளில் எதையும் நீ மறக்கவேண்டாம்" என்று தமது குமாரத்திக்குச் சொல்லிவிட்டு, திரும்ப குணமணியம்மாளைப் பார்த்து:—"தங்கையே! என் வீதம் முடிந்துபோயிற்று. இனி யுன் வீதம் நமது நங்கைக்கு ஏதேனும் எடுத்துச் சொல்" என,

"குணமணியம்மாள்:—"மனோரஞ்ஜிதம்! பிராஞ்சு பாஷையினின்று ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்க்கப்பட்ட யோசேப் தேமேஸ்தருடைய பிரபந்தங்களை வாசிக்கும்போது,

"ஒரு பெண் தன்னை யொழுங்குடன் வளர்க்க விடுவாளாகில், அவள் தன்பிள்ளைகளையும் ஒழுங்காய் வளர்ப்பாள். தாயைப்போற் பிள்ளைகளு மிருப்பார்கள். கடவுளது கரங்களின் றொழிலிற் சிறந்தது இதுவே..." என்று சிறந்த வசனங்களைக் கண்டேன்.

மனோரஞ்ஜிதம், இந்த வசனங்களின் றாற்பரிய மென்ன? நல்ல தாய் தந்தையரிடம் பிறந்த ஓர் பெண்மணி அவர்களுடைய இஷ்டம்போல் நடப்பாளாகில், அவர்களுக்குக் கீழ்ப்படிவாளாகில்; அவர்களுடைய கற்பனைகளை மீறாமல் நடப்பாளாகில்; ஒரே வார்த்தையிற் சொல்லவேண்டுமானால் தனது உத்தம தாய்தந்தையரைப் பின்செல்வாளாகில் அவள்தான் தனது தாய்தந்தையரிடம் வளர்ந்ததுபோல், தன் பிள்ளைகளையும் வளர்ப்பாள். தாயைப் போற் பிள்ளை. தாய் நல்லவளா? பிள்ளைகளும் நல்லவர்கள்; தாய் யோக்கியவதியா? பிள்ளைகளும் யோக்கியர். தாய் துஷ்டையா? பிள்ளைகளுந் துஷ்டர். ஆதலால் மகளே! நீ பிற்காலத்திற் சுகமடைய வேண்டுமாகில் தற்காலம் நீ யுனது தாய் தந்தையர் இஷ்டம்போல் வளைய வேண்டும், துவள வேண்டும். நீ தற்போது இளங் கன்றையான ஓர் மரக்கன்றுக்குச் சமமாயிருக்கிறாய். இளங் கன்றையிஷ்டம்போல் வளைக்கலாம்; நிமிர்த்தலாம்; அதனைப் பரவச்செய்யலாம்; மேலே வளர்ந்துபோகச் செய்யலாம்; இன்னும் எவ்விதமாய்ச் செய்யவேண்டுமோ அவ்விதமெல்லாஞ் செய்யலாம்,

நீயிப்போது இளகிய மெழுகுக்குச் சமமாயிருக்கிறாய். மெழுகு பதமாயிருக்கும்போதே நமக்கு இஷ்டமானால் அதில் எவ்வித வுருபங்களையும் பதிக்கலாம். இதே வண்ணம், மகளே! நீயும் இளந்தையா யிருக்கும்போதேயுன் றாய் தந்தையரின் அபீஷ்டத்துக்கு இசைந்து நடப்பாயாகில் உன்னிடத்துள்ள எவ்வித துற்குணங்களும் வெகு எளிதில் எடுபட்டுப்போம். உன் பிதா மாதாக்களுடைய சற்குணம் உன்னிருதயத்தில் வெகு சுலபமாய்ப் படிந்துபோம், அப்போது தாயைப்போற் பிள்ளை யென்கிற பழமொழி யுன்னிடத்தில் நிறைவேறும்" என்று பேசிக்கொண்டிருக்கும்போதே, மதுரநாயகம் பிள்ளையின் குருவாகிய ஸ்நானீக கிருபாவான் சுவாமிகள் சங்கத்தில் வந்து நுழைந்தார்கள். உடனே யெல்லோரும் எழுந்து கைகுவித்து அவருக்கு நமஸ்காரம் பண்ணினோம். அப்போது,

அபிராமியம்மாள் :—"எது தந்தையே! யிவ்வளவு தூரம்? அடியார்களுடைய கிருகத்துக்குத் திடும்பிரவேசமாய்த் தேவரீர் விஜயமான காரணமேது?" என,

கிருபாவான் சுவாமிகள் :—"மகளே! தற்போது நமக்குக் கொஞ்சம் அசவுக்கியம். சில தினங்கள் வரையில் துல்யமணி கிராமத்தில் உங்களோடு இளைப்பாறிவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறோம்" என,

குணமணியம்மாள் :—"ஆ! தந்தையே! எங்கள் பாக்கியத்துக்கு எல்லை வரம்புகளில்லை. கொஞ்ச நாளாய் எங்களுக்குப் பூசைமுகந் தரிசிக்கும் பாக்கிய மில்லாமலிருந்தது. தேவரீர் இங்கு வந்திருக்கிறது நமது திவ்ய இரக்ஷகர் வந்து இறங்கினது போலிருக்கிறது!" என,

மனோரஞ்ஜிதம் :—"ஆம் தந்தையே! எங்களுக்குப் பெரும் பாக்கியங் கிடைத்தது. ஆனி வாவுகாலக் கடைசியில் உங்களை வரவழைத்து என்னை முதன்முதல் புதிதாய்ச் சற்பிரசாதம் வாங்கும்படியாய்ச் செய்யவேண்டுமென்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்கள். நீங்கள் நல்ல வேளையாய் வந்துவிட்டீர்களே. எனக்கு மெத்த சந்தோஷம். நான் புதுநன்மை பெற இன்னும் இரண்டரை மாசங்க ளிருக்கின்றன. அதுவரையில் இங்கேயே யிருந்துவிடுங்கள், தந்தையே!" என,

கிருபாவான் சுவாமிகள் :—"ஆ! சின்னி! நான் அதுவரையில் இருக்க சாத்தியப்படுமோ? அவ்வளவு நாளிருப்பது கஷ்டம். கூடுமானவரையில் பாரப்போம்"

எனவே யெல்லோருடைய முகத்திலும் மிதமில்லாச் சந்தோஷம் பிரகாசித்துத் துலங்கிற்று.

அப்போது அபிராமியம்மாள் :—"தந்தையே! அத்தான் கிராமத்திற்குப் போயிருக்கிறார்கள். சாயந்திரம் ஆறுமணிக்கு முந்தியே வந்துவிடுவார்கள்" என,

மகளே :—"நல்லதாகட்டும் மனோரஞ்ஜிதத்துக்கு உபதேசம் பண்ணுகின்றீர்களா? இதுவே தாய் தந்தையருக்கு அழகு. நீங்கள் செய்வது எனக்கு மிக்க சந்தோஷகரம்."

—:"ஆமாம், தகப்பனே! உபதேசம் பண்ணுவது முக்கியமாய் தேவரீருடைய வேலை. ஆதலால் தயைசெய்து எங்களுக்கு ஏதேனும் போதிக்கும்படி தேவரீரை வேண்டுகிறேன்."

—:"நல்லது மகளே! அப்படியே ஆகட்டும். நாம் இங்கு பிரவேசிக்கும்போது குணமணியம்மாள் "தாயைப்போலப்பிள்ளை" யென்றாள். அது வாஸ்தவமே. நீ யெப்படியோ உனது பிள்ளையும் அப்படி. நீ நடக்கும் வழியிலேயே உனது மகளும் நடப்பாள். பிள்ளையுடையபாக்கியமும் நிற்பாக்கியமும் தாயின் கைகளிலிருக்கின்றன. "பிள்ளையை நேசிக்குந் தகப்பன் பிற்காலத்தில் அவனாற் சுகம் பெறவேண்டி அவனை யடிக்கடி தண்டிக்கிறான். கடிவாள மற்ற அடங்காக் குதிரை யார் கையிலும் அகப்படாது. இவ்வாறே தன்னிஷ்டம்போல் நடந்த பிள்ளையும் பிற்காலத்தில் ஒருவருக்கும் அடங்கான். உன் மகனோடு நீ இச்சகம்பேசு: பின்பு உனக்குப் பெருந் துன்பத்தையுந் துக்கத்தையும் வருத்துவான். அவனோடு விளையாடினால் உனக்கு பெருங்கிலேசத்தை மூட்டுவான். அவனிஷ்டம்போல் அவனை நடத்தாதே. அவன் செய்வதையும் நினைப்பதையும் அலக்ஷியம்பண்ணாதே" என்று வேதாகமம் நமக்குப்போதிக்கிறது. "பிரம்பும் தண்டனையும் ஞானத்தை யூட்டுகின்றன. தன்னிஷ்டம்போல் நடந்த பிள்ளை தன்றாயை மானபங்கம் பண்ணும்," என்கிறது பழமொழியாகமம். "உன் பிள்ளைகளைச் சன்மார்க்கத்திற் சரியாய் நடத்தவேண்டுமானால் கண்டிப்பும் பக்ஷமுங் கலந்திருக்கவேண்டும்." என்கிறார் ஸ்ரீமத் ஆஞ்சேல்மர்.

புத்திரியைச் சரியாய் வளர்க்கும் பெருமைக்கு மீசுரமான பெருமைகிடையாது. சில்பிகள் செத்த பதுமைகளைப் பிறப்பிக்கின்றார்கள். ஆனால் புண்யவானான உபாத்தியாயர் பிறருக்கும் தேவனுடைய கண்களுக்கும் பேரானந்தத்தை மூட்டுஞ் சிறந்த கிரியை செய்து முடிப்பார்." என்றார் ஸ்ரீமத் கிரிசோஸ்தமர்.

"சிறுபோதே மனிதனை யடக்கித் திருத்தாவிடில் கொடுமையிலும் குரூரத்திலும் எந்த மிருகமும் அவனுக் கிணையில்லை," யென்கிறார் பிளாத்தோன் என்னும் ஞானி.

ஆதலால், மகளே! நாம் மிக கனிகரமாய் வளர்க்கும் பூஞ்செடிகளையும் வேளாவேளையிற் கத்தரிக்கவேண்டும். நீ யழுவதைக் காட்டிலும் மனோரஞ்ஜிதம் அழுவது வாசி. பிள்ளைகளைக் கெஞ்சுவதைக்காட்டிலும் அவர்கள் பெற்றோரைக் கெஞ்சுவது நலம்.

நூற்றுக்குச் சுருக்கமாய்ச் சொல்லிவிடுகிறேன் கேள் மகளே! கெட்ட தாய்தந்தையர் பிள்ளைகளின் கொலைபாதகர். இன்றிருந்து நாளையத்தினம் ஒழிந்துபோகும் உயிரை யவர்களுக்குக் கொடுத்தார்கள், ஆனால் அவர்களுடைய நித்ய உயிரை வாங்கிவிட்டார்கள்.

காதைவிட கண் சிறந்தது. காதால் அறிவதைவிட கண்ணால் அதிகமாய் அறிகிறோம்; அதாவது: போதனையைவிட நன்மாதிரிகை மேல். ஆதலால் உனது இடைவிடாத நன்மாதிரிகையாலும் நன்னடக்கையாலும் உன் பிள்ளைகளைச் சன்மார்க்கத்தில் நடத்து. பிள்ளைகளுடைய நன்மையுந் தின்மையுந் தாய் தந்தையருடைய கரங்களில் இருக்கின்றன. இதற்குத் திருஷ்டாந்தமாக ஓர் சிறிய சரித்திரஞ் சொல்லுகிறேன், கேள்: போயேமியா நாட்டில் இராஜ வம்சத்தில் வெஞ்செஸ்லாஸ், போலெஸ்லாஸ் என்னும் இரு சகோதரர் பிறந்தார்கள். வெஞ்செஸ்லாஸ் தனது பாட்டியாராகிய ஸ்ரீமதி லூதிமில்லை கையில் ஒப்புவிக்கப்பட்டான்; பொலெஸ்லாஸ் தன் தாயாகிய தகோமீரா கையில் ஒப்புவிக்கப்பட்டான். இவ்விரு ஸ்திரீகளுடைய குணபேதம் பெரும்பேதமே. ஸ்ரீமதி லூதிமில்லை மகா புண்யவதி; குணசாலி; தெய்வபக்தை. தகோமீரா பெரும்பாவி; குணக்கேடி ; தெய்வபக்தியற்றவள். பிள்ளைகள் எப்படியிருப்பார்கள் ? அவ்விருவரைப்போலவே. இயற்கைவாசனை, சேர்க்கைவாசனை, மிஞ்சியவாசனை யிளைத்தவாசனையைக் கொண்டுபோயிற்று ! லூதிமில்லையின் பிள்ளை சாது; யோக்யென்; பக்திமான். தயை, தாக்ஷண்யம், இரக்கம், ஜீவகாருண்யம், பரோபகாரம் முதலிய புண்யக்

கள் வெஞ்சேஸ்லாசுடைய முக்கிய பூஷணங்கள். தகோமீரையின்
பிள்ளை கொடுங்கோலன்; அயோக்கியன்; அவிசுவாசி. மூர்க்கம்,
வெறி, கண்டிப்பு, கர்வம், தொடுமை, அக்கிரமம், அடம் முதலிய
துர்குணங்கள் பொலெஸ்லாசுடைய துணைவர்கள். வெஞ்செஸ்
லாஸ் ஜனங்களுக்கு வேண்டிய உபகாரங்களைச் செய்வான். பொலெ
ஸ்லாஸ் கோடானுகோடி கொடுமைகளைப் புரிந்தான். லூதிமில்லை
யும் தகோமீரையும் போட்ட விதைகள் முளைத்து, வளர்ந்து, பல
த்து, மரங்களாகி தத்தம் பழங்களைக் கொடுத்தன! லூதிமில்லை நல்ல
வித்தை நாட்டினாள்: அதினின்று நல்ல மர முளைத்து பெருகிவளர்
ந்து நற்கனிகளைக் கொடுத்தது. தகோமீரை முட்செடியை நட்
டாள்! அதில் கணக்கில்லா முட்கள் தோன்றி அவிவேகமாய்
அதனை யண்டினவர்களுடைய வஸ்திரங்களைக் கிழித்து தேகமெல்
லாம் பீறிவிட்டன! லூதிமில்லை வெஞ்செஸ்லாசிடத்திற் சகலபுண்
யங்களையும் வளர்த்து விர்த்தியாக்கினாள். தகோமீரை பொலெ
ஸ்லாசிடத்தில், ஆங்காரம், அதிகாரவிருப்பம், பெருமை, சலாக்
கியம், பரநிந்தை முதலிய துற்குணங்களை மூட்டிவிட்டாள்! வெஞ்
செஸ்லாஸ் தாய்தந்தையரை சன்மானிக்கிறான். பொலெஸ்லாஸ்
தனது தந்தையரைக் கொல்லச் சமயந்தேடுகிறான். ஒருவன்
தன்னை வளர்த்த பாட்டியாராகிய லூதிமில்லையைப்போல் சுவாமி
யைத்தொழ தேவாலயத்துக்குப் போகிறான். மற்றொருவன்
தன்னை வளர்த்த மாதாவைப்போல் கொடுங்கோலனாகிறான்! வெஞ்
செஸ்லாஸ் கோவிலில் ஜெபிக்கிறான் போலெஸ்லாஸ் தேவால
யத்தில் தனது பிறப்பைக் கொலைசெய்கிறான்.! ஒருவன் தன்
சகோதரனுக்கும், மற்றவர்களுக்கும் வேண்டிக்கொள்ளுகிறான்
மற்றொருவன் கொடுங்கோலனாய்த் தன் சகோதரன் இரத்தத்தில்
கை தோய்க்கிறான்! வெஞ்செஸ்லாஸ் ஜீவகாருண்யன். பொலெஸ்
லாஸ் பாவி! ஒருவன் வேதசாக்ஷி. மற்றையவன் வேதத்துரோகி! ஒரு
வன் முக்தன். மற்றையவன் நரகக்கொள்ளிக்கட்டை! இருவருடைய
முடிவையும் பார்த்தாயா, மகளே! இருவரும் ஒரே தாய் தந்தைய
ரிடம் பிறந்த இருசகோதரர். ஏனிந்த விபரீதமுடிவு? இருவரும்
வளர்ந்த அருமை பெருமையும் தோஷமுமே யிதற்குக் காரணம்

ஆதலால், மகளே! தாயைப் போலாம் பிள்ளை. அபிராமியைப்
போல மனோரஞ்ஜிதம். சிவகாமியம்மாளைப்போல் விஜயவல்லி.

எனவே, எனது தாயார் ஒருநாளும் கிருபாவான் சுவாமி
களைப் பார்த்திராவிடினும் அவரைநோக்கி:—"சுவாமிகளே! இத

நாள் வரையில் தங்களை யறியேன். இன்று தெய்வாதீனமாய்த் தங்களைப் பார்த்தறியும் பாக்கியம் எனக்குச் சித்தித்தது. தங்களுடைய போதனையின் பெருமை யளவைக் கடந்தது. தங்கள் உத்தம உபதேசத்தின் ஒவ்வோர் வார்த்தையும் இராமபாணம்போல் என் மனதில் நன்றாய்த் தைத்துக்கொண்டது. இனி தாங்கள் இங்குஇருக்குந்தனையும் நாடோறுந் தங்களுடைய சிஷ்யருக்குச் செய்யும் உபந்நியாசங்களைக் கேட்க எனக்குப் பெரும் அபேக்ஷை யுண்டு. ஆதலால் நானும் எனது பிள்ளைகளுந் தவறாமல் தங்களுடைய உபதேசங்களைக் கேட்கவருவோம். எனது பர்த்தாவும் வருவார்கள்' என,

கிருபாவான் சுவாமிகள் :—"நல்லது, அம்மணி! அப்படியாகில் எனக்கு மெத்த சந்தோஷம்" என்று சிவகாமியம்மாளுக்குச் சொல்லிவிட்டு, அபிராமியம்மாளைப் பார்த்து :—

—: "அம்மா! மகளே! சற்று எனக்கு இளைப்பாயிருக்கிறது. உனது விஸ்தாரமான வீட்டில் அமரிக்கையான விடத்தில் எனக்கு ஓர் அறை யொழித்துக் கொடுப்பாயாகில் நீ யெனக்குப் பேருபகாரஞ் செய்வாய்" என,

அபிராமியம்மாள்:—"ஓ! எங்கள் அன்புள்ள தந்தையே! எமது வீட்டில் தேவரீருக்கா இடமில்லை? மேன்மாடிக்கு வாருங்கள்: அங்கு தேவரீர் நாடோறும் பூஜைபண்ண ஜெபக்கூடமும் பக்கத்திற் குடியிருக்க அறையு மிருக்கின்றன." என்று சொல்லிக் கூட்டத்தைக் கலைத்துவிட்டுக் கிருபாவான் சுவாமிகளை மெத்தைக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

---

## 21-ம் அத்தியாயம்.

## முதற்பாக முடிவுரை.

---

### காலப்போக்குல்லாசச் செந்தமிழ்ச் சங்கம்.

ஜெயராமச்சந்திர ஐயர் ஒருநாட் காலையில் சுமார் எட்டு மணி யிருக்கலாம்; மதுரநாயகம்பிள்ளை வீட்டில் நடக்கும் உபந்நியாச சங்கத்திற்கு வந்தார். அப்போது திருமறைநாயகம்பிள்ளை பரிகாசத்திற்காகப் பின்வருமாறு:

,—' ஐயீர்! க்ஷேமமன்றே? இற்றைநாள் இத்துணை யிளம் போழ்தில் நீவிர் ஈண்டு எம்மைத் தேடிப்போந்த காரணமென்னை? நும் வரவு எமக்குச் சுகம் வருத்துக! நீவிர் எனது தோன்றலுக்குச் சிர்த்தியஞ் சினேகரா மன்றே? ஆகலின் நும் வரவு யாமெல்லேமுக்கும் மனோகரமே" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—" ஆ! ஹா! இத் திவசம் வைபவ திவசமே! இன்று யாம் செந்தமிழ் மாற்றங்களைக் கேட்கப்பெற்றோம். இவண் ஆசனங்கண்மீது வீற்றிருக்கும் எல்லோருந் தவிர்ப்பின்றி மேதாவியரென்பதே எமது துணிபு. ஆகலின் யாமெல்லேமுஞ் சிறிதுநேரஞ் செந்தமிழ்ப் பேசற் பாலதாம்" என,

குணமணியம்மாள்:—" ஆமாம், பேசற் பாலதே. இன்னே யாரம்பிப்பாம். யான் யாண்டுஞ் செந்தமிழ்ப்பேச எத்துணை வேட்டியும் எற்குத் தக்க வமயங் கிட்டிற்றில்லை. இற்றைநாள் யான் நினையாதிருப்புழியே அஃதின்று சுவேச்சையாய்க் கிட்டிற்று. காற்றுள்ளபோதே தூற்றிக்கோடற் பாலதென்பது உலகியல். ஆகலால் இன்று எனது வேட்கை நிரம்புக! ஐயீர்! வறு மாற்றங்களை வாளா வாய்விட்டுக் கொட்டுவதினும் ஏதேனும் ஒரு சிறந்த விடயமெடுத்து ஓதல் உசிதமென வுள்ளாநின்றேன்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்...:—"என்னை அம்மணீ! நீ தர்க்கிக்க வேட்டுகின்றனைபோலும்! அஃதன்றோ நினது தாற்பரியம்? என,

குணமணியம்மாள்...:—" ஆமா[illegible]; அஃதே. தர்க்க விடயத்தை[illegible]வக்குதின். ஆரம்பிப்பீ[illegible]ரல் எனது வேட்கை நிரம்பும். யாவனொருவ[illegible]ன்கற்ற கல்[illegible]யைப் பிறர் இன்புறுமாறு வெளியிடானேல் பயனெ[illegible]னை? ப[illegible]ரோபகாரம் புரியா மேதாவி யுவர்க்கடலை யொப்பான்" என,

திருமறைநாயகம்பிள்ளை:—"எ[illegible]னே! என்னே! குணமணி! நீ கிறிஸ்துவ மடந்தையாமே? நினது கல்விப்புலமையை நீயன்றே பறைசாற்றி வெளியிடற்பாலது[illegible] மெய்யுண்டாம்—பாச்சாரிணீ!"

அல்ப்ப டெப்புடுனு ப[illegible]குனு ஆடம்பரமுகா.
சஜ்ஜனடு பலுக்குனு ஜல்லகா
கஞ்சுமு ரோகினட்டு கனகம்பு மோரோகுனே?
விஸ்வதா பிராமா வினுரா வேமா,

அற்பன் எப்போதும் இடம்பமாய்ப் பேசுவான்; கல்விமான் மெல்லப் பேசுவான். வெண்கலம் ஒலிப்பதுபோல் பொன்னொலிக்காது. இதனைக் கேண்மோ அடே வேமா! என்று வேமன ரெட்டி பாடின வேமன பத்தியங்களை நீ வாசித்தா யில்லைபோலும்! மெய்யம் மேதாவி நின்னைப்போற் புறம் போதற் காசியான். இவ்வாறு பறைசாற்றற் சானுக்கட் கழகன்று" என,

குணமணியம்மாள் :—"அத்தான்! என்னை மன்னித்தருள்க! எனது கருத்தறியாது இவ்வாறு பேசாதீர். யான் எனது கல்வித் திறனைக் காட்டவன்று புறம்போந்தனன். ஈண்டு இவ்வவையின் கண் உறையாநிற்கும் ஆன்றோர் சிறிதுநேரஞ் செந்தமிழ் மாற்றங்கள் வழங்குமாறு வேட்டினனே யல்லாது வேறன்று. அன்னார் செந்தமிழ் வழங்கலும் யான் அஃதில் அபிவிர்த்தி யடையலாமெனத் தேர்ந்து எனது அவாவை வெளியிட்டேன். இஃதே. வேறன்று. ஈதுண்மை. ஆதலின் ஒருவர் பகர்ந்த சின்மாற்றங்களின் வெள்ளிடையைக் கவனித்து உள்ளிடையை ஈசாவாது, வாளா கழறல் அத்தானைப்போன்ற ஆன்றோர்க் கழகன்று" என,

திருமறைநாயகம்பிள்ளை :— "குணமணி நீ என்னைக் கோபித்தற்க! என்னை மன்னித்தி! நின்மாட்டு நிந்தாபிமானங் கொண்டேனில்லேன். நீ வேடிக்கார்த்தமாய்ப் பேசுங்கால் யான் நினக்கு விருத்துவமாய்க் குறுக்குச்[illegible] லோட்டுவது எனக்கு வழக்கமன்றே? ஆகலின் அங்ஙனம் பேசினேன். என்றாலும் நீ எத[illegible] சொல்லினுஞ் சொல்லுக! [illegible]ன்னூல், தொன்னூல், [illegible]காப்பிய முதலான பன்னூற்களை வாசித்த நாவெழா[illegible] வாளாவிராது. பல்கலையும் கரைத்துப் பருகி[illegible]வாய் [illegible]துவைப்பினும் தருபுறு வென்றதோ? நமது தேக[illegible]கண் யாண்டேனுஞ் சுணைகுமேல் அவண் வருடினாலன்றி [illegible]னைவு தூராது. அங்ஙனமே பலகலையும் பொதிந்த நா பேசினாலன்[illegible] அதன் கல்வித்தினைவு அமராது. பேசுதி! இனி யான் வெறுமனே யிருப்பல்" என,

மறைநாயகம்பிள்ளை ஜெயராமச்சந்திர ஐயரை [illegible]நோக்கி :— "ஆம், ஐயீர்! குணமணி சொல்லி யாங்கு செய்யாற் பா[illegible]. ஏதேனுந் தர்க்க சம்பந்த விஷயமெடுத்துக் கூறுதலே மிக்கநன்று. [illegible]ர் ஏதேனும் எடுத்து ஸ்தாபிமின்: அஃதினை யெம்பி திருமறைநாயகமும் குணமணியுங் கண்டித்து மறுப்பா" என்னலும்,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அங்ஙனே யாகுக! அஃது எமக்குச் சம்மதமே. ஆயின் எதனைப்பற்றிப் பேசற்பாலது? சன்மார்க்கத்தைப் பற்றியா? அன்றேல் வைதிக விடயங்களைப் பற்றியா? நீவிரே சொன்மின்" என,

மதுரநாயகம் பிள்ளை:—"வேதம் சன்மார்க்கத்திற்கு ஆதாரமாதலின் முதன்முதல் அஃதினை யுசாவற் பாலது" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அஃது பால தெனினும் வேதத்திற்கு முழுமுதன் மூலாதாரமாகிய கடவுளை யாராய்வது அதினும் மேல். ஆகலின் அன்னோனே யோர்வோம்" என,

மதுரநாயகம்பிள்ளை:—"அஃது எமது உடன்பாடே. ஆதலின் முதன் முதல் அன்னோனை யோர்மின். இனி யாம் பேசாது ஈண்டு உறையுதும், நீவிர் மூவிரும் பேசுதிர்" என்னலும்,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"கடவுள் ஒருவன் உளனென்பது நுமக்கும் எமக்கும் விகற்பில்லா வுடன்பாடே. எம் மதத்தினர்க்கும் எச் சாதியர்க்கு இஃதில் ஆக்ஷேப மின்று. கானகத்தில் வதியும் இருளனும் கடவுள் ஒருவன் [illegible]ள னென்றே திண்ணமா யொப்பாநின்றான். தேவன் இல்லன் என்று பிதற்றுஞ் சிற்சில நாஸ்திகரும் உளர், ஆயினும் [illegible]ன்னோர் அற்ப தொகையினரே. ஆதலின் அவர் இல்லார்போல உ[illegible] யீண்டு அவரைத் தவிர்த்து, [illegible]வுள் உளன் என்று ஒப்பும் மற்[illegible]யோரது தவறுகளை யிவண் கிஞ்[illegible] தாராய்வாம். கடவுளது குண[illegible]ணங்கள் மாட்டு பல்லோர் பல்லாறாய் வ[illegible]கின்றனர். அவன் எவ்வாறு இருக்கின்றனன் என்னுங் கேள்வியில் த[illegible]றுகின்றனர். "கடவுள் பலருளர்" எனக் கூறுகின்றார் ஒரு சார்பினர். இவர[illegible] கொள்கை தப்புக் கொள்கையே. மற்றோர் சார்பினர் கடவு[illegible] ஒருவனேயென வொப்பினும் அ[illegible]ற்குச் சிற்சில குணங்களை [illegible]லக்கணங்களாகக் கூறுகின்றனர். இவரது முக்கிய கொள்கை கடவுள் வேறு; உலகு வேறு என்பதா[illegible]. இஃது எமது உடன்பாடன்று. இறுதியில் எமது கொள்[illegible]யைக் கேண்மின். கடவுள் ஒருவன் உளன். அவன் நிர்க்குண[illegible]கி னின்று வேறாயினு னல்லன். உலகு முற்றிலும் [illegible]ரூபம். உலகே யவன். அவனே யுலகு. அவனொருவனே யுளன். மற்றியாவும் மித்தை. அஃதாவது: நம்மிந்திரியங்கட்குப் புலப்படும் யாவும் தோற்றமே யல்லாது உண்

மை யன்று. "நான், நீ, அவன், அது, அவை, உலகு" என்னும் வியவகாரச் சொற்கள் அறியாமையி னின்று உற்பத்தியாகின்றன. அறியாமை நீங்கிற்றோ? "நீ, அவன், அது, அவை உலகு" என்னு மித்தைப் புறப் பொருட்கள் ஒழியும். ஒழிதலும் "அஹம்" யான் என்னும் பரமார்த்த அஹப் பொருள் அல்லது மெய்ய வுள்ளுறை பொன்றே மீதியாய் நிற்கும். இஃதே வேதாந்த சாரம். இஃதே யெங் குருவாகிய பாதாராயணர் கொள்கை. இதுவே அத்வைதானந்தரது மதம்; இதுவே ஆதி சங்கராசாரியார் படிப்பினை. இதுவே யுண்மை. ஈது அத்வைதிகள் மாட்டன்றி மற்றியாரிடத்து மின்று. யாம் அத்வைதி" என,

குணமணியம்மாள்:—"ஐயீர்! அத்வைதி யென்றீர். அஃதென்னை? ஈண்டு உறையும் யாமெல்லேமுக்கும் அஃது தெற்றெனப் புலப்படுமாறு அதனைத் துலக்கி யுரைமின்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அஃதென்னை? அத்வைத மதானுசாரி என்பதாம்" என,

குணமணியம்மாள்:—"அஃதொரு மதமென யான் அறிவல்; ஆயில் என்ன மதமென வறியேன். ஆகலின் தயை கூர்ந்து அதனை விவரமாய் விளம்புவீர்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"வேதாந்தி யெனினும், அத்வைதி யெனினும், இரண்டு மொன்றே. வேதாந்தத்திற்கு மூலாதாரங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம் உபநிஷத்துக்களின் உள்ளுறை யென்னலாம். சந்தோக்கிய உபநிஷத மூன்றாவது அத்தியாயம் பதினாலாவது பிரிவில்:—"Sarvam Khalvidam Brahma= இஃதெல்லாம பிரம்மா அதாவது உலகே பிரம்ம சொரூபம்" எனவும், ஆறாவது அத்தியாயம் இரண்டாவது பிரிவில்: "Ekam e vâdvitiyam=ஒன்றே; யொன்றல்லாது இரண்டன்று, அஃதாவது, கடவுளாகிய பிரம்மத்தைத் தவிர இரண்டாவது பொருள் வேறில்லை" எனவும் ஹரிதுருமதன் ஜபலை மைந்தன் சத்திய காமனுக்கு ஆதியில் உபன்னியாசித்திருக்கின்றான். இவ்விரண்டு சுலோகங்களுமே அத்வைத மதத்திற்கு மூல சுலோகங்கள். "Eva+advitiyam" என்ற இருபதங்களில் Advitiyam அத்வித்யம் என்னும் பதத்தினின்று தொன்னூல் எண்பத்தாறாவது சூத்திரப் பிரகாரம் அத்—வைதி என்னும் பதம் பிறக்கிறது. அத்வைதி என்

னில், கடவுள் ஒருவன் தவிர மற்றியாது மில்லை யென்று சாதிப்பவ னும். யாம் ஏற்கெனவே கூறியாங்கு அத்—வைதி; வைணவர், கிறிஸ்துவர் முதலாயின நீவி ரெல்லீரும் துவிதிகள்" என,

திருமறைநாயகம் பிள்ளை :—"ஐயீர்! துவிதம், அத்விதம், நிர்க்குண முதலிய பெரும் பதங்களைக் கொணர்ந்தீர். நம் அத்வைத மதத்தில் யாண்டும் விளையாடும் அவித்தை, மாயை, சத்=பொருள் அல்லது இருத்தல், அசத்=இல்பொருள் அல்லது இல்லாமை; சதசத்=உண்டு+இல்லை யென்னற்குரிய பொருள், அநிர்வசனியம்: அ=இல்லை+நிர்=இல்லை, வசனியம் இரண்டு தடவை யில்லாத பொருள் முதலிய முக்கியாம்சங்களை மறந்துவிட்டீர் போலும். மேற்கூறிய பதங்களின்றி வேதாந்த தர்க்கம் பேசல் அசாத்தியம். நிறை குளத்தைக் கலக்கிலன்றி மீன்கள் மயங்கி வலையன் கையிற் சிக்கா. கயிற்றரவு, கிளிஞ்சில்வெள்ளி, கானனீர், ஆகாசத்தாமரை, சொ[illegible]பனவுலகு, கனவிலடைதிரவியம் முதலாயின தெளிவின்றி என்[illegible] யியம்புகின்றாம்? கலங்கலின்றி சுரோதாக்கள் மயங்கார். ஆகலின் மேற்குறித்த பதங்களைக் கொடுவம்மீன்" என,

ஜெயராமச்சந்திர ஐயர் :—"என்[illegible] திருமறைநாயகம் பிள்ளாய்? இருண்டு கிடக்கும் பொ[illegible]ட்களைப் பரிஷ்கரிக்குந் திருஷ்டாந்தங்கள் நமக்குக் கலங்கலா[illegible]? இருட்டாமோ? இஃதென்னை? வியப்பே! நீவிர் வேதாந்[illegible]த் திருத்த வந்த தேசிகர்போ[illegible]! வேதாந்த திருஷ்டாந்தங்களை யிவ்வாறு அவமதித்தல் நமக்கு [illegible]கன்று" என,

திருமறைநாயகம் பிள்ளை:—"யாம் அவற்றை யவமதிக்கின்றே மில்லேம். அவற்றின் உள்ளுறை - யுற்றவாறு - கூறுகின்றாம். அவை வெள்ளிடையில் பெரு வெளிச்சமே. அவற்றின் உள்ளிடையை நோக்குங்கால் புத்தியில் உறையும் பேரிருட்டென்பது தேற்றம். அவை யிருளாயினுந் தெருளாயினும் எமக்கொப்பே. நுமது அத்வைத மதத்தை விளக்குதீர்; யாங் கேட்குதும்" என்,

ஜெயராமச்சந்திர ஐயர் :—"ஐய! உண்மை யறிய விருப்புளார்க்கு ஏதேனும் போதிக்கில் அஃது பிரதிபலிக்கும். ஆயின் ஒன்றினை யுரைத்தற்குமுன்னரே அஃதனை மறுக்கப் புகுவார்க்கு எதனைச் சொல்லினும் வரும் பயனென்னை? யாம் ஈண்டு தெளிவின் பொருட்டு உபந்நியாசிக்கின்றேமில்லேம். இவண் செந்தமிழ்பேசற்

பாலதென்றனா லூறலாற் பேசுகின்றாம். ஆகலின் நீவிர் எண்ணி யாங்கு எண்ணுக! யாம் எமது மதக்கொள்கைகளை யெடுத்தோது தும் ; கேண்மின்" என,

குணமணியம்மாள்:—"ஆமாம், பேசுதீர். நம் முக்கிய நோக்க மென்னை? செந்தமிழ்ப் பேசுதலாமன்றே? இற்றைநாள் சொற் களின் உள்ளிடையைக் கவனித்தற் பாலதன்று. சொன்னயம், அடுக்கு, அணி, இன்சொல் முதலாயினவற்றைக் கவனிக்கின்றாம். அஃதே இற்றைய நாள் உபன்னியாச தாற்பரியம். ஆதலின் நந் நோக்கத்திற் கேற்பப் பேசுமின்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அங்ஙனே ஆகுக! யாம் இயம்பு வனவற்றை உய்த்துணர்மினீர் : ஏக்கம் ஏவாத்வித்தியம்: ஒன் றன்றி யிரண்டன்று. அஃதாவது: ஒரே யொரு பொருள் உளது. அஃது இரண்டு பொருட்களாகாது. இதற்குப் பரமார்த்த அல் லது மெய்யம் பொருள் எனப்பெயர். அஃது பிரம்மம் அல்லது கடவுள் எனப் பெறும். அப்பரம் பொருள் தவிர, யாம் யாண்டும் பார்க்கும் யாவும் அஃதாவது: உலகுஞ் சேதனா சேதனங்களும் மித்தை: அவை யில்லாப் பொருட்கள். உலகும் அஃதினுறையுஞ் சராசரங்களும் பொய்யம் பொருட்கள். அவித்தை அல்லது அறி யாமை—மாயையைப் பிறப்பிக்கின்றது. உலகுக்கும் அதன் சேத னாசேதனங்கட்கும் மாயையே காரணம். மாலையிருட்டு-ஒளிகுறை ந்தவிடத்து நங் கண்கட்கு கயிற்[illegible]னை அரவைத்தோற்று விக்கி லன்ன மாயை நம்மயக்கிய மதிக்கும் இந்திரியங்கட்கும் உலகையும் அதன் சராசரங்களையுந் தோற்றுவிக்கின்றது. எங்ஙனம் வெளிச் சம், பரிசம், ஆராய்ச்சி முதலாயின கருவிகளாற் பரிக்கித்து தேர்ந்து, "அஃது பாம்பன்று; பழுதையே." எனத் தெளிகின் றோமோ அங்ஙனமே அறிவினால் அறியாமையை நீத்து, மயக்கை யொழித்து, "உலகும் அதன் சேதனா சேதனங்களும் இல்லன வெனத் தெளிதற்பாலது. அறிவுவந்த விடத்து யாதுந்திகழாது. பரமார்த்த பொருளொன்றே மீதியாய் நிற்கும். இதற்கே அத்வித் தியம் எனப் பெயர். இஃதே யெமது கொள்கை—மெய்யங் கொள்கை. நுங் கொள்கைகள் தப்புக் கொள்கைகளாம்" என,

குணமணியம்மாள்:—"ஐயீர்! நுங் கொள்கை மிக்க விந்தை யங் கொள்கையே. ஈண்டு நீவிர் நையாயிக முறை அறியீர்போலும். அறிந்தும் அதனை மறந்தீராக்கும். ஒரு நையாயிகத்தின்கண்

முன்னுரை, பின்னுரை, முடிவுரை யென மூவுரைகளை கவனித்தற் பாலது. ஈங்குக் கூறுவது நுமக்குத் தெற்றெனப் புலப்படுமாறு யான் ஒரு நிதரிசன மெடுத்துக் காட்டுவல் :

1. சடல மெடுத்த யாதும் நசித்தல்வேண்டும்.

2. அங்ஙன் மனிதன் சடல மெடுத்தோன்.

3. ஆகலின் மனிதன் நசித்தல் வேண்டும்.

1. நம் பகைவரை யடக்கி மேற்கோடற் பாலது.

2. அங்ஙன் ஜைனர் நஞ் ஜென்மப் பகைவர்.

3. ஆகலின் ஜைனரை யடக்கி மேற்கோடற் பாலது.

1. நம் மான்மாவை யாது கொல்ல மாட்டுவதோ அதனை நீத்தல்வேண்டும் ;

2. அங்ஙன் பாபம் நம் மான்மாவைக் கோற மாட்டுவது ;

3. ஆகலின் பாபத்தை நீத்தல் வேண்டும்.

ஐயீர் ! இம்முத்திற பாதங்களைக் கவனித்தருள்க ! ஏரியின் கண் உள்ள நீர் குமிழிவழிபாய்ப் புறம்போந்து கால்வாயிலோடி லன்ன மேற்கூறிய ஒவ்வொருநையாயிகத்தின் இருமுன்னுரைகளினின்றே முடிவுரை இறங்கல்வேண்டும். அங்ஙனமே இறங்குகின்றது. முன்னுரை, பின்னுரை, முடிவுரை எனு மூவுரைகட்குஞ் சங்கிலித் தொடர்பன்ன பொருத்தம் இருத்தல்வேண்டும். அஃதாவது : மூன்றுரையின் உள்ளிடையும் பின்னுரையின் உள்ளிடையும் முடிவுரையாய் புறம் போதல்வேண்டும். அங்ஙன மல்லாது முன்னுரை, பின்னுரைகளில் உரையாப்பொருள் முடிவுரையில் தோன்றுமேல் அஃது முற்றிலும் அபத்தம்; உபன்னியாசகன் எடுத்தோதியதெல்லாந் தப்பறையாம். அங்ஙனமே நீவிர் சற்று முன்னதாய்க் கூறி முடித்த உபன்னியாசம் அபத்தமென்பது தேற்றம். யான் நுமது உபன்னியாசத்தை மறுப்பல்; கடவுள் ஒருவனே மெய்ப்பம்பொருள். அவனையன்றி வேறேது மின்று. இஃது நுங்கொள்கை. நும்மை மறுப்பான் வேண்டி யான் அதனைச் சிறிதுநேரந் தழுவுவல் ;

1. இல்பொருளினின்று பொருள் வாராது ;

2. அங்ஙன் ஜெயராமச்சந்திர ஐயர் இல்பொருள்.

3. ஆகலின் இல்பொருளாகிய ஜெயராமச்சந்திர ஐயரினின்று பொருள் வாராது. உபாத்தியாயீர் ! நுமது உபன்னியாசம் எத்தன்மைத்து ? கேண்மின் : அஃது :—

தினது செவிப்புலன் பிறிதொருமாயையின் றோற்றமன்றோ? என்னை? இஃதெல்லாம் யோசியாது பேசுதல் வியப்பினும் வியப்பன்றோ? வித்தை, யவித்தை யெனவும், அறிவு, அறியாமை யெனவும், நுங்கொள்கையை யேற்கு மிடத்து, யாங்ஙனம் பகுத்தறிவல் யான்? "அறிவு வந்த விடத்து அறியாமை நீங்கும்,"...என்றீர். அஃது யாங்ஙனஞ் சம்பவித்தற் கூடும்? அறியாமைநீத்த தெனவும் எற்கு அறிவு உற்ற தெனவும் எவ்வாறு யான் அறியும்? அறியினுட் அவ்வறிவே மாயையின் ஒரு தோற்றமன்றோ? அங்ஙனம் அன்று என்பதற்குச் சாதன மென்னை? நீவிர்:—"யாமே சாதகம்..." என்பீரோ? நீவிரும் மாயையின் றோற்ற மன்றோ? "எங் குருவாய பாதராயணன்..." என்பீரோ? அன்னோன் யாவன்? அவனும் மாயாதேவியின் றோற்றமன்றோ! "எமக்கு அநாதி நித்தியம[ாய்]ப் அருளப்பட்ட 'சுருதி' யெங்கரத்துளது: அஃதே சாதனம்."! [எ]ன்பீரோ? சுருதி என்னில் என்னை? கேட்கப்பட்ட கடவுளது வாக[்கிய]மன்றே? யாவன் பேசினன்? கடவுள். யான் அஃதினை யொப்பாநின்றேன். ஆயின் யாவன் கேட்டனன்? "மகரிஷிகள்" என்பீரோ? அன்னோர் யாவர்? அவரும் மாயையின் றோற்றங்களன்றோ? அங்ஙன மாகலால் உமது உபன்னியாசமும் அதன் றுணிபும் முற்றிலும் ஆபாசமென்பது திண்ணம்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—"அம்மணீ! நினது சுந்தரவதனத்தின் நோக்கில் அகோரப் பசித்தழலும், சமிர்த்தியாய்ச் சாப்பிடலன்ன அவிந்து குளிரும். ஆயில் நினது சம்வாதத்தைக்கேட்டாலோ காய்ச்சிய நாராசத்தைக் காதிலேற்றியதற் கொப்பாம்! ஆயினும் நீவென்றி யடைந்துவிட்டனை யென வெண்ணுதி. காரியா காரியங்களை, ஒவ்வொன்றுய், உசாவற் பாலது. நீ யிதுகாறும் வியவகார பொருட்களையும் பிராதிபாசிக பொருட்களையும் அறியாய் போலும்! நீ யென்செய்வை? பெண்பால் பாவம்! நின்னை யின்னும் அதிகமாய்க் கேட்டற் பாலதன்று "வியவகாரப் பொருட்கள்" என்னில்...என வாயெடுக்க,

திருமறைநாயகம்பிள்ளை:—"ஐயீர்! நீவிர் குணமணியைப் பற்றி யங்கலாய்க்காதீர். அவளை நீவிர் சரிவர அறியீர். இஃது ஈண்டு நிற்க. அவித்தை, மாயையைப்பொறுத்த கேள்வி யின்னும் முடிவுபெறுதிருக்க வியவகாரப் பொருட்களைப்பற்றிப் பேசுவானேன்? யாம் நம்மைக் கடாவும் கடாக்களைக் கவனித்து அவற்

றிற்கு ஏற்பச் சமாதானங் கூறுதீர்: அவித்தை யென்பது யாது? மாயை யென்பதியாது? அவற்றிற் காதாரமென்னை? அவை யாதைப் பீடிக்கின்றன? அவை யாதையேனும் பீடிக்குமேல் அதற்குக் காரணமென்னை?'' என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—'' அவித்தை யென்னில் அறியாமையாம். மாயை யென்னில் அறியாமையினால் உற்பத்தியாகும் ஒரு பொருளாம். அஃது பொருளுமன்று; இல்பொருளுமன்று. உதாரணம்:—சொப்பன வுலகு. இத்தகைய உலகு உளதென்றும் இலதென்றுஞ் சொல்லற்பாலதன்று. அஃது உளது அதனைச் சொப்பனத்தின்கண் பார்க்கின்றுமாதலின்; அஃதிலது விழிப்பிற் காணேமாதலின். அவித்தை காரணம், மாயை காரியம். அவற்றிற்கு ஆதாரங் கடவுளே. ஆகலின்...என,

திருமறைநாயகம்பிள்ளை:—'' அஃதெங்ஙனமாகற்பாலது? கடவுளிடத்து அறியாமை யுளதாமோ? இஃதெந்[illegible] மொல்லும்? இருளோடு தெருள் ஒல்லுமோ? நெருப்புக்குந் தண்ணீருக்கும் உறவென்னை? கடவுள் பூரண வஸ்து—அஃதாவது: குறைவில்லாதவன் என்பது உமக்கும் எமக்கும் உடன்பாடு. அங்ஙன மிருப்புழி நீவிர் எவ்வாறு கடவுள் அறியாமைக்கு இலக்காயிருக்கின்றனன் என வறைகின்றீர்?'' என,

ஜெயராமச்சந்திர ஐயர்:—'' யாம் சாற்றுவதைக் கேட்டீர்; மனிதன் பகற்றினத்தில் ஈண்டும், ஆண்டும், ஊண்டும் ஓடியாடித் திரிந்து, இராக்காலையில் பல்வகைய வினிய பதார்த்தங்களை யருந்திப் பலதினுசுப் பானங்களைப் பருகியபின்னர் பஞ்சணை யமளிமீது துஞ்சுகின்றான். அவன் துயிலுழிப் பொன் மலையினைப் பார்க்கின்றான்; பொற் குவியலைக் கண்டு கடத்தில் பொதிந்து வைக்கின்றான்; குதிரை யேறிச் சாரிபோகின்றான். துயிலொழிய, அன்னோன் எழுந்து, அமளி மீது உட்கார்ந்து தனது கனவைப்பற்றி யோசிக்கின்றான். அப்போது பொன் மலை யெங்கே? பொற் குவியலெங்கே குதிரை யெங்கே? எல்லாம் ஒழிந்து மறைந்தன. அஃதென்னை? மானிட ஆன்மாவின் மயக்கன்றோ? ஆன்மா மயங்கி யில்லாப்பொருட்களைக் கற்பித்துக்கொண்டது. அங்ஙனமே கடவுள் மயங்கி யுலகையும் அதன்கண் உறையுஞ் சேதனாசேதனங்களையுங் கற்பித்துக்கொள்கின்றான். இம்மயக்கே:—'' நான், நீ, யவன், அவள், அது, அவை, உலகு''. என்ற வியவகாரம்...என,

திருமறைநாயகம் பிள்ளை :—"குறையுறையும் அபூர்ண மானிட ஆன்மா மயங்குவது வியப்பன்று. ஆயில் சச்சிதானந்தக் கடவுள் எவ்வாறு மயங்கற்பாலது ? அவனிடத்து குறை யுறையு மேல் அவன் கடவுள் அல்லன். அவனைச் 'சச்சிதானந்தன்' என்னல் முற்று முரணும். வேதாந்தசாரத் துவக்கத்தில் பின்வருமாறு:

"அகண்டம் சச்சிதானந்தம்
வாண்மன ஸகோச்சரம்
ஆத்மானம் அகிலாதாரம்
ஆஸ்ரயே பிஷ்டம் சித்தயே."

(இ-ள்) "எனது மனோபீஷ்டம் நிறைவேறுமாறு பிரிக்கக்கூடாதவனும் என்றும் இருத்தல், அறிதல், இன்பந்துய்த்தல் முதலான முக்குணங்களை யுடையவனும், மனோவாக்குக் கெட்டாதவனும், அசரீரியும், எல்லாவற்றிற்கும் ஆதாரமுமானவனைத் தேடுகின்றேன்" என்று அத்வைதானந்தன் கூறுகின்றான். அவன் அகண்டன், அஃதாவது பிரிவுகட்கு இலக்கானவனல்லன். அவனிடத்து வேற்றுப் பொருள் கலத்தற்பாலதன்று. அங்ஙனமாகில் அவனின்று வேறுய அவித்தை யல்லது அறியாமை அவனிடத்து இருத்தல் அல்லது கலத்தல் எங்ஙனங் கூடும் ? அவன் சச்சிதானந்தன், அஃதாவது : என்று மிருக்கிறவன், எல்லா மறிகிறவன், எவ்வித வின்பத்தையுங் குறையில்லாது நுகர்கின்றவன். அங்ஙன மிருக்க, அவனிடம் எவ்வாறு அறியாமை வரக்கூடும்? அவன் அறிவாயிருக்க அவனிடம் அறியாமை நிகழ்வதெங்ஙனம் ? அவன் சகலவித இன்பங்களையுந் துய்க்கின்றானுயிருக்க, அறியாமை யென்னுந் துன்பத்தைத் துய்த்தற்பாலதோ ? மனோவாக்குக்கெட்டாத கடவுளிடத்து நீவிர் அறியாமையைப் பார்ப்பதெங்ஙனம்? மனோவாக்குக் கெட்டாதவன் அறியாமைக்கு எட்டுவதெங்ஙனம்? மனிதனிடத்து நிகழும் ஒருகாரியத்தை யெடுத்து உதகரித்து அஃது கடவுளிடத்தும் நிகழ்கின்றது .." என்கிறீர். யாம் ஈண்டு நுங் கொள்கைக்கேற்பப் பேசுகின்றும். வெறுங்கை முழம்போட்டதுபோல் இல்பொருளைக்கொண்டு பொருளை யளக்காநின்றீர். உமது நெடிய உபன்னியாசம் ஆகாயத்தின்கண் வீசிய வாள் வீச்சாம். மனிதன் துயிலயருங்கால் பொன் மலையினைக் கண்டான். அவன் துஞ்சியபோது மயங்கி நின்றான் "அங்ஙனமே கடவுளும் மயங்கா நின்றான். அன்னோனும் மானிடரைப்போல் துஞ்சுகின்றான் போலும்!!! யாம் துயிலும் போது கனவால் பீடிக்கப்பெறுவதன்ன கடவுளும் துயிலயருங்

கால் அவித்தையினால் பீடிக்கப்பெறுவானாக்கும்! இஃது மிக்க
விந்தையே! ஒரு திருஷ்டாந்தத்தினால் எவ்விஷயமேனும் ருஜுவா
யிற்றாமோ? அதன் உள்ளிடை வெள்ளிடைகளைப் பார்த்தல்
வேண்டாமோ? யாம் சொல்லுவன யுக்தி-யனுபவ—ஆராய்ச்சிக
ளோடு ஒல்லல் வேண்டுவதின்றோ? நுங் கண்களில் அம்பன்னத்
தைக்கும் ஓர் திருஷ்டாந்த மெடுத்து யாம் கூறுதும்: அஃதினைக்
கேட்டீர்: நும் பெயர் ஜெயராமச்சந்திர ஐயர். நும் நிறம் பொன்
நிறம். நீவிர் பலிஷ்டர்; தாஷ்டீக முடையீர். நும் அவயவங்கள்
அனைத்தும் ஒன்றற்கொன்று விகற்பின்றி பொருங்கேபொல்வி
யிருக்கின்றன. நீவிர் பாதாதிகேசம் வரையில் சாங்கோபாங்கமாக
வமையப்பெற்ற வுத்தம புருஷர். அங்ஙனே ஈண்டு இவ்வகையின்
கண் உறையுஞ் சந்திரசேகரம் பிள்ளையின் இரதசாரதி ஜெயராமச்
சந்திர முதலி அமையப்பெற்றவன். அவன் யாண்டேனுந் தனித்
துச் செல்லுழி யாவரும்:—"இவர் பாலிகா பாடசாலைத் தலைமை
யுபாத்தியாயர்—ஜெயராமச்சந்திர ஐயர்" என்கின்றனர். மற்றை
யோர் சொல்வது எமக்கொப்பன்று. யாமே உம்மையும் அன்னோ
னையும் நேரில் கண்டு மயங்குகின்றாம். உமக்கும் அவற்கு முள
விகற்பு நீவிர் பூணியிருக்கும் பூணூலுந் தரித்திருக்கும் உடைமைக
ளுமே. உமக்கும் அவற்கு முள பலத்த சாமியத்தினைச் சாதன
மாகக்கொண்டு:—"நீவிர் அவன்" "அவன் நீவிர்" அல்லது "அவன்
அந்தணன்; நீவிர் வேளாளன்." என்னற்பாலதோ? ஜனங்கள்
அன்னோனைச்சுட்டி: "அவண் நிற்பவருக்கும் இவண் நிற்பவற்கும்
மத்தியில் உவண் நிற்கின்றோரே அன்னோரே பாலிகா பாடசாலைத்
தலைமை யுபாத்தியாயர்" என்கின்றனர். ஆகலின் அன்னோன்
ஜெயராமச்சந்திர ஐயரோ? உமக்கு முற்றும் பொருத்தமாகத்
திகழாநிற்கும் அன்னோனது நிறம், வடிவம், சாயல், தேஜசு,
இரேகை முதலாயினவற்றை மற்றையோர் கண்டு மயங்கி: "இன்
னோன் தலைமை யுபாத்தியாயர்." என்னில் யாம் ஒப்பற்பாலதோ?
எட்டுணையுமின்று. அவர்:—"ஆமாம்; அன்னோரே." என்று ஜெய
ராமச்சந்திர முதலியின் வெள்ளிடையைச் சாதனமாகக்கொண்டு
சாதிப்பினும், யாம்:—"அன்னோன் அல்லன்! அல்லன்! நீவிர்
எல்லீரும் அவனது வெளிப்பாட்டைக்கண்டு மயங்குகின்றீர்.
அவனது வெள்ளிடையைமட்டுங் கவனித்தற் பற்றாது; பிரதான
மாய் அன்னோனது உள்ளிடையை யுசாவல்வேண்டும்" என்போம்.
உள்ளிடை யென்னில் என்னை? ஆத்மசம்பந்த குணங்கள் உள்ளி
டையாம். அஃதாவது: அறிவும் அதன் உரிமைகளும்; மனதும்
அதன் ஆதீனங்களுமாம். யாம் ஜெயராமச்சந்திர ஐயர் என்று சுட்
டிக்குறிப்பிடு மனிதன் எங்ஙன் பேசுகிறான்? அன்னோன் கல்வி
மானோ? புத்திசாலியா? பி.ஏ. எம்.டி. பரீக்ஷைகள் கொடுத்தவ
னிடத்திலுள்ள சாமர்த்தியம் இவனிடத்துண்டா? இரக்கம்,
பொறை, ஜீவகாருண்யம், சாந்த முதலான ஜெயராமச்சந்திர ஐய

ருக் குரித்தான சற்குணங்கள் அவனிடத்துள்ளனவா ?' என
வாராய்ந்து, தெளிந்து;—" அன்னோன் உபாத்தியாயர் அல்லது
இரதசாரதி. எனத் தீர்மானித்தல்வேண்டும். அங்ஙனஞ் செய்
வோமேல் உண்மையறிவாம்" என,

ஜெயராமச்சந்திர ஐயர்—"ஐய, நீவிர் இனமாயியம்பினீர், எம
க்குஞ் ஜெயராமச்சந்திர முதலிக்கும் உள்ளிடையும் வெள்ளிடையு
முற்றிலு மொத்திருக்கில் என்னை" என,

திருமறைநாயகம்பிள்ளை:—"என்னை? உள்ளது உள்ளவாங்கே.
என்னே! என்னே! ஜெயராமச்சந்திர முதலி ஜெயராமச்சந்திர
ஐயர்! ஜெயராமச்சந்திர ஐயர் ஜெயராமச்சந்திர முதலி! என்பீர்
போலும். என்பீரேல் எமக்கு உடன்பாடே. எட்டுணையும் ஒப்பீர்,
அங்ஙனமே யாமும் நீவிர் ஒரு திஷ்டாந்தத்தினால் எண்பிக்கப்புகுவ
தனைக் கிஞ்சித்தும் ஒப்பேம். மனிதன் மயங்கியாங்கு கடவுளும்
மயங்குகின்றான் என்பது எதனை யொக்கும்? ஜெயராமச்சந்திர
முதலி வெள்ளிடையில் முற்றிலும் ஜெயராமச்சந்திர ஐயர்போ
லிருக்கின்றான். ஆகலின் ஜெயராமச்சந்திர முதலி யுள்ளிடையி
லும் ஜெயராமச்சந்திர ஐயரன்ன விருக்கின்றனன்—அஃதாவது:
இரதசாரதியும் உபாத்தியாயரைப்போல் சான்றோன், சாமார்த்தி
யன் மதிவலன், எம்.டி. தலைமை யுபாத்தியாயர் என்பது போன்
றும்! நும் திருஷ்டாந்தத்தின் அபாசத்தை யீண்டு எட்டுணை
யேனும் பார்க்கின்றீராமோ? பார்ப்பதில் ஐயமின்று. "Omnis
comparatio claudicat : எத்தகைய ஒப்பனையுந் தள்ளாடுகின்
றது.' என்று உரோமையாருக்குள் ஒரு பழமொழியுண்டு. ஓர்
உபமையில் "உபமானம்—உபமேயம்" என்னும் இரு பொருட்
களைக் கவனித்தற் பாலது. உதாரணம்: தாமரைபோலு முகம்"
என்பதில் தாமரை உபமானம்; முகம் உபமேயம். தாமரையின்
நிறமும் மலர்ச்சியும் முகத்திற்குப் பொருந்துமேயல்லாது அதன்
மற்றைய குணங்கள் அதற்குப்பொருந்தா. ஆகலின் முகத்திற்
குந் தாமரைக்குஞ் சரியான சாமியமில்லை. இதனிமித்தமே உரோ
மையார்: Omnis comparatio claudicat : எவ்வித ஒப்பனையும்
நொண்டுகின்றது' என்கிறார்கள். முகத்திற்கும் தாமரைக்கும்
வெள்ளிடையில் ஏதோ கிஞ்சித்து சாமியமிருக்கிறதேயன்றி யுள்
ளிடையில் அணுத்துணையு மில்லையாம். இவ்வாறு பேசுவதனால்
திருஷ்டாந்தங்களை யலக்ஷியம் பண்ணுகின்றோமோ? இரேணு
வேணு மின்று. திருஷ்டாந்தங்கள் பொருள் விள்ளா இருண்ட
விஷயங்களைப் பரிஷ்காரப்படுத்த மிக்க சிறந்த கருவிகளாத
லின் அவற்றை வெகுவாய்ச் சன்மானித்தற் பாலது. வெள்
ளறிவர்—விஷயங்களைத் திருஷ்டாந்தப் படுத்தாவிடில்—எது
வும் உய்த்துணரார். ஆயில் திருஷ்டாந்தங்கள்மட்டுந் தனியே
யெவ்விஷயத்தையும் எண்பிக்கா அல்லது மறுக்கா; ஆதலால்"மனி

தன் மயங்குகின்றானாதலின் கடவுளும் மயங்குகின்றான்" என்னுந் திருஷ்டாந்தம் சுத்த அபத்த திருஷ்டாந்தம்.

தவிர, யாம் எடுத்தோதும் விஷயம் யுக்தி அனுபவ ஆராய்ச்சிகளோடு முரணாதிருத்தல்வேண்டும். அங்ஙனே "மனிதன் மயங்குகின்றனன்" என்னில் அஃது யுக்தியோடு முரணாது. ஏன்? மனிதன் அபூர்ண வஸ்து: குறையுறைந்தவன்; பலவீனன்; அறிவீனன்; இந்நிலைமையில் அன்னோன் மயங்குவது வியப்பன்று; துஞ்சும்போது அவன் பொன் மலையைக் காண்டல் விந்தையன்று. மயங்கலுஞ் சொப்பனங் காண்டலும் அனுபவத்திற்கு முரணாகா. ஆகாதற்குச் சாதனமென்னை? அனுதின அனுபவமே யதற்குச் சாதனம். ஈண்டு—இச்சங்கத்தின்கண் உறையுஞ் சகலரும் அன்றாடம் சொப்பனவுலகைக் காண்கின்றனர். ஆகலின் கனவு மனிதனது அனுபவத்திற்கு முரணன்று. மானிடர் மயங்கலுங் கனவு காண்டலும் சொப்பனாவஸ்தை நுகர்தலும் ஆராய்ச்சிக்கேனும் முரணாமோ? எள்ளளவேனு மின்று.

1. குறையுறையும் வஸ்து எதுவோ அஃது துன்பம் நுகரும்.
2. அங்ஙன் மனிதன் குறையுள்ள வஸ்து.
3. ஆகலின் மனிதன் துன்பம் நுகர்வான்.
1. யாது மனிதனைப் பீடிக்கின்றதோ அஃது துன்பம்.
2. அங்கன் மயக்கு அல்லது கனவு மனிதனைப் பீடிக்கின்றது.
3 ஆகலின் மயக்கு அல்லது கனவு துன்பாம்.

இவ்வாறு மயங்கலும் சொப்பனங் காண்டலும் துன்பந் துய்த்தலும் மானிட விஷயத்தில் ஆராய்ச்சிக்கும் முரணாகவில்லை.

மேற்கூறிய யுக்தி, அனுபவ ஆராய்ச்சிகளைச் சற்று கடவுள் மாட்டு உபயோகிப்பாம்; உபாத்தியாயீர்! நீவிர்:—"மனிதன் மயங்குகின்றான்; ஆதலின் கடவுளும் மய்ங்குகின்றான்." என்பீரேல் தக்ஷணமே யுக்தி:—"அவ்வாறன்று! அவ்வாறன்று! மானிடனுக்குங் கடவுளுக்குஞ் சாமியமென்னை? சாமியங் கூறுவேமேல் ஒளிக்கும் அந்தகாரத்திற்கும் சாமியங் கூறுவது போன்றாம். மனிதன் அற்பன், அசக்தன், அறிவிலன், அபூரணன், ஆகலின் அன்னோன் மயங்கற்பாலனே. கடவுள் சச்சிதானந்தன்—அஃதாவது; அனாதி நித்யன், அபரிமிதன், சர்வசக்தன், சர்வக்ஞன். ஆகலின் இத்தன்மையங் கடவுள் எங்ஙன மயங்கற்பாலது?" என நம்மைக் கண்டிக்கின்றது, ஆதலின் மனிதனன்ன கடவுளும் மயங்குகின்றனன்" என்னல் யுக்திக்கு முரணாம்.

"மானிடனைப்போல் ஈசனும் மயங்குகின்றனன். என வாதித்தல் அனுபவத்திற்கு முரணாம். அனுபவமென்னிலென்னை? அனுபவமென்னில் ஒருவன் ஞானேயோரும் விஷயத்தை—அஃது துன்பகரமேனு மின்பகரமேனுஞ்சரி—நுகர்ந்து அறிதலாம்; அல்லது

பிறனேனும் அஃதினைத் துய்த்துச் சொல்ல வறிதலாம். கடவுள் மயங்குகின்றான் என்பது எமக்கு, உமக்கு, இன்னும் யாருக்கேனும் அனுபவமாமா? அல்லது ஈசனே தான் மயக்கு என்னுந் துன்பத்தை நுகர்வதாய் யாருக்கேனும் வெளியிட்டானுமோ? எட்டுணையுமின்று. ஆதலின் கடவுள் மயங்குகின்றான் என்னல் அனுபவத்திற்கு முரணும்.

கடவுள் மயங்குகின்றான் என்னல் ஆராய்ச்சிக்கு முரண்.

1. யாது சுயம்போ அஃது மற்றியாதுக்கும் அமைதற்கூடாது.
2. அங்ஙன் கடவுள் சுயம்பு.
3. ஆகலின் கடவுள் மற்றியாதுக்கும் அமைதற்பாலதன்று.

எனக் கூறுவோமேல் நம்வாதம் ஆராய்ச்சிக்கு ஒல்லும்.

1. யாது சர்வஞானமுளதோ அஃது மயங்கற்பாலதன்று.
2. அங்ஙன் கடவுள் சர்வக்ஞன்.
3. ஆகலின் கடவுள் மயங்குகின்றான்.''

எனக்கூறுவோமாயின் அக்கணமே ஆராய்ச்சி:—"நின்மின்! நின்மின்! மீண்டும் பேசாதீர். நுந்நையாயிகந் தப்பு. இத்திரிபாதத்தின் முன்னுரை, பின்னுரைகள் வேறு; முடிவுரை வேறு. முன்னுரைபின்னுரைகளின் உள்ளுறை அல்லது சாரம்பின்னுரையில் வரல் வேண்டும். அஃது அவற்றில் அணுத்துணையுங்காணேம். அதற்கு விருத்துவமாய் முன்னுரை, பின்னுரைகட்கு முற்று மாறானபொருள் முடிவுரையில் தோன்றுகின்றது. சர்வ ஞானத்திற்கும் மயக்குக்கும் பொருத்தமென்னை? அறிவிலனான மனிதன் மயங்குகின்றான் என்னல் ஆராய்ச்சிக்குச் சம்மதமே; எமக்கும் உடன்பாடு. ஆயில் சர்வக்ஞ கடவுள் மயங்குகின்றான் என்னல் ஆராய்ச்சிக்கு ஒல்லாது; ஆகலின் எமக்கும் ஒப்பன்று" என்க.

ஜெயராமசந்திர ஐயர்:—"ஐய! நீவிர் அவித்தை மாயை யென்னும் இரு விஷயங்களையும் சிந்தித்து அறிவீரேல் இவ்வளவு தூரம் வாதிக்கப் புகீர்" என,

திருமறைநாயகம்பிள்ளை:—"ஐயீர்! என்னே! என்னே! அவை கடவுளிடத்தில்லையென நிரூபித்தாம், அவை அவனிடத்தில்லையேல் யாண்டுமில்லை யெனற்பாலது. கடவுள் மாட்டன்றி மற்றி யாங்கேனு மிருப்பன வென்பீரேல் நீவிர் துவிதத்தையொப்பாகின்றீர். அவ்வாறொப்புங்கால் நமது அத்விதத்தை யடியோடு வேரைக் களைந்துவிட்டீர். ஈதுண்மை" என,

மதுரைநாயகம்பிள்ளை:—"திருமறைநாயகம்! இம்மட்டோடு நிறுத்தி; போதும். அமைய நேருழி மீட்டும் இவ்விஷயத்தைச் சாவகாசமாய் உசாவுவாம்." என்று செந்தமிழ்ச் சங்கத்தைக் கலைத்துவிட்டார்.

